


சக்கரவர்த்தி வருகிருர்! பராக்!

சுல்தான்—இ—அதில், இஸ்லா
காப்பாளர், விசுவாசிகளின்
இவ்வுலகத்தில் இறைவனின்
அபுல்—இ—ஃபதே ஜலாலுத்தீன்
து அக்பர், பாத்ஷா காஜி
ர்! அவரது சாம்ராஜ்யத்
பேரருளாளன் காப்பாராக!

கட்டியம் கூறி முன்னே
ன் அந்தரங்கக் காப்பாளன்.

ராணிமார்களின் அந்தப்
விருந்து வெளிப்பட்டார் பேரரசர்
. ஆக்ரா அரண்மனையின் பளிங்
தாழ்வாரங்களின் வழியே விருந்து
கையை நோக்கி நடந்தார்.

நாலு விரற்கிடைக்கொரு
முத்தும், ஆறு விரற்கிடைக்கொரு
பவளமும், எட்டு விரற்கிடைக்
கால் வைரமும் பதித்த அவரு
நீண்ட தகௌசியா அங்கி,
மனைத் தூண்களின் தங்கக் கவ
ில் பிரதிபலித்தது. அந்த மினு
புக்கள் எண்ணற்ற ரகசியங்களைத்
நக்குள் கிசு கிசுத்துக்கொள்கிற
இருந்தது.

விருந்து மாளிகையில் அக்ப
கக் காத்திருந்த அமைச்சர்கள்
வரை தலைகுனிந்து சலாமிட்டு
ட்டார்கள். பாதுஷா அங்கங்கே
ர். ஒவ்வொருவரிடமும் இரண்டு
தை குசலம் விசாரித்தார். தந்த
யாடுகள் செய்த பிரம்மாண்ட
உணவு மேஜையை அடைந்தார்.

பாரசீகர்களும், ஆப்கானி
ம், இந்துக்களுமாக ஏராளமான
அதிகாரிகள் கைகட்டிக் காத்து நின்ருர்
கள். பெரிய பதவியினர், பேரரசர்
அமர்ந்த பின் அவர் தலையசைத்து
உத்தரவு தந்ததும் பக்கத்திலே
அமர்ந்தனர். சிறிய உத்தியோகஸ்தர்
கள் எட்டத்தில் சிறிய மேஜைகளில்
உட்கார்ந்தனர்.

வெளியே நந்தவனத்தில் பூங்
காற்று தவழ்ந்தது. நீரூற்றுக்களின்
பித்தளைக் குமிழ்களிலிருந்து நூறு நூறு
தண்ணீர்க் கம்பிகள் குட்டையும்
நெட்டையுமாகப் பீரிட்டுக்கொண்டு
மேலெழுந்தபோது, எது அதிக உயரம்
தாவுகிறது என்பதைக் காண ஆவ
லுற்ற மாதிரி ரோஜாச் செடிகளின்
கிளைகள் ஒன்ருேடொன்று மோதிக்
கொண்டு முந்தின.

சக்கரவர்த்தியின் சமீபத்தில்,
இடப்புறமும் வலப்புறமும் அமர்ந்தார்
கள் அவருடைய அமைச்சர் குழுவினர்.
விழிகளை நாற்புறமும் சுழல விட்டபடி
மிக அருகே இருந்தவர் தோடர்மால்—
மாமன்னரின் நிதி வருமான அமைச்சர்.
சில சமயங்களில் பிரதம மந்திரியாக
வும் பொறுப்பு வகிப்பவர். அவருக்குச்
சற்றுத் தள்ளி, மாநிலங்களின் நிர்
வாகிகளான ராஜா மான்ஸிங், பக்வன்
தாஸ்; அவருக்குப் பின்னே அரண்மனை
நிர்வாகத்தையும் தேவாலயங்களையும்
கவனிக்கும் முராத்; இந்தப் பக்கம்,
அரசாங்க நிலங்களில் அதிகாரிகளை

'மோகினி'

நியமிக்கவும் நீக்கவும் அதிகாரம் பெற்ற அமைச்சர் சுல்தான் க்வாஜா; ராணுவ அமைச்சர் ஷபாஜ்கான். இறந்துபோன செல்வந்தர்களின் சொத்துக்களை நிர்வகிக்கும் ஷெரீப்கான். நீதித் துறை அமைச்சர் பீர்பால்—

அரண்மனைச் சமையல

கரும், கண்டிப்பும் நிறைந்த காரிகள் ஒவ்வொரு உணவு வகை அங்கீகாரம் கொடுத்து வெ அனுப்பிக் கொண்டிருந்தார்கள்.





பாலும் அரிசியும் வெல்லமும் கலந்த ஷெரீபிரீஞ்ஜ்; கோதுமையும் நெய்யும் மிளகும் உப்பும் கலந்த தூலி; கோதுமை மாவில் செய்து வெங்காயமும் மிளகும் கலந்த சிக்கி; கீரைகளில் செய்த ஸாகு; பருப்பு வகைகளில் செய்த பஹித்; அரிசியும் இறைச்சியும் பச்சைப் பயிறுகளும் கலந்த கீமா புலாவ்; இறைச்சியும் கோதுமை மாவும் கலந்த கஷ்க்; ஆட்டிறைச்சியில் செய்த உல்மா; பாலிலும் கோதுமையிலும் செய்த ரொட்டி; சுட்ட சப்பாத்தி; இரானிலிருந்தும் துரானிலிருந்தும் வந்திருந்த திராட்சை, வாதுமை, பீச், பிஸ்தா— இப்படி வகை வகையான தின்பண்டங்களும் பானங்களும் கனிவகைகளும் வெளிச் சென்றபோது, இவற்றின் மணமும், ஏற்கெனவே தாழ்வாரங்களில் எரிந்து கொண்டிருந்த அகில், சந்தனக் கட்டைகளின் மணமும் கலந்து சக்கரவர்த்தியின் கீர்த்தியைப் போல நாலு திசைகளிலும் பரவியது.

பகாவால் என்ற உதவி அதிகாரி ஒவ்வொன்றிலும் சிறிது எடுத்துத் தன் வாயில் போட்டுக் கொண்டு சோதனை செய்தார். பிறகு தலையசைத்தார். அடுத்தாற்போலிருந்த அதிகாரி தங்கப் பாத்திரங்களுக்குச் சிவப்புத் துணியும், வெள்ளிப் பாத்திரங்களுக்கு நீலத் துணியும், செப்பு பீங்கான் கலங்களுக்கு வெள்ளைத் துணியும் போட்டு மூடி, அடிப்புறத்தில் முடிந்து, முத்திரை வைத்தார். இன்னொரு அதிகாரி என்னென்ன பாத்திரங்கள் வெளிச்செல்கின்றன என்பதைக் காகிதத்தில் குறித்துக்கொண்டே வந்தார். மூன்றுமவர், என்னென்ன உணவு வகைகள் வருகின்றன என்பதைப் பட்டியல் எடுத்து, விருந்து மண்டபத்திலுள்ள அதிகாரிக்கு அனுப்பினார்.

ஒழுங்காக, அமைதியாக, ஆனால் விரைவாக வேலை நடந்து கொண்டிருந்த சமயம்—

சமையலறை ஆள் ஒருவன் திருட்டுத்தனமாக இங்குமங்கும் பார்த்தபடி பட்டியல் அதிகாரியின் அருகே வந்தான். குனிந்தான். ஏதோ இரைகிசுத்தான்.

அந்த அதிகாரியின் முகம் திடுக்கிட்டது. அவர் ஒரு துணியைக் கீழே போட்டார். அதை எடுக்கிற மாதிரி குனிந்தார். நிமிர்கையில் சட்டெனப் பார்த்துக் கொண்டார். பின்னர் தன்னருகே உள்ள மேலதிகாரியிடம் மெதுவாக ஏதோ சொன்னார். அவரும் பார்வையைச் சுழற்றினார். 'சரி, பேசாமலிரு,' என்று உதவியாளரிடம் சாடை காட்டிவிட்டு, உணவுப் பண்டங்களுக்கான பட்டியலில், கடைசி வரியாக ஒரு வரி எழுதினார்: ''வஜீர் குலிஜ் கானிடம் இதைக் காட்டு—ரகசியமாக,'' என்று கொடுத்தனுப்பினார்.

அந்த ரகசியச் செய்தி விருந்து மண்டபத்தை எட்டியபோது—

சக்கரவர்த்தி ஒரு பாரசீகக் கவிதையின் அழகைச் சொல்லிக் கொண்டிருந்தார். எழுதப் படிக்கத் தெரியாத இந்த மாமன்னரால் எப்படித்தான் இவ்வளவு இலக்கியங்களைக் கரைத்துக் குடிக்க முடிகிறதோ என்று தோடர்மால் தன்னுள் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருந்தார்.

வஜீர் குலிஜ்கான், ரகசியமாக நீட்டப்படும் காகிதத்தைக் கவனித்தார். அவர் முகத்திலும் திகைப்பு பரவியது. பின்னர் அதைத் தன் பக்கத்திலிருந்த அமைச்சரிடம் கொடுத்தார். விருந்து மேஜையின் கீழ்ப்புறமாகவே அந்தச் சீட்டு ஒவ்வொரு கையாகப் பயணமாகி, மன்னருக்கு மிகப் பக்கத்திலிருந்த தோடர்மாலிடம் வந்தது.

''சொற்ப நேரத்துக்குச் சக்கரவர்த்தி என்னை மன்னிக்க வேண்டும்.'' குனிந்து வணங்கிவிட்டு எழுந்து கொண்டார் தோடர்மால்.

அவர் எட்டத்தில் வரும் போதே சமையல்கூடம் பரபரப்படைந்தது. அவரவர்கள் தங்கள் தங்க
வேலைகளை நிறுத்திக்கொண்டார்க
முகத்தில் அச்சம் பரவியது.

தோடர்மால் நேரே ப
வாலிடம் சென்றார்.

''சந்தேகமான ஆள் என்
செய்தி அனுப்பியிருக்கிறாயே, யார்?
என்றார்.

அவன் கண்ணால் சா
காட்டினான்.

பாய்ந்து பிடித்தார் தோட
மால்.

அடுத்த விநாடி, மறுகோ
யில் ஒருவன் எல்லாரையும் தள்
கொண்டு வெளியே பாய்ந்தா
தோடர்மாலுக்குப் பிழை புரிந்தது
தான் பிடித்தது தவறான ஆள் என்
பிடித்தவனை விட்டுவிட்டு, ஓடு
வனைப் பிடியுங்கள் என்று அவர் கட்ட
யிட, காவலாட்கள் கத்தியை உரு
கொண்டு சீற, உணவுக் கலங்
உருண்டு கவிழ—

உணவுச் சாலையை அ
திருந்த கலைப் பொருள்கள் காப்ப
தினுள் அவன் நுழைந்துவிட்டான்.

வெளியே இப்போது ஏர
மான பேர் சூழ்ந்துகொண்டு அ
கதவுகளை உடைக்கவும் தகர்க்க
முயற்சி செய்தார்கள். அடுத்த
கணங்களுக்குள் அரண்மனையின் அ
பகுதி அல்லோல கல்லோலமாயிற்

உள்ளே புகுந்தவன், பல ந
ளாகவே அந்த அறையின் அமைப்
ஆராய்ந்து அறிந்து வைத்திருந்த
போலும். பரபரவென்று ஒரு பெ
யைத் திறந்தான். அதற்குள்ளிரு
வற்றை எடுத்து எடுத்துப் பார்த்து
யெறிந்தான். ஒன்றைப் பார்
தும் அவன் கண்கள் அடையா
கண்டு கொண்டன. இடுப்
கச்சையின் நுனியில் அதைப் ப
மாக முடிந்து கொண்டான். வ
புறம் காவலாளிகள் கதவை உடை
கொண்டிருந்த சமயம், அ
அந்த அறையின் மேற்குப்
கத்திலும் கிழக்குப் பக்கத்தி
இருந்த சாளரங்களைத் திறந்த
எதன் வழியே வெளியே குதிக்க
என்று ஒரு கணம் யோசித்த
கிழக்குப்புறத்தில் நாலு காவலா
ஓடி வந்து கொண்டிருப்பது தெரிந்

---

### காட்டில் ஒலித்த வசன கவிதை

குளிர் காலத்தில்
குருவே குருவே
என்ற சீடன்
கோடைக்காலத்தில்
வியர்க் குருவே
வியர்க்குருவே
என்கிறான்.



—கு

மற்குப்புறத்தில் ஒரு குதிரை மட்டுமே னியாய் நின்றிருந்தது. அவன் அந்தச் ாளரத்தின் வழியே குதித்தான். அந்தக் திரையில் தாவி யேறினன். பறந் ான்.

'பிடி! பிடி!' என்ற கூக்குரல் வன் பின்னே எழுந்தபோது அவன் ரண்மனையை விட்டுப் புயலாக வெளி யறிக் கொண்டிருந்தான். அப்படியும், றந்து வந்த ஈட்டியொன்று அவன் டது கையில் குத்துவதற்குத் தவற வில்லை.

தோடர்மால் சக்கரவர்த்தி டம் திரும்பி வந்தார். சுருக்கமாக டந்ததைச் சொன்னர்.

அக்பர் வினவினர்: "கலைப் பொருள் காப்பகத்தில் ஒரு பெட்டி மட்டும் உடைத்துத் திருடப்பட்டிருக் கிறதென்று சொன்னீர்களே? அதில் என்ன இருந்தது?"

"அதுதான் எனக்கும் ஆச் சரியமாய் இருக்கிறது, ஷாஇன்ஷா என்று தோடர்மால் பதிலளித்தார். "முன் எப்போதோ ராஜபுதனப் படையெடுப்பின்போது, மேவாரிலிருந் தும் கும்பல்மேரிலிருந்தும் கால்வாவி லிருந்தும் சூரியபூரிலிருந்தும் சாஞ்சோரி லிருந்தும் கைப்பற்றி எடுத்துவரப்பட்ட கலைப் பொருள்கள்..."

"அவன் எடுத்துச் சென்றது என்ன? பொன்னு, ரத்தினமா?"

"அதுதான் வேடிக்கை, சக்கரவர்த்தி. வெறும் மரப் பொருள் கள்தான் இருந்தன அந்தப் பெட்டி யில். அதிலிருந்து ஒரே ஒரு சிற்பம்—ஏதோ முத்திரை செதுக்கப்பட்ட மர அச்சு—எடுத்துச் சென்றிருக்கிறுன்."

அக்பர் சக்கரவர்த்தி, பின் கைகளைக் கட்டியவாறு மெல்ல உலாவியபோது, "வேறு ஏதோ ஒரு பெரிய திட்டத்துக்கு இது சிறு ஆரம்பம்," என்று அவர் உதடுகள் முணுமுணுத்தன.

ரூப்மதி, பாட்டிக்காகத் தயா ரித்திருந்த ரொட்டியை மூடி வைத்தாள். வாசலுக்கு வந்தாள். ஆக்ராவிலிருந்து வரும் ரஸ்தா எதிரே விரிந்து கிடந் தது. தெற்கே வெகு தூரத்தில் சூர்ய பூர் கோட்டையின் கொடி மாலைக் காற்றில் படபடப்பது தெரிந்தது.

என்ன அது, இரண்டு உரு வங்கள்? ஆக்ராவிலிருந்து வரும் பாதை



ஒரு மனைவியின் அகராதியைப் புரட்டியபோது—

கணவன்: வெளியிலும் டிபன் சாப்பிட்டுவிட்டு வீட்டுக்குள்ளும் அப்பாவி போல் டிபன் சாப்பிடுகிறவர்.

கைக்குழந்தை: 'விதரணை இல்லாதவள்' என்ற பட்டத்தை மாமியார் அளிக்கச் சிபாரிசு செய்யும் ஜீவன்.

மாமனர்: நடைப் போக்கு வரத்தை ஒழுங்கு செய்யும் டிராபிக் கான்ஸ்டபிள்.

—கா.

யைக் கூர்ந்து கவனித்தாள். ஒட்ட கத்தைப் பிடித்துக் கொண்டு ஓர் இளைஞன் நடந்து வந்து கொண்டிருப் பது சிறிது சிறிதாகப் புலப்பட்டது. இருப்பில்லாது தொங்கிய ஒரு முடிச்சை அவன் அடிக்கடி தடவி பத்திரமாக இருக்கிறதா என்று பார்த்துக்கொள்வ தும் தெரிந்தது.

அவன் அவளை நோக்கி வந்தான். "அதோ தெரிகிறதே, அது தான் சூர்யபூர் அரண்மனையா?" என்றுன்.

அவள் அவன் கையையே கவனித்தாள். "என்ன காயம் உனக்கு?"

"இது பொல்லாத ஒட்ட கம். கடித்துவிட்டது."

ரூப்மதி கடகடவென்று சிரித்தாள். "உன்னைப் போன்றவன் குதிரையல்லவா வைத்திருக்க வேண் டும்?"

"வைத்திருந்தேன். அது இடக்குப் பண்ணியதால் வழியில் ஒரு

வனிடம் அதைக் கொடுத்து இதை வாங்கினேன்.''

''இது இடக்குப் பண்ணினால்?''

''ஒரு கோவேறுக் கழுதை வாங்குவேன்.''

''அதுவும் இடக்குப் பண்ணினால்?''

''உன்னைப் போல ஒரு வாயாடிப் பெண்ணை விலைக்கு வாங்கி, அவள் மூக்குக்குக் கயிறு போட்டுத் தலையில் பாரம் ஏற்றி வைப்பேன்.'' அவள் சிரித்தாள். அவனும் சிரித்தான். ''அது இருக்கட்டும். சூர்யபூர் அரண்மனையில் உனக்குத் தெரிந்தவர்கள் இருக்கிறார்களா?''

''இரண்டொருத்தர் உண்டு. ஏன்?''

''அரண்மனைக்குள்ளே போயாக வேண்டும். ஒரு பொருளைச் சேர்ப்பித்தாக வேண்டும். நான் அன்னியன். நீ கொண்டுபோய்க் கொடுத்தால் சந்தேகப்பட மாட்டார்கள்.''

அவளுக்கு ஆச்சரியம். ''என்ன உனக்கு முன்பின் தெரியாதே? எப்படி நம்புகிறாய்?''

''உன்னைப் பார்த்தால் மோசம் செய்கிறவளாகத் தெரியவில்லை. கொஞ்சம் தயவு பண்ணு.''

அவன் கண்கள் தன் கண்ணை ஆவலுடன் நோக்குவதை அவள் கண்டாள். அவன் வேண்டுகோளை ஏற்று அரண்மனைக்குச் செல்ல வேண்டும் போலிருந்தது. சென்றால் காணுததையெல்லாம் காணலாம். ராணியைப் பார்க்கலாம். திரும்பி வந்து இவனோடு வேடிக்கையாகப் பேசிக் கொண்டேயிருக்கலாம். ஆனால் பாட்டி தடுத்திருக்கிறாளே, அரண்மனைக்குப் போக வேண்டாமென்று? பாட்டி வயதில் பெரியவள். அனுபவத்தில் முதிர்ந்தவள். என்ன காரணத்துக்காக நம்மைத் தடுத்திருக்கிறாளோ? அவள் பேச்சை மீறிக் கொண்டு போனால் என்ன ஆபத்து நேருமோ?

ருப்மதி குழம்பிக் கொண்டு நின்றாள்.

(தொடரும்)

# டான்? டான்

●● —— என்றால் என்ன அர்த்...

பாகிஸ்தானில் ஏதோ — என்று அர்த்தம்.

—மொரா...

●● நாலு கால், ஒரு ... இரண்டு கொம்பு—இதன் பெ... என்ன?

உண்ணாவிரதம்.

—விநோபா ப...

●● காப்டன் மார்வெல் ... பார்த்திருக்கிறீர்களா?

அது நான்தான்.

—வெங்கட்ராச...

●● விரல்கள் வலுவாயிருக்க ... நல்ல பயிற்சி சொல்லுங்கள்.

அடிக்கடி விரித்துக் காட... கள்—குறிப்பாக மாநிலங்கள் ... நிதி கேட்கும்போது.

—சரண்...

●● இட்லி, தோசை, ... முதலியவற்றின் தரம் ஏன் உயர... இருக்கிறது?

அவைகளின் விலையை உயர... விட்டால்தானே?

—புருஷோத்த...
(ஓட்டல் சங்கத் தலை...

●● நீலகிரி மலை ரயிலில் ... ணம் சென்றிருக்கிறீர்களா? இன்பமான...

சென்றிருக்கிறேன். இ... மானதுதான். ஆனால் ஜஸ்லோக் ... பத்திரியில், அபாய சிகிச்சை வா... லிருந்து சாதாரண சிகிச்சை வா... குச் செல்லும் பிரயாணம்தான் ... கிலேயே இன்பமானது.

—ஜெயப்பிர...

●● நகம் என்பது மனிதனு... தேவையில்லாத உறுப்பு என்கிறா... சரிதானா?

நகம் தேவைதான். தே... யில்லாத உறுப்பு: இருதயம்.

—...

# வாளின் முத்தம்

அக்பரின் ஆட்சி மெல்ல மெல்ல இந்துஸ்தானத்தில் பரவி வரும் காலம். ஆக்ரா அரண்மனையில் சக்கரவர்த்தி தமது அமைச்சர்களுடன் விருந்துண்ணும் வேளையில், சமையலறையில் வேலை செய்யும் ஓர் இளைஞன், கலைப் பொருள் காப்பகத்திலிருந்து ஒரு சிறு மரச் சிற்பத்தைக் கடத்திக் கொண்டு செல்கிறான். அமைச்சர் தோடர்மாலுக்கு அது அற்பமான நிகழ்ச்சியாகப் படுகிறது. அக்பரோ அது ஒரு பெரிய விஷயத்தின் ஆரம்பம் என நினைக்கிறார்.

சூர்யபூர் கோட்டைக்கருகே ரூப்மதி என்ற பெண்ணிடம் வந்து வழி கேட்கிறான் அந்த இளைஞன். ஒரு பொருளை அவன் சார்பாகக் கோட்டையில் கொண்டு போய்க் கொடுக்க முடியுமா என்று கேட்டுக் கொள்கிறான்.

## 2

ரூப்மதி யோசிக்க யோசிக்க' அவன் அவளையே ஆவலுடன் நோக்கியவாறிருந்தான். ஒட்டகத்தைப் பிடித்திருந்த மூக்கணாங் கயிறு தளர்ந்தது. அவன் கண்கள் இமைக்கவில்லை. தலைப்பாகையைக் கழற்றிப் பிரித்து, அந்தத் துணியினால் தன் முகத்தைத் துடைத்துக் கொண்டான்.

இரண்டு இரவும் ஒரு பகலும் இடைவிடாமல் பயணம் செய்தபின் அந்த ஆக்ராக்காரன் இப்போதுதான் சற்று நிற்கிறான். அப்பப்பா! என்ன ஓட்டம்! எத்தனை ஆபத்து! சக்கரவர்த்தியின் அரண்மனை லாயத்திலிருந்து எடுத்து வந்திருந்தது குதிரையல்ல—புயல். களைப்பு என்றால் என்னவென்று தெரியாதது. துரத்தி வந்த பாவிகள் அதை ஒரே ஈட்டியில் கொன்றுவிட்டார்கள். அதன் பிறகு ஒரு நாள் முழுதும் தலை மறைவாகத் திரிந்ததும், ரத்தன்கோட் ஒட்டகச் சந்தையில் இந்த அடங்காப் பிடாரி ஒட்டகத்தை விலை பேசியதும், பேரம் முடிவதற்குள் எதிரிகள் தலை தெரியவே, நியாயமானதொரு தொகையை ஒட்டகக்காரனிடம் வீசிவிட்டு இரவோடு இரவாக நழுவியதும், நீலாம்பூரில் சத்திரத்தானிடம் காய்ந்த ரொட்டி வாங்கிக் கடித்துப் பசியாறியதும்.....

அப்பா! இன்று காலை சொந்த மண்ணுக்கு வந்த பின்தான் அவன் மூச்சு விட்டான். விழுந்து புரண்ட, எழுந்து விளையாடிய, உடம்பெங்கும் பூசிக்கொண்ட தாய்ப் புழுதி! தரையோடு தரையாகப் படுத்து, பூமியை முத்தமிட வேண்டும் போலிருந்தது. வழிகளை மாற்றி மாற்றி வந்ததால் இனி யாரும் பின் தொடர மாட்டார்கள் என்று மகிழ்ந்தான். ஆனால் ராணிகாட் கிருஷ்ண மந்திரின் வாசலில் ஒரு மொட்டைத் தலையன் தன்னைக் கூர்ந்து கூர்ந்து கவனிப்பதை அவன் கவனித்து விட்டான். துரத்தி வருகிறவர்கள் விசாரிப்பார்கள். சுலபமான அடையாளம்—கையில் ஈட்டிக் காயத்தின் கட்டு வேறே. இன்ன வழியாகப் போனான் என்று மொட்டைத் தலையன் காட்டிக் கொடுத்துவிடக் கூடும்.

ஆகவேதான் அவனுக்கு அவசரம். யாராவது ஒருவர் கிடைத்தால்...,

மோகினி



தேடிய கண்களுக்கு ரூப்மதி தென்பட்டாள். வந்தான்.

அவளை ஊக்குவித்தான்.

''தயங்காமல் போ. உனக்கு ஒரு ஆபத்தும் இல்லாமல் நான் பார்த்துக் கொள்கிறேன்.''

''ஓ! ஆபத்து வேறே இருக்கிறதா இதில்!'' என்றாள் அவள். ''ஆபத்து இருப்பதால்தான் ஒரு பெண்பிள்ளையின் முந்தானையில் ஒளிந்து கொள்ளப் பார்க்கிறாயா!''

''உன் முந்தானை எத்தனை அழகு! அதற்குள் ஒளிந்துகொள்ள ஆசையாய்த்தான் இருக்கிறது எனக்கு. ஆனால் அதற்கு இப்போது அவகாசமில்லை,'' என்று சிரித்தான் அவன். ''சரி, நான் கேட்டதைச் செய்வாயா மாட்டாயா?''

அவளால் அவன் பார்வையைத் தவிர்க்க முடியவில்லை.

''சரி, செய்கிறேன். கொஞ்சம் இரு.'' நுனிக் காலில் அடிமேலடி வைத்துக் குடிசை வாசலை அடைந்தாள் அவள். எட்டிப் பார்த்தாள். பாட்டி தலைக்குக் கை வைத்துக் கொண்டு ஒருகளித்துப் படுத்திருந்தாள். தூங்குகிற மாதிரி இருந்தது. மெதுவே கதவைச் சாத்தினாள். வெளியே தாளிட்ட போது மூதாட்டி விழித்துக் கொண்டு விட்டாள்.

''ரூபா! எங்கேம்மா இந்த நேரத்தில்?''

ரூப்மதி நாக்கைக் கடித்துக் கொண்டு நின்றாள். ஆக்ராக்காரனைப் பார்த்தாள். அவன் அவள் காதில் கிசுகிசுத்தான்.

''பாட்டி, சப்பாத்திக்குத் தொட்டுக் கொள்ள அச்சாரும் இல்லை, சட்னியும் இல்லை. கிச்சடி செய்ய ஏதாவது கீரை பறித்து வருகிறேன். நீங்கள் நன்றாய்த் தூங்குங்கள்,'' என்றாள்.

''சீக்கிரம் வந்துவிடும்மா. கீரை கிடைக்காவிட்டால் பரவாயில்லை.'' பாட்டி உள்ளேயிருந்தபடியே சொன்னாள்.

''சரி பாட்டி.''

பழைய இடத்துக்குத் திரும்பினார்கள். ''சரி, கொடு.'' கைநீட்டினாள் அவள்.

அவன் இடுப்பிலிருந்து முடிச்சை அவிழ்த்தான். சுருக்குப் பை மாதிரி இருந்தது. அதற்குள் என்ன இருக்கிறது? அவளுக்குத் தெரியவில்லை. வாங்கிக் கொண்டாள். ''என்ன இருக்கிறது இதற்குள்? ரொம்ப லேசாயிருக்கிறதே?'' உள்ளங்கையில் வைத்து எடை போட்டபடி கேட்டாள்.

''அந்தப் பொருள் லேசானதுதான். ஆனால் அந்தப் பொரு



ஞல் ஏற்படப் போகிற விளைவுகள் லேசானதாயிருக்காது.'' அவன் கண்களில் ஒரு கனவு தெரிந்தது.

அவ்வளவு மதிப்புள்ள பொருளைத் தன்னிடம் ஏன் அவன் தர வேண்டும்? மறுபடியும் சந்தேகம் எழுந்தது அவளுக்கு.

''அரண்மனையில் இதை யாரிடம் கொடுக்க வேண்டும்?'' என்ருள்.

''நீ பெண். அந்தப்புரத்தினுள் சுலபமாக நுழையலாம். உன் உடைகளையும் அலங்காரத்தையும் பார்த்து ராணியின் பணிப்பெண்களிலொருத்தி என்று எண்ணி விடுவார்கள். ராணி மூலமாக ராணுவிடம் சேர்ப்பித்துவிடு.''

அவன் ஒட்டகத்தின் மீதிருந்த மூட்டையை அவிழ்த்தான். ''சிக்கிரம் வா. அதற்குள் இந்தக் குட்டிப் பிசாசுக்கு வெல்லமும் படிக்கார மசாலாவும் கலந்து உருண்டை தருகிறேன்.''

ரூப்மதி இரண்டு எட்டு எடுத்து வைத்திருப்பாள்—

''இரு.'' அவள் கையைப் பிடித்து நிறுத்திஞன் அவன். அவனுடைய காதுகள் விடைத்துக் கொண்டன. எதையோ கூர்ந்து கேட்டான். அவன் ஒட்டகம் கூட தூரத்து ஒலியை இனம் கண்டுபிடிக்க முயலுவது போல் தலையை உயர்த்திக் கொண்டு அசையாமல் நின்றது.

அவன் பார்வை ரணதாம் பூரிலிருந்து வரும் பாதையில் ஆழமாய் நிலைத்தது. தொடு வானத்தில் ஒரு சின்னப் புகை வளையம்போல் புழுதி மண்டலம் எழுவதைக் கண்டான். அவன் புருவங்கள் உயர்ந்தன. ஆரவல்லி குன்றுகளின் அடிவாரத்திலுள்ள தோப்புக்கள் வழியே எதிரிகள் நெருங்கிக் கொண்டிருக்கிருர்கள்.

இதை அவன் எதிர்பார்க்கவில்லைபோலும்.

''வேண்டாம்,''என்ருன் அவசரமாக அவளிடம். ''குடிசைக்குப் போ. வெளியே வராதே. அதை இப்படிக் கொடு.'' சுருக்குப் பையைப் பறித்துக் கொண்டான்.

''ஏன்? என்ன வந்தது திடீரென்று?'' அவளுக்குப் புரியவில்லை.

அவன் தன் கையிலிருந்த சுருக்குப் பையைக் காட்டிஞன். ''இந்தப் பொருளை அக்பரின் அரண்மனையிலிருந்து நான் அபகரித்து வந்த விஞடி முதல் பாதுஷாவின் போர்

வீரர்கள் என்னைப் பின் தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறார்கள்,'' என்று நடந்ததை சொன்னான்.

''சரி.''

''அவர்களை ஏமாற்றவேண்டி ஒரு சாதாரணக் கட்டையைச் சிற்பம் மாதிரி செய்து தயாராக வைத்திருந்தேன். உன்னிடம் அதைக் கொடுத்தனுப்புகிற மாதிரி நடிக்கப் பார்த்தேன். அவர்கள் எட்டத்திலிருந்து நான் உன்னிடம் இதைக் கொடுத்தனுப்புவதைப் பார்ப்பார்கள். உன்னைப் பின்தொடர்ந்து வந்து அதைப் பறித்துக் கொண்டு ஓடுவார்கள். அசல் பொருள் என்னிடம் பத்திரமாயிருக்கும் என்று திட்டம் போட்டேன்...''

அவள் முகத்தில் கோபம் தோன்றியது. கீழுதட்டைக் கடித்தாள்.

''என் சம்மதத்தைப் பெறாமலே ஒரு சூழ்ச்சிக்கு என்னைப் பயன்படுத்தப் பார்த்திருக்கிறாய்? இருக்கட்டும். உன் திட்டத்துக்கு என்ன வந்தது இப்போது?''

''அங்கே பார்.'' நெருங்கி வந்து கொண்டிருக்கும் புழுதிப் படலத்தைக் காட்டினான் அவன். ''நான் நினைத்ததைக் காட்டிலும் அதிக ஆபத்தாக இருக்கிறது. ஆக்ரா பாதையில் மட்டுமல்லாமல், வேறு வழியாகவும் பாதுஷாவின் ஆட்கள் வந்து கொண்டிருக்கிறார்கள்.''

''இப்படிக் கொடு அதை.'' ரூப்மதி அந்தச் சுருக்குப் பையை வாங்கிக் கொண்டாள். ''உன் திட்டப்படியே நடக்கட்டும். அவர்கள் என்னிடமிருந்து இந்தப் போலியைப் பறித்துக் கொண்டு போகட்டும். உனக்கு அனாவசிய ஆபத்து நேர வேண்டாம்.''

''உன்னால் முடியுமா?''

''என்னால் முடியும்.'' சுருக்குப் பையை வீசி ஆட்டியபடி நடந்தாள்.

ஆக்ராக்காரன் விரைவாக ஒட்டகத்தை நடத்திச் சென்று குடிசையின் பின்புறமிருந்த மரங்களின் மறைவில் ஒளிவாக நிறுத்தினான். புதர்களின் இடுக்கு வழியே பதுங்கிப் பதுங்கி முன்னேறினான்.

காலில் குத்தும் முட்களைப் பொருட்படுத்தாமல் சூரியபூர் கோட்டையை நோக்கி அவள் நடக்கத் தொடங்கினாள். இரண்டு புறமும் மரங்கள் தழைத்து வந்து அவளைத் தலையில் தொட்டன. ஒரு குட்டிக் குரங்கு அவளைக் கொஞ்ச தூரத்துக்குப் பின் தொடர்ந்து வந்துவிட்டுத் திரும்பிப் போய்விட்டது.

பொழுது கொஞ்சம் கொஞ்சமாக இருட்டிக் கொண்டு வந்தது. அரண்மனையின் தங்கக் கலசத்தின்மேல் மாலைச் சூரியன் தன் கவிதையை எழுதிக் கொண்டிருந்தான். அந்தக் கவிதையைப் பாராட்டிக் கை தட்டுவது

---



திருவனந்தபுரத்திலிருந்து மாலத் தீவுகளுக்குச் செல்லும் இந்திய ஏர்லைன்ஸ் விமானத்தில் நீங்கள் சென்றிருந்தால், விமானப் பணிப் பெண்கள் அமர்ந்திருக்கும் இந்த டிங்கி என்ற ரப்பர் தெப்பத்தைப் பார்த்திருக்கலாம்.

''டிங்கி'யை மடித்துச் சிறிதாக விமானத்தில் வைத்து விடலாம். ஒரு ஏர் ஹோஸ்டஸ் கூட அதை எளிதில் தூக்க முடியும்.

எதிர்பாராத விதத்தில் விமானம் விபத்துக்குள்ளானால், விமானப் பணிப் பெண்கள், உடனேயே இந்த டிங்கியைக் கடலில் இறக்கி விடுவார்கள்.

பிரித்து நீரில் போட்டதும், முப்பது விநாடிகளுக்கும் குறைந்த நேரத்தில் அது காற்று அழுத்தம் காரணமாகப் பெரியதாக விரிந்து விடும்.

இதன் விலை சுமார் முப்பதாயிரத்துக்குமேல்.

தகவல்: எஸ். ரஜத்.

வண்ணப்படம்: உத்ரா.




கொமேனிக்குக் குலை நடுக்கம் தரும் விஷயம்:
ஈரான் பெண்கள் மேனாட்டுப் பாணியில் உடை அணிவது.
நன்றி: வாஷிங்டன் போஸ்ட்—இந்தியா டுடே

போல ராணாவின் கொடி படபடத்துக் கொண்டிருந்தது. தாயும் குழந்தைகளும் சந்தித்த ஆனந்தம் கிச்கிச்சென்று மரக் கிளைகளிலிருந்து வெளிப்பட்டுக் கொண்டிருந்தது. ஆனாலும் அவள் இதொன்றையும் கவனிக்கவில்லை.

இருபுறமும் திருட்டுத் தனமாகக் கண்களைச் சுழல விட்டபடி நடந்தாள். எந்தத் திருப்பத்தில், எப்போது எவன் வரப் போகிறான்? அவனிடம் எப்படி நடந்து கொள்ள வேண்டும்? அவள் மனம் ஒத்திகை போட்டுக் கொண்டது. படபடப்பும் எதிர்பார்ப்பும் ஒரே சமயத்தில் அவள் உள்ளத்தை அலைக்கழித்தன.

திடீரென்று அதிகரித்தது அவள் பதைப்பு. எதிர்பார்த்த வேளை வந்து விட்டது! தட்தட்டென்று அவள் இதயம் அடித்துக் கொண்டது.

ரணதாம்பூர் பாதையும் ஆக்ரா பாதையும் சந்தித்து, சூரியபூர் கோட்டையை நோக்கிச் செல்லும் முச்சந்தியை அவள் நெருங்கிக் கொண்டிருந்த சமயம்—

இரண்டு புறத்திலிருந்தும் அந்தக் குதிரை வீரர்கள் பாய்ந்து வந்து அவளை வளைத்துக் கொண்டார்கள்.

''என்ன...யார்...'' திடுக்கிட்டுப் பயந்தவள்போல அவள் ஒதுங்கிக் கொள்ள முயன்றாள். கையிலுள்ள சுருக்குப் பையை அவர்கள் பார்க்கிற மாதிரி மார்போடு வேண்டுமென்றே இறுக்கி அணைத்துக் கொண்டாள். ''வழி விடுங்கள்...நான் போக வேண்டும்...'' என்றாள்.

''தங்கச்சிக்கு வழி விடணுமாம் அண்ணே! சொல்கிறாளே, காதில் விழவில்லை?'' அட்டகாசமாகச் சிரித்தான் ஒருவன். அத்தனை தொண்டைகளிலிருந்தும் நகைப்புகள் எதிரொலித்தன.

அவர்கள் வழி விடவில்லை. இன்னும் நெருக்கமாகச் சூழ்ந்து கொண்டார்கள். குதிரைகளின் நாற்றமும் மூச்சுக் காற்றும் அவளைத் தாக்கின.

''கொடும்மா,'' என்றான் ஒருவன்.

''எதை?''

''அவன் கொடுத்தானே, அதை!'' சீறினான் இன்னொருவன். ''நாங்கள் பார்க்கவில்லையென்று நினைத்தாயா? கொடடி நாயே!'' குபுக்கென்று பறித்தான் அந்தச் சுருக்குப் பையை.

தளபதி போன்றிருந்த ஒருவன் சுருக்குப் பையைத் தன் இடுப்பில் செருகிக் கொண்டான்.

"வாருங்கள் போகலாம்!" என்முன்.

குதிரைகள் விலகின. முன்னங்கால்களைத் தினவு தீரத் தூக்கி, ஒரு கனைப்புக் கனைத்தன. திரும்பி நடந்தன.

'வெற்றி! வெற்றி!' என்று மகிழ்ச்சியுடன் கூவ வேண்டும் போலிருந்தது ரூப்மதிக்கு. அடக்கிக் கொண்டு, "ஐயா! ஐயா! அதைக் கொடுத்து விடுங்கள்!" என்று கூவினுள்.

அவர்கள் ஒருவர் பின் ஒருவராகச் சென்று கொண்டிருந்தார்கள். கடைசிக் குதிரையில் சென்றவன் அவளைத் திரும்பிப் பார்த்தான். அவள் குரல் அவனுக்குக் கேட்டது போலும்.. அருகில் வந்தான்.

"கொடுத்துவிடு என்ரு கேட்டாய்?" சாட்டையின் நுனியினுல் அவள் மோவாயைத் தொட்டு முகத்தை நிமிர்த்தினுன். "நான் கொடுக்கட்டுமா பெண்ணே? தட்டாமல் வாங்கிக்கொள்கிருயா?"

குதிரையிலிருந்தபடியே குனிந்து—

அதிர்ந்த ரூப்மதி சமாளித்துத் திரும்புமுன்—

---



தாய்: கல்யாணம் செய்து கொண்டால் ஒரு ராணுவ வீரனை மணந்து கொள்.

மகள்: ஏன் அப்படி?

தாய்: கட்டளைக்குக் கீழ்ப் படிந்து நடக்க அவனுக்குத்தான் தெரியும்.

—எம். சாம்பமூர்த்தி.

புதரிடுக்கிலிருந்து வெளியே பாய்ந்தான் ஆக்ராக்காரன் அந்த ஆளின்மீது தாவி மோதினுன். மோதிய வேகத்தில் கீழே விழுந்தான் அவன். விழுந்தவனின் உடை வாளை உருவி எடுத்துக் கொண்டான். விழுந்தவனைக் காலால் உதைத்துப் புரட்டிவிட்டு, காலியாயிருந்த குதிரைமீது பாய்ந்தேறினுன். அவனுடைய மனத் திண்மை அந்தக் குதிரைக்குப் புரிந்திருக்குமோ? சந்தோஷப்பட்டமாதிரி ஒரு சிலிர்ப்பு.

முன்னே போன மற்றவர்கள் சத்தம் கேட்டுத் திரும்பினுர்கள். தங்கள் தோழனுக்கு இந்தக் கதியா! பாய்ந்து வந்தார்கள்.

ரூப்மதி பயத்துடன் ஒரு மரத்தின் பின்னே தன்னை மறைத்துக் கொண்டாள். எல்லாம் திட்டமிட்டபடி வெற்றிகரமாக முடிந்து போனசமயத்தில் இவன் ஏன் திடீரென்று வந்தான்? எதற்காகக் காரியத்தைக் கெடுத்தான்? டணுல்டணுலென்று பெரும் ஓசையுடன் வாட்கள் மோதுவதைப் பார்த்தவாறு சிலையானுள்.

தான் ஒற்றை ஆள், எதிரிகள் ஏழு பேர் என்பதை கணக்கெடுத்திருந்தான் அவன். சட்டெனத் தனது குத்துக் கத்தியை உருவி எடுத்துக் கொண்டான். எதிரில் அகப்பட்ட குதிரையின் காதினருகே சுரீலெனப் பாய்ச்சினுன். குதிரைக்கு மிகப் பலவீனமான இடம் அது என்பது அவனுக்குத் தெரியும். ரத்தத்தைப் போலவே அதன் வெறியும் பீரிட்டது. வேதனை தாங்காத அலறலுடன் தன்னருகே யிருந்த மற்றக் குதிரைகளின் மீது கண்மண் தெரியாமல் இடித்துத் தள்ளியது; முன்னங்கால்களைத் தூக்கிக் குத்தியது.

அதே சமயம் மின்னலென அவன் வாள் சுழன்ற வேகத்தில், குதிரைகளிலிருந்து மடமடவென்று அவர்கள் சரிந்தார்கள். வெட்டுக் காயம் வாங்கிக்கொண்ட குதிரை மற்றக் குதிரைகளை முட்ட, எல்லாமாய்த் தறிகெட்டு ஓடின. ஒரு குதிரையின் வால் பூமியில் துடித்தது. தரையிலிருந்தபடி அவர்கள் போரிட்டார்கள்.

அவர்களது மரண ஓலம் குன்றுகளில் மோதி உடைந்து நொறுங்

கின. கைகளி பூந்த ஒருவன் ஆக்ரா பாதையில் தலைதெறிக்க ஓடினான். அடுத்த கணம் அத்தனை பேரும் அவனைப் பின்தொடர்ந்து ஓடினார்கள்.

அப்படியும் கொஞ்ச தூரம் துரத்தியடித்த பின்னரே அவனுக்குத் திருப்தி ஏற்பட்டது.

சட்டையும் தலைப்பாகையும் கிழிந்து தொங்க, முகத்திலும் தோளிலும் ரத்தம் வழிந்தோட, கம்பீரமாகத் திரும்பி வரும் அவனைப் பார்த்தவள், வாயடைத்து நின்றாள். அவள் பார்வையில் அச்சமும் மட்டற்ற பயபக்தியும் தெரிந்தன.

''தாங்கள்... தாங்கள்...'' தடுமாறினாள், வார்த்தை கிடைக்காமல்.

''தாங்கள்! என்ன, மரியாதை புதிதாய் இருக்கிறது?'' என்றான் அவன்.

சற்றுத் துணிவு பெற்றாள் ரூப்மதி. ''இரண்டு விஷயம்...''

''என்ன?''

''குத்துக் கத்தியை உருவியெடுத்ததும் முதலில் கண்ணில் ஒற்றிக் கொண்டு பிறகு எதிரியின் மீது பாய்ச்சினீர்கள். அது மீரத்காரர்கள் தயாரிக்கும் தந்தப் பிடி போட்ட கத்தி...''

''இருக்கட்டுமே.....''

''இரண்டாவது, என்னை அந்த முகலாயன் தொடக்கூடவில்லை. வெறுமே வாளினால் என் முகத்தை நிமிர்த்தினான். அவ்வளவுதான். காரியம் கெட்டுவிடக் கூடாதென்று தாங்கள் பேசாமல் இருந்திருக்கலாம். இருக்கவில்லை. பாய்ந்துவிட்டீர்கள் எல்லா எச்சரிக்கையையும் மறந்து. ஒரு பெண்ணின் மானத்தின் முன்னே மற்றதெல்லாம் துச்சமென்று கருதுகின்ற குணம்.....''

''குணம்?''

''சூரியபூர் ராஜவம்சத்துக்கு மட்டுமே உண்டு.'' மிதமிஞ்சிய மரியாதையுடன் இரண்டடி பின்னுக்கு நகர்ந்து நின்று கொண்டாள் ரூப்மதி.

(தொடரும்)





82'ம் பக்கம் பார்க்க

கேள்வி: அசல்

பதில்: கற்பனை—'அவிட்டம்'

◌◌ வெகு அபாயமாகப் படுக்கையில் கிடந்த நண்பர் எழுந்து இரண்டடி நடந்தார் என்று கேள்விப்படும்போது உங்களுக்கு எப்படி இருக்கும்?

ஏனய்யா இழவு எடுக்கிறே? சந்தோஷமாய்த்தான் இருக்கும். போய்த் தொலையும் அந்தண்டை.

—கிருபளானி.

◌◌ எந்தப் பூச்சிக்கு விஷம் ஜாஸ்தி?

கம்பூச்சிக்கு.

—பால் பாட்
(வியட்நாம் முன்னாள் பிரதமர்)

◌◌ டெல்லியில் வெய்யில் எப்படி?

டெல்லியில் நன்றாய்த்தான் இருக்கிறது. நுங்கம்பாக்கத்தில்தான் சகிக்கவில்லை.

—க. ராசாராம்.

◌◌ எது சுவையான கலை?

கலக்கும் கலை.

—ஆர். வி. சாமிநாதன்

◌◌ மனிதன் எந்த வயதில் மிகவும் சந்தோஷமாக இருக்க முடியும்?

பதினாறு வயதினிலே.

—கமலஹாசன்

◌◌ பெரிய தொழில் நிறுவனங்களைத் தேசியமயமாக்குவதால் லாபம் உண்டா?

கடுகத்தனையும் கிடையாது. ஆனால் தேசியமயமாக்க வேண்டும் என்று சொல்வதை விட்டுவிடக் கூடாது. அதிலே கொள்ளை லாபம் உண்டு.

—பெர்னாண்டஸ்.

◌◌ மகாபலிபுரம் சிற்பங்களில் உங்களை மிகவும் கவர்ந்தது எது?

பேன் பார்க்கும் குரங்கு. (நான் எந்த மந்திரியையும் குறிப்பிட்டதாக நினைக்க வேண்டாம்.)

—சஞ்சீவ ரெட்டி.

◌◌ கண்ணதாசன், பாரதிதாசன் என்றெல்லாம் பெயர் சூட்டிக் கொள்வது அடிமை மனப்பான்மை என்கிறார்களே?

என் பெயரைப் பார்த்து அப்படிக் கேட்கிறீர்கள் போலிருக்கிறது. நான் தாஸ் இல்லை. பாஸ்.

— பனார்ஸி தாஸ்

◌◌ இறந்து போனவர்களுக்கு மரியாதை செலுத்துவது எப்படி?

அகப்பட்ட காரை அடித்து நொறுக்குவது.

— அன்பழகன்

◌◌ ரொம்ப மோசமான மின்சாரப் பஞ்சம் நிலவுவது எந்த மாநிலத்தில்?

உங்கள் கேள்வியை இருட்டில் படிக்க முடியவில்லை. விளக்கு வந்ததும் படித்துப் பதில் சொல்கிறேன்.

—ஜோதி பாசு

டாண்! டாண்!



# மோகினி

## 3

இன்னும் தூங்கிக் கொண்டு தான் இருந்தாள் பாட்டி. அறைக் குடிசையின் வெளித் தாழ்ப்பாளை நீக்கிக் கொண்டு ரூப்மதி உள்ளே நுழைந்ததும்—

''ரூபா, கீரை பறித்துக் கொண்டு வந்தாயாம்மா?'' என்றாள்.

'கீரையா? எந்தக் கீரை?' அனேகமாக உதடுவரை வந்துவிட்டது ரூபாவுக்கு. இளவரசனின் முகமும் பேச்சும் சிரிப்பும் அவள் மனத்தில் நிறைந்திருந்தன. மற்ற எல்லாம் மறந்திருந்தன. சட்டெனச் சுதாரித்துக் கொண்டாள். ''அதை ஏன் கேட்கிறே, பாட்டி! மந்தைமந்தையாய் மாடுகள் வந்து மேய்ந்துவிட்டுப் போயிருக்கிறது,'' என்றாள்.

அவள் சொன்ன சமாதானம் பாட்டிக்குத் திருப்தி தரவில்லை.

''சரி, பரவாயில்லை. விளக்கை ஏற்றி, அடுப்பை மூட்டு. இருப்பதை வைத்து ஏதாவது சமையல் செய்,'' என்றாள்.

முகத்தைச் சுளித்தாள் ரூப்மதி. சமையல் பண்ணிக்கொண்டு உட்கார்ந்திருந்தால் இளவரசனுக்குக் கொடுத்த வாக்கு...

''பசியேயில்லை, பாட்டி.'' கிழவியின் அருகிலே போய் அமர்ந்து கொண்டாள். சுருங்கி மெலிந்த கிழவியின் கால்களை மெதுவாகப் பிடித்து விடலானாள். ''பாட்டி, நான் ஒன்று கேட்கிறேன், மறுக்கமாட்டாயே?''

''நீ என்ன கேட்டு நான் எப்போதம்மா மறுத்திருக்கிறேன்?''

உண்மைதான். நினைவு தெரிந்த நாள் முதலாகப் பாட்டி ஒருத்திதானே அவளுக்குத் துணை, காவல், தோழமை எல்லாம். எல்லாப் பெண்களையும் போல இருக்காமல் ரூப்மதி எழுதப் படிக்க ஆசைப்பட்டாள். ஓர் ஆசிரியரிடம் படிப்பதற்கு ஏற்பாடு செய்து தந்தாள் பாட்டி. பிறகு பாட்டுப் பாட ஆசை வந்தது. ஸித்பூரில் தேவி மாதுரியிடம் இரண்டு வருடம் பாட்டு, நாட்டியம் இரண்டுமே பயில முடிந்தது. அதுவும்



''அப்படியா பாட்டி?'' ரூப் மதியின் நெஞ்சு நிமிர்ந்தது.

''பார்த்தாயா, கேட்கும் போதே உனக்குப் பூரிப்பாயிருக்கிறது. எனக்கு வேதனை பிளக்கிறது. எவ் வளவோ சொன்னேன், விவசாயத் தொழில் செய்யலாம், நெசவு பண்ண லாம், வியாபாரம் நடத்தலாம் என்று. யாரும் கேட்கவில்லை. சூர்யபூர் படை யில் சேர்ந்தார்கள். மேவாரோடு நடந்த சண்டையில் நம் குலத்தின் அத்தனை ஆண்களும் அழிந்தார்கள். அத்தனை பெண்களும் தீக்குளித்தார்கள். வம் சத்துக்கு விளக்காக நீ ஒருத்திதான் மிஞ்சியிருக்கிறாய். ரூபா, அவர்கள் உடம்பில் என்ன ரத்தம் ஓடியதோ, அதுவேதான் உன் தேகத்திலும் ஓடு கிறது. தப்பிப் பிறந்துவிட்டாய் பெண் ணாக. எந்தக் கணத்திலும் நீயும் போர்க் கவசத்தை. அணிந்துகொண்டு விடு வாய் என்று எனக்குத் திக்திக்கென்றி ருக்கிறது. அரண்மனைப் பக்கம் நீ போக வேண்டாம். யானைகளையும் குதி ரைகளையும் பார்க்கவேண்டாம். வேல் களையும் வில்களையும் காண வேண்டாம். சிம்மநாதங்களையும் தாரை தப்பட்டை

களின் முழக்கங்களையும் கேட்க வேண்டாம். என் கண்ணுக்குக் கண்ணான உன்னை நான் இழக்கவும் வேண்டாம். என் பேச்சைக் கேள், ரூபா. தயவு பண்ணிக் கேள்...''

''நானு!'' சிரித்தாள் ரூப்மதி. தன்னைத்தானே ஒரு முறை பார்த்துக் கொண்டாள். ''மரத்தின் மேலேயிருந்து அணில் தொப்பென்று விழுந்தால்கூட எனக்கு உடம்பு வெடவெடக்கும் பாட்டி! போருக்காவது, நானாவது போவதாவது!''

''இப்படித்தான் அவர்களும் சொல்லிக் கொண்டிருந்தார்கள், ரூபா. சிறு சந்தர்ப்பம் வந்தது. உயிரைக் கொடுக்கத் துணிந்து விட்டார்கள். அவர்களைப் போலத்தானேம்மா நீயும்? என் பேச்சைக் கேளம்மா...''

வெடியோசை கேட்டது வெகு தொலைவில்.

ரூப்மதி எம்பிக் குதிகாலில் நின்று சாளரத்தின் வழியே பார்த்தாள்.

சூர்யபூர் அரண்மனை ஜோதி சொருபமாய்த் தகதகத்தது. வானில் வாணங்கள் எழும்பி, நாட்டியக்காரி



அவன்: நான் இன்று உங்க வீட்டுக்குச் சாப்பிட வரப்போவது உன் மனைவிக்குத் தெரியும்மா?

இவன்: தெரியுமாவது. அதைப் பற்றி நேற்று எனக்கும் அவளுக்கும் ஒரு மணி நேரம் பெரிய வாக்குவாதம் நடந்திருக்கிறது.

—மங்கா

**61'ம் பக்க--யார்?—விடை**

நடிகர் சிவாஜியின்

மூத்த பிள்ளை ராம்குமார்

யின் தாவல்களாய், பாடகனின் பிர்க்காக்களாய்ப் பொலபொலவென்று உதிர்ந்தன. சடேர் சடேரென்ற வெடிகளின் எக்காளம் திக்கெட்டும் மோதின.

இத்தனை குதூகலங்களுக்கிடையே இளவரசன் எங்கேயோ நின்று கொண்டிருப்பானே. ஆனால் அவன் மனம் அதிலே ஈடுபட்டிருக்காது. கோட்டை வாசலை நோக்கி, அவள் வரவை எதிர்பார்த்து அவன் விழிகள் காத்திருக்குமே.

அவன் காத்துக் கொண்டு தான் இருந்தான்.

கோட்டையின் வாசற்புறம் வானளாவ ஓங்கி நிற்கும் கீர்த்தி ஸ்தம்பத்தின் அடியில். பல நூறு ஆண்டுகளுக்கு முன்பு அலாவுதீன் கில்ஜி படையெடுத்து வந்தபோது அவனை முறியடித்து விரட்டினார்கள். அதற்கு அடையாளம் அது. அந்த ஸ்தம்பத்தைச் சுற்றிச் சுற்றி அவன் எவ்வளவு தடவை ஓடி விளையாடியிருக்கிறான்! அதற்கருகே திருக்குளம். ஸாஸ்—பஹூ குண்ட். அரண்மனையிலிருந்து மாமியார், மருமகள் இரண்டு ராணிகளும் அங்கே குளிக்க வருவார்கள் என்பதால் அதற்கு அந்தப் பெயர். அங்கே நீச்சலடித்துக் கும்மாளம் பண்ணிப் பெரிய ராணியிடம் எவ்வளவு திட்டு வாங்கியிருக்கிறான்! அதன் கரையில் நீலகண்ட மகாதேவர் கோயில். திடீர் திடீரென்று மணியை அடித்து எவ்வளவு முறை பூசாரியை மிரள வைத்திருக்கிறான்! கோவிலின் பின்னே ஒன்பதடி உயரமுள்ள ஒரு முசல்மானின் உருவச் சிலை. அதே உயரமுள்ள ஒரு மௌரிய ராஜகுமாரியைக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமென்று காலம் காலமாய் அவன் அங்கே காத்திருந்து இறந்தானாம். அவனுடைய ஏக்கத்துக்காக அந்தச் சிலையை எழுப்பியிருக்கிறார்கள். அப்புறம் அந்த வராகர் கோவில்...அதன் மதில் சுவர்களில் எத்தனை தடவை ஏறி ஏறிக் குதித்திருக்கிறான்...

ஆனால் இப்போது அவன் மனம் வேறு எதிலும் செல்லவில்லை.

அவனைச் சுற்றி எல்லாத்
க்குகளிலும் ஒளியும் ஒலியுமாக இருந்
து. காற்றின் ஒவ்வோர் அசைவிலும்
நவிழாவின் உற்சாகம் ஊடுருவியிருந்
து.

அவன் கண்கள் கோட்டை
ன் பின்புறப் பாதையிலேயே ஒன்றி
ருந்தன. ரூப்மதியை அந்த வழி
ாகத்தான் அவன் வரச் சொல்லி
ருந்தான். இருட்டிக் கொஞ்ச நேரத்
க்கெல்லாம் வந்துவிடு என்று கூறி
ருந்தான். இன்னும் ஏன் அவளைக்
ாணோம்?

'நீங்கள் ராஜ வம்சமா?'
ன்று அவள் வினவினபோது அவன்
ப்புக் கொண்டு விட்டான். 'நான்
ளவரசன்—கடைசி இளவரசன். ஆனால்
றத்தாழச் சாதிப் பிரஷ்டம் செய்யப்
ட்டவன். அவர்களுடைய போக்கும்
ண்ணோட்டமும் பிடிக்காமல் ஒன்
ரை மாதத்துக்கு முன்னால் ஊரை
ிட்டுப் புறப்பட்டேன். இதோ இதைக்
கைப்பற்றிக் கொண்டு திரும்பியிருக்
றேன்,' என்று சுருக்குப் பையைக்
ாட்டினான்.

''அதில் என்ன இருக்கிறது
ப்படி?'' திரும்பவும் அதையே கேட்
ாள் அவள்.

''என் லட்சியப் போராட்டத்
ின் முதல் வியூகம்,'' என்றான் அவன்.

''வியூகம் யாருக்கு எதி
ாகவோ?'' என்று அவள் கேட்டாள்.

''ஏன்? உணவிலே உப்பு
சேர்த்துக் கொள்ளும் ராஜபுத்திரன்
வனானாலும் ஒரே ஒருவருக்கு எதி
ாகத்தான் வியூகம் கட்டுவான். அக்
பர்!''

அவள் அவனை ஆச்சரியத்
துடன் பார்த்தாள். ''சக்கரவர்த்தியா!
அவரைப் பற்றித் தேசமெங்கும் வெகு
நல்ல மாதிரியாகப் பேசுகிறார்களே?
இந்துக்களுக்கும் முசல்மான்களுக்கும்
ஒற்றுமை ஏற்படுத்த அவர் அரும்பாடு
படுவதாகப் பேசிக் கொள்கிறார்களே?
தோடர்மால், மான்ஸிங், பகவன்தாஸ்
என்று பல இந்துக்கள் அவரிடம் அமைச்
சராக இருக்கிறார்களாமே?'' என்று
அடுக்கடுக்காகக் கேட்டாள்.

''உன்னைப் போலத்தான்
நானும் ஒரு காலத்தில் நினைத்திருந்
தேன்,'' என்றான் அவன். அதற்குமேல்
ிவரிக்கவில்லை. சாலையிலிருந்த ஒரு
ர்மசாலைக்குள் அவர்கள் நுழைந்
ார்கள். வந்திருக்கிற விருந்தினர்



யாரென்று தெரிந்ததும் சத்திரக்கார
னின் கைகால்கள் உதறின.

''கொஞ்சம் சூடான பானம்
ஏதாவது எடுத்து வாருங்கள்,'' என்று
அவரை அனுப்பினான். சாளரத்தின்
வழியே சூரியபூர் கோட்டையும் அரண்
மனையும் நன்கு தெரிந்தன. ''அதோ
அங்கே என் தந்தையும் மூன்று தமையன்
மாரும் ஏராளமான உறவினர்களும்
இருக்கிறார்கள். அவர்களுக்கு எவ்வித
லட்சியமும் கிடையாது. சொகுசான
சோம்பேறி வாழ்க்கை. அதைத் தட்
டிக் கேட்டதால் நான் வேண்டாதவனாக
ஆகிவிட்டேன். அரண்மனையில் யாரும்
என்னிடம் முகம் கொடுத்துப் பேச
மாட்டார்கள். எல்லா இடங்களிலும்
தாராளமாகச் சஞ்சரிக்கக் கூட என்னை
அனுமதிப்பதில்லை.''

''உண்மையாகவா!'' என்
றாள் அவள் நம்ப முடியாதவளாக.

''சத்தியமாக. ஆனால் எல்லா
அடிமைத்தனங்களுக்கும் நித்திரைக்கும்
சொகுசுகளுக்கும் வெகு விரைவில் முற்
றுப் புள்ளி வைக்கப் போகிறேன்.
சூர்யபூர் தலை நிமிர்ந்து சுதந்திரமாக
வாழப் போகிறது... என் சகோதரி
கமலாவதியை மட்டும் நான் நினைக்கிற
படி நாகர்கோட் மன்னன் ராஜா பானு
சந்திரன் ராணியாக்கி விட்டால்..''

ரூப்மதியின் முகம் கறுத்தது. ''என்ன சொன்னீர்கள்? கம்லாவதியை பானுசந்த்தின் ராணியாக்குவதா?''

''ஏன், அதிலென்ன சந்தேகம்?''

''வந்து.. உங்களுக்கு விஷயம் தெரியாதா? உங்கள் சகோதரி கம்லாவதியை....''

''கம்லாவதியை?''

''மாமன்னர் அக்பருக்கு மனைவியாகக் கொடுக்க நிச்சயித்திருக்கிறார்களாம். ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றனவாம். சுற்று வட்டாரம் ஐந்நூறு கிராமங்களுக்குத் தெரிந்த இந்தச் செய்தி.....''

''என்ன!'' வேங்கையென அவன் திரும்பிய வேகத்தில் சாளரத்தின் கண்ணாடிகள் நடுங்கின. மேசை மீதிருந்த பாத்திரங்கள் அதிர்ந்து உருண்டன. ''கம்லாவதி...அக்பரின் அந்தப்புரத்துக்கா!'' அந்தச் சிவக்கும் கண்களையும் துடிக்கும் மீசையையும் புடைக்கும் தோள்களையும் கண்டு ரூப்மதி அச்சம் கொண்டாள்.

''இதோ பார், உனக்கும் எனக்கும் பழக்கம் குறைவுதான். இருந்தாலும் கேட்கிறேன்: என்னோடு நீ அரண்மனைக்கு வருவாயா? சொல்லு ரூப்மதி, வருவாயா?''

அவள் திகைத்தாள்: ''நான் ..... என்றால் அங்கே என்ன செய்ய முடியும்?''

''எவ்வளவோ செய்ய முடியும். அரண்மனையில் நான் எல்லாரிடமும்—குறிப்பாக, என் சகோதரியிடம் தாராளமாகப் பேசவோ பழகவோ முடியாது. அதற்குப் பல தடைகள் உண்டு. ஒற்றர்கள்கூட வைத்திருக்கிறார்கள் என்னைக் கண்காணிக்க. ஆகையால் அந்தப்புரத்துக்குப் போகவும் வரவும் உன்னைப் போல நம்பகமான ஒருத்தி தேவை. பெரிய ராணிக்கு ஒரு பணிப் பெண் போல வந்து அமர்ந்து கொள். அதன்பின் என்ன செய்ய வேண்டும் என்பதைப் பிற்பாடு சொல்கிறேன். என்ன சொல்கிறாய்? மறுக்காதே.''

அவன் அவள் கைகளைப் பிடித்துக் கொண்டு கேட்டபோது அவளுக்கு மேனி புல்லரித்தது. அவளுடைய தோள்களில் அவன் கைகள் மேலும் மேலும் ஆழமாகப் பதிந்தன. அவனுடைய ஒரு கண்ணசைவில் அவள் தன் உயிரையும் அர்ப்பணிக்கத் தயாராகிவிட்டாள்



—ராஜம்

'சரி, வருகிறேன்,'' என்று உறுதிய
ளித்து விட்டுப் புறப்பட்டாள்.

கோட்டையின் பின்புறப்
பாதையில் வரும்படி வழி சொல்லிக்
கொடுத்தான். வசந்த் பஞ்சமி உற்
சவம் ஒரு சாக்காக இருக்கட்டும்
என்று யோசனை சொல்லித் தந்தான்.

அவன் நினைத்தபடியே அரண்
மனையில் நடந்தது. அவனுக்கு எவ்வித
உற்சாகமான வரவேற்பும் எவரும்
கொடுக்கவில்லை. சில பழைய வேலை
யாட்கள் மட்டும் அவனை நெருங்கிப்
பணிவிடை செய்தார்கள். மூத்த அண்
ணன் தினேஷ், எப்போதும்போல இருந்
தான்—ஒரு கையில் மதுபானக் கிண்
ணம், மறு கையில் ஒரு வேலைக்காரப்
பெண்ணின் முந்தானை; இரண்டாவது
அண்ணன் பூபத் சயனக்கிருகத்தின் சப்ர
மஞ்சக் கட்டிலில் கவிழ்ந்து படுத்தபடி
கவிதை எழுதிக் கொண்டிருந்தான்.
கடைசி அண்ணனை பிகாரிமால் அரண்
மனை மேல்தளத்தில், சுற்றிலும் காய்கனி
களும் இறைச்சித் தின்பண்டங்களும் மலை
மலையாய்க் குவிந்திருக்க, தின்ற களைப்
பில் ஆனந்த நித்திரையில் ஆழ்ந்திருந்
தான்.

ரூப்மதி வந்தால்தான்...

ஏன் இன்னும் அவளைக்
காணோம்?

வாண வேடிக்கைகள் வினா
டிக்கு வினாடி அதிகரித்தன. இரவைப்
பகலாக்கின.

காலடியோசை கேட்டது.
ஆர்வத்துடன் திரும்பினான்.

வந்தவன் உயிர்த்தோழன்—
லட்சியத்தில் கூட்டாளி—பிர் நாரா
யண்.

''என்ன, போன காரியம்
முடிந்ததா, ஜெய்?''

''ஆம், கொண்டு வந்து
விட்டேன்.'' இடுப்பைத் தொட்டுக்
காட்டினான் இளவரசன்.

''ஜெய்! அடுத்து நடக்கப்
போவதென்ன?''

பிர்நாராயணின் குரலில்
அவசரம் தொனித்தது.

''கம்லாவதியை நான் பார்த்
தாக வேண்டும். அதற்காக ஒரு
பெண்ணை வரச்சொல்லியிருக்கிறேன்.
அவளுக்காகத்தான் காத்திருக்கிறேன்,''
என்றான் இளவரசன்.

(தொடரும்)

# வாளின் முத்தம்

## 4

இளவரசி கம்லாவதி அந்தப்புரத்தின் சாளரத்தருகே நின்றிருந்தாள். சித்திர வேலைப்பாடுகள் செய்த துவாரங்களின் வழியே வெளிச்சம் அவள் தந்த மேனிக்கு வந்தனம் செய்தது. வெகு வெகு தொலைவில் வெள்ளிக்கோடாக மினுமினுத்தது பனாஸ் நதி. ஆரவல்லி குன்றுகளிலே அவதரித்து, கம்பல்கார் கோட்டையைத் தொட்டுக்கொண்டு, சம்பல் நதியில் சங்கமமாவதற்கு விரைந்தோடும் அந்த நதியில் எவ்வளவு முறை அவள் குளித்திருக்கிறாள்!

பெருமூச்சு வெளிப்பட்டது கம்லாவதியிடமிருந்து. நந்தவனத்தை நோக்கினாள். வண்ணக் கொள்ளையாய்ப் பூத்துக் குலுங்கின மலர்ச்செடிகள். அவற்றின் அசைவுகளைப் பார்க்கும்போதெல்லாம் அவள் கைகள் வளைந்தன. கால்கள் குதித்தன. சலங்கையில் கட்டிய நூறு நூறு மணிகள் கலீர் கலீரென்று சப்தித்தன. கதக் நடனத்திலே தேர்ச்சி பெற்ற அவள் மனதகம் 'ஆடு ஆடு' என்று கெஞ்சியது. இடது கையை இடுப்பில் வைத்து, வலக்கையை ஒரு வளை வளைத்து, பாம்பின் அசைவை அபிநயிக்க எண்ணினாள். தன்னைத் தானே நிறுத்திக்கொண்டாள். "பரத நாட்டியத்தையும் மணிபுரியையும் போல வெறும் கரங்களினால் அபிநயம் பிடிப்பதல்ல கதக் நாட்டியம்.''

அவளுக்குக் கீர்த்தனை மண்டலி, ரச மண்டலி இரண்டையும் கற்றுத் தந்த ஷெஹாஜி மகராஜ் சொல்லியிருந்தார் அப்படி. ''உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால் வரை மொத்த உடம்பும் ஒரு விஷயத்தை உணர்த்த வேண்டும் குழந்தாய்,'' என்பார். அது முதல் வெறுமே கையும் காலும் மட்டுமே ஆட ஆசைப்பட்டால் அவள் அடக்கி விடுவாள்.

இப்போது அவள் மேனி மொத்தமும் துடித்தது ஆட வேண்டும் போல. பக்கவாஜும் தப்லாவும் சாரங்கியும் இசைக்க, கணேஷ் வந்தனாவும் அமடாவும் நட்வாரியும் ஆட வேண்டும் போலிருந்தது. தரையில் தவ்வித் தவ்விச் சலங்கையொலி எழுப்ப வேண்டும் போலிருந்தது. தனலீலா ஆட வேண்டும் போலிருந்தது. முகத்திரையை விலக்கி, கோபத்தையும் வெட்கத்தையும் எச்சரிக்கையையும் ஆசையையும் ஐம்பது வகைகளில் வெளிப்படுத்தும் குங்கட் ஆட வேண்டும் போலிருந்தது. ராதையாகவும் கண்ணனாகவும் கோபியாகவும் இடம் மாறி, பாத்திரம் மாறி, பாவம் மாறி.........

ஆனால் இது என்னவோ விரத மாதமாம். ஆடக் கூடாதாம். அண்ணிமார்கள் கட்டுப்பாடு விதித்திருக்கிறார்கள்.

'மோகினி'

கொஞ்ச நாள்தான், பொறு என்கிறுர்கள்.

அக்பரின் நாயகியாக ஆன பின்னர் நிறைய ஆடலாமாம். அவரது அந்தப்புரத்தில் ஆடலும் பாடலும் அமோகமாகச் செழித்து வளர்கின்றன வாம். உண்மையா? அல்லது அவளைச் சம்மதிக்க வைப்பதற்காகச் சொல்கிற ஏமாற்று வார்த்தையா? சின்ன அண்ணன் ஜெய் வந்திருக்கிறுராமே, அவரைக் கேட்டால் எல்லாம் சொல்வார். ஆனுல் அவரைப் பார்ப்பதற்கும் என்னென்னவோ தடை போடுகிறுர்கள்.

இளவரசியின் ஏக்கப் பெருமூச்சில் அவள் முகர்ந்து கொண்டிருந்த சின்னப் பூ முகம் சிணுங்கியது.

மூன்று நாட்களாகிவிட்டன அரண்மனையில் ரூப்மதி வேலைக்கமர்ந்து.

விழாக் கொண்டாட்டங்கள் நடந்துகொண்டிருந்த இரவன்று, ஓட்டமும் நடையுமாக மூச்சு இரைக்க இரைக்க அவள் வருவதை ஜெய் கண்டான். அதுவே ஒரு தனி அழகாகப் பட்டது அவனுக்கு. நண்பன் இருப்பதை மறந்தான். இருப்பது அரண்மனை சுற்றுப் புறம் என்பதை மறந்தான். முன்னே சென்று கைநீட்டினுன். அவள் கைகளை அழுத்திப் பிடித்தான்.

''ஆ!'' புண்ணில் வேல் பாய்ச்சினுற்போல் கைகளை இழுத்துக் கொண்டாள் அவள்.

''என்ன ரூபா கையிலே?''

''சாளரக் கட்டைகளை ஒவ்வொன்ருகப் பிய்த்துப் பாருங்கள், தெரியும்.'' சிரித்தாள் அவள். ''மொத்தம் பன்னிரண்டு இருந்தது.''

''உன்னை யாரும் அடைத்து வைத்திருந்தார்களா என்ன!''



மொத்தத்தில் சிவப்பு நிற அம்பாஸிடர்களின் எண்ணிக்கை குறைவு அல்லவா?

74'ம் பக்க விடை.

''யாரும் இல்லை. என் பாட்டி.''

பீர்நாராயண் தொண்டையைக் கனைத்தான்.

''சீக்கிரம் சொல்லுங்கள் நான் செய்ய வேண்டிய வேலையை,'' என்ருள் அவள்.

''என் தங்கை கம்லாவதியிடம் அந்தரங்கத் தோழியாக நீ இருக்க வேண்டும். அவள் சொல்வதை என்னிடமும் நான் சொல்வதை அவளிடம் கொண்டு சொல்கிற தூதுப் பெண்ணுக இருக்க வேண்டும்....''

''அரண்மனையில் இவளை வேலைக்கு அமர்த்துவது அவ்வளவு சுலபமல்ல.'' இடைமறித்தான் பீர் நாராயண்.

''ஏன், நான் சொன்னுல்...''

டக் டக் டக். எட்டத்தில் மிடுக்கான காலடியோசை கேட்டது. கருங்கல் தளமிட்ட பாதையுடன் கனத்த காலணிகளின் சம்பாஷணை...

''அதோ! படா சுபேதார் ஹரிசிங் வருகிறுர். அரண்மனையில் ஆட்களை நியமிப்பவர் அவர்தானே? நான் ஒரு வார்த்தை சொன்னுல் போதுமே!'' என்ருன் ஜெய்.

''இளவரசர் இன்னும் பழைய கனவுகளிலிருந்து எழுந்துகொள்ளவில்லை போலிருக்கிறது!'' வருத்தத்தோடு சிரித்தான் தோழன். ''தங்களுக்கு இங்கே எந்த விதமான அதிகாரமும் கிடையாது என்பது தங்கள் தமையன்கள் வகுத்திருக்கும் சட்டம். தங்கள் கட்டளையை ஹரிசிங் மட்டுமல்ல, எவருமே கேட்க மாட்டார்கள். இன்னும் சொல்லப் போனுல், தங்கள் விருப்பமென்னவோ அதற்கு நேர் எதிராகத்தான் செய்வார்கள்.''

காலடியோசை நெருங்கி வந்தது. ஜெய்க்கு ஒரு திடீர் எண்ணம்.

இடியென முழங்கியது அவன் குரல். ''இந்தாம்மா, இதென்ன தர்மசாலை என்று நினைத்துக் கொண்டாயா? திறந்த வீட்டில் எருமை மாடு நுழைகிற மாதிரி நுழைந்து விட்டாயே?...என்னது? வேலையா? வேலையும் கிடையாது, ஒன்றும் கிடையாது. போ போ!''

ரூப்மதி அதிர்ச்சியுடன் நின்ருள். என்ன பேசுகிருர் இவர்?



அருகில் வந்தார் படா சுபேதார். நின்ருர். அதட்டல்கள் அவர் காதில் விழுந்தன. மாபெரும் அரிவாள் மீசையை முறுக்கிக் கொண்டு நின்ருர்.

ஜெய் தொடர்ந்தான். ''போ என்று சொல்கிறேனே, காதில் விழவில்லை? எதற்காக நிற்கிருய் இன்னும்? வேலை என்று வர வேண்டியது, ஏதாவது திருடிக் கொண்டு நழுவ வேண்டியது...''

ரூப்மதிக்குக் கோபம் வந்தது. ஏதோ சொல்ல வாயெடுத்தாள். குறுக்கிட்டான் ஜெய். ''என்ன பார்க்கிருய்? வேறே யாரையாவது சிபாரிசு பிடிக்கலாமென்ரு? எதுவும் நடக்காது. இங்கே நான் சொல்வதுதான் சட்டம். வேலைக்கு வை என்ருல் வைப்பார்கள். வீட்டுக்கு அனுப்பு என்ருல் அனுப்புவார்கள்.''

படா சுபேதாரின் முகம் கறுத்தது. தோரணையுடன் ரூப்மதியை ஏற இறங்க நோக்கினர். ''இந்தாம்மா, என்ன விஷயம்? எது வேண்டுமானலும் என்னிடம் சொல்லு,'' என்ருர்.

ஒரு மின்வெட்டுப் பார்வை ஜெய்யிடமிருந்து அவளுக்குத் தாவிற்று. கெட்டிக்காரி. புரிந்து கொண்டாள். ''அரண்மனையில் சின்ன ராணியின் கீழே வேலை செய்யப் பெண்கள் தேவை என்று யாரோ சொன்னர்கள். இவரைக் கேட்டால் என்னமோ சண்டைக்கு வருகிருர். இங்கே இவர் வைத்தது தான் சட்டமாம். வேலைக்கு வைப்பதும் நீக்குவதும் இவர் சொல்படி தானும்...''

படா சுபேதார் மீசையை முறுக்கிக் கொண்டார். ''நல்லது. நீ என் பின்னல் வா. இளைய ராணியிடம் சொல்கிறேன்.''

# ஒரு காதல் மலராமலே கசங்குகிறது

பிரேமா பஸ் ஸ்டாண்டில் காத்திருந்தாள். மிக அருகில் ஒரு ஸ்கூட்டரின் சத்தம் கேட்கவே அவள் முகம் மலர திரும்பினாள். அவள் முகம் திரும்பிய வேகத்திலேயே சுருங்கியது. எதிரே சுரேஷ். ''ஏன்தான் கசங்கிய துணிகளை அணிகின்றானோ'' என்று அவள் மனம் எண்ணியது. ''வீட்டிற்குத் தானே.....?'' தாங்க்ஸ் என் தோழிகள் வருவார்கள். நான் பஸ்ஸிலேயே



போகிறேன் என்றாள் பிரேமா. வருத்தத்துடன் சுரேஷ் கிளம்பும்பொழுது, ரகுவின் ஸ்கூட்டர் வந்து சேர்ந்தது. பிரேமாவின் முகம் ரகுவின் வரவால் மலர்ந்தது. அவனது மடிப்பு கலையாத உடைகளைக் கண்டு அவள் வியக்காத நாட்களே இல்லை. ஜம்மென்று ரகுவுடன் பிரேமா கிளம்பிச் சென்றாள்.

உண்மையில் சுரேஷிற்கும். ரகுவிற்கும் ஒரே வித்தியாசம். அவர்களது ஆடைகள்தான். சுரேஷு பாலியஸ்டர் கலந்த துணிகளையே அ கின்றான். ஆனால் அவை ''டெபிலைஸ்டு'' முத்திரையிடப்பட்டனவல்ல. ஆனா ரகு எப்பொழுதும் டெபிலைஸ்டு முத் ரையிடப்பட்ட ஆடைகளையே குறி பாக கேட்டு வாங்குவான். இது அவனது பொலிவிற்குக் காரணம்

நீங்கள் துணி வாங் போது நெசவின் நயத்தையும், வ ணத்தையும் கண்டு மயங்காதீர்க ''டெபிலைஸ்டு'' முத்திரையிடப்பட்ட என்று கூர்ந்து கவனியுங்கள். 2 பருத்தி கலந்திருந்தால்கூட பாலி டர் கலந்த பருத்தித் துணிகள் க சுக் கூடும். 'டெபிலைஸ்டு' முத்தி யிட்ட பாலியஸ்டர் கலந்த பரு துணிகளும் உயர்ரக பருத்தி து களும் கசங்குவதில்லை. நாள் வதும் உங்கள் தோற்றத்தை பரிமளிச் செய்கிறது. பிறரை வசீகரிக்கும் ச யையும் அளிக்கிறது. டெபிலை முத்திரை கொண்ட துணி நாட்டிலுள்ள பிரபல மி ளான அரவிந்த். ரெய்ப் அசோகா. பாம்பே டை காலிகோ. மபத்லால் கு மபத்லால் பைன் ஸ்பின் ஸ்டாண்டர்ட், சூரத் டன், நியூஷராக். மி ஸ்ரீஅம்பிகா. ஸ்ரீ அற்பு டாடா டெக்ஸ்டை டாடா மில்ஸ். தேசி, அட்வான்ஸ், ரெஸ். தாக்கர்ஸே: துஸ் ஸ்பி அ வி மி ஆகி நி ரிக் படுப

---

TESTED CREASE RESISTANCE · TEBILIZED · MINIMUM IRONING · DURABLE GOOD LOOKS

''டெபிலைஸ்டு'' இங்கிலாந் மான்செஸ்டரில் உள்ள டே லிமிடெட்டின் துணை நிறுவ மான் மேட்டூர் பியர்ட்ஸெல் லிமிடெட்டின் ரிஜிஸ்டர்டு 'டிரேட் மார்க்.



60'ம் பக்க விடை—

படம்: ராஜபார்ட் ரங்கதுரை, நாலாவதாக இருப்பவர்: சதன்.

அவளுக்கு வேலை கிடைத்த வரலாறு இது.

அன்றைக்கு ராத்திரி, சந்திரன் தலை உச்சிக்கு வந்த சமயம் குடிசைக்கு அவள் திரும்பினாள். தலையில் கைவைத்து உட்கார்ந்திருந்த பாட்டி என்னமாய் ஓடிவந்து கட்டிக்கொண்டாள்! என்னமாய்க் கண்ணீரைப் பெருக்கிக் கதறினாள்! "ரூபா, சாளரத்தைப் பிரித்து உன்னை எவனோ தூக்கிக்கொண்டு போய்விட்டானென்று நினைத்துவிட்டேன் குழந்தே! எங்கேம்மா போயிருந்தே?" என்று அழுதாள். "இளவரசர் வரச் சொல்லியிருந்தார் பாட்டி. நாளையிலேயிருந்து எனக்கு அரண்மனையிலே வேலை," என்று அவள் பதிலளித்தவுடன்—

"ஐயய்யோ, வேண்டாம்மா, வேண்டாம்," என்று பாட்டி மன்றாடினாள்.

"எனக்கு ஓர் ஆபத்தும் வராது பாட்டி. பயப்படாதே. நீயேதான் சொல்கிறாயே, நான் மாபெரும் போர்வீரர்களின் வம்சத்தில் வந்தவளென்று. அப்புறம் நான் யாருக்கு, எதற்குப் பயப்பட வேண்டும்?" அழுத்தமாகச் சொல்லிவிட்டு அரண்மனை வேலையில் சேர்ந்துவிட்டாள். காலையில் குடிசையிலிருந்து புறப்பட்டு இங்கே வருவாள். இருட்டும் நேரத்துக்குத் திரும்பிவிடுவாள்.

ஆனால் இளவரசி கம்லாவதியை சந்திப்பது அவ்வளவு சுலபமாயிருக்கவில்லை.

முதல் நாள் அந்தப்புரத்தில் எல்லாப் பெண்களும் கூடி உட்கார்ந்திருந்தார்கள். மறுநாள் ஏதோ பண்டிகையாதலால் சேடிகளைக் கொண்டு கைகளுக்கும் கால்களுக்கும் மெஹந்தி அலங்காரம் செய்து கொண்டிருந்தார்கள். ஒரே சிரிப்பும் கும்மாளமுமாயிருந்தது. கம்லாவதி இன்னாரென்பதைக் கண்டுகொள்ளவே பெரும் நேரம் செலவழிந்துவிட்டது. அப்புறம் கௌரி பூஜை. அரச குடும்பத்தாரைத் தவிர வேறு யாருமே உள்ளே வரக்கூடாதென்று தடை விதித்து விட்டார்கள். மூன்றாம் நாள் நம்பிக்கையுடன் இருந்தாள். ஆனால் அவளைக் கம்லாவதியின் சேடியாகப் போடவில்லை படா சுபேதார். பெரிய ராணியின் மகாலுக்குச் செல்லுமாறு பணித்து விட்டார்.

தங்கையின் மனசை அறிந்து வந்து சொல்லு என்று கூறியிருந்தான் ஜெய். சந்தித்தாலல்லவா பேசுவது! பேசினாலல்லவா மனசை அறிவது! மனசை அறிந்தாலல்லவா அவனிடம் சொல்வது! ஜெய்யின் அவசரச் சமிக்ஞைகளைப் பார்க்கும் போதெல்லாம் அவளுக்குப் பரிதாபமா யிருந்தது.

பிற்பகல் வேளை. அரண்மனையைச் சுற்றிலும் தேவதாரு மரங்களின் நிழல்கள் சாயத் தொடங்கியிருந்தன. காவலாட்களும் பணிப்பெண்களும் ஆங்காங்கே கண்ணயர்ந்து கொண்டிருந்தார்கள். எங்கோ குதிரைகள் நடை பழகும் ஓசை கேட்டது.

கம்லாவதியின் அறைக்குள் சரேலெனப் புகுந்துவிட்டால்...?

இரண்டடி எடுத்து வைத்திருப்பாள். வளையோசை கேட்டது. நின்றாள்.

இன்னொரு பணிப் பெண்.

வசன கவிதை கூடாதென்பது என் வாதமல்ல. வசனத்திலும் கேவலமான வசனத்தைக் கவிதை என்று சிலர் கவியரங்கிலே படிக்கிறார்களே, அதைத்தான் என்னால் தாங்க முடியவில்லை.

—கண்ணதாசன்
(கல்கி இதழில்)



கையில் பெரிய வெள்ளித் தட்டும், அதில் வெள்ளிக் கலங்களில் பழ ரசமும் எடுத்துச் சென்று கொண்டிருந்தாள். ''வழி விடு. சின்னராணிக்குக் கொண்டு போகவேண்டும்:'' அதட்டினாள், ரூப்மதியை.

வழிவிட்ட அதே கணம் ரூப்மதிக்கு ஒரு யோசனை.

வந்த நாள் தொட்டு இவளைக் கவனித்து வந்திருக்கிறாள் ரூப்மதி. எப்போது பார்த்தாலும் தன் குழந்தையைத் தூக்கி வைத்துக் கொஞ்சிக் கொண்டிருப்பாள். ராணிமார்களிடமிருந்து அழைப்பு வந்தால் கீழே விட்டு விட்டுப் போகமாட்டாள். பக்கத்தில் உள்ளவரிடம் ஒப்படைத்து, நூறு முத்தங்கள் கொடுத்துவிட்டு, திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே செல்வாள். இப்போது அந்தக் குழந்தையைக் காணோம். எங்கேயாவது தூங்கிக் கொண்டிருக்கிறதோ என்னவோ. இருந்தாலும் ஒரு கதை கட்டிப் பார்த்தாலென்ன...

''வந்து...சரி, சரி. இருக்காது.'' ஏதோ சொல்ல வந்தாற் போலவும் அடக்கிக்கொண்டாற் போலவும் நடித்தாள்.

''என்ன? சொல்லு சும்மா.''

''ஒன்றுமில்லை. நந்தவனத்தில் ஒரு குழந்தை தனியே அழுது கொண்டிருந்தது. உங்கள் குழந்தையோ என்று நினைத்தேன்...''

அவள் திடுக்கிட்டு நின்றாள். ''என் பிஜ்லியா? இருக்காதே. தேவ்ணாத் மாலியிடம் அல்லவா கொடுத்து விட்டு வந்தேன்? குழந்தை எப்படி இருந்தது?''

''சுருட்டை முடியாய், சிவப்

பாய்...ரொம்ப அழகான குழந்தை. உங்கள் குழந்தைதானு என்று நான் சரியாய்க் கவனிக்கவில்லே. ஆனுல் குளத்தினருகே அழுது கொண்டிருக் கிறதே என்று நினேத்தேன். அதற்குள் இங்கே யாரோ கூப்பிட்ட மாதிரி—''

''இதைக் கொண்டுபோய் உள்ளே கொடு.'' பழரசத் தட்டை ரூப்மதியிடம் தள்ளிவிட்டு அவள் நந்த வனத்துக்கு ஓடினுள்.

ரூப்மதி தலேயையும் உடை யையும் சீர்செய்து கொண்டாள். முகத்தைத் தாவணித் தலேப்பால் துடைத்துக் கொண்டாள். கம்லாவதி யின மகாலுக்குள் சென்ருள். இதயம் படபடத்தது.

மெத்தென்ற ரத்தினக் கம் பளம். எங்கெங்கு பார்த்தாலும் கண் ணுடி விளக்குகள். தந்த வேலேப்பாடு மிகுந்த கருங்காலி மஞ்சம். செக்கச் செவேலென்ற பட்டு மெத்தை, பட்டுத் தலேயணே. கமகமவென்று வருகின்ற சந்தன மணம். வெளியே நிலவும் வெய்யிலுக்கு நேர் எதிரான குளிர்ச்சி.

சாளரத்தின் வழியே வெளியே பார்த்தாற்போல் நின்றிருந்த இளவரசி அவளே நோக்கித் திரும்பினுள். ''யார் நீ?'' என்று கேட்டாள்.

அவளுடைய ராஜகம்பீர மான தோற்றம்; கணீரென்ற குரல். ரோஜாப் பூவின் மென்மையையும், பாறையின் உறுதியையும் ஒருங்கே வெளிப்படுத்தும் முகம்.

''நான்...நான்...'' ரூப் மதிக்குச் சரியாகச் சொல்லத் தெரிய வில்லே. அவள் கையில் தட்டு ஆடியது. கோப்பைகள் கவிழ்ந்தன. ஒன்று கீழே விழுந்து உருண்டது.

''நான் ...நான்... புதுப் பணிப் பெண்...'' பயத்தில் நாக்குக் குழறியது. குனிந்தாள். கோப்பையை எடுத்துத் தட்டில் வைத்தாள்.

வெளியேறும் சமயம்—

''இரு,'' என்றது இளவர சியின் குரல். அதில் ஒரு வகை பரபரப்பு இருந்தது. ''உன் பெயர் என்ன?''

''ரூப்மதி.''

''நீ குனிந்து நிமிர்ந்த லாகவத்தில் ஒரு ஒயில் தெரிகிறது. நாட்டியம் தெரிந்தவர்களிடம் மட்டுமே இருக்கும் ஒயில். சொல்லு, நீ நாட்டி யப் பயிற்சி பெற்றவள்தானே?''

(தொடரும்)

# வாளின் முத்தம்

'மோகினி'

## 5

ரூப்மதி சிந்தித்தாள்.

எதிரில் நிற்பவள் நாட்டியம் தெரிந்தவள் என்பதை அவளுடைய அசைவிலிருந்தே கண்டு கொள்ளும் அறிவு; அது பற்றிக் கேட்கும்போது குரலில் ஒலிக்கின்ற தோரணை; நிற்கிற ராஜகம்பீரம்; முகத்தை உயர்த்தினாற் போல் எதிராளியைப் பார்க்கையில் இரட்டிக்கின்ற காந்தி —

இந்தப் பச்சைக் கிளியா அக்பரின் அரண்மனைக் கூட்டில் அடைபடுவது!

பாதுஷாவுக்கு இப்போது வயது கிட்டத்தட்ட நாற்பதை எட்டிக் கொண்டிருக்குமே!

கொஞ்ச நாள் முன்பு கேழ்வரகு மூட்டைகளை வண்டியேற்றுவதற்காக வந்திருந்த ஜெய்ப்பூர் வர்த்தகரொருவர் பாட்டியிடம் பேசிக் கொண்டிருந்தது அவளுக்கு ஞாபகம் வந்தது.

அக்பரின் தந்தை ஹுமாயூன் இறந்து போய் இருபது இருபத்தைந்து வருஷமாகிறது என்று அவர் சொல்லிக் கொண்டிருந்தார்.

டில்லியில் ஷேர்மண்டல் என்ற கட்டிடத்தின் உச்சிக்கு ஏறிக் கொண்டிருந்தாராம் ஹுமாயூன். துருக்கியிலிருந்து வந்திருந்த ஒரு கடற்படைத் தளபதியிடம் பேசியபடியே மேல் உப்பரிகைக்குப் போய், வெளியே கூடியிருந்த மக்களுக்குத் தரிசனம் தந்தாராம். இறங்கி வருகையில் பக்கத்து மசூதியிலிருந்து தொழுகை ஒலி கேட்கவே, சட்டெனத் திரும்பியிருக்கிறார். நீண்ட அங்கி காலைத்

பலத்த காயங்களுடன் மூன்று நாள் படுத்திருந்து இறந்து போனார். அவர் மரணம் வெளியில் தெரிய வேண்டாமென்று ரகசியமாக வைத்திருந்தார்களாம் ஹுமாயூனின் அமைச்சர்கள். முல்லா பெக்காஸி என்பவரைப் பாதுஷா மாதிரி வேடம் போடச் சொல்லி, ஜனங்களுக்குக் காட்டினார்கள். சக்கரவர்த்தி உயிர் பிழைத்து விட்டாரென்று மக்கள் விழாக்கூடக் கொண்டாடினார்களாம்.

அந்தச் சமயம் அக்பர் பதினாறு வயதுச் சிறுவன். ஹரியானாவில் குர்தாஸ்பூர் அருகே இருந்தவருக்குச் செய்தி போயிற்று. அவர் உடனே டில்லி திரும்பி ஆட்சியை மேற்கொள்ளத் தயாரானார். ஆனால் அதற்குள் எதிரிகள் என்ன செய்வார்களோ என்று அஞ்சினார் தளபதி பைராம்கான். கலௌனூர் என்னும் இடத்தில், மூன்றடி உயரமுள்ள ஒரு சாதாரணக் கருங்கல் மேடையில் அக்பரை உட்கார்த்தி வைத்து அங்கேயே மாமன்னரென்று பிரகடனம் செய்தார்.

கேழ்வரகு வியாபாரி சொன்ன இந்தத் தகவலின்படி பார்த்தால் இப்போது அக்பர் அரைக் கிழவர்! அவருக்கா இளமையின் வசந்தத்திலே உலா வரும் இந்த இளவரசி....

ரூப்மதியின் சிந்தனையைக் கலைத்தாள் இளவரசி கம்லாவதி. ''சொல்லு, நீ நாட்டியமாடத் தெரிந்தவள்தானே?''

இளவரசியின் குரலில் இருந்த தாகம்; முகத்தில் தென்பட்ட முறுவல்—ரூப்மதி தைரியமடைந்தாள். ''ஆமாம் இளவரசி... கொஞ்சம் கொஞ்சம் ஆடத் தெரியும்...'' என்றாள்.

கம்லாவதி தானே போய் அறைக் கதவைச் சாத்திவிட்டுத் திரும்பினாள். இருக்கையில் அமர்ந்து ரூப்மதி



வாயில்லே, உட்கார். எங்கே, எப்போது கற்றுக்கொண்டாய்?''

இளவரசியின் எதிரில் உட்காருவதா! திடீரென்று பெரிய ராணி வந்தால்...! இளவரசியின் மென்மையான பாதங்களேப் பிடித்துவிடுகிறவள் போல நடித்தபடியே தேவி மாதுரியிடம் தான் நாட்டியம் பயின்றதைச் சொன்னுள்.

பொறுமையுடன் அவளே நோக்கினுள் இளவரசி. ''தேவி மாதுரியா உனக்குக் குரு?'' பெருமூச்சு வெளிப்பட்டது அவளிடமிருந்து. ''எப்படிப்பட்ட கலேயரசி அவர்! நான் எவ்வளவோ ஆசைப்பட்டேன் அவரிடம் நடனம் பயில. அரச குடும்பத்தாருக்குச் சொல்லித் தருவதில்லே என்று கூறிவிட்டார்...''

இந்த நாட்டியப் பேச்சை விட்டுவிட்டு வேறு பேச்சுக்கு—ஜெய் சொல்லியிருக்கும் விஷயத்துக்கு—தாவினுல் தேவலே என்றிருந்தது ரூப்மதிக்கு.

கட்டு இருக்கிறது, இளவரசி. கண்கள் அற்புதமாய்ச் சஞ்சரிக்கின்றன. தங்களுடைய நாட்டியத்தைக் கண் குளிரப் பார்க்கக் கூடிய பாக்கியம் என்றாவது ஒருநாள் இந்த ஏழைக்குக் கிடைக்கும் என்று நினேக்கிறேன்...''

சரேலென்று எழுந்து கொண்டாள் இளவரசி. ''என்றைக்காவது ஒருநாள் என்ன? இன்றே ஆடப் போகிறேன்...என் கால்கள் கெஞ்சிக் கொண்டிருக்கின்றன. நாட்டியம் தெரிந்தவள், நல்லதொரு ரசிகை நீ இருக்கவே இருக்கிருய்...''

ஆர்வத்துடன் கடகடவென்று பேசியவளே இடைமறித்தாள் ரூப்மதி. ''இது விரத மாதம்...ஆடக்கூடாதென்று சொல்வார்களே...''

''கலேயை அப்படியெல்லாம் கட்டுப்படுத்த முடியாது ரூப்மதி... ஆனுல்..''

''ஆனுல்...''

மூத்த அண்ணியார்—வந்தால் கோபிப்பார். ஒன்று செய். இப்போது அவர் தூங்கிக் கொண்டிருக்கும் நேரம். உறங்குகிறாரா என்று பார்த்துவிட்டுச் சீக்கிரம் வா.''

நந்தவனத்தின் வழியே ரூப்மதி பறந்தாள்.

யாரோ ஒரு மர்மமான நபர் தன்னைப் பின் தொடர்வது போன்ற உணர்வு ஏற்பட்டது அவளுக்கு.

திடுதிப்பென்று ஒரு கரம் அவள் தாவணியைப் பிடித்து இழுத்தது.

திரும்பினாள்.

ஜெய்.

''ஓ! நீங்கள்தான் என்னைப் பின்தொடர்ந்து வந்தீர்களா!''

ஜெய்யின் முகத்தில் கோபம் தெரிந்தது. ''அரண்மனையில் வேளா வேளைக்கு அருமையான உணவு. நல்ல உறக்கம். மூன்று நாட்களுக்குள் உனக்கு உடம்பு நன்றாய்த்தான் பெருத்திருக்கிறது.''

ரூப்மதி சிரித்தபடி அவன் பிடியிலிருந்து முந்தானையை விடுவித்துக்கொண்டாள். நடந்ததைச் சொன்னாள்.

ஜெய்யின் முகத்தில் ஏமாற்றம். ''ஆக, இனிமேல்தான் கம்லாவதியைக் கேட்கப்போகிறாயா?''

''இன்னும் கொஞ்ச நேரத்தில் சொல்லி விடுகிறேன் முடிவு. இளவரசியின் உப்பரிகையின் கீழே நீங்கள் நின்றிருங்கள். அக்பரை மணக்க இளவரசிக்குப் பிடித்திருக்கிறதா இல்லையா என்பதை நான் தெரிவிக்கிறேன்.''

''எப்படித் தெரிவிப்பாய்?''

அவள் யோசனையுடன் சுற்றுமுற்றும் பார்த்தாள். தென்றலில் ஆடும் ரோஜாக்கள்! இளவரசியின் அறையில் ஏராளமான பூங்கொத்துக்களைப் பார்த்ததும் நினைவுக்கு வந்தது.

''அக்பரை மணக்கத் தனக்குப் பிரியமில்லை என்று இளவரசி சொல்ல வேண்டியதுதான் தாமதம்—மறு விநாடி சாளரத்தின் வழியே ஒரு சிவப்பு ரோஜாவை எறிகிறேன். போதுமா?'' என்றாள்.

அவன் முகம் மலர்ந்தது. ''காத்திருக்கிறேன். ஒரு ரோஜா இன்னொரு ரோஜாவை எறிவது சாதாரணமாய்க் காணக்கூடிய காட்சியல்லவே!'' என்றான்.

பிடிக்க வந்த கைகளை மெல்லத் தடுத்தாள்; ஆகிவிட்ட தாமதத்தை ஈடு செய்ய வேண்டி வேகமாய் விரைந்தாள் அவள்.

பெரியவர் தினேஷின் அந்தப்புரத்தில் எல்லாம் நிசப்தமாய் இருந்தது. வேலைக்காரியொருத்தி பங்காவை

இழுத்துக் கொண்டிருந்ததால் உள்ளே அரசியார் தூங்குகிறார் என்று அறிந்து கொண்டாள் ரூப்மதி. அடுத்தவர் பூபதின் மகாலும், அதற்கடுத்தவர் பிகாரி மாலின் மாளிகையும் அப்படியே.

ஓட்டமாய்த் திரும்பி வந்து கம்லாவதியிடம் விஷயத்தைச் சொன்னதும்—

கண்ணிமைக்கும் நேரத்தில் உடையை மாற்றிக்கொண்டாள் அவள். சலங்கையைக் கட்டிக்கொண்டாள் பாதங்களில். "கதவைச் சாத்து. ரூப்மதி. உனக்குத் தபேலா வாசிக்கத் தெரியுமா?"

"மன்னிக்க வேண்டும் இளவரசி. தெரியாது."

"பரவாயில்லை. கையால் தாளம் போடு."

இளவரசி நன்கு நிமிர்ந்து நேராக நின்றுகொண்டாள். இஷ்டம் போல் வளைக்கக்கூடிய மெழுகுச் சிலை மாதிரி, விட்ட சொல்லுக்குக் கட்டுப்படக் கூடிய பக்குவத்துடன் நின்றது அவள் மேனி.

"தாள் — த்ரிதாள் — 16 மாத்திரை." ஆடத் தயாரானாள் கம்லாவதி.

கையைத் தட்டினாள் ரூப்மதி. "தா தின் தின் தா தா தின் தின்தின் தா—நா தின், தின் தா தெத்தே தின் தின் தா—"

கலீர் கலீரென்று சலங்கை சிலிர்த்தது. பாவாடை வட்டமிட்டு வட்டமிட்டுப் பூக்குடையாய் விரிந்தது; படர்ந்தது. ஒரு கை தலைக்கு மேல் சுழல, மறு கை நீண்டு வளைந்தது. கையின் தாவல்களுக்கு ஏற்பக் கழுத்தும் கண்களும் தாவின. அடுத்து, பம்பரமாய்ச் சுழன்று சுழன்று இளவரசி குமேரி ஆடியபோது, அந்தப் புயல் வேகத்துக்குத் தாளமிட ரூப்மதியால் முடியவில்லை.

முத்து முத்தாய் வியர்வை துளிக்க, ஆடிக் களைத்தவளாய் மஞ்சத்தில் சாய்ந்தாள் இளவரசி. அந்த அழகு வதனத்தை மென்மையுடன் முந்தானையினால் ஒற்றினாள் ரூப்மதி. "அற்புதம் இளவரசி! வெகு அற்புதம் தங்கள் நடனம்!"

ரத்தின ஹாரம் பளபளக்கும் மார்பு மூச்சு இரைக்க ஏறி இறங்கியது. இளவரசி புன்னகை செய்தாள்.

## தஞ்சையும்

**அவர்களுடன் சேராதீர்கள்**

தலையங்கம் கண்டேன். அன்னை இந்திரா தஞ்சையில் நின்றால் தங்களது தோல்வி தவிர்க்க முடியாதது என்பதை உணர்ந்தவர்கள் அவரை நிற்கவொட்டாமல் தடுக்க, தங்கள் ஆதரவு ஏடுகளில் பூச்சாண்டி காட்ட வருகிறார்கள். அந்தப் பட்டியலில் குமுதமே நீயுமா?

பெரும்பாநல்லூர் தி. லோ. மூர்த்தி

குமுதமே! குட்டையைக் குழப்பி யோசனை என்ற பெயரில் இந்திராவை நிற்க விடாமல் செய்து விடாதீர்கள். தமிழ்நாட்டின் எந்த இடத்தில் இந்திரா நின்றாலும் வெற்றி பெறுவார்.

சென்னை—28 ஜி. லக்ஷ்மிநாராயணன்

நுனிப்புல் மேயாத ஆழமான கருத்து. இந்திராவின் பால் தமிழ் மக்கள் வைத்திருக்கும் நம்பிக்கை

"ஒரு விஷயம் இளவரசி... தாங்கள் தப்பாய் நினைத்துவிடப் போகிறீர்களே என்று பயமாயிருக்கிறது..."

"சொல்லு பயப்படாமல்."

கால்களை நீட்டி மஞ்சத்தில் முழுதுமாகச் சாய்ந்து கொண்டாள் கம்லாவதி.

"தாங்கள் இன்னும் கொஞ்ச நாளில் ஆக்ராவில் சக்கரவர்த்தியின் ராணியாக ஆகப் போகிறீர்கள் என்று சொல்கிறார்கள்..."

"அதனாலென்ன?"

"இவ்வளவு அற்புதமான கலைத் திறமைக்கு அங்கே என்ன இடம் இருக்குமென்று எனக்கு அச்சமாக இருக்கிறது, இளவரசி..."

கம்லாவதியின் முகத்தில் கவலை படர்ந்தது. "ஆமாம்... எனக்கும் அந்த விஷயம் யோசனையாகத்தான் இருக்கிறது..."

ரூப்மதியின் உள்ளம் படபடவென்று துடித்தது. ஆனால் குதூகலம் வெளிப்படையாகத் தெரிந்துவிடக் கூடாதே!

குரலைச் சாதாரணப்படுத்திக் கொண்டாள். "பாதுஷாவின் அந்த

# இந்திராவும்





யைத் துல்லியமாகக் குமுதம் தவிர யாரால் எழுத முடியும்?

திருச்சி—12 என். ஆர். நடராஜன்

தன்மானமுள்ள ஒவ்வொரு இந்திரா காங்கிரசாரும் சிந்தித்துப் பார்க்க வேண்டியது. தன்னுடைய சுயநலத்திற்காக அன்னையைப் பகடைக் காயாகப் பயன்படுத்த நினைக்கும் மற்றவர்களிடமிருந்து பாரம்பரிய காங்கிரஸின் பெருமையைக் காப்பாற்றுங்கள்.

தொண்டி, வ. நெ.மு. தாஜுதீன்

முன்பு கலைஞரிடம் சி. எஸ். சரணடைந்து வெற்றி பெற்றதுபோன்ற ஒரு பெரிய தவறை மாபெரும் தலைவி செய்துவிடக் கூடாது என்ற என் போன்றவர்களின் உள்ளக் கிடக்கையை மிக மிக அழகாகச் சுட்டிக்காட்டிவிட்டீர்கள்.

சென்னை—26 ரா. நடராசன்

புரத்தில் ஐயாயிரம் ராணிகள் இருப்பதாகப் பேசிக் கொள்கிறார்கள். மிகைப்படுத்திச் சொல்கிறார்களோ என்னவோ. ஐந்நூறு பேர் இருப்பது நிச்சயம். அவர்களில் ஒருவராக சூர்யபூர் இளவரசியும் அடைபட வேண்டுமே என்பதை நினைத்தால் எனக்கு என்னவோ போலிருக்கிறது இளவரசி... நான் சொல்லுவது தப்பானால் மன்னியுங்கள்...''

கம்லாவதியின் முகத்தைப் பார்த்தபடியே ஒவ்வொரு சொல்லாக வெளியிட்டாள் அவள். சாளரத்தின் ஓரமாக, வேலைப்பாடு செய்த வெண்கலச் சாடியில் ரோஜாக்கள் சிரித்தன. ரூப்மதியின் பார்வை சாளரத்துக்கும் சாடிக்குமாக ஓடி ஓடித் திரும்பியது. உப்பரிகையின் கீழே ஜெய் நின்று கொண்டிருப்பார்...

இளவரசி எழுந்து கொண்டாள். பின் கை கட்டிய வண்ணம் குறுக்கும் நெடுக்கும் நடந்தாள். ''இது ஒரு ராஜ தந்திரக் கல்யாணம் என்பது உனக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை...''

ரூப்மதிக்குப் புரிந்தது. இருந்தாலும், ''அப்படியென்றால்?'' என்றாள்.

''சூர்யபூர் ராஜ்யம் அக்பர் சக்கரவர்த்தியின் பாதுகாப்பை என் மூலம் தேடிக் கொள்கிறது என்று அர்த்தம்.'' கம்லாவதியின் குரலில் கசப்புத் தெரிந்தது.

ரூப்மதி சாளரத்தை ஒட்டி நின்றுகொண்டாள்.

''இளவரசி சொல்வதைப் பார்த்தால்...'' வேண்டுமென்றே இழுத்தாள். ''அக்பருக்கு ராணியாகச் செல்வதில் தங்களுக்கு அவ்வளவாக இஷ்டமில்லைபோல்...''

''துளியும் இஷ்டமில்லை, ரூப்மதி. எனக்குத் துளியும் இஷ்டமில்லை. என் அண்ணன்மார்கள் கட்டாயப்படுத்துவதால் சம்மதித்திருக்கிறேனே தவிர...''.

அடுத்த கணம் சாடியிலிருந்து ஒரு சிவப்பு ரோஜாவை உருவினாள் ரூப்மதி. சாளரத்துக்கு வெளியே எறிந்தாள். அவளால் உற்சாகத்தை அடக்க முடியவில்லை.

''பொருத்தமில்லாத மணத்துக்குத் தாங்கள் சம்மதிக்கவே தேவையில்லை இளவரசி. அதுவும் தங்கள் அழகுக்கும் அறிவுக்கும் வயதுக்கும் ஏற்றவரான ஒருத்தர் காத்திருக்கையில்...''

''எனக்காக ஒருத்தர் காத்திருக்கிறாரா?'' இளவரசியின் புருவங்கள் உயர்ந்தன. ''யாரைச் சொல்கிறாய்?''

''அவரைத் தங்களுக்கு மணமுடிக்க வேண்டுமென்று இளவரசர் ஜெய் துடித்துக் கொண்டிருக்கிறார். அக்பரை மணக்கத் தாங்கள் சம்மதித்துவிட்டீர்கள் என்பதால்தான் குறுக்கிடாமல் இருக்கிறார். ஆக்ராவுக்குச் செல்லத் தாங்கள் விருப்பப்படவில்லை என்பது தெரிந்ததோ, அடுத்த வினாடியே அந்தக் காளையை அழைத்து வந்து...''

இளவரசியால் ஆவலை அடக்க முடியவில்லை. கண்கள் ஆவலால் பளபளத்தன. ''யார் ரூப்மதி அவர், என் சின்ன அண்ணன் எனக்காகப் பார்த்து வைத்திருக்கிறாரா? யார், யார்?''

''அவரும் அரச வம்சம்தான் இளவரசி.''

# "இங்கே பாரு... ஸன்-ஸிப் ஜோரு!"




புதிய
## ஸன்-ஸிப்
### ஸ்க்வாஷ்கள்

ஆரஞ்சு, மாங்கோ, லெமன்

தினமும் அருந்துவீர் ஸன்-ஸிப்.
நாவிற்கினிய முக்கனிச்
சுவைகளில் எது வேண்டும்?
இன்றே வாங்குவீர் ஸன்-ஸிப்.
ஊர்மெச்சும் உன்னதமான
புத்தம் புதிய கனிச்சுவை
ஸ்க்வாஷ்கள்.

புத்துணர்வு பெருகிய சுவை— அருந்துவீர் இன்றே

"இதோ பார், எனக்குக் கோபம் வரும்."

"ஊரை முதலில் சொல்கிறேன். பெயர் அப்புறம். என்ன?" ரூப்மதியின் இதழ்களில் குறும்புப் புன்னகை மொட்டவிழ்ந்தது.

"சரி, சொல்லு."

"ஊரின் பெயர் நாகர்கோட்."

"நாகர்கோட்?" கம்லாவதியின் முகத்தில் திடீரென்று ஓர் இருள். "நாகர்கோட்டில்?"

அந்தக் குரலின் மாற்றம் ரூப்மதிக்குத் திகைப்பூட்டியது. மெல்ல, "நாகர்கோட்டில் மன்னர் பானு சந்த்," என்றாள்.

"பானுசந்தா!" வெறுப்பை உமிழ்ந்தது இளவரசியின் குரல். "சே! போய் உன் வாயைக் கழுவு! இந்தக் கம்லாவதி அக்பரின் ஜனானாவில் ஐந்நூறு பேரில் ஒருத்தியாக இருந்தாலும் இருப்பாளே தவிர, பானுசந்தின் மனைவியாவதற்கு ஒரு நாளும் சம்மதிக்கமாட்டாள்! சின்ன அண்ணன் ஜெய்யிடம் இப்போதே போய்ச் சொல்லிவிடு!"

ரூப்மதி அசைவற்று நின்றாள்.

வெண்கலச் சாடியில் மிச்சமிருந்த சிவப்பு ரோஜாக்கள் அவளைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்தன.

(தொடரும்)



# கண் இல்லாதவர் யார்?

ஒரு சிறுவன் சின்னஞ் சிறு கற்களைத் தூக்கி எறிந்து விளையாடுகிறான். ஒரு சிறுமி பார்த்தபடி நிற்கிறாள். ஒரு பெரிய கல், நடக்கும் பாதையின் நடுவில் விழுகிறது. பையனும் சிறுமியும் போய்விடுகிறார்கள்.

பாதையின் நடுவே அந்தப் பாறாங்கல்.

ஒருவர் சைக்கிளில் வேகமாக வருகிறார். அவர் பார்வையில் அந்தக் கல் படுகிறது. சைக்கிளைச் சற்று வளைத்துத் திருப்பி, போய்விடுகிறார்.

அடுத்தவர், பேப்பர் படித்துக்கொண்டே வருகிறார். அவர் வலது காலில் இடிக்கிறது அந்தக் கல். முகச் சுளிப்புடன் கட்டை விரலைத் தேய்த்துக் கொள்கிறார். முணுமுணுப்புடன் போகிறார்.

டக் டக் என்ற ஒலியுடன் ஒரு கைத்தடி. ஒரு பார்வையற்றவர் வருகிறார். பாதையின் நடுவே பாறாங்கல். அவர் தடி, அந்தக் கல்லில் படுகிறது. கைத்தடியால் அந்தத் தடையைப் பார்த்துத் தெரிந்துகொள்கிறார். தடியைக் கீழே வைத்துவிட்டு, மெதுவாக அந்தக் கல்லை, இரு கைகளாலும் தூக்கி எடுத்து, ஓரமாகப் போடுகிறார். குனிந்து தடியை எடுத்துக் கொண்டு, தன் பயணத்தைத் தொடர்கிறார், டக் டக் என்ற ஒலியுடன்.

'யார் பார்வையற்றவர்?' என்ற தலைப்புடன் படம் முடிவடைகிறது.

மனத்தைத் தொட்ட இந்தத் துண்டுப் படம் டி.வி.யில் காண்பிக்கப்பட்டது.

ரசித்தவர்: 'பாமாப்பிரியா'

# உருப்படியான காரியம் செய்கிறீர்கள், குமரி.

குமுதம்

எல்லாப் பிரசினைகளையும் எல்லா அரசியல் தலைவர்களும் மேலெழுந்தவாரியாகத் தொட்டு வைப்பதைக் காட்டிலும், சிலர் சில விஷயங்களில் தீவிரமாகவும், இடைவிடாமலும் கவனம் செலுத்துவது அவர்களுக்கும் சரி, மக்களுக்கும் சரி பயனுள்ளதாக இருக்கும்.

குமரி அனந்தனைப் பாருங்கள். தமிழ் மணியார்டர் பார சமாசாரத்தை உடும்புப் பிடியாகப் பிடித்துக் கொண்டுவிட்டார். உடும்புகள் வாழ்க!

'பண விடைத் தாள்'கள் இப்போது தமிழில் கிடைக்கின்றன என்ற நம்பிக்கையில் மே 5'ம் தேதியை வெற்றி விழாவாகவும், நன்றி அறிவிப்பு விழாவாகவும் காந்தி– காமராஜ் தேசிய காங்கிரஸ் கொண்டாடப் போவதாக அவர் முதலில் அறிவித்தார்.

பிறகுதான் உண்மை நிலைமை– 'கண் துடைப்பு' என்ற பதத்தின் பொருள்– புலப்பட்டிருக்கிறது.

தமிழில் மணியார்டர் படிவத்தை வெளியிட்டிருப்பதாக மத்திய தபால் அமைச்சர் தடபுடலாக அறிவித்துவிட்டாரே தவிர, சென்னையிலும் இரண்டொரு மாவட்டத் தலைநகர்களையும் விட்டால் வேறு எந்த அஞ்சலகத்திலுமே தமிழ் மணியார்டர் படிவம் கிடைக்கவில்லை. மத்திய அமைச்சர் கொடுத்திருந்த வாக்குறுதியில் வாக்கு இருந்ததே தவிர உறுதி இல்லை.

நிலைமை புரிந்ததும், குமரி அனந்தன் ஒரு காரியம் செய்திருக்கிறார்.

''மே 28'ம் தேதிக்குள் தமிழ்நாட்டிலுள்ள 11,300 தபால் நிலையங்களிலும் தமிழ் பணவிடைத் தாள் கிடைக்க வேண்டும். இன்றேல் தமிழ்நாடெங்கும் அமைதியான முறையில் கிளர்ச்சி நடத்துவோம்,'' என்று எச்சரிக்கை விடுத்திருக்கிறார்.

ஒரு நல்ல காரியத்தைச் செய்வதாகச் சொல்லிவிட்டு அதைச் செய்யாமலே நல்ல பெயர் தட்டிக் கொண்டு போய்விடலாம் என்று மத்திய அரசு நினைக்குமானால், அப்படி நினைப்பது தவறு. சொன்னபடி செய்வது தான் அழகு என்பதைச் சுட்டிக்காட்ட யாராவது ஒருவர் வேண்டியதுதான்.

உருப்படியான காரியம் செய்கிறீர்கள், குமரி.



கதைகளில் வரும் பெயர்கள், சம்பவங்கள் அனைத்தும் கற்பனையே. கதை, கட்டுரை முதலிய எதையும் தபால் மூலமே அனுப்பவேண்டும். அவற்றைத் திருத்தி அமைக்கவும் கடிதங்களைச் சுருக்கவும் ஆசிரியருக்கு உரிமை உண்டு. குமுதம் பிரிண்டர்ஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிட்டவர்: ஏ. பி. ஏ. பெரியகருப்பன். குமுதம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர்: பி. வி. பார்த்தசாரதி. ஆசிரியர்: எஸ். ஏ. பி. அண்ணாமலை.

# ராணிக் முத்தம்

மோகினி

## 6

அந்தப்புர அறைகளின் வாசல் வழியே நடந்து சென்று கொண்டிருந்தார் மாமன்னர் அக்பர். வழக்கமாக 'வழி வழி' என்று கூறிக்கொண்டு முன்னே செல்லும் பாரார்க்காரன் இன்று காணோம். அரண்மனைக்குள் சக்கரவர்த்தி செல்லுகையில் கூடவே செல்வது மீர் அர்ஜியின் வேலை. இன்று அவர் பின்தங்கியே வந்துகொண்டிருந்தார். சக்கரவர்த்தி ஆழ்ந்த சிந்தனையில் இருக்கிறார். மீர் அர்ஜிக்கு அச்சமாக இருந்தது அந்தச் சிந்தனைகளைக் கலைக்க.

சக்கரவர்த்தியின் கண்கள் யாரையோ தேடிக் கொண்டிருந்தன.

காலை வெளிச்சம் வேகமாக அரண்மனையின் கூடங்களில் பரவிக் கொண்டிருந்த நேரம். திருக்குர்ரான் ஓதி முடிந்த பின் யாரோ உளமுருகத் துஆக் கேட்கும் குரல் ஒலித்தது.

அலைகடலும் நெடும் புவியும் படைத்தளித்துக் காக்கும் எங்கள் இறைவா! உள்ளும் புறமும் உனை நினைந்து நித்தம் பணிந்து நடக்க அருள் செய்வாயாக. எனக்கும் பிறருக்கும் பயனளிக்கும் ஞானத்தைத் தருவாயாக. எங்களை நேர்வழி பெற்றவர்களாகவும் நேர்வழி காட்டுபவர்களாகவும் ஆக்கி அருள்வாயாக. பர்வர்திகார்! எல்லா நிலையிலும் அனைத்துப் புகழும் உனக்கே உரித்தாகும்....

இத்தகைய வாக்கியங்கள் செவியில் விழுந்தால் சக்கரவர்த்தி நின்றுவிடுவார். அவர் நெஞ்சு நெகிழும். கண்களில் நீர் தளும்பி நிற்கும். தலைவணங்கி நின்று முழுதும் கேட்டுவிட்டுத்தான் அடுத்த அடி எடுத்து வைப்பார். இன்று அந்தத் தூய வாசகங்கள் பேரரசரின் செவிகளைத் தொடவில்லை. தொட்டாலும் சிந்தையை எட்டவில்லை.

அவர் மேலே நடந்தார். அவர் கண்கள் இப்போதும் தேடிக் கொண்டிருந்தன.

எண்ணற்ற மான்ஸப்தார்களும் அமீர்களும் அமீல்களும் அங்கங்கே எதிரில் வந்தார்கள். ஆனால் சக்கரவர்த்தியின் தீவிரமான முகத்தைக் கண்டு ஒதுங்கி மறைந்தார்கள்.

நகீப்கானை அன்று சக்கரவர்த்தி வரச் சொல்லியிருந்தார். அவர் மகாபாரதத்தைப் பாரசீகத்தில் மொழி பெயர்த்துக் கொண்டிருப்பவர்.

எது சரியான பொருள் என்று தெரியாதபோது பண்டிதர்கள் கூடி விவாதிப்பார்கள். சக்கரவர்த்தி அக்பரே பல சமயங்களில் சந்தேகங்களுக்கு விளக்கம் கூறுவார். இன்று அதற்கான கூட்டம் நடைபெற வேண்டிய தினம். நகீப்கான் மெல்லப் பின்னால் வந்தார். சக்கரவர்த்தி இலக்கிய மன நிலையில் இருப்பதாகத் தோன்றவில்லை. வந்த சுவடு தெரியாமல் திரும்பிவிட்டார்.

அம்பர் அரசகுமாரியின் அரண்மனையைக் கடக்கும்போது சக்கரவர்த்தி சற்று நின்றார். இல்லை. நிற்க வைக்கப் பட்டார். பூஜையறையின் மணியோசை காரணமாக. அக்பருக்குப் பிரியமான பட்டமகிஷி அவள். அம்பர் மன்னன் பிகாரிமாலின் புத்திரி என்பது மட்டுமல்ல. பட்டத்து இளவரசன் சலீமைப் பெற்றெடுத்துத் தந்தவளும்கூட



அம்பரிலிருந்து கொண்டு வந்திருந்த கிருஷ்ண விக்கிரத்துக்கு ராணி மணியடித்துத் தூபம் காட்டிக் கொண்டிருந்தாள். எங்கே குழந்தை சலீமைக் காணோம்! அக்பரின் கண்கள் தேடின. எத்தனை ஆசைப்பட்டுப பெற்ற பிள்ளை அவன்! அவனுக்கு முன்பு பிறந்த குழந்தைகள் அனைத்தும் இறந்துவிட்ட நிலையில், கனத்த இதயத்துடன் சக்கரவர்த்தி துன்பப்பட்டுக் கொண்டிருந்த போது யாரோ சொன்னார்கள். சிக்ரியி



லுள்ள துறவி, ஷேக் சலீமின் விடுதியில் ராணியை ஒப்படைத்து வைக்கும்படி. கர்ப்பவதியை அங்கே கொண்டு போய்விட்டார் அக்பர். அழகான ஆண் குழந்தை பிறந்தது. துறவியின் பெயரையே அவனுக்குச் சூட்டினர் சலீம் என்று.

பூஜை முடிந்ததும் ராணி திரும்பினாள். சக்கரவர்த்தி வெளியே நிற்பது தெரிந்தது. பூஜை செய்த பிரசாதங்களை அவருக்குக் கொடுப்பது முன்னெல்லாம் வழக்கம். இப்போது கிடையாது. அதை வெளிப்படையாகச் செய்ய வேண்டாமென்று சக்கரவர்த்தி கட்டளையிட்டிருந்தார். இஸ்லாம் மார்க்கத்துக்கு மிகவும் விரோதமாகப் போகிறாரென்று சக்கரவர்த்தியைப் பற்றி இஸ்லாமிய குருமார்கள் பிரசாரம் செய்கிறார்களாம். அரசியல் கலவரங்களை முன்னிட்டு சில ராஜிகள் செய்து கொள்ள வேண்டியிருக்கிறது என்று வருத்தத்துடன் சொல்லியிருந்தார்.

பூஜைத் தட்டுக்களை அங்கேயே வைத்துவிட்டு வெளியே வந்தாள் ராணி. ''சக்கரவர்த்தி உள்ளே வரலாமே?'' என்று அழைத்தாள்.

சக்கரவர்த்தியின் கண்கள் இப்போதும் யாரையோ தேடிவிட்டு, பின்னர் ராணியிடம் நின்றன. உச்சி நெற்றியில் குங்குமம் துலங்க, மார்பில் ரத்தின ஹாரங்கள் மின்ன, இளமையின் பூரணப் பொலிவோடு நிற்கும் ராணியைப் பார்க்கும் சமயங்களில் சக்கரவர்த்திக்கு ஏதாவது ஒரு பாரசீகக்கவிதை நினைவுக்கு வரும். அதைச் சொல்லாமலிருக்க மாட்டார். அந்தக் கவிதையில் நிச்சயமாய் ஒரு மாதுளை மொட்டு இடம் பெற்றிருக்கும். அதை சொல்கையில் சலீமின் தாய்க்கு முகமெல்லாம் கோவைப் பழமாய்ச் சிவந்து போகும். என்ன இருந்தாலும் அவர் மணந்த முதல் ராஜபுத்திர முதல் இந்துப் பெண்ணல்லவா! அவளிடம் அவருக்குத் தனிப் பிரியம் உண்டு. என்றாலும் இன்று அவர் பேசவில்லை. தன் எண்ணத்தில் தானே லயப்பட்டிருந்தார்.

ஒரு முறுவல் மட்டுமே காட்டி, ''அரசியார் அனுமதி கொடுத்தால் ராஜாங்க அலுவல் இரண்டொன்றைக் கவனிக்கலாம் என்று பார்க்கிறேன்,'' என்றார்.

''அரசியார் அனுமதிப்பது இருக்கட்டும். இளவரசர் ஷேகு மாமா அல்லவா அனுமதி தர வேண்டும்?'' என்றாள் ராணி. சலீமை சலீம் என்றோ ஷேக் சலீம் என்றோ சக்கரவர்த்தி அழைப்பது கிடையாது. ஷேகு மாமா என்று ஒரு தனியான செல்லப் பெயர் வைத்திருந்தார். அவரை இளக வைக்க வேண்டிய வேளையில் அந்தப் பெயரைச் சொல்ல வேண்டும். அந்த ரகசியம் ராணிக்குத் தெரியும்.

அக்பரின் முகம் சிறிது மலர்ந்தது. ''குழந்தை இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறான்?''



டைரக்டர்: நம்ப படத்துக்கு நல்ல கதை வேணும்னு சொன்னீங்களே, இவரைக் கூட்டிக் கொண்டு வந்தேன். ஒரு கதை வச்சிருக்காரு.

தயாரிப்பாளர்: சொல்லுங்க கேட்போம்.

கதாசிரியர்: மஞ்சுளா ஷவர்பாத்தில் அரைகுறை ஆடையுடன் குளிக்கையில் சாவித் துவாரம் வழியே மதன் பார்த்தான்...

தயாரிப்பாளர்: டாப்ஸ்... கதையில் முதல் ஸீனே அமர்க்களமாயிருக்கு!

கதாசிரியர்: மன்னிக்கணும். நான் சொன்னது கதைத் தலைப்பு.

—ரா. ரகோத்தம

■■■

''குதுபுத்தின்கான் வந்திருக்கிறார். பாடம் படித்துக் கொண்டிருக்கிறான். அது முடிந்ததுமே ஓடி வந்துவிடுவான் சக்கரவர்த்தியுடன் விளையாட.''

அரசியாரின் கூந்தலை வருடிக் கொடுத்தார் சக்கரவர்த்தி. ''உன் பிள்ளைக்கு விளையாட நான்தான் வேண்டுமென்பதில்லை.''

''பின்னே?''

''வேலைக்காரிகள், பணிப் பெண்கள், சேடிகளிடம் அவனுக்கு அலாதி அன்பு. ஏழு வயதுக் குழந்தை தானே என்று நினைக்காதே. உலகத்தில் எதெது இன்பமானது என்பதை அவனுக்குக் குதுப்புத்தீன்கான் சொல்லித் தரத் தேவையில்லை.''

''சிறுவனைப் பற்றி என்னவெல்லாம் சொல்கிறீர்கள்!'' முகம் சுளித்தாள் ராணி. ''இன்றைன்று. சக்கரவர்த்திக்கு நினைவூட்டுவதற்காக மன்னிக்க வேண்டும்.''

மேலே நடக்கவிருந்தவர் நின்றார். ''என்ன?''

''குழந்தை பிறந்த வேண்டுதலுக்காக வருடாவருடம் சக்கரவர்த்தி ஆஜ்மீருக்குப் பாத யாத்திரையாகச் சென்று, ஷேக் மியூனுத்தீன் சிஸ்டியின் சமாதியில் வழிபடுவது வழக்கமாயிற்றே? அடுத்த மாதம் சக்கரவர்த்தி புறப்பட வேண்டியிருக்கும்...'

''ஓ.'' இளவரசன் சவிமைப் பற்றிப் பேசத் தொடங்கியது முதல்சக்கரவர்த்தியிடம் தோன்றியிருந்த இனிமை மறைந்தது. பழையபடி சிந்தனையின் அறிகுறிகள் ஆக்கிரமித்தன. நடந்தார்.

அடுத்து அத்தை குல்பதன் பேகம் வருவாரென்று அக்பருக்குத் தெரியும். சக்கரவர்த்தி ஹுமாயுனின் சகோதரி. அக்பரிடம் உரிமையுடன் பேசக் கூடிய மூதாட்டி.

வணக்கம் தெரிவித்தார் மாமன்னர்.

ஆனால் குல்பதன் பேகம் ஆசி கூறுவதோடு நிற்கவில்லை. ''எதை மறந்தாலும் மறக்கலாம். இன்றைக்கு ஞாயிற்றுக் கிழமை என்பதை மறக்சலாமா குழந்தாய்?''

அக்பரின் புருவங்களில் திகைப்புத் தென்பட்டது. ''இன்று...ஞாயிற்றுக் கிழமை...அதனால்.....''

''உன் தர்பார் சாளரத்தில் அமர்ந்து வெளியே காத்திருக்கும் மக்களுக்குத் தரிசனம் தர வேண்டமா? அதிலும் முக்கியமாக தர்சயானிகள் இன்று நிறையப் பேர் கூடியிருக்கிறார்கள். சக்கரவர்த்தியைத் தரிசனம் செய்யாமல் சாப்பிடக் கூடாதென்று அவர்கள் விரதம் பூண்டிருக்கிறவர்களாயிற்றே! அவர்களைப் பட்டினி போடலாமா குழந்தாய்?''

''மறந்தேபோனேன் அத்தை. இதோ போகிறேன்.'' சக்கரவர்த்தி தர்பார் மண்டபத்துக்கு உடனே திரும்பினார். ஆனால் அப்போதும் அங்குமிங்குமாக அவர் பார்வை அலைந்து கொண்டுதான் இருந்தது. முக்கியமாக யாரைத் தேடி அவர் அரண்மனை பூராவும் சுற்றி வந்தாரோ அவனைக் காணவில்லை. அந்த ஏமாற்றம் அவருடைய தளர்ந்த



காா்ட்டரின் முகத் தோற்றத்தில் ஒரு மாறுதல் ஏற்பட்டிருப்பது தெரிகிறதா? இதுவரை முடியை வலதுபுறம் வகிடு எடுத்து வாரி வந்தவர் இப்போது இடது புறம் ஒதுக்கி றாம். காரணம் தெரியவில்லை. முந்தின முறையே தேவலை. படம்: டைம்

டையில் பிரதிபலித்தது.

''குழந்தாய்!'' பின்னுலிருந்து அழைத்தார் குல்பதன் பேகம். ''மாகம் அனகா இன்றுகூடக் கேட்டாளப்பா வரவில்லையா என்று.''

சக்கரவர்த்திக்கு அந்தப் பேச்சுப் பிடிக்கவில்லை. ''நான் ஏன் வரவேண்டும்?''

''என் குழந்தை இவ்வளவு இருதயமில்லாமல் பேசி இப்போதுதான் பார்க்கிறேன்.''

''சில பேரிடம் இருதயம் இருப்பதாகக் காட்டிக்கொள்வது ஆபத்தில் முடியும் அத்தை.''

''ஆனல் மாகம் அனகா உன்னை வளர்த்தவளல்லவா? சொந்தத் தாயைக் காட்டிலும் பிரியமாக வளர்த்த செவிலித் தாய், இப்போது படுத்த படுக்கையாகக் கிடக்கிருள். நீ வந்து பார்க்க வேண்டாமா?''

''அவளுக்கு நான் ரொம்ப ம் கடமைப்பட்டிருக்கிறேன். ஒப்புக் கொள்கிறேன். உங்களுக்கே தெரியும்—ராஜ்ய நிர்வாகத்தில் அவளுக்கும் அவள் பிள்ளைகளுக்கும் எத்தனை பங்கு நான் கொடுத்தேனென்று. அவ்வளவும் எனக்கே விபரீதமாகத்தான் முடிந்தது. அதனல் நான் அவளை ஒதுக்கியே வைத்திருக்கிறேன். நோயாளி என்று நான் அவளைக் கருதவில்லை. எந்த விநாடியும் என்னைக் கடிக்கக் காத்திருக்கும் பாம்பு அவள். என்னை மன்னியுங்கள் அத்தை.''

விரைந்து நடந்தார் சக்கரவர்த்தி. பிடிக்காத காரியத்தைச் செய்யும்படி அத்தை கட்டுப்படுத்தி விடப் போகிருளே என்ற அச்சம் அவரது நடையில் தெரிந்தது.

அப்படியும் கூட—

கட்டப்பட்டு வரும் படேபூர் சிக்ரி அரண்மனையில் என்ன மாற்றங்கள் செய்ய வேண்டுமென்று யோசனை கேட்பதற்காக வந்திருந்த ஒரு கலைஞர், மதுவிலக்கைத் தீவிரமாக அமுலாக்குவதற்கான யோசனைகளுடன் ஓர் அமைச்சர், தான்சேனுடன் இசை நிகழ்ச்சியில் போட்டியிடுவதற்காக வந்திருந்த ஒரு காஷ்மீர் பாடகர் இவர்களையும் ஒதுக்கி விலக்கிக் கொண்டுதான் அவர் தர்பார் மண்டபத்துக்குச் செல்லவேண்டியிருந்தது.

சக்கரவர்த்திக்கென்று ஏற்பட்ட சாளரத்தை ஒட்டி அவருடைய இருக்கை தயாராய் வைக்கப்பட்டிருந்தது. அங்கே அமர்ந்தபோது, வீதியில் கூடியிருக்கும் நூற்றுக் கணக்கான மக்கள், 'பேரரசர் வாழ்க! அக்பர் சக்கரவர்த்தி வாழ்க!' என்று கோஷம் எழுப்பினர்கள். அன்புடன் அவர்களை நோக்கிக் கையை உயர்த்தி ஆசி வழங்கினர் அக்பர்.

சில விநாடிகள்தான் திரும்பிச் சென்றிருப்பார். ஒரு முகம் அவர் கவனத்தைச் சட்டென்று கவர்ந்தது.

சக்கரவர்த்தி கண்ணல் சாடை காட்டினர். ஓடி வந்து அருகில்

nின்று வாய் பொத்திக் குனிந்தா
ஒரு சேவகன்.

''அதோ மீசையும், தாடி
மாய் அழுக்கு மூட்டையுடன் இருட்
வன்—விளக்குக் கம்பத்தில் சாய்ந்தா
போல் அலட்சியமாய் நிற்கிறுன் பார்!

''நாயை இதோ இழுத்
வருகிறேன்.'' வெளியே பாய்ந்தா
நாறு எண்ணும் நேரம் இருக்கா
சக்கரவர்த்தி சுட்டிக் காட்டிய இ
ஞனை நெருங்கினுன். ''என்ன தி
உனக்கு? சக்கரவர்த்திக்கு வணக்
தெரிவிக்காமலா நின்றிருந்தாய்?
இப்படி!''

முரண்டு பிடிப்பவனைத்
தரவென்று இழுத்துப் போனு
மாமன்னரிடம். ''என்ன தண்ட
தர வேண்டும் என்று சக்கரவர்
உத்தரவிட்டால் இங்கேயே இ
போதே நிறைவேற்றி வி
றேன்!'' என்ருன் காவலன்.

''இவனை நான் கவனித்
கொள்கிறேன். நீங்கள் எல்லா
போகலாம்.''

எல்லாச் சேவர்களும் வெ
யேறுகிறவரையில் காத்திருந்தார் சக்
வர்த்தி. அவனும் அதற்காகவே கா
ருந்தான் போலும். சரேலென்று மண்
யிட்டு, சக்கரவர்த்தியின் பாதங்க
தொட்டுக் கண்ணில் ஒற்றிக் கொ
டான்.

''எழுந்திரு, முனிம்கான்
என்ருர் சக்கரவர்த்தி அன்புடன்.''
றைக்குத் தேதி பதினெட்டு. ஞா
றுக் கிழமை. கட்டளையிட்டிருந்த
நீ வந்திருக்க வேண்டுமே என்று பா
தேன். ஏதாவது வேடத்தில் வந்தி
பாய் என்று அரண்மனை பூரா
விட்டு வந்தேன். அதிருக்கட்டும், உன
மிகவும் வேடப் பொருத்தம்!''

புன்னகை செய்வது கூ
சக்கரவர்த்தியை அவமதிப்பதாகும்
பது அவன் கருத்துப் போலும். ''நே
மாலையே வந்துவிட்டேன், சக்கரவர்
எவருக்கும் தெரிய வேண்டாமெ
தாங்கள் உத்தரவிட்டிருந்ததால் உள்
நுழையச் சந்தர்ப்பம் தேடிக் கொ
டிருந்தேன். அதற்குள் சக்கர
தியே.....''

''அதை அப்புறம் பே
கொள்ளலாம். விஷயத்தைச் சொல்லு

''ராஜ்யம் சூரியபூர். மன்
இறந்து எட்டு வருடமாகிறத



தான் வலையில் விழு வதோடு மட்டுமல்லாமல் தன்னைச் சேர்ந்தவர்களையும் விழச் செய்வது பெண்ணின் இயல்பு. ''நாதா! எனக்கு அந்தப் பொன் மானைப் பிடித்துத் தர மாட்டீர்களா?'' என்று சீதை கேட்டதால் எத்தனை கஷ்டங்களை அனுபவிக்க நேர்ந்தது? இதை (ராஜ்குமார்) ஞாபகம் வைத்துக்கொண்டால் புத்தி சாலி.

(ரதியுடன் ராஜ்குமார். படம்: 'அந்தாள ராசி')

''தெரிந்த விஷயம்.''

''நான்கு பிள்ளைகள்—ஒரு மகள் இருக்கிறார்கள். மூத்தவன் தினேஷ் தான் இப்போது பட்டத்தை ஆளுகிற வன். பெண் பித்தன். இரண்டாமவன் பூபத் கவிதைப் பித்தன். மூன்றாமவன் பிகாரிமால் போஜனப் பித்தன். நாலா மவனுக்கு எந்தப் பித்தும் இருப்பதாகத் தெரியவில்லை.''

''அவன்தான் இங்கே சமை யலறையில் வேலை பார்ப்பது போல் வேடம் போட்டவன்?''

''ஆமாம், சக்கரவர்த்தி. ஜெய் என்று பெயர். பிறகு அந்தப் பெண்—கம்லாவதி.''

''இங்கே ராணியாக்க விரும்புகிறார்களென்று தோடர்மால் சொன்னாரே, அந்தப் பெண்?''

''ஆம், சக்கரவர்த்தி. கலை களில் விருப்பமுள்ளவள். ஆடலழகி.''

''ஓவியம் கொண்டு வந் திருப்பாயே எப்பாடு பட்டேனும்?'' புன்சிரிப்புடன் சக்கரவர்த்தி கை நீட்டி னார்.

முனிம்கான் அழுக்கு மூட்டை யைப் பிரித்தான். சுருட்டி மடக்கி வைத்திருந்த ஓவியத்தைப் பிரித்துச் சமர்ப்பித்தான்.

''ஓ.'' அக்பரின் கண்கள் வியப்பால் விரிந்தன. இவளை அரசியல் காரணங்களுக்காகத்தான் மணந்து கொள்ளவேண்டுமென்பதில்லை. ''ஆட லழகி என்றா சொன்னாய்?'' ஓவியத்தில் வைத்த கண்ணை எடுக்காமலே கேட்டார்.

''மிகத் தேர்ச்சி பெற்றவள் என்று சொல்கிறார்கள். ஆனால் கலைத் திறமைகளை வளர்த்துக் கொள்வதற் கான சூழ்நிலைகள் அங்கே இல்லை...''

''நல்ல சூழ்நிலைகளை ஏற் படுத்திக் கொடுப்போம்.'' மறுபடியும் ஒருமுறை அந்த ஓவியத்தை நோக்கி னார் அக்பர். பின்னர் சுருட்டி, மஞ் சத்தின்மீது வைத்தார். ''நல்லது முனிம் கான். பாராட்டத்தக்க பணிகளை நீ செய்திருக்கிறாய். சந்தோஷம்.''

''எல்லாம் தங்கள் ஆசி, சக் கரவர்த்தி.''

''ஆட்சியின் ஆண்டு விழா வரும்போது உன் சேவை ஞாபகம் வைத்துக் கொள்ளப்படும். நீ போக லாம்.''

## பரிசுப்



## பதிவு

பிரிட்டனில் மிக இயற்கை யான சத்தத்தை ஒலிப்பதிவு செய்பவருக்குப் பரிசு என அறிவிக்கப்பட்டது. போட்டியில் வெற்றி பெற்றவர் ஒலிப்பதிவு செய்தது, ஒரு நத்தை இலையைத் தின்னும் ஓசையை!

—தி. ரா. திருவேங்கடம்

---

அவன் குனிந்து சலா மிட்ட வண்ணமே பின் வாங்கியபோது—

''முனிம்கான்! முக்கியமா னதை மறந்து விட்டாயே!''

''எது சக்கரவர்த்தி?''

''அந்த நாலாவது பையன் இங்கிருந்து எடுத்துச் சென்ற பொருள் கள்?''

''சக்கரவர்த்தி என்னை மிக வும் மன்னிக்க வேண்டும்.'' தலை குனிந்தான் முனிம்கான். ''என்ன முயன் றும் அதைக் கைப்பற்ற முடியவில்லை. அது அவனுடைய இடுப்பை விட்டு ஒரு விநாடி கூடப் பிரிந்ததில்லை''

அக்பர் சிறிது நேரம் மௌன மாக உலவினார். ''சரி, நீ போ.''

முனிம்கான் வெளியேறிய தும் ஒரு சேவகன் உள்ளே வந்தான்.

''முதலமைச்சர் வரலாமா என்று கேட்கிறார்.''

''வரச் சொல்லு.''

தோடர்மால் உள்ளே வந் தார். மஞ்சத்தில் கிடந்த ஓவியச் சுருளின் மீதுதான் அவர் பார்வை சென்றது.

''வாருங்கள், முதலமைச் சரே! நானே உங்களைக் கூப்பிட்ட னுப்ப எண்ணியிருந்தேன்,'' என்றார் அக்பர்.

''எதுவானுலும் சக்கரவர்த்தி கட்டளையிடலாம்.''

''அன்று ஓர் இளைஞன் கலைப் பொருள் காப்பகத்தில் திருடிவிட்டு ஓடினனே, அவனைப் பற்றி ஒற்றர் தலைவன் மூலம் இப்போது தான் விசாரித்தறிந்தேன்...''

''சக்கரவர்த்தி சில அற்பக் காரியங்களை எங்களிடமே ஒப்படைக்கலாம். தங்கள் நேரமும் ஆற்றலும் பொன்னனது. இது போன்ற சில்லறை வேலைகளில் அதைச் செலவழிக்காமல்.....''

கையமர்த்தினர் அக்பர். ''இருக்கட்டும். இருக்கட்டும். அந்தப் பையன் சூரியபூரின் இளவரசன்.''

''சூரியபூரா!''

''ஆம்.'' ஓவியத்தை எடுத்துத் தோடர்மாலிடம் கொடுத்தார் அக்பர். ''இந்த இளவரசியைத்தான் அரசியல் திருமணமாக எனக்குச் செய்து வைக்க எண்ணியிருக்கிறீர்கள். இல்லையா?''

''அவர்கள் கொடுத்து வைத்திருக்க வேண்டும்,'' என்ருர் தோடர்மால்.

''நீங்கள் நினைக்கிறபடியே அவர்களும் எண்ணுவார்களென்ற அவசியம் கிடையாது. முக்கியமாக அந்தக் கடைசி இளவரசன்—ஜெய் என்பவன்.''

''அவனுக்கென்ன?''

தோடர்மால் இளக்காரமாகச் சிரித்தார். ''சூர்யபூர் ரொம்ப ரொம்பச் சின்ன ராஜ்யம், சக்கரவர்த்தி. ஐந்நூறு கிராமங்கள்தான் அதன் ஆளுகைக்குட்பட்டது. எறும்பைக் காலால் தேய்க்கிற மாதிரி நசுக்கி விடலாம் நசுக்கி.''

''எறும்பை நசுக்குவதற்காக நம் காலை வருத்திக் கொள்ளத் தேவையில்லை,'' என்ருர் அக்பர். ''முதல் மூன்று பேரும் பெண்ணுக்கும் மதுவுக்கும் சாப்பாட்டுக்கும் அடிமைகள். நாலாமவனை எதற்கு அடிமையாக்க முடியும் என்பதை யோசனை செய்து சொல்லுங்கள்.''

சக்கரவர்த்தி அந்த ஓவியத்தை மீண்டும் கையிலெடுத்துப் பார்த்தார். ''அசாதாரண அழகி,'' என்ருர்.

(தொடரும்)

பராசக்தி என்கிற பெயரில் குங்குமத்தில் கேள்விகளுக்குப் பதில் எழுதுபவர் யார்?

முரசொலி மாறனு?





ஸ்ரீ...
...நரமாகக்
...ஷைக் சின்...
...வுடன் இணை...
...வாசிப்பவர் ...
...வபிற்றாப் ...
என்கிற இன்...
...ருச்சி செ...
கல்லூரியில் ...
படிக்கிறர்.





நடி...
...ருவரை ...
கூப்பிடுகிருர்...
வீட்டின் செ...
ரஜனியின் ...
அவரோடு ...
டிடியூட்டில்
விட்டலின் சே...
நான் ரஜனிக்...

# வாளின் முத்தம்

## 'மோகினி'

## 7

**பா**னுசந்தின் மனைவியாவதற்கு ஒரு நாளும் சம்மதிக்க மாட்டேன்!

கம்லாவதியின் அழுத்தமான சொற்கள்! ரூப்மதியால் தன் செவியையும் நம்ப முடியவில்லை. காலையும் நகர்த்த முடியவில்லை. சாளரத்துக்கு வெளியே நின்றிருந்தானே ஜெய்! காரியம் பழமாகி விட்டது என்பதற்கு அறிகுறியாக அவள் பறித்து எறிந்த சிவப்பு ரோஜா அவன் கைக்கு எட்டியிருக்குமே? இன்னேரம் அவன் மனம் மகிழ்ந்து கொண்டிருப்பானே! நிலைமை நேர் விரோதமாகத் திரும்பி விட்டது என்பதை எப்படி அவனிடம் தெரிவிப்பது?

''போ ரூப்மதி!'' இளவரசியின் கட்டளைக் குரல் மீண்டும் முழங்கிற்று. ''போய்ச் சொல்லிவிட்டு வா என் சின்ன அண்ணனிடம்! டெல்லி பாதுஷாவின் ஜனனுவில் சிறைப்பட்டாலும் படுவேனே தவிர, பானுசந்தின் மனைவியாவதற்குச் சம்மதப்படவே மாட்டேன் என்பதை அழுத்தமாகச் சொல்லிவிட்டு வா!''

அவள் கண்களில் தெரிந்த வெறுப்பு! குரலில் தென்பட்ட விறைப்பு! நின்றிருந்த நிலையில் வெளிப்பட்ட முறைப்பு!

ரூப்மதிக்குத் தர்மசங்கடமாக இருந்தது. இளவரசியைத் தப்பாக உசுப்பி விட்டு விட்டோமென்பது புரிந்தது. ஆனல் எபபடி அதைச் சரி செய்வது? அவளைப் பழைய மனநிலைக்குக் கொண்டு வருவது எவ்வாறு? அது மட்டும் அவளுக்குப் புரியவில்லை. ஒருவேளை மறுபடி நடனத்தைப்பற்றிப் பேச்செடுத்தால்?

''மன்னிக்க வேண்டும், இளவரசி. தங்கள் சொந்த விஷயத்தைப் பற்றிக் கேட்க இந்த அடிமைக்கு உரிமை கிடையாதுதான். தாங்கள் அனுமதி தந்தால் பழையபடி நடனத்தைத் தொடரலாம்.'' வெள்ளி மேஜை மீதிருந்த கோலாட்டக் குச்சிகளின் மீது ரூப்மதியின் பார்வை சென்றது. எடுத்து வந்தாள். ஒரு ஜோடியை இளவரசியிடம் தந்தாள். ''நாம் கூமார் ஆடுவோமா, இளவரசி?''

கம்லாவதி ஆடுகிற மனநிலையில் இல்லை. ''ஒன்றும் வேண்டாம். நீ வெளியே போ முதலில்.''

நாகர்கோட் மன்னன் பானுசந்தர்ம்! அவளுக்குப் பழைய நினைவொன்று மனத்தில் எழுந்தது. கோபமும் ஆத்திரமும் அவளது முகத்தை மேலும் சிவக்க வைத்தன. குறுக்கும் நெடுக்குமாக உலவினுள். கோலாட்டக் குச்சிகளைத் தரையில் விட்டெறிந்தாள். பூச்சாடியிலிருந்த பூக்களைச் சினத்துடன் சின்னபின்னப் படுத்தினுள்.

சற்றுத் தயங்கினுள் ரூப்மதி. பின்னர் புறப்பட்டாள்.

**அ**ங்கே ஜெய் வெகு உற்சாகத்திலிருந்தான்.

சாளரத்தின் வழியே ரூப்மதி அவனிடம் எறிந்தது வெறும் சிவப்பு ரோஜாவல்ல. அவன் திட்டங்கள் ஒரு கோட்டை யென்ருல் அந்தக் கோட்டையின் திறவுகோல் அது!

ரூப்மதி இதோ வந்துவிடுவாள். கம்லாவதி என்னென்ன சொன்ளென்பதை விவரமாகத் தெரிவிப்பாள்.

ஏன் இன்னும் ரூப்மதி வரக் காணேம்?

அரண்மனையின் வாசற்புறத்திலிருந்த குதிரைக் கொட்டடிக்குச் சென்றான். இரண்டொரு குதிரைகள் அவனை அடையாளம் கண்டு கொண்டன. மகிழ்ச்சியுடன் கனைத்தன. அவைகளைக் கழுத்தைச் சொறிந்து கொடுத்து முதுகில் தட்டினான். குதிரைக் கொட்டடியின் காவலனிடம் ஏன் இந்தக் குதிரை இளைத்திருக்கிறது, ஏன் அந்தக் குதிரை நொண்டுகிறது என்றெல்லாம் விசாரித்தான். பிறகு ஏகலிங்கர் கோவிலின் திருக்குளத்துக்குச் சென்று—

கோட்டை வாசலுக்கு அவன் பார்வை சென்றது.

அரண்மனைக்கு வரும் ஏற்றமான பாதையில் இரண்டு குதிரைகள் வந்து கொண்டிருந்தன. அந்த டக்டக் டக்டக்குச் சுருதி போட்டன. குதிரைகளை ஆரோகணித்திருந்த அரபு வியாபாரிகளின் வெளேரென்ற நீண்ட அங்கிகளின் சரசரப்பு.

யார் இவர்கள்?

சலாமிட்டபடி இருவரும் இறங்கினார்கள்.

தக்க முகாந்திரமில்லாமல் கோட்டைக் காவலர்கள் இவர்களை உள்ளே அனுமதித்திருக்க மாட்டார்கள்!

பதில் வணக்கம் செய்தான்.



இரு அராபியர்களுமே உயரமானவர்கள். அவர்களுள் சற்று அதிக உயரமாயிருந்தவன், சொன்னான்: "பாரசீகத்திலிருந்து பாண்டிய நாடு வரை நமக்கு வியாபாரம் உண்டு. முத்தும் பவழமும் வைரமும் மரகதமும் இளவரசி கம்லாவதியிடம் காட்ட வந்தோம். விரைவில் அவர்களுக்குத் திருமணமாகப் போகிறதென்று கேள்விப்பட்டேன்."

"ஆமாம், ஆமாம்," என்று சொல்லி மனத்துக்குள் சிரித்துக் கொண்டான் ஜெய். கம்லாவதி அக்பரின் மனைவியாகப் போகிறாளென்று இவர்கள் எண்ணியிருக்கிறார்கள். ஆனால் அவள் பானுசந்தின் மஞ்சத்தையல்லவா அலங்கரிக்கப் போகிறாள்!

"இளவரசியை நேரில் பார்க்க வேண்டும்."

"அது முடியாது நண்பரே! திவான் மூலமாகத்தான் எந்த வியாபாரமும்!" என்றான் ஜெய்.

"அந்தக் கட்டுப்பாடு மற்றவர்களுக்கு இருக்கலாம். எனக்குக் கிடையாது."

"ஏன், உனக்கு என்ன கொம்பு முளைத்திருக்கிறதா?"

"தங்களைப் போன்ற ஆற்றலும் அறிவும் உள்ளவர்கள் எனக்குத் துணை இருக்கும்போது ஏன் கொம்பு முளைக்கக் கூடாது, மைத்துனரே!"

"மைத்—" ஜெய்யின் சீற்றம் சிரிப்பாக மாறியது மறு விநாடியே. அராபிய வியாபாரியின் முகத்தை கூர்ந்து கவனித்தான். "பானுசந்த்!"



''உஸ்!'' உதட்டில் விரலை வைத்து எச்சரித்தான் பானுசந்த். ''யாருக்கும் தெரியாமல் வந்திருக்கிறேன்.''

''ஏன்? ஏனப்படி?''

''ஏன் என்று என்னையா கேட்கிறீர், மைத்துனரே! சுதந்திரச் சின்னத்தை அபகரித்து வரப் போகிறேன் என்று ஆக்ராவுக்குப் போனீர். என்ன ஆயிற்றென்றே தெரியவில்லை. எனக்கு இளவரசி கம்லாவதியை—''

''அந்த நல்ல செய்தியுடன் உங்களிடம் வர வேண்டுமென்றுதான் காத்திருந்தேன். நண்பரே!'' ஜெய்யின் குரலில் குதூகலம் தொனித்தது.

''எனக்குப் பொறுக்கவில்லையே அதுவரை!'' சிரித்தான் பானுசந்த். ''என் உள்ளத்தில் நெடுங்காலமாய்க் குடி கொண்டிருப்பவனை நேரில் பார்த்து வெகு நாளாயிற்றே என்று புறப்பட்டுவிட்டேன்.''

''அதற்கு இந்த வேடம் ஏன்? நமது இரண்டு ராஜ்யங்களும் பகை கொண்டவை அல்லவே? நட்புக்கு இலக்கணமாக அல்லவா இருக்கின்றன? சகல பரிவாரங்களுடன் கம்பீரமாய்த் தாங்கள் இங்கே வந்திருக்கலாமே?''

பானுசந்த் சிரித்தான். ''மைத்துனருக்கு சுதந்திர உணர்ச்சி எத்தனை அதிகமோ அத்தனை குறைவு ஆய்ந்து பார்க்கும் நிதானம். ராஜஸ்தானத்தின் ஒவ்வொரு புல்லின் அசைவையும் அக்பரின் கண்கள் கவனித்துக் கொண்டிருக்கின்றன என்பது உமக்குத் தெரியாது. சம்பல் நதியின் சலசலப்பிலும் பனாஸ் ஆற்றின் சிவந்த நுரையிலும் எங்கே ராஜபுதனத்தின் ஒற்றுமைத் தாரகம் ஒலித்து விடுமோ என்று அவன் செவிகள் கூர்மையுடன் கேட்டுக் கொண்டிருக்கின்றன. சவாய் மதோபூர் சாலையில் ஒட்டகங்களின் மந்தை செல்லும்போது அந்தக் குளம்புகள் எழுப்பும் புழுதியிலே சதியேதும் கலந்திருக்கிறதா என்று ஆக்ரா அதிபதியின் அறிவு அலசி ஆராய்ந்துகொண்டிருப்பதை நீர் அறிய மாட்டீர். ஜோத்பூரில் சந்திரசேனனும் மஹோபாவில் மேக்ராஜும் சிரோடியில் சுர்தானும் ஏற்கனவே போர்க்கொடி உயர்த்தியிருக்கிறார்கள். நாம் வேறு ஒன்று சேர்ந்து விடுவோமா என்று அக்பர் கவலையுடன் கவனிக்கும் சமயம் இது. ஆகவே நம் நடமாட்டங்கள் ரகசியமாகவே இருக்க வேண்டும் என்று தீர்மானித்தேன். அப்படியும் ஒரு மூன்றெழுத்து அம்பு என்னைக்

துளைத்தெடுத்து விட்டது. புறப்பட்டு வந்துவிட்டேன்.''

''மூன்றெழுத்து அம்பா!''

''ஆமாம் மைத்துனரே! காதல். அதன் சக்தியைப் பற்றி உமக்குத் தெரியாது.''

ஜெய் தன்னுள் சிரித்துக் கொண்டான். ரூப்மதியை அவன் நெஞ்சு நினைத்துக் கொண்டது. அவனுக்கா காதலின் சக்தியைப் பற்றித் தெரியாது?

''இளவரசி கம்லாவதியிடம் என்னை அழைத்துச் செல்கிறீர்களா மைத்துனரே?'' என்றான் பானுசந்த்.

''மகிழ்ச்சியுடன்,'' என்றான் ஜெய். ''அதோ அந்த அழகிய உயர்ந்த ஜாதிக் குதிரைகள் தங்களுக்குச் சிறிது நேரம் பொழுது போக்க உதவட்டும். பார்த்துக் கொண்டிருங்கள். நான் நேரமும் சந்தர்ப்பமும் அறிந்து வருகிறேன்.''

மீண்டும் எச்சரித்தான் பானுசந்த். ''உமது அண்ணன்மார்களிடம் சொல்ல வேண்டாம் என் வருகையைப் பற்றி.''

சிரித்துத் தலையாட்டிவிட்டு சென்றான் ஜெய்.

வெகு வேகமாகச் சென்றவன் மெத்தென்று மோதிக் கொண்டு நிமிர்ந்தான்.

ரூப்மதி.

''உனக்கு விஷயம் தெரியுமா ரூபா? கம்லாவதியை—'' பாதியில் நின்றது பேச்சு. ஏன் ரூப்மதியின் உதடுகள் அசையவில்லை? ஏன் கண்களில் இத்தனை சோர்வு! சிவப்பு ரோஜாவை இவள்தான் எறிந்தாளா? அல்லது தானாகவே அது எங்கிருந்தேனும் விழுந்ததா?

''ரூப்மதி! ஏன் என்னவோ போலிருக்கிறாய்?''

நிமிர்ந்தவள் தன் மீன் விழிகளால் அவனை அளவெடுத்தாள். உண்மையைச் சொல்லுவதா வேண்டாமா?

''ரூப்மதி! சொல்லு! எல்லாம் நல்லபடி முடிந்து விட்டதற்கு அடையாளமாக ரோஜாவை எறிந்தாயே? அப்புறம் என்ன? விஷயம் பழம்தானே?''

''ஒரு பக்கம் பழம்; ஒரு பக்கம் காய் இளவரசே!''

திகைத்து நின்றவனிடம் நடந்ததைச் சொன்னாள் அவள்.

உள்ளங்கையில் முஷ்டியால் குத்திக் கொண்டான் அவன். ''நிஜம் தானா ரூபா நீ சொல்வதெல்லாம்? கம்லாவதிக்கு மூளை கலங்கியிருக்கிறதா என்ன? நான் போட்டிருந்த திட்டமெல்லாம் கெட்டு விடும் போலாகி விட்டதே. பானுசந்திடம் என்ன குறை கண்டாளாம்?''

''அது என்னவென்று சொல்ல மறுக்கிறாள். நானும் எவ்வளவோ முயற்சி செய்து பார்த்து விட்டேன், இளவரசே.''

''இவள் இப்படி இருக்கிறாள். அந்தப் பானுசந்தோ அவளிடம் பித்தனாகி இங்கே வந்திருக்கிறான்.''

"இங்கே வந்திருக்கிறாரா?"

"ஆமாம். அரேபிய வியாபாரி வேடத்தில்."

ரூப்மதியின் முகத்தில் மலர்ச்சி. "ஒரு யோசனை தோன்றுகிறது.. இருவரையும் எப்படியேனும் சந்திக்க வைத்தால்...நேருக்கு நேர் அவர்கள் பேசிக் கொண்டால்...."

"நல்ல யோசனைதான்... ஆனால் அதற்கு முன் நான் கம்லாவதியைச் சந்தித்தாக வேண்டுமே? அங்கே செல்ல எனக்கு அனுமதி கிடையாதே." உதட்டைக் கடித்த வண்ணம் தலையை உயர்த்தினான். எங்கிருந்தோ ஒரு கானம் வருகிற மாதிரி இருந்தது.

"என்ன அது?"

ரூப்மதி சிரித்தாள். "உங்கள் தமையனார்---பூபத். கவிஞர்களுக்கு ஏது நேரம் காலம் எல்லாம்? பீரிட்டுக் கொண்டு கவிதை பிறக்கிறது போலிருக்கிறது. பாடிக் கொண்டே எழுதிக் கொண்டிருக்கிறார்."

"ஓ." ஒரு விநாடி யோசித்தான். "இரு" என்றான். மறுவிநாடி பூபத்தின் அறையை அடைந்தான்.

மஞ்சமெங்கும் ஏடுகள் சிதறிக் கிடந்தன. அகிலும் சந்தனமும் மணத்தைப் பரப்பின.

"வா ஜெய். இந்தக் கவிதையைக் கேள்," என்று வரவேற்றான் பூபத்.

ஜெய்க்குக் கத்தியைப் பற்றித் தெரிந்த அளவு கவிதையைப் பற்றித் தெரியாது. இருந்தாலும் தலையை ஆட்டினான். 'அடடா!' என்றான். 'என்ன அழகு! என்ன கம்பீரம்!' என்று துள்ளினான்.

அவன் படித்து முடித்ததும்——

"அண்ணா, ஒரு விஷயம் தெரியுமா உங்களுக்கு?"

"என்ன தம்பி?"

"நமது பாட்டனாரும் உங்களைப் போலவே பெரும் கவிஞராம். அவர் அந்த நாளில் எழுதிய சில கவிதைகள் இன்றும்கூட அரண்மனையில் இருக்கிறதாம்."

"அப்படியா?" எழுந்து உட்கார்ந்தான் பூபத். "எங்கே பார்த்தாய்?"

"கம்லாவதியின் அறையில் ஒரு நாள் பார்த்தேன். இப்போது கூட



கணவருடன் எம். எஸ். சுப்புலட்சுமி பெங்களூரிலேயே நிரந்தரமாகத் தங்குவதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டு, அமைதியான பகுதியில் ஒரு வீட்டை வாங்குவதென முடிவு செய்திருக்கிறார்களாம் என்று ஒரு செய்தி 24—5—79 இதழ் குமுதத்தில் வெளியாகியிருந்தது. அந்தத் தகவல் சரியல்ல என்று தெரிகிறது.

அவைகளை எடுத்து வருவேன். ஆனால் அங்கே நான் போக அனுமதி கிடையாதே..."

"யார் உன்னைத் தடுப்பது? இந்தா." தன் மோதிரத்தைக் கழற்றினான் பூபத். "இதோ அனுமதி. போய் எடுத்து வா."

"கண்ணிமைப்பதற்குள் வருகிறேன் அண்ணா! அதைக் காட்டிலும் எனக்கென்ன வேலை?"

கம்லாவதி அவனுக்கு முதுகைக் காட்டினாற்போல் உட்கார்ந்திருந்தாள். காலடியோசை கேட்டுத் திரும்பினாள். அவள் முகத்தில் இன்னும் கடுமை குன்றவில்லை.

"கம்லாவதி, உன்னிடம் அவசரமாக ஒரு விஷயம் பேச வந்திருக்கிறேன்."

அந்தப் பேச்சை விரும்பாதவள் போல அவள் தலை குனிந்தாள்.

"தெரியும் அண்ணா. அந்தப் பணிப் பெண் சொன்னாள். மன்னிக்க வேண்டும். அதைப்பற்றி நான் பேச விருப்பப்படவில்லை."

"கம்லாவதி, கொஞ்சம் நான் சொல்வதைக் கேள். உன்னைப் பார்ப்பதற்காகவே பானுசந்த் ஆசையுடன் வந்திருக்கிறான் மாறுவேடத்தில்."

"பானுசந்த் வந்திருக்கிறான்! இங்கேயோ!" வெறுப்பை உமிழ்ந்தன அவள் கண்கள். "அண்ணா, அவனை இங்கே அழைத்து வந்தீர்களோ, அப்புறம் நான் உங்களோடு பேசுவதையே நிறுத்தி விடுவேன்! ஜாக்கிரதை!"

"கம்லாவதி! கொஞ்சம் பொறுமையாகக் கேள். நீ என் பிரியத்துக்குரிய தங்கையல்லவா? என் சொல்லுக்குக் கட்டுப்படக் கூடியவள் என்ற அடிப்படையில் நான் பல திட்டமிட்டிருக்கிறேன். அதற்கு உன் முழு ஒத்துழைப்பும் தேவை. கம்லாவதி நீ பானுசந்தின் மனைவியாகி, நாகர்கோட்டின் ராணியாவதன் மூலம்——"

"முடியாது அண்ணா, முடியவே முடியாது!" கால்களைத் தரையில் உதைத்துக் கொண்டு அவள் இதைச் சொன்னபோது கலீரென்று ஆமோதித்தன சலங்கைகள்.

"கம்லாவதி! அதோ கீர்த்தி ஸ்தம்பத்துக்குப் பக்கத்தில் பார். ஒரு உருவச்சிலை எழுப்பியிருக்கிறது அல்லவா?"

"இருக்கட்டுமே."

"அது யார்?"

"யாரோ ஒரு போர்வீரன். கல்லா என்று பெயர் பொறித்திருக்கிறது. அதற்கென்ன?"

"அந்தக் கல்லா நமது பரம்பரை வீரத்தின் திருவுரு. அலாவுதீன் கில்ஜி படையெடுத்து வந்தபோது நமது முன்னோர்களில் ஒருவர் அவரோடு போரிட்டார். அந்த மன்னரின் கால் வெட்டுப்பட்டு விட்டது. கீழே விழுந்தார். இந்தக் கல்லா அவருடைய படை வீரன். சட்டென்று மன்னரைத் தன் தோள்மீது ஏற்றி வைத்துக் கொண்டான். மன்னர் அவனுடைய தோள்மீது இருந்தபடியே வாள் போர் செய்து எண்ணற்ற எதிரிகளை வெட்டி வீழ்த்தினார். கல்லா அடிபட்டு உயிர்த் தியாகம் செய்தான். அவனுடைய தீரத்தையும் தியாகத்தையும் பாராட்டுவதற்காக எழுப்பப்பட்ட சிலை அது. அப்படியெல்லாம் போராடிப் பெற்ற சுதந்திரம், இன்று வெட்டுக்கிளி படையெடுப்பில் பயிர் நிலங்கள் பாழாவது போல மண்ணாகலாமா? அதற்கு நீ உடந்தையாகலாமா? யோசித்து சொல் கம்லாவதி."

"என்னைச் சித்திரவதை செய்யாதீர்கள், அண்ணா. உங்கள் லட்சியத்துக்காக நான் உயிரை வேண்டுமானாலும் தருகிறேன். ஆனால் அந்தப் பானுசந்தை நான் மணக்க வேண்டுமென்று மட்டும் கட்டாயப் படுத்தாதீர்கள்."

தங்கையின் முகத்தை ஆழ்ந்து நோக்கினான் ஜெய். அவளுடைய தீவிரம் தெரிந்தது. "என்னதான் அப்படி வெறுப்பு உனக்கு அவன் மீது!"

"சமயம் வரும்போது சொல்கிறேன். இப்போது கேட்காதீர்கள்."

நிலைக் கண்ணாடியின் முன்னே போய் நின்று கொண்டான் ஜெய். "அப்படியானால் ஒன்று செய்."

"என்ன அண்ணா?"

தனக்குப் பின்னே நிற்கும் தங்கையின் பிரதிபிம்பத்தைப் பார்த்தபடி அவன் சொன்னான்: "பானுசந்தின் நட்பும் துணையும் எனக்கு இப்போது மிக முக்கியம். ஆகவே அவனை நீ வெறுக்கிறாய் என்பது அவனுக்குத் தெரிய வேண்டாம். அவனைக் காதலிப்பது போல் நடி. கொஞ்ச நாளைக்கு."

தங்கையின் பதிலை எதிர்நோக்கி அவள் முகத்தைப் பார்த்தான் ஜெய்.

(தொடரும்)





# 8

உறுதிமொழி கேட்டு, தன் முகத்தையே பார்த்து நிற்கும் ஜெய்யின் முகத்தைக் கூர்ந்து நோக்கினாள் கம்லாவதி. அவள் மனம் இளகியது.

என்றைக்குமே அவளுக்கு மிக வேண்டியவன் இந்தச் சின்ன அண்ணன் ஜெய்தான். அவளுக்கும் அவனுக்கும் வயது வித்தியாசம் மூன்றே மூன்றுதான். அத்தோடு மட்டுமல்லாமல், மற்ற அண்ணன்மார்கள் முகத்தைத் தூக்கி வைத்துக் கொள்வார்கள். அன்பு காட்டுவதற்குகூடப் பெரிய கிராக்கி பண்ணிக் கொள்வார்கள். அவள் ஏதாவது கேட்டால் அதைப் பொருட்படுத்த மாட்டார்கள். என்னவோ குழந்தை உளறுகிறது என்று சிரித்து விட்டுப் போய் விடுவார்கள். அப்போதெல்லாம் ஜெய்தான் அவள் தோழன். அவனுக்கும் அவளுக்கும் பொதுவான நண்பர்கள் உண்டு; பொதுவான பகைவர்கள் உண்டு; பொதுவான விளையாட்டுக்கள் உண்டு. எவ்வளவு முறை அவனும் அவளும் இந்தப் பரந்த அரண்மனையின் மூலைமுடுக்குகளிலெல்லாம் ஓடிப் பிடித்து விளையாடியிருக்கிறார்கள்! ஒரு சமயம் கணேஷ் மந்திரருகே மதில் சுவரிலிருந்து ஏறிக் குதிக்கையில் அவளுக்குக் காலில் அடி பட்டு விட்டது. நொண்டி நொண்டிகூட நடக்க முடியவில்லை. பக்கத்திலே அரண்மனை ஆட்கள் எவரையும் காணோம். ஜெய்தான் அவளைத் தன் முதுகில் ஏற்றி அரண்மனைக்குக் கொண்டு வந்தான். அப்படிப்பட்ட ஜெய் அண்ணன் சொல்கிறான் என்பதற்காக பானுசந்தை மன்னிக்கலாம். அதுவும் தற்காலிகமாக...

''சரி அண்ணா,'' என்றாள்.

''என் தங்கை என்னைக் கைவிட மாட்டாள் என்று எனக்குத் தெரியும்!'' உணர்ச்சி மேலீட்டால் ஜெய்யின் முகம் பளபளத்தது. கம்லாவதியின் இருகைகளையும் சேர்த்துப் பிடித்துக் கொண்டான். ''அங்கே பானுசந்த் காத்திருக்கிறான். வரச் சொல்கிறேன்.''



''சொல்லுங்கள். ஆனுல்.. ''

''ஆனுல் என்ன கம்லாவதி?''

''அவர் என்ன மாறுவேடத்தில் வந்திருக்கிறுர்?''

''அராபிய வர்த்தகன் போல. முத்தும் பவளமும் விற்கிற வியாபாரியைப் போல.''

''அவர் இன்னுரென்று யாருக்கும் தெரியாதில்லையா?''

''ஆமாம். தெரியாது.''

''அப்படியே இருக்கட்டும். பல கண்கள் இங்கே கவனித்துக் கொண்டிருக்கின்றன. அவர்களை நம்ப வைக்கிற மாதிரிதான் நான் பேசுவேன், பழகுவேன். அவரிடம் முன்கூட்டியே சொல்லிவிடு.''

ஜெய் முறுவலித்தான். ''நீ இரண்டு வார்த்தை பேசினுல் போதும் அவனுக்கு. அது எப்படிப்பட்ட வார்த்தையானுல் என்ன?''

வேகமாய் வெளியேறினுன்.

கம்லாவதியின் அறை வா[illegible]லில் பானுசந்தைக் கொண்டு வந்து வி[illegible]டான் ஜெய். பின்னர் திரும்பிவிட்டான்.

பானுசந்த் உள்ளே நுழை[illegible]வில்லை. மஞ்சத்தில் ஒயிலாகச் சாய்ந்து கொண்டிருக்கும் அந்த அற்புத அழகு அவன் கால்களைக் கட்டிவிட்டது. ரோஜாக் காட்டிலே நிற்கும் தோகை மயிலைப்போல—என்ன கொள்ளை அழகு. ஒரே தாவலில் செல்ல; சென்று அள்ள; அள்ளி அணைக்க; அணைத்துச் சிரிக்க; சிரித்து விளையாட—

அவன் தன்னைக் கட்டுப் படுத்திக் கொண்டான் —ஜெய் எச்ச[illegible]ரிக்கை செய்திருந்ததால் —

''உள்ளே வரலாமா இள[illegible]வரசி?''

அவள் மெல்லத் திரும்பி[illegible]னுள். ஆனுல் எழுந்திருக்கவில்லை.

''யாரது? முத்து வியாபா[illegible]ரியா? வாருங்கள்,'' என்றுள்.

அவன் உள்ளே நுழைந்தான். ஞ்சத்தை வேகமாய் நெருங்கினான்.

''ஊகூம். எட்டவே இருங் ர்.'' கம்லாவதியின் குரலில் கண்டிப் த் தெரிந்தது. ''வியாபாரிகள் மஞ் ந்துக்கு மிகக் கிட்டமாக வருவது ழக்க மில்லை.''

''மன்னியுங்கள், இளவரசி. ர்வத்தால் வந்து விட்டேன்,'' வளுக்கு மட்டுமே தெரியும்படி ண் சிமிட்டினான் அவன். அவள் முன் பழைகளைத் திறந்து ஒவ்வொன்றாய் டுத்துக் காட்டினான்.

அவள் ஒன்றைக் கூடக் கயால் தொடவில்லை. ஆர்வமாகப் ார்க்கக் கூட இல்லை. ''என்ன பிரமாத ான ரத்தினங்கள் என்று இவைகளை டுத்து வந்திருக்கிறீர்! சூரியபூர் அரண் மனையின் பணிப்பெண் கூட இதையெல் ாம் அணியமாட்டாள்.''

''கம்லாவதி...''

''உஸ்! இளவரசி.''

''இளவரசி!'' அவன் குர லத் தாழ்த்திக் கொண்டான். ''சும்மா வடத்துக்காகத்தான் இவைகளைக் கொண்டு வந்தேனே தவிர உண்மை யில்.....''

''கறுப்பு நிற முத்தாக இருந் ாலாவது அபூர்வமானவை, விலை யுயர்ந்தவை. இதெல்லாம் சாதாரண வெள்ளை முத்து. பவளங்கள் மட்டு மென்ன? பவளத் தீவிலிருந்து கொண்டு வந்தவை அல்ல. சாதாரண சீதா மஞ் ள் பவளம்...என் நேரத்தை வீணடிக் வா எடுத்து வந்தீர்! கொண்டு போங் கள் சொல்கிறேன்! ஊம்!''

அவளுடைய கோபத்தைக் கண்டு குழப்பம் ஏற்பட்டது அவனுக்கு. அவனை இப்படித் தவிக்க வைப்பது அவளுக்கு வேடிக்கையா யிருந்தது. மனசுக்குள் என்ன ஒரு குரூரமான திருப்தி! மேலும் மேலும் அவனை விரட்ட வேண்டுமென ஆசை எழுந்தது. ஆனால் அண்ணனின் வேண்டுகோள் ஞாபகம் வந்தது.

உதட்டில் புன்னகையைத் தவழ விட்டுக் கொண்டாள். குரலை ரகசியமாக்கிக் கொண்டாள். ''நாகர் கோட் மன்னர் மன்னிக்க வேண்டும் என் கடுமையைக் கண்டு. வாசலில் இது நேரம் வரை ஓர் ஆள் நின்றிருந்தான், நம்மை மறைவாகக் கவனித்துக் கொண்டு! இப்போதுதான் அகன்றான்.''

''ஓ! அதுதானே பார்த் தேன்!'' பானுசந்தின் முகத்தில் ஆனந் தம் பரவியது. ''கம்லாவதி...இன்னும் கொஞ்ச நாள்தான். பொறுத்திரு. உன்னை அக்பர் பாதுஷாவின் அந்தப் புரத்தில் கொண்டு சேர்ப்பதற்கு நடை பெறும் சதிகளை நானும் உன் அண்ண னும் முறியடித்து விடுவோம். பிறகு உன்னை நாகர்கோட்டின் ராணியாக்க அதிக நாள் பிடிக்காது.''

''மிக்க மகிழ்ச்சி, அரசே,'' என்றாள் கம்லாவதி. நாட்டியம் கற்றுக் கொண்டது எத்தனை நல்லதாயிற்று! உள்ளத்தில் இல்லாததை முகத்தில் கொண்டு வர அந்தப் பயிற்சியல்லவா கைகொடுக்கிறது!

''உனக்கு எங்கள் முயற்சி களில் சம்மதம்தான். இல்லையா?''

அவள் தலையசைத்தாள்.

''நீயும் நானும் குழந்தைப் பிராயத்திலிருந்து ஒருவரையொருவர் அறிந்தவர்கள். உன்னிடம் எனக்குக் கண்மூடித்தனமான காதல் எப்போதுமே உண்டு. உன் உள்ளத்தில் ஒரு சிறு வேதனை ஏற்படக் கூட நான் இடம் தந்ததில்லை.....''

'அந்த ஒரு சம்பவத்தைத் தவிர!' மனத்துக்குள் நினைத்துக் கொண்டாள் கம்லாவதி.




பெயர்: கே. எஸ். சுப்பிரமணியன்
வயது: 24
படிப்பு: பி. ஈ. (மெக்கானிக்கல்)
வேலை: ஆட்டோமேடிக்மெஷினரி தயாரிக்கும் ஒரு தொழிற்சாலையின் பங்குதாரர்
முகவரி: 36, சிவசாமி ரோடு, இராம்நகர், கோயமுத்தூர்—9
குறிப்பு: (விஸ்வகர்ம சமூகத்தினர் மட்டும் அணுகவும். மற்றவர்கள் மன்னிக்க.)

''ஆகையால், என்னைக் கண
ாைக ஏற்க உனக்கு மனப் பூர்வமான
ிருப்பம் உண்டு என்பது எனக்கு நிச்சய
ாய்த் தெரியும். இருந்தாலும் உன்
ாயால் அதைக் கேட்டுத் தெரிந்து
ாகத்தான் வந்தேன்...''

'இல்லை, இல்லை! எனக்குச்
ம்மதமில்லை!' கொத்தளத்தின் மீது
றிக் கூவ வேண்டும் போலிருந்தது
வளுக்கு. அடக்கிக்கொண்டாள். மீண்
ும் புன்னகையையே பதிலாகத்
ந்தாள்.

அரண்மனையிலிருந்து
கோட்டை வாசலுக்குச் செல்லும்
ாதையில் சென்று கொண்டிருந்தான்
ஜெய்—பின் கை கட்டிய வண்ணம்.
இறக்கமான ரஸ்தா. சிறிய பாறைக்
ற்கள் பதிக்கப்பட்ட பாதை. ஆனால்
குதிரைகளின் குளம்படிகள் பட்டுப் பட்டு
மழுமழுப்பாகி யிருந்தன. இரண்டு பக்க
மும் அடர்ந்த புதர்கள்.

வட்டமான செயற்கை
நீரூற்றை அடைந்ததும் அவன் நின்
றன். அதன் படிகளில் முழந்தாளைக்
கட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தாள்
ரூப்மதி. அவனுக்காகவே காத்திருந்
தாள் போலும். ஆர்வத்துடன் எழுந்து
வந்தாள். ''என்ன, இருவரையும் சந்
திக்க வைத்தாயிற்று?''

''ஆமாம். ஆனால் கம்லா
வதி லேசில் ஒப்புக் கொள்ளவில்லை.''
அவன் அவளுடைய முகத்தைப் பார்த்
தான். அதிலிருந்த பிரகாசம் அவனுள்
ஆயிரம் யானைப் பலத்தைக் கொடுத்த
மாதிரி இருந்தது. ''வா, ரூபா. இந்த
அரண்மனைக் கவலைகளையும் ராஜாங்கப்
பிரசினைகளையும் மறந்து.....''

''மறந்து?''

''கொஞ்ச நேரம் எங்
காவது.....''

''எங்காவது?''

''தனியாய்.....''

''தனியாய்?''

அவன் சிரித்து விட்டான்.
''அரண்மனையில் முன்னே ஒரு பச்சைக்
கிளி இருந்தது. சொல்லாமல் கொள்ளா
மல் ஒருநாள் அது பறந்தோடிவிட்டது.
அந்தக் கூண்டு காலியாய்த்தான் இருக்
கிறது. நீ போய் அதில் உட்கார்ந்து
கொள்.''

''உட்காருகிறேன். எனக்கு
நீங்கள் கொய்யாக் கனி
கொண்டு வந்து.....'' வெட்கத்தி



மூத்த பையன் பெயர்
ஆனந்த். வயது 16. பின்னர்
ரமேஷ் (12) ராஜேஷ் (8). மூவரும்
செயிண்ட் பீட்ஸ் பள்ளியில்
படிக்கிறார்கள். காலையில் மூவரும்
டென்னிஸ் பயிற்சி மேற்கொண்டு
கன்னிமாரா ஓட்டலுக்கு
அருகே உள்ள தாமஸ் கிளப்பில்
ஒரு மணி நேரம் ஆடுகிறார்கள்.
வீட்டில் இருந்தால் கேரம் போர்டு
படாத பாடு படும்.

இரண்டாவது மகன்
ரமேஷ் வீட்டில் எல்லோரிடமும்
அனுசரித்துப் போவான். கோபம்
வராது. மற்ற இரண்டு
பிள்ளைகளும் இதற்கு நேர் எதிர்.
சினிமா பார்ப்பார்கள், ஆனால்
ரொம்பவும் லயித்துப் போய்விட
மாட்டார்கள். கடைசிப்
பையன் ராஜேஷுக்கு மட்டும்
எம். ஜி. ஆர். சண்டைக் காட்சிகள்
நிறைந்த படமென்றால் படு
உற்சாகம். அமிதாபச்சன்
நடிப்பு அதற்கு அடுத்த படியாகப்
பிடிக்கும்.

படிப்பில் படு சுட்டிகள்.
தனியாக வீட்டில் இந்தி
படிக்கிறார்கள் மூவரும். பியானோ
வாசிப்பதில் மூவருக்கும்
தேர்ச்சி உண்டு.

இவ்வளவு சொன்ன பின்,
தந்தையின் பெயரைச்
சொல்லவில்லையே! அவர்
ஒரு நடிகர், பெயர்...
திருப்புக.

பேட்டி: பால்யூ

வண்ணப்படம்: சைதை எம். ராதா

னால் அவனுக்கு மேலே பேச்சு வரவில்லை
''இந்த நீரூற்றின் படிகளில் உட்கார்ந்திருந்தபோது எனக்கு ஒரு சந்தேகம் வந்தது...''

''ஓ! மகா பராக்கிரமசாலியும் எல்லையற்ற வீரனும் தீரனும் சூரனுமான இந்த இளவரசன் ஏன் இப்படிப் பெண் பித்துக் கொண்டலைகிறான் என்ற சந்தேகமா!''

''ஐய! பீற்றிக் கொள்வதைப் பார்!'' அவள் மோவாயைத் தோளில் இடித்துக்கொண்டு கலகலவென்று சிரித்தாள்.

''பின்னே என்ன சந்தேகம் சொல்லேன்.''

''இந்த நீரூற்றில் தண்ணீர் பீய்ச்சியடிக்கும் என்று சொல்வார்கள். ஆனால் நான் ஒருதடவை கூடப் பார்த்ததில்லை. வெறும் கட்டாந் தரையான இடத்தில் தண்ணீர் எங்கிருந்து வரும் என்று எனக்குச் சந்தேகமாயிருந்தது...''

''இவ்வளவுதானா?'' அவன் ஊற்றின் படிக்கட்டுக்குள் இறங்கினான். ''இதோ இந்தக் குமிழ்கள் இருக்கின்றன பார்த்தாயா? கொஞ்ச நாளாய் ஏதோ துருப் பிடித்து அடைத்துக் கிடக்கின்றன..இது..'' அவன் தன்னால் பலம் கொண்டமட்டும் அந்தப் பித்தளைக் குமிழ்களைத் திருகினான்.

அவன் சொல்லிக்கொண்டிருக்கும்போதே—

திடீரென்று நீர் பீய்ச்சியடித்தது. விர்விர்ரென்று குமிழ்கள் சுழன்றன. ரூப்மதியும் ஜெய்யும் ஒருவரையொருவர் பார்க்கக் கூட முடியவில்லை. நீர்க் கிரணங்கள் அவர்களை அணைத்துக் கொண்டன. ''நிறுத்துங்கள் அதை! நிறுத்துங்கள்!'' சிரித்துக் கொண்டே கூவினாள் அவள். ''அதுதான் பார்க்கிறேன் நானும்!'' அவனும் நகைத்தான். தண்ணீர்ப் புதருக்குள்ளிருந்து அவர்கள் குரல்கள் மட்டுமே கேட்டன.

குமிழ்களை நிறுத்த முடியாமலே நீரூற்றுக்கு வெளியே வந்தார்கள். ஜெய் அவளைப் பார்த்தான். சூரியன்







அஸ்தமித்துக் கொண்டிருந்த அ வேளையில் அவள் அழகுத் தேவதையா காட்சி தந்தாள். முகத்திலும் கழுத் லும் தலையிலும் தோளிலும் முத் முத்தாக நீர்த் திவலைகள்! தங் சிலையின் மேனியில் வைரப் பொடிகளை பதித்தாற்போல ...

''ரூபா...'' மோகத்துட அவளை அணைத்தான். முத்திரையொன் பதித்தான் நெற்றியில்.

அவள் உடம்பு தளிர்போ நடுங்கிக் கொண்டிருந்தது. ''ஜெய்.. ஜெய்...'' என்றாள். உடம்பெங்கு ஈரம். ஆனால் மூச்சிலோ தாபத்தி வெப்பம்! பூங்கொடியான கரத்தினா அவன் கழுத்தை வளைத்து அணைத்து கொண்டாள். இரு இதயங்களும் ஒ றின் துடிப்பை மற்றது உணர்ந்தது.

நெற்றியில் வந்து விழுந் ஒற்றைக் கூந்தல். அதன் நுனியில் அப யாய்த் துடித்துக் கொண்டிருந்த ஒ துளி. அதை உள்ளங்கையில் வாங் ஆசையுடன் முத்தமிட்டான் அவன். ''ரூபா,..இது என் புதிய வாழ்க்கையி மகத்தான ஆரம்ப நாள்...''

அவள் அவன் அணைப்பை விட்டு விடாமலே அவன் முகத்தை ஏறிட்டு நோக்கினாள். ''ஆனால் ஜெய்! எனக்கென்னவோ பயமாகவே இருக்கிறது.''

''பயமா? பைத்தியமே! எதைப் பற்றி?''

''நீங்கள் என்னென்னவோ திட்டமிட்டிருக்கிறீர்கள். போராட்ட ஆயத்தங்கள் செய்து வருகிறீர்கள். இதெல்லாம் நடக்கக் கூடியதுதானா ஜெய்? என்னவோ ஒரு கனவின் நடுவே வாழ்ந்துகொண்டிருக்கிற மாதிரியே எனக்குத் தோன்றுகிறதே தவிர.. இதெல்லாம் நடைபெறக் கூடியதாகத் தோன்ற மாட்டேனென்கிறது.....''

''என் வீரத்தில் உனக்கு அவ்வளவு அவநம்பிக்கையா ரூபா?''

''அப்படி அர்த்தமல்ல. ஆனானப் பட்ட மேவாரும் சித்தூருமே அக்பருக்கு அடிபணிந்து போன பிறகு



நம்முடைய சின்னஞ்சிறு ராஜ்யம் என்ன செய்ய முடியும் என்று பயமாயிருக்கிறது. நான் அறிவில்லாதவள்தான். கல்வி இல்லாதவள்தான். ஆனால் நான் கேள்விப்பட்ட வரையில் அக்பர் படைமாட்சியினால் மட்டும் ஆளவில்லை, அன்பினாலும் ஆள்கிறார் என்று சொல்லுகிறார்கள்....."

"ஏமாளிகள்தான் அப்படிச் சொல்வார்கள்."

"இருக்கலாம். ஆனால் அவருக்கு முந்தின எல்லா முகலாய மன்னர்களும் இந்துஸ்தானத்தின்மீது படையெடுத்து வர வேண்டியது, ஊரைக் கொள்ளையடிக்க வேண்டியது, சூறையாடியதைச் சுருட்டிக் கொண்டு காபூலுக்குத் திரும்பிப்போவது — இதுதான் வழக்கமாக வைத்திருந்தார்களாம். இவர்தான் முதல் முறையாக இந்துஸ்தானம்தான் நமது தாயகம் என்று பிரகடனப் படுத்தினாராம். பட்டத்துக்கு வந்தவுடனேயே காபூலிலிருந்த அத்தனை அரசாங்க அதிகாரிகளையும் ராணிமார்களையும் உடனே இந்துஸ்தானத்தில் குடியேற வேண்டும் என்று கட்டளையிட்டாராம்...."

"போதும் நிறுத்து!" கோபத்தில் வெடித்தது ஜெய்யின் குரல். "அக்பரின் சரித்திரத்தை அவருடைய மந்திரி அபுல் பஸல் என்பவன் எழுதிக் கொண்டிருக்கிறானாம். நீ அவனுக்கு உதவியாகப் போய் அமர்ந்து கொள். அவனுக்குக் கூடத் தெரியாத பல விவரங்களை நீ தெரிந்துவைத்திருக்கிறாயே.. ஆனால் ஒன்று ரூபா. இதே முகலாயர்களுக்கு இன்னொருவகை சரித்திரமும் இருப்பது உனக்குத் தெரியாது..."

"கோபிக்காதீர்கள் ஜெய்." அவன் கையை இறுகப் பிடித்துக்கொண்டாள் அவள். "என் பயத்தினால் இவ்வளவும் சொன்னேன். படைக்குப் படை என்று பார்க்கிறபோது அவரோடு மோத முடியுமா, மோதி வெல்ல முடியுமா என்ற அச்சத்தால் சொன்னேன்."

"படைகள் தோற்றால்கூட இந்த ஜெய் விடமாட்டான் ரூபா!" என்றான் அவன். "சக்கரவர்த்தி என்ற பெயரில் இருக்கிறானே அந்த நபரை..."

"அந்த நபரை?" அவன் முகத்தைப் பார்க்கவே பயங்கரமாக இருந்தது.

இடுப்பிலிருந்து குத்துக் கத்தியின் மீது அவன் கை இறுகியது. "அதற்கும் ஒரு தனியான திட்டம் போட்டு வைத்திருக்கிறேன்."

அவன் குரலில் ஆவேசம் தொனித்தது.

(தொடரும்)

# ...புராணமா?

காயத்ரி புராணம் மறுபடியும் ஆரம்பமாகி விட்டதே!

சிவகாசி இரா. பாஸ்கர்ராஜ்

காயத்ரியை கோரமாக ஒரு முறை அட்டையில் போட்டதற்குப் பிராயச்சித்தமாகக் குமுதம் இந்த அழகிய போட்டோவை வெளியிட்டதோ?

காரைக்குடி—2 ஆர். கண்ணன்

இனி, இருக்கவே இருக்கிறது வளைகாப்பு, சீமந்தம், ஆணு பெண்ணு ·வகம், கான்வெண்ட் படிப்பு...

கோபி தோ.ப.அசோகன் சுலோச்சனு

மாறியது பேரு

ஒரு சாதாரண லாட்டரி டிக்கெட் விஷயத்தை வைத்துக் கொண்டு சுஜாதா என்ன அழகாய்க் கதை எழுதி இருக்கிருர்!

சென்னை—35 எஸ். சந்திரமௌலி

நான் லாண்டரிக் கணக்கு எழுதினல் கூடப் பத்திரிகைக்காரர்கள் ஏதோ அதில் புதுமை இருக்கிறது என்று நினைத்துப் பிரசுரிக்கத் தயாராக இருக்கிருர்கள் என்று சுஜாதா கூறியதை நீங்கள் நிரூபித்து விட்டீர்கள்.

திருத்தணி டீ. டி. ரங்கநாதன்

பரிசு விழுந்த எண் ஏ—126628893; சத்தியமூர்த்தியினுடையது ஏ — 126629001, முள்தாடியினுடையதும் ஏ—126629001 என்ருல் அப்புறம் என்னய்யா கதை! கதையின் உயிர்நாடியே நம்பர்தானே?

திருச்சி ஏ. ஜி. வல்லபதாஸ்

சிரிக்கிறது பாரு

தலையங்கத்தில் கூறியபடி, சொந்த பலம், சொந்த பலம்தான். இரவல், இரவல்தான். முன்பு, தி. மு. க. வினர், சி. சுப்பிரமணியம், மோகன் குமார மங்கலம் ஆகியோர் ஜெயித்து வந்த பிறகு, தாங்கள் இட்ட பிச்சை என்றும் 'சாரிட்டி பாய்ஸ்' என்றும் கிண்டலும், கேலியும் செய்து பேசியதை எப்படி மறக்க முடியும்?

சென்னை-5 பா. நாராயணன்

இந்திரா காந்தியும், ராமச்சந்திரனும் தங்கள் அரசியல் வாழ்க்கைக்கு, எங்கே தஞ்சைத் தேர்தல் முடிவு கட்டி விடுமோ என அஞ்சி ஓடிய ஓட்டத்தைப் பார்த்து நாடே சிரிக்கிறது. கொஞ்சம் கூட வெட்கம், மானம், எதுவுமில்லாமல், கார்ட்டூனை வெளியிட்ட நீர் இருக்க வேண்டிய இடம், பைத்தியக்கார ஆஸ்பத்திரி.

பெரியகுளம் ஆர். வேலு

யாரையா நீரு?

பொருத்தம் பாருங்கள் பகுதியில் கருணநிதி 'சறுக்கராரையா' என்று குறிப்பிட்டுள்ளீரே! 'குமுதம்' ஆசிரியர் அறுக்கராரையா

திருச்சி-2 கும. இளங்கோ

உபதேசம் கூறு

'பொண்ணு ஊருக்குப் புதுசு' படத்தில் எந்தக் காட்சியைக் 'கண்ருவி' என்று குறிப்பிட்டிருக்கிறீரோ அதே காட்சியை உமது விமரிசனத்தில் புகைப் படம் பிடித்துப் போட்டிருக்கிறீர்! ஊருக்குத்தான் உபதேசமா?

அர்கண்டநல்லூர் கே. பிரதாப்சிங்

துவக்கியது யாரு?

'தானே ஒரு பத்திரிகை துவக்கி, அதைச் சாம்ராஜ்யம் என்று வர்ணிக்கிற அளவுக்கு உருவாக்கியது என்னைத் தவிர யாருமில்லை' என்று ராமநாத் கோயங்கா கூறியிருக்கிருர். இந்தியன் எக்ஸ்பிரஸ் சேலம் டாக்டர் வரதராஜுலு நாயுடுவினல் துவக்கப்பட்டு, பின் திரு. சதானந்தம் விலைக்கு வாங்கி நடத்தினர். 1937ல் ராமநாத் கோயங்கா அதை விலைக்கு வாங்கி நடத்தி வருகின்ருர். சதானந்தத்தால் துவக்கப்பட்ட தினமணியை 1937'ல் ராமநாத் கோயங்கா விலைக்கு வாங்கி நடத்தி வருகிருர்.

அரியலூர் என். சிவானந்தம்

---

கதைகளில் வரும் பெயர்கள், சம்பவங்கள் அனைத்தும் கற்பனையே. கதை, கட்டுரை முதலிய எதையும் தபால் மூலமே அனுப்ப வேண்டும். அவற்றைத் திருத்தி அமைக்கவும் கடிதங்களைச் சுருக்கவும் ஆசிரியருக்கு உரிமை உண்டு. குமுதம் பிரிண்டர்ஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிட்டவர்: ஏ. பி. ஏ. பெரியகருப்பன். குமுதம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர்: பி. வி. பார்த்தசாரதி. ஆசிரியர்: எஸ். ஏ. பி. அண்ணாமலை.
முகவரி: 151, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை—600 010.

# யானை முத்தம்

## 9

பிரதம மந்திரி தோடர் மாலுக்கு ஒரே ஆச்சரியம். யானைச் சண்டை என்ருல் சக்கரவர்த்திக்குப் பிரியம்தான். ஆனுல் ராஜாங்கப் பிரசினைகள் பல காத்திருக்கும்போது அந்தக் கேளிக்கையில் இறங்குவது அவர் வழக்கமில்லையே!

அக்பர் செல்லமாக வளர்த்து வரும் அரண்மனை யானையான கெஜநாத்துக்கும், இன்னெரு அரண்மனை யானையான கெஜநூருக்கும் சண்டை ஏற்பாடு செய்யுமாறு அவர் சொன்ன போது—

''இன்று சக்கரவர்த்தியிடம் சில முக்கிய விஷயங்கள் விவாதிக்கலாமென்று பார்த்தேன்...'' தயங்கினுர் தோடர்மால்.

''விளையாட்டு நடந்து கொண்டிருக்கும்போதே விவாதத்தையும் வைத்துக் கொள்வோமே?'' என்ருர் சக்கரவர்த்தி

''மாமன்னரின் கட்டளை.'' நகர்ந்தார்.

''இருங்கள்.'' சக்கரவர்த்தியின் குரல் அவரை நிறுத்தியது. ''சூரத்திலிருந்து இரண்டு போர்ச்சுக்கீசிய வர்த்தகர்கள் வந்திருக்கிருர்கள். பிரதம விருந்தினாகளாக அவர்களை அழையுங்கள். நம் ஆசனத்துக்குப் பக்கத்திலேயே அவாகளுக்கும் இருக்கை போடப்படட்டும்.''

''சக்கரவர்த்தியின் விருப்பப்படியே.''

வெள்ளையும் சிவப்பும், நீலமும் பச்சையும், மஞ்சளும் ஊதாவுமான ஷாமியாளுக்கள் அரண்மனை வெளி முற்றத்தில் பளபளத்துக் கொண்டிருந்தன. அவற்றின் நுனிகளில் நூற்றுக் கணக்கான வெண் புருக்கள் தொற்றிக் கொண்டு நின்றன. காற்றின் அலை அந்தக் கூடாரத் துணிகளை ஓர் அசைப்பு அசைக்க வேண்டியதுதான்—ஒரே விளுடியில் வெண் இறக்கைகள் படபடக்க விண்ணை நோக்கி அவை தாவும். ஷாமியாளு பந்தல்களுக்கு மேலே அரண்மனையின் இரண்டாம் அடுக்கு இருந்தது. தந்த வேலைப்பாடுகள் செய்த சாளரங்களின் பின்னே ஜெனுளு பெண்களின் சந்திரபிம்ப வதனங்கள். வெளி முற்றத்தின் கோலாகலங்களைக் கண்டு வியப்புடன் விரிகின்ற வட்ட விழிகள். ஆக்ரா நகரத்தின் பிரமுகர்கள் ஒவ்வொருவராய் வர, வர, 'அதோ அவர் யார் தெரியுமா, இது யார் தெரியுமா?' என்று ஒருவருக்கொருவர் பேசிக் கொள்ளும் ஆர்வக் கிசுகிசுப்புக்கள். வெகு தொலைவில், கோட்டையைச் சுற்றியுள்ள அகழியின் பலகை வாராவதிகள் மீது குதிரைகள் பாய்ந்து வருகையில், வாராவதியின் இரும்புச் சங்கிலிகள் எழுப்பும் கடகடத்த ஓசைகள்; ஆழ்ந்த அகழியின் தண்ணீர்ப் பரப்புக்கு மேலே தலையை நீட்டி ஆவலுடன் அண்ணுந்து பார்க்கும் பெரிய பெரிய மீன்கள், சிறிய சிறிய முதலைகள். ரகசியக் கால்வாய்கள் வழியே வரும் யமுனையின் கறுத்த தண்ணீரில் வெடிக்கும் வெள்ளைக் குமிழ்கள்.....

புறப்பட்டு விட்டார். ஓய்வு அறையிலிருந்து மாமன்னர் புறப்பட்டு விட்டார். செய்தி வந்ததும் பாதி

மோகினி

ஓசைகள் அடங்கிவிட்டன.

அவருக்கெனப் பிரத்தியேகமாக அமைக்கப்பட்ட ஷாமியானுவை அக்பர் அடைந்தபோது பரிபூரண நிசப்தம். வழியெங்கும் உள்ளவர்கள் இடுப்பு வரை குனிந்து சலாமிடுவதால் ஏற்படும் சிறு சரசரப்பைத் தவிர வேறு அரவமில்லை. சக்கரவர்த்தி இன்று பாரசீக வெண்பட்டில் நீண்ட அங்கி தரித்திருந்தார். மங்கோலியத் தையல்காரன் தைத்த பேஷ்வாஸ் அது. ஓரங்களில் நெய்யப்பட்ட தங்கச் சரிகைகளும் வைரங்கள் இழைத்த பொத்தான்களும் அந்தப் பிற்பகல் வேளையில் ஒளிவெள்ளமாய்த் தகதகத்தன.

சூரத்திலிருந்து வந்திருந்த இரண்டு பரங்கியரும் இருக்கையினின்று எழுந்து சக்கரவர்த்திக்கு வணக்கம் தெரிவித்தார்கள்.

ஆசனத்தில் அமர்ந்தார் சக்கரவர்த்தி. அமைச்சர் குலிஜ்கான் வஸீர் அருகே வந்தார். வாய் பொத்தி மரியாதையுடன், ''ஆரம்பிக்கச் சொல்லலாமா?'' என்று கேட்டுக் கொண்டார்.

முறுவலுடன் தலையசைத்தார் பேரரசர். அமைச்சர், அடுத்த அதிகாரியை நோக்கித் தலையசைக்க, அவர் அடுத்தவருக்குக் கட்டளையிட — மின்னலெனப் பாய்ந்தது கட்டளை.

அரை வட்டமாக அமர்ந்திருந்த அவையினர் தூரத்தில் இரண்டு பக்கமும் புழுதி புறப்படுவதைக் கண்டனர்.

இடப் பக்கம் ஒரு யானைக் கொட்டடி; வலப்பக்கம் இன்னொன்று.

முதலில் நான்கு ஜோடி சாதாரண யானைகள் மோதிக் கொண்டன. அந்த மோதலில் ஆக்ரோஷத்தைக் காணோம். ஒன்றையொன்று குப்புறத் தள்ளி விளையாடுகிற மாதிரி இருந்தது. மக்களும் ஆ ஆ என்று அதிரவில்லை. ரசித்துச் சிரித்தார்கள். அது முடிந்ததும் —

ஒரு படைவீரன், களத்திலே வந்து நின்றான். 'கெஜநாத்! கெஜநாத்!' என்று உரத்த குரலில் அறிவித்தான்.

வருபவை இரண்டு யானைகளா, இரண்டு கறுத்த மலைகளா!

அவையோரின் கண்கள் இந்தப் புறமும் அந்தப் புறமும் மாறி மாறிச் சென்றன. ஆனால் அச சக்கரவர்த்தியின் பார்வையோ வ புறம் மட்டுமே இருந்தது. அங் புழுதியின் அடர்த்தி அதிகப்பட அதி பட அவர் முறுவலும் விரிந்தது. மீ யைத் தடவிக் கொள்ளும் கம்பீர அதிகரித்தது.

அந்தத் திசையிலிருந்து வ வதுதான் அவருடைய பிரியத்துக்கு கெஜநாத். ஏழு வருடங்களுக்கு முன் சிகந்தரா காட்டில் வேட்டையாட சென்ற சமயம் பிடிக்கப்பட் குட்டி. யானைக் கூட்டத்தின் வழக்க துக்கு விரோதமாக அதை மட்டு விட்டுவிட்டுச் சென்றிருந்தன மற் யானைகள். வேட்டையாட்களி ஒருவனால் கொல்லப்படவிருந்த அதை தடுத்துக் காப்பாற்றினார் சக்கரவர்த்தி அரண்மனைக்குக் கொண்டு வரச் செ தார். சிறப்பான உணவு—சிறப்பான பயிற்சி. அரசகுமார்களில் ஒருவனை போல வளர்ந்தது அது. தலைநகரி மாமன்னர் இருந்தால் ஒரு நாளைக் ஒரு வேளையாவது அதைப் பார்க்காம இருக்கமாட்டார். அதனிடம் ஏற்பட்ட பிரியமல்லவா யானை வர்க்கத்திடமே ஒரு நாட்டத்தை அவருக்கு ஏற்படுத் திற்று!



முதன் முதலாக உயர் ...ு யானையைத் திட்டமிட்டு உற்பத்தி ...ய்ய ஏற்பாடு செய்தது அதனால் ...னே? எங்கேனும் யாரேனும் ஒரு ...னையைக் குரூரமாக நடத்துவது ...டுபிடிக்கப்பட்டால் கடும் தண்டனை ...ன்று சட்டமியற்றியதும் அதனால் ...னே? இன்று இந்துஸ்தானத்திலேயே ...சிறந்த யானைப் படை—50000 ...னைகளைக் கொண்டது—அக்பர் சக்கர...ர்த்தியையன்றி வேறு யாரிடம் உண்டு?

இவ்வளவுக்கும் காரணமான ...க்பரின் செல்ல யானை—

அதோ அதோ அதோ ...ந்து கொண்டிருக்கிறது. வெற்றிக் ...காடியை உயர்த்தி ...ஆட்டுவதைப் ...போலத் துதிக் ...கையைத் தூக்கி ...வீசுகிறது. பந்து உதைப்பது போல் அதன் கால்கள் வீறுடன் விரைகின்றன. அதன் பிளிறல் அவையினரை மெய் சிலிர்க்கச் செய்கிறது. சக்கரவர்த்தியைச் சந்தோஷப் படுத்த வேண்டுமென்பதற்காகவும் சில பேர் 'ஆகா! ஆகா!' என்று வியப்பொலி கிளப்புகின்றனர். அதே சமயம், எதிர்ப்புறம் வருகின்ற கெஜநூரும் அரண்மனை யானைக்குத் தோற்றத்திலோ வீரியத்திலோ குறைந்ததாக இருக்கவில்லை.

இரண்டின் பின்னாலும் கூடவே மாவுத்தர்கள் ஓடி வந்து கொண்டிருந்தார்கள். சண்டை நடக்கும் வட்டத்துக்கு வந்ததும் விலகிக்கொண்டார்கள்.

நிசப்தம். நிசப்தம். புல்லைப் போட்டாலும் புல் விழும் சத்தம் கேட்டது.

சக்கரவர்த்தி கை தட்டி உத்தரவு தந்தார்.

அடுத்த கணம் இரண்டு கருங்குன்றங்களும் மோதிக்கொண்டன. 'ஆ!' என்று ஒரு பேரரவம் எழுந்தது கூட்டத்தினிடையே. உடனேயே நிசப்தம்



சூழ்ந்து கொண்டது. அந்த மூர்த் தண்ணியமான போரின் வேகத்தைக் கண்டு மூச்சுப் பேச்சற்றுப் பிரமித்தனர் அவையினர்.

முதல் கொஞ்ச நேரத்துக்கு கெஜநாத் தடுமாறிக் கொண்டே யிருந் தது. கெஜநூர் அதை நேருக்கு நேராய்த் தலையோடு தலை மோத வில்லை. பக்கவாட்டாக ஓர் இடி. மல்லாந்து விழுந்தது கெஜநாத். ஆனால் பந்தாக எழுந்து விட்டது மறு விஞடி. இரண்டாம் முறையும் இன்னோர் இடி. மறுபடி விழுந்து எழுந்தது.

அதனதன் மாவுத்தர்கள் கூடவே சுற்றிச் சுற்றி வந்தார்கள். விடாதே கெஜநாத்! மோது கெஜநூர்; அப்படித்தான். சபாஷ்! இந்தப் பக்கம். இப்படிக் குத்து!—அவர்களுடைய தூண் டுதல் ஆரவாரம் ஒரு பக்கம். தாரை தப்பட்டை கொம்புகளின் ஆர்ப்பாட்டங் கள் இன்னொரு பக்கம். எந்த யானை யின் துதிக்கை ஓங்கியிருக்கிறதென் பது தெரியாதபடி புழுதித் திரை . . .

சிறிது சிறிதாக கெஜநாத் புத்திசாலியாகிவிட்டது. கெஜநூர் இடிக்க வரும் சமயம் பார்த்து ஒதுங்கிக் கொண்டது. அது ஏமாந்ததோடு மட்டு மல்ல, மோத வந்த வேகத்தில் தடுமாற வும் செய்தது. கெஜநாத்துக்கு நீண்ட தந்தம். கெஜநூரின் காதுக்குக் கீழாகக் குத்தியது. குத்தப்பட்ட இடத்தி லிருந்து குருதி பீரிட்டது. அது கத்திய கத்தல்!

சக்கரவர்த்தி எப்போதுமே நிதானத்தைத் தவற விடுபவரல்ல.

---



''மாப்பிள்ளை என்ன தக ராறுபண்ணுகிறார்?''

''அவர் எழுதின துணுக்கு களைக் கல்யாணப் பத்திரிகையின் பின் பக்கம் பிரசுரித்தால்தான் தாலி கட்டுவாராம்.''

—ஜி. நடராஜன்

---

அதுவும் தர்பாரிலும் மக்களின் மு பும் சிலைபோலிருப்பார்.

இப்போதும் அப்படித்தா ஆனாலும் அவர் பார்வை அடிக்க அந்தப் போர்ச்சுக்கிசிய வர்த்தகர்க நோக்கிச் சென்றது. 'எப்படி எ யானைகளின் ஆற்றல், பார்த்தீர்களா கேட்காமல் கேட்டன அவருடை பெருமை நிறைந்த கண்கள்.

சக்கரவர்த்திக்கு இடது கை புறத்தில் தலைமை அமைச்சர் தோட மாலும் தளபதி ஆஸப்கானும் மீ முன்ஷி அஷ்ரப்கானும் தங்களுக்குள் தாழ்ந்த குரலில் பேசிக்கொண்டே யிருந்தார்கள். நடுவே ஒரு முறை தோட மால் அக்பரை நெருங்கினர் ஏதோ சொல்ல. 'அப்புறம்' என்று சக்கர வர்த்தி சைகை காட்டிவிட்டார்.

கெஜநூருக்கு அடிபட்ட ரோஷம். பீரிவரும் ரத்தத்தைக் கண்டதால் பெருகி வந்த வெறி. இப் போது தன் பலமனைத்தையும் உப யோகித்தது. துதிக்கையைப் பிரயோகிக் கத் தொடங்கியது. கெஜநாத்தின் துதிக்கையை வளைத்து மடக்கிப் புரட்டி யது. மல்லாந்து விழுந்த யானை யின் வயிற்றில் அமுக்கிற்று. நெளிந்து புரண்டு தப்பித்துக் கொண்டது கெஜ நாத். இப்போது அதற்கு விளங்கி விட்டது—தேகத்தைக் காட்டிலும் மூளைதான் முக்கியம் என்று. கெஜ நூரை இப்படியும் அப்படியுமாக அலைக்கழிக்க ஆரம்பித்தது. கொம்பு மேளங்களின் சத்தம் காதைச் செவிடு படுத்தியது. மக்களின் ஆரவாரம் மறு புறம்.

நேரமாக ஆக நூருக்குக் களைப்பு ஒரு பக்கம், ஆத்திரம் ஒரு பக்கம்; ஆத்திரத்தினால் அறிவு நஷ்டம். கொஞ்சம் கொஞ்சமாக அது தள்ளாடத் தொடங்கியது. ஆங் காரப் பிளிறல்கள் அதிகமாயின. கற்றிருந்த வித்தைகள் கைவிட லாயின. சற்று ஏமாந்து போய்க் கீழே விழுந்ததுதான் தாமதம்— துதிக்கை யால் அதை ஒரு புரட்டுப் புரட்டி மல்லாத்தியது கெஜநாத். தன் கூரிய கொம்பினால் நடுவயிற்றில் குத்தியது. குத்திய வேகத்தில் முழுத் தந்தமும் உள்ளே புகுந்து விட்டது. கெஜநூர் துடித்த துடிப்பு! கெஜநாத்துக்கோ தன் தந்தத்தை வெளியிலெடுப்பது கூடப் பெரும் பாடாகி விட்டது. தரையெங் கும் ரத்தப் பிரவாகம். இனி இப்போ

எந்தப் படத்திலும் இந்த அள வுக்கு இவர் உடம்பை மூடிக்கொண்டிருப்பதை நீங்கள் பார்த்திருக்க மாட்டீர்கள். யார்?

விடை: அடுத்த பக்கம்



தைக்கு அது எழுந்திருக்காது என்று நிச்சயமாகிவிட்டது. சபையெங்கும் ஆர வாரம். சக்கரவர்த்தி தன் உவகையைக் கட்டுப் படுத்திக் கொண்டார். எழுந் தார். திவான் பணிவுடன் அவரிடம் நீட்டினார் வெள்ளித் தட்டில் வைத்த வெற்றி முக படாமை. தங்கப் பட்டை கள் வைத்து, பச்சைக் கற்கள் பதித்த சிவப்புத் துணியைத் தன் செல்ல யானையின் நெற்றியில் பொருத்தினார் சக்கரவர்த்தி.

அவர் கையை உயர்த் தினார். அடிபட்ட யானையை அகற்றவும், மாமன்னருக்கான மூடு பல்லக்கைக் கொண்டு வரவும் ஏற்பட்டிருந்த ஓசைகள் சரேலென நின்றன.

அக்பர் சொன்னார். "வெற்றி பெற்ற இந்தத் தீரமான யானைக்குக் கெஜ்வீர் என்று பெயர் சூட்டுகிறேன். என்னுடைய சொந்தக் குதிரையான நூர் பைஜாவையும், சொந்த ஒட்டக மான ஜமாஜாவையும் போல கெஜ் வீரும் இனி என் சொந்த யானையாக இருக்கும். நான் தலைமை தாங்கி நடத் தும் அடுத்த படையெடுப்பில் இது என்னுடன் வரும்."

அடுத்த படையெடுப்பு! அவையினரிடையே சலசலப்பு.

சக்கரவர்த்தி தொடர்ந் தார்: "—தோற்ற கெஜநூரும் ஆற்ற லுக்குப் பெயர் பெற்றது. இந்த இரண்டு யானைகளைப் போல ஐம்பதாயிரம் யானை கள் நமது படையில் இருப்பது பெருமை யளிக்கும் விஷயம்..."

ஐம்பதாயிரம் யானைகள்! பிரமிப்பினால் பேச்சடங்கியது அவை யில்.

அரண்மனையின் ஆலோசனை அறை. தோடர்மால், மேஜையின் மீது தன் கையிலிருந்த சீலைச் சுருளை வைத் துப் பிரித்தார்.

அது ஒரு தேசப்படம்.

"குஜராத்," என்று விளக்கி னார் தோடர்மால். தங்கப் பூண் போட்ட நீண்ட பிரம்பு படத்தின் மீது ஓடி யது. "பகதூர் ஷா இறந்துபோனது முதற்கொண்டே இங்கு நிலையான ஆட்சி இல்லாதிருப்பது சக்கரவர்த்தி அறிந்ததே...இப்போது நிலைமை வர வர மோசமாகிக் கொண்டிருக் கிறது..."

"இன்னொரு பக்கம், குஜ ராத்தில் கடல் கொள்ளைக்காரர்களின் அட்டகாசம் வேறே! அதைச் சொல்ல மறந்து விட்டீர்களே?" என்றார் அக்பர்.

திகைத்தார் தோடர்மால். "சக்கரவர்த்திக்கு அந்த விஷயம்..."

"தெரிந்ததுதான்." குறுக் கும் நெடுக்கும் நடந்தவர் நின்றார்.

''புனித மெக்காவுக்குச் செல்லும் யாத்திரிகர்களுக்குக் குஜராத்துதான் தலைவாசல். அவர்களைக் கொள்ளைக்காரர்கள் துன்புறுத்துகிருர்கள். குஜராத்தைக் கைப்பற்றிக் கடல் கொள்ளைக்காரர்களின் கொட்டத்தை அடக்காமலிருக்கிருேம் என்று இங்குள்ள வைதிக முஸ்லிம்களுக்கு நம்மீது கோபம்.''

''ஆம், சக்கரவர்த்தி. இது வெகு அவசரமான பிரசினை.''

''தெரிந்ததுதான்— குஜராத் கொள்ளைக்காரர்களுக்கு நம் ஆற்றலைப் பற்றி ஓர் எச்சரிக்கை தர வேண்டுமென்றுதான்—யானைச் சண்டை ஏற்பாடு செய்தேன். அதைக் காண வந்திருந்தார்களே இரண்டு போர்த்துக்கீசிய—''

''வர்த்தகர்கள்?''

''அல்ல. வர்த்தகர் வேடத்தில் உலவும் கொள்ளைக்காரர்கள். இன்னேரம் குஜராத்துக்கு ஓடிக் கொண்டிருப்பார்கள் தங்கள் தோழர்களுக்குச் சேதி சொல்ல!'' சக்கரவர்த்தி வாய் விட்டுச் சிரித்தார். ''அது இருக்கட்டும். முன்பே குஜராத்துக்கு அனுப்பி வைத்தோமே தளபதி பீர் முகம்மது அட்காவை? அவர் இப்போது எங்கே இருக்கிருர்?''

''இதோ இங்கே, ஜோத்பூருக்கும் சரோஹிக்கும் நடுவே பர்த்ரஜான் என்னும் இடத்திலே இருக்கிருர். அது சுற்று வழியான பாதை. குஜராத்தை மறுபுறமாகவும் நாம் தாக்கலாம். அதற்கு இன்னெரு பாதை இருக்கிறது. இதோ இங்கே—''

அக்பர் கவனித்தார். சற்று மௌனமாக இருந்தார். ''இது சூர்யபூர்—நாகர்கோட் வழியல்லவா?''

''ஆமாம் ஷா இன் ஷா. நான் முன்பே சொன்னபடி இது சுண்டைக்காய்ப் பிரதேசம். சூர்யபூர்க்காரர்கள் சக்கரவர்த்திக்குப் பெண் கொடுத்துச் சமாதானம் செய்து கொள்ளப் போவதாகச் சொல்லுவது உண்மையா, ஏமாற்ரு என்பது தெரியவில்லை...''

இளவரசி கம்லாவதியின் எழில் தோற்றம் அக்பரின் நினைவிலே எழுந்தது.

தோடர்மால் சொன்னுர்: ''திருமணத்தை விரைவுபடுத்தும்படி அவர்களுக்கு எச்சரிக்கை அனுப்ப வேண்டும். சரியான பதில் இல்லையென்ருல் அவர்களையும் அவர்களுக்குத் துணை நிற்கும் நாகர்கோட்டையும் மிதித்துக் கொண்டு குஜராத்துக்குப் பாதை அமைக்க வேண்டும்... இதில் தாமதத்துக்கு இடமில்லை...''

அக்பர் மௌனமாய் உலவினுர் சிறிது நேரம். ''ராஜபுதனத்தில் ஒரு சுண்டைக்காய்ப் பூமியை மிதிப்பது ஒரு பெரிய காரியமல்ல...ஆனுல் பல கொடிய போர்களுக்கும் பல படுகொலைகளுக்கும் பின்னே அமைதி நிலவி வருகிறது அங்கே. கொஞ்சம் கொஞ்சமாக இப்போதுதான் ராஜபுதனத்து மக்களின் நல்லெண்ணத்தைத் திரும்ப பெற்று வருகிருேம். அதைக் கெடுத்துக் கொள்ளக் கூடாது. அதுதான் என் தயக்கத்துக்குக் காரணம்..''

''அப்படியானுல்.....''

''பொறுங்கள் முதலமைச்சரே!'' நின்ருர் பேரரசர். ''சூர்யபூரின் நாலாவது இளவரசனை அந்த ஜெய்யை எதன் மூலம் பிடிக்க முடியும் என்று பார்க்க வேண்டும் என்று அன்று நான் சொன்னேன். எதன் மூலம் என்பது தெரிந்துவிட்டது.''

மாமன்னரின் முகத்தில் தவழும் அர்த்தமுள்ள சிரிப்பு தோடர்மாலைத் திகைக்க வைத்தது. ''சக்கரவர்த்தி என்ன கண்டுபிடித்தீர்கள்?''

சக்கரவர்த்தி அறையின் மறு கோடிக்குச் சென்ருர். சாத்தியிருந்த கதவைத் திறந்தார்: ''என் பிரதம மந்திரி உன்னைப் பார்க்க வேண்டுமாம். இப்படி வாம்மா ரூப்மதி,'' என்ருர்.

(தொடரும்)



வீடை:
'ஆடு பாம்பே' படத்தில் ஜெயமாலினி

சீற்றம் கொண்ட பெண் எப்படி இருப்பாள்? ரூப்மதியைப் பார்த்தாலே தெரிந்தது. இந்துஸ்தானத்தின் மன்னாதி மன்னர், இந்தக் கடலினின்று அந்தக் கடல் வரை தேசத்தை ஆண்டு கொண்டிருக்கும் அவள். ஒரு புறம் மட்டுமே வெளிச்சம் அவள் மீது பாய்ந்திருந்தது. இப்போது சக்கரவர்த்தி அறைக் கதவைத் திறந்ததும் அவள் முழு மேனியும் ஒளிக்கு வசமாயிற்று. அவள் விழிகளில் கோபத்தின் முத்திரை;



## 10

சாம்ராஜ்யாதிபதி, 'இப்படி வாம்மா ரூப்மதி' என்று அன்போடு அழைத்த பின்னரும் அவள் அறையை விட்டு வெளி வரவில்லை.

சாளரத்தின் ஓரமாக முழந்தாள் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்தாள்

உதடுகளில் அவமானத்தின் துடிதுடிப்பு; கழுத்தை நொடித்துத் திருப்பிய வேகத்தில் ஆங்காரத்தின் சொரூபம்.

பிரதம மந்திரி உன்னைப் பார்க்க வேண்டுமாம் என்றார் அக்பர். அவளோ, பிரதம மந்திரி என்ன, அவரைப் படைத்த

பிரமனே வந்தாலும் நான் எழுந்து வரத் தயாராயில்லை என்பதுபோல முகத்தைத் திருப்பிக் கொண்டாள். இரண்டு நாளாக அவள் பொருமிய பொருமல்! ஆக்ரா அரண்மனையில் ஒரு விருந்தாளி என்று அவள் நடத்தப்பட்டாள். ஆனல் தானெரு கௌரவமான கைதியே தவிர வேறல்ல என்று அவளுக்குப் புரிந்திருந்தது. அந்தப்புரப் பெண்கள்—ஏன், சக்கரவர்த்தியின் பத்தினியான அம்பர் இளவரசியே—வந்து விசாரித்தபோது கூட அவள் முகம் கொடுத்துப் பேசவில்லை.

நினைக்க நினைக்க அவளுக்கு ஆத்திரமாய் வந்தது. தான் மடக்கப்பட்ட விதம், குற்றவாளியைப் போலக் கொண்டு வரப்பட்ட அலங்கோலம்—



அப்போது சாயந்தர நேரம். அரண்மனையிலிருந்து குடிசைக்குத் திரும்பிக் கொண்டிருந்தாள். இரு பக்கமும் வயல்களில், மஞ்சள் கரைத்த நீரைத் தெளித்தாற்போல சூரிய கிரணங்கள் பரவியிருந்த வேளை. முந்தின தினம் ஜெய்யுடன் நனைந்து விளையாடிய நினைவுகள்... அவள் இதழ்களில் புன்னகை...

எதிரில் டகடகவென்று குளம்போசை அவள் இன்பச் சிந்தனைகளைக் கலைத்தது. நிமிர்ந்தாள். புழுதியின் நடுவே இரண்டு குதிரை வீரர்கள் வருவது தெரிந்தது. சாலையின் ஓரமாக ஒதுங்கிக் கொண்டாள் சரேல் என்று.

''சகோதரி, ஒரு உதவி செய்ய முடியுமா?'' என்ருன் குதிரை வீரர்களில் ஒருவன் அவளை அணுகியதும். அவர்கள் ராணுவத்தைச் சேர்ந்தவர்கள் என்று தெரிந்ததே தவிர, எந்த ராஜ்யம் என்று அவளால் கண்டறிய முடியவில்லை.

''என்ன வேண்டும்?'' என்ருள்.

''நாங்கள் சித்தூரிலிருந்து வருகிருேம். ரணதாம்பூர் கோட்டைக்கு அவசரமாகப் போய்க்கொண்டிருக்கிருேம். ஜெய் ஏக்லிங்கஜி!'' என்ருன் மற்றவன்.

அந்தக் கோஷம் அவளுக்குச் சிலிர்ப்பேற்படுத்தியது அந்தச் சக்கரவர்த்திக்கு எதிராக ராஜபுதனத்தில் கிளர்ச்சி நடக்கும் இடங்களிலெல்லாம் அதுதான் ஜெய கோஷம். ஒற்றுமை கோஷம். தோழமைக் கோஷம்.

மற்ருெருவன் கேட்டான்: குதிரைகள் தண்ணீர் குடித்து இரண்டு நாளாகிறது. இங்கே ஓடை எங்கே இருக்கிறது?''

அவள் குடிசையின் பின்னலேயே ஒரு குட்டை இருந்தது. தூரம் கூடக் குறைவுதான். அங்கு அழைத்துச் சென்றிருந்தால் இப்படிச் சிக்கிக் கொண்டிருக்க மாட்டோமே என்று இப்போது நினைத்துப் பார்க்கையில் தோன்றியது. ஆனல் அவர்களை அங்கு அழைத்துப் போக ரூப்மதி தயங்கினள். என்னவோ போனல் போகிறதென்று பாட்டி அவளை அரண்மனை வேலைக்கு அனுமதித்திருக்கிருள். அதற்கே ஆயிரம் விவாதங்கள், நூறுயிரம் கண்ணீர்கள். இப்போது இரண்டு குதிரை வீரர்களை அழைத்து வருவதைப் பார்த்தால்—

அவ்வளவுதான். பயத்தில் பாட்டி உயிரையே விட்டு விடுவாள். ''இந்தப் பக்கம் வாருங்கள்,'' என்று சாலையின் குறுக்காக அழைத்துச் சென்ருள். பனஸ் நதியிலிருந்து பிரிந்து வரும் சிற்ருேடையொன்று சலசலத்துக் கொண்டிருந்தது அந்தத் திசையில்.

''இதோ பார்! நீயும் வேண்டுமானல் குதிரையில் ஏறிக் கொள் சகோதரி. பாவம், கூடவே நடக்கிருயே?'' என்ருன் ஒருவன்.

''வேண்டாம், நன்றி.'' சிரித்தபடி அவள் மறுத்தாள். அப்போதும்கூட அவளுக்கு அவர்களைப் பற்றிய சந்தேகம் கொஞ்சமும் ஏற்படவில்லை.

குதிரையிலிருந்து ஒருவன் இறங்கினன். ஓடையின் கரையில் இருந்தபடியே இரண்டு குதிரைகளும் தண்ணீர் குடிக்கத் தொடங்கின.

'மோகினி'




டி. ரேவதி
தயாரிப்பு

இந்திராவிடம் நேரடியாக பணம் கொடுத்ததாக முதலில் சொல்லிவிட்டு பல்டி அடித்ததால்

தந்திரமாக நடப்பதால்

கண்டிப்பாகப் பேசுவதால்

---

திடீரென்று அவள் அப்போதுதான் கவனித்தாள். அந்தக் குதிரையின் பின்னங்கால் தொடையருகே அவள் நின்றிருந்ததால் நன்கு பார்க்க முடிந்தது. அங்கே எழுத்திலும் எண்ணிலும் சூடு போடப்பட்டிருந்தது.

ராணுவக் குதிரைகளுக்கு அது சகஜம்தான்.

ஆனல் இது பாரசீக எழுத்தில் இருந்தது!

அந்தக் கணமே அவள் உஷாரானள்.

அப்படியானல் இவர்கள் அக்பரின் ஆட்கள்! சித்தூரிலிருந்து ரணதாம்பூருக்குப் போகிறேம் என்று சொன்னது பொய்!

குப்பென்று வியர்த்த மாதிரி இருந்தது அவளுக்கு. ரவிக்கையும் தாவணியும் வியர்வையால் நனைந்துவிட்ட மாதிரி தோன்றியது. இவர்கள் பாதுஷாவின் ஒற்றர்கள் மட்டுமில்லை—குறிப்பாகத் தன்னைப் பின்தொடர்ந்து வந்திருக்கிறர்கள்.

உள்ளம் படபடத்தாலும் அவள் மூளை சுறுசுறுப்பாயிற்று. வெகு அமைதியான புன்னகையொன்றை முகத்தில் படர விட்டுக் கொண்டாள். குரலை மிகவும் நிதானப்படுத்திக் கொண்டாள்.

''நல்லது. குதிரைகள் மெதுவாய்க் குடிக்கட்டும். இங்கே நல்ல நிழலாய் இருக்கிறது. நீங்களும் கொஞ்ச நேரம் களைப்பாறி விட்டுச் செல்லலாம். வருகிறேன்.''

''இரேன் சகோதரி. சேர்ந்தே போகலாம்,'' என்றுன் ஒருவன்.

''மன்னிக்க வேண்டும். என் பாட்டி தேடுவாள்.'' சந்தேகம் ஏற்படாத வகையில் சாவதானமாகவே நடந்தாள் கொஞ்ச தூரம். பிறகு வேகத்தை அதிகப்படுத்திக் கொண்டாள். அதன் பின் ஓட்டமும் நடையுமாகவே செல்லத் தொடங்கியபோது—

பின்னுலேயே வந்தவன் சட்டென்று அவள் கழுத்தை வளைத்தான். வாயைப் பொத்தினன். அவள் திமிறினள். கை கால்களை உதைத்துக் கொண்டாள். அது இரும்புப் பிடி—உடும்புப் பிடி. அவளால் விடுவித்துக் கொள்ள முடியவில்லை. கத்தப் பார்த்தாள். அந்த அத்துவானக் காட்டில் அது யார் காதிலும் விழாது. அதோடு மட்டுமல்ல. அவளால் கத்தவும் முடியாமல் வாயை அடைத்துக் கொண்டிருந்தது அந்தக் குதிரை வீரனின் துணி.

அதன் பின்னர் ஆக்ரா அரண்மனைக்கு வந்த பிறகுதான் அவளுக்கு உணர்வு வந்தது.

தான் அத்தனை சுலபமாக ஏமாந்து போனதுதான் அவளுக்கு அதிக ஆத்திரத்தை ஏற்படுத்தியது. எதற்காக, யார் இங்கே கொண்டு வந்திருக்கிறர்கள் தன்னை என்பது அவளுக்குப் புரியவில்லை. அதைப் பற்றி யாரும் அவளிடம் பேசவும் மாட்டேனென்கிறர்கள். இரண்டு நாட்களாக அவள் புழுங்கிக் கொண்டிருந்தாள். அந்தச் சக்கரவர்த்தி மட்டும் எதிரில் வரட்டும்...என்று கறுவிக் கொண்டிருந்தாள்.

இப்போது அவர் நேர் எதிரில் வந்து நின்றதும் அவளுக்குப் பேச்சு வரவில்லை. அவருடன் பேசாதிருப்பதே அவரை அவமதிக்க வழி என்று நினைத்துக் கொண்டாள்.

தோடர்மாலை நோக்கித் திரும்பினர் பேரரசர். ''ஹூம்!



வேஷ்டி அணிவதால்

ஆட்சியை தொழிற்கட்சியிடமிருந்து பறித்ததால்

சமயம் பார்த்து தாக்குவதால்

காட்டமாக தாக்கியதால்

முதலமைச்சர் பெரும் துரதிர்ஷ்டசாலி!'' என்றார்.

திகைத்தார் தோடர்மால். ''என்ன விஷயத்தில்?''

''இந்துஸ்தானத்திலேயே நிகரற்ற அழகு படைத்த ஒரு பெண் உங்களுக்குத் தன் வதனத்தைக் காட்ட மாட்டேனென்று திரும்பிக் கொள்கிறாள். இந்துஸ்தானத்திலேயே ஒப்பற்ற இனிய குரலுடைய இள மங்கை, உங்களுடன் இரண்டு வார்த்தை பேச மாட்டேன் என்கிறாளே? இதைக் காட்டிலும் துரதிர்ஷ்டம் என்ன இருக்க முடியும்?''

''அடடா! என் துரதிருஷ்டத்துக்காக வருந்துகிறேன் ஷா இன் ஷா,'' என்றார் தோடர்மால் மென்னகையுடன்.

அவர்கள் பேச்சிலிருந்த புகழ்ச்சி ரூப்மதிக்கும் புரிந்தது. இருந்தாலும் அவள் கோபம் குறையவில்லை. இருக்கையை விட்டு எழுந்திருக்காமலே சொன்னாள்: ''பிரதம மந்திரி வருத்தப்படத் தேவையில்லை. ஒரு வகையில் அவர் அதிர்ஷ்டக்காரர்தான்.''

''எப்படி?'' என்றார் தோடர்மால்.

''காபூலுக்குத் தெற்கே வரலாறு கண்டிராத அளவுக்குப் பிரம்மாண்டமான சாம்ராஜ்யத்தை நிறுவியிருக்கும் சக்கரவர்த்தியின் முகத்தைப் பார்க்கவும் அவருடன் பேசவும் முடிந்திருக்கிறது. அது மட்டுமல்ல. அவ்வளவு பெரிய மாமன்னர், பராக்கிரமசாலி, படை பலத்திலும் செல்வாக்கிலும் ஒப்பாரும் மிக்காருமில்லாத பாதுஷா, தன்னந்தனியான ஒரு பெண்ணை மடக்கித் தூக்கி வரச் செய்த அதிசயத்தைக் காணுகின்ற அதிர்ஷ்டம் படைத்தவர்...''

தோடர்மால் சிரித்தார் மெல்ல. அக்பரோ அந்தப் பெண்ணின் வாக்குச் சாதுரியத்தையே பிரமிப்புடன் கவனித்துக் கொண்டிருந்தார்.

''அதோடு போயிற்று!'' என்றாள் ரூப்மதி. ''ஆக்ரா எங்கே இருக்கிறது, இந்த ஏழைப் பெண் வாழும் சூர்யபூர் எங்கே இருக்கிறது! அவ்வளவு காத தூரமும், இரண்டு சிப்பாய்கள் பட்டப் பகலில் ஒரு பெண்ணைக் குதிரை மீது வைத்துக் கொண்டு வந்திருக்கிறார்கள்! அந்த அக்கிரமத்தைத் தட்டிக் கேட்கவோ என்ன ஏதென்று கேட்கவோ இந்தப் பரந்த சாம்ராஜ்யத்தில் ஓர் ஆள் கூடக் கிடையாது! பாதுஷாவின் ஆட்சியில் நீதியும் நியாயமும் எப்படிக் கொடி கட்டிப் பறக்கின்றன! அப்பேர்ப்பட்ட ஆட்சியில் ஒரு முக்கிய பங்கு வகிக்கிறாரே பிரதம மந்திரி, அது ஒரு பெரிய அதிர்ஷ்டமில்லையா!''

தோடர்மால் குறுக்கிட்டார்: ''பெண்ணே, உனக்கு வாய் நீண்டு கொண்டே போகிறது! யார் முன்னிலையில் பேசுகிறோமென்பது நினைவிருக்கட்டும்.''

சக்கரவர்த்தி அவரைக் கையமர்த்தினார். ''அவள் பேசட்டும். அநீதி இழைக்கப்பட்டவளாகையால் பேசுகிறாள். அதுவே எனக்கு ஒரு பெருமை. என்ன அநியாயம் நேர்ந்தாலும் சக்கரவர்த்தியிடம் அது பற்றிப் பேச முடிகிறதே! அதுவே ஒரு பெரிய விஷயம் என்பது அவளுக்குப் புரியட்டும்.''

அவருடைய பேச்சின் நிதானம் அவளை நிமிர்ந்து பார்க்கச் செய்தது. வாசற்படிக்கு அப்பால் நிற்கும் சக்கரவர்த்தியை முதன் முறையாகப் பார்த்தாள். மார்பின் குறுக்கே கைகளைக் கட்டிக் கொண்டு நிற்கும் அந்தக் கம்பீரத்

ாற்றம்—தீட்சண்ணியம் வாய்ந்த ந்த விழிகள்—புத்தி கூர்மையைக் ட்டும் நாசி—குழந்தைப் பிராய முதல் டம்புக்கு உரமேற்றியதால் திண்மை காண்ட தோள்கள்—அசைந்தால் ஆயி ந ஜொலிப்பு வீசும் அங்கி—இவ ரயா ஜெய் அன்று தீர்த்துக் கட்டி டப் போகிறேனென்று கூறினர்?

அக்பர் அவளைப் பார்த்து தானமாகச் சொன்னர்: "பெண்ணே, ன்னை இங்கே அழைத்து வந்த முறை யப் பற்றி நீ குறைப்படுவது நியாயம் கான். ஆனல் ராஜ காரியமென்று ரும்போது, முற்ற முழுக்கத் தர்ம ழியிலேயே செல்ல முடியாது..."

அவருடைய குரலில் இருந்த ிருதுத்தன்மை அவள் கோபத்தைக் றைத்தது. எனினும், "ராஜ காரி மா? என்னை இங்கே கடத்தி வந்த தில் ராஜகாரியம் வேறே இருக்கிறதா?" என்ருள்.

சக்கரவர்த்தி உள்ளே சென்று அவளருகில் நின்ருர். "ரூப்மதி, நீ ராமாயணமும் மகாபாரதமும் படித் திருக்கிருயல்லவா?"

"ஆமாம். எதற்குக் கேட் கிறீர்கள்?"

"அவைகளில் சின்னச் சின் னப் பாத்திரங்களாக எவ்வளவு பேர்கள் வருகிருர்கள். யோசித்துப் பார். தனித்தனியே பார்க்கும்போது அவர்கள் சாதாரணமானவர்கள். ஆனல் முக்கிய மான ராஜ காரியத்தை வைத்துப் பார்க்கும்போது, அவர்களுக்கு ஒரு முக்கியமான பங்கு இருப்பது தெரியும். அதுபோல்தான் இப்போது உன் பங் கும். நீ என்னைப் பற்றி ஏற்கனவே நல்ல அபிப்பிராயம் வைத்திருக்கிருய் என்று எனக்குத் தெரியும்."

"அது இப்போது மாறி விட்டது."

அக்பர் நகைத்தார். "உன் உதடுதான் அப்படிச் சொல்கிறது. இத யம் சொல்லவில்லை." நடந்துகொண்டே பேசினர் சக்கரவர்த்தி. "என்னைப் பொறுத்தவரையில் இந்துஸ்தானத்தில் நடத்த வேண்டிய போர்களையெல்லாம் நடத்தி முடித்து விட்டதாகவே நினைத் துக் கொண்டிருக்கிறேன். வெல்லப்பட வேண்டிய சாம்ராஜ்யங்கள் இனி இல்லை என்று நினைத்திருக்கிறேன். இந்துஸ் தானத்து மக்கள் ஒற்றுமையாக வாழ்க்கை நடத்த என்னென்ன செய்ய வேண்டுமோ அதையெல்லாம் செய்ய என் மனம் விரும்புகிறது. ஆனல் அதற்கு இடையூருக நிற்கிருன் உன் காதலன் ஜெய்."

ஜெய்யின் பெயரை அவர் சொன்னதும் அவள் சட்டென அவர்மீது பார்வையை வீசினள்.

"அவன் துணிச்சல்காரன். கெட்டிக்காரன். உயிரைத் துரும்பாக மதிக்கிறவன். இங்கே அரண்மனையில் சமையலறைத் தொழிலாளியாக வேடம் போட்டுக் கொண்டு வேலை செய்தான். கலைப் பொருள் காப்பகத்திலிருந்து ஒரு பொருளைக் களவாடி எடுத்துச் சென்ருன். அது என்ன பொருள் என்று உனக்குத் தெரியுமா?"

"தெரியாது?" என்ருள் ரூப்மதி.

"அதை எதற்கு எடுத்துச் சென்ருன் என்ருவது உனக்குத் தெரி யுமா?"

அதற்கும் தெரியாது என்று தலையசைத்தாள் அவள்.

"எனக்குத் தெரியும். அதெல் லாம் சிறு பிள்ளைத்தனமான முயற்சி கள். அதை நீ அவனிடம் எடுத்துச் சொல்ல வேண்டும். உன்னிடம் அவன் எத்தனை தூரம் கட்டுப்பட்டவன் என்பது எனக்குத் தெரியும். அதனல்தான் உன்னை இங்கே வரவழைத்தேன்.—"

"மிக நூதனமான முறை யில்."

"மிக நூதனமான முறை யில்." அக்பர் புன்னகை செய்யவில்லை. "ஆனல் நான் அசோக சக்கர வர்த்தியல்ல. போரை அடியோடு துறந்து பௌத்த மதத்துக்குப் போய் விடவில்லை. நான் நல்லவனுக்கு நல்ல வன். வல்லவனுக்கு வல்லவன். இந்த அக்பர் வாளேந்தினல் இந்துஸ்தானத் தின் இரண்டு கடல்களும் சங்கமிக்கிற மாதிரி ரத்தப் பிரவாகம் ஓடும். அதிலே இந்த ஜெய்யும் சின்னஞ்சிறு சூர்ய பூர் ராஜ்யமும் எறும்புகள் மிதக்கிற மாதிரி மிதந்து மடிய நேரிடும். அப்படி யெல்லாம் நேராமல் பார்த்துக் கொள் வது இன்று உன் கையில் இருக்கிறது. என்ன சொல்கிருய் ரூப்மதி?"

அவள் சிலைபோல் நின்றிருந் தாள்.

"அவசரமில்லை. இரண்டு நாள் அவகாசம் தருகிறேன். நீ என் பக்கம் இருக்கப் போகிருயா, ஜெய் பக்கம் இருக்கப் போகிருயா என்பதை யோசனை செய்து சொல்லு."

(தொடரும்)



பிஸ்கட் தயாரிப்போர் பெருமை
குவாலிடி மாரி பிஸ்கட்டுகள் உயர்ந்த தரம் கொண்டவை. அடுக்கு இயந்திரம் மாவை 25 மி.மீ. கனமுள்ள ஆறு தாள்களாகச் செய்கிறது. பிறகு 3 மி.மீ. கணத்திற்கு அமுத்துகிறது. அதிக லேசான அதிக மொறு மொறுப்பான பிஸ்கட்டுகள் உங்களுக்குக் கிடைக்கின்றன. ஒவ்வொரு நிலையிலும் கண்டிப்பான தர நிர்ணயம். சுத்தமும் சத்தும் உள்ள பிஸ்கட்டுகள் நிச்சயம். நாலு அடுக்கு உறை மொறு மொறுப்பையும் புதுமையையும் காக்கின்றது.
குவாலிடி மாரி உலகின் சிறந்த பிஸ்கட் தயாரிப்பாளர் தந்த பயிற்சியால் செய்யப்படும் பரிபூரண பிஸ்கட்டுகள்.
குவாலிடிஸ்
மாரி
பிஸ்கட்டுகள்
சத்து நிறைந்த சிற்றுண்டி
தனிப்பட்ட நுட்பங்களால் பரிபூரணமாகத் தயாரிக்கப்பட்டது.
ஒவ்வொரு நிலையிலும் நிதானமாகத் தயாரிப்பதற்காக தனிப்பட்ட அடுப்பில் சூடு நுட்பமாக வைக்கப்படுகிறது. உள்ளும் புறமும் சீரான பொன்னிறப் பிஸ்கட்டுகள் உங்களுக்காக.
ASP-KFP-7983
குவாலிடி உயர்தர பிஸ்கட்டுகளைத் தயாரிக்கிறது
ISI
MARIE
Kwality
குவாலிடி ஃபுட் ப்ராடக்ட்ஸ்
பெங்களூர் 560039

## 11

அரபு வியாபாரி வேடத்தில் வந்த பானுசந்த் உற்சாகமாக ஊர் திரும்பி விட்டான். ''மைத்துனரே! உங்களிடம் சொல்ல வெட்கமாக இருக்கிறது. கம்லாவதி என்னைப் பரிபூரணமாகக் காதலிக்கிறாள்!'' என்றான் ஜெய்யிடம் பெருமையுடன்.

ஜெய் மெல்ல முகத்தைத் திருப்பிக் கொண்டான். நான் கேட்டுக் கொண்டதற்காக அவள் நடித்தாள் என்பது இவனுக்குத் தெரியும்போது...! எண்ணும்போதே கஷ்டமாயிருந்தது.

தோழன் பீர்நாராயணுக்கும் ஏகப்பட்ட உற்சாகம். ''அப்படியானால் சுற்று வட்டாரத்திலுள்ள வீரர்களுக் கெல்லாம் சொல்லியனுப்பலாமில்லையா?'' என்றான்.

''தாராளமாய். நாகர்கோட்டின் உதவி உங்களுக்கு என்றைக்கும் உண்டு. மற்ற ஏற்பாடுகளை நீங்கள் செய்யுங்கள்.''

குதிரையேறிப் பறந்தான் பானுசந்த்.

'எனக்கும் உத்தரவு கொடுக்க வேண்டும்.' பீர்நாராயணும் புறப்பட்டு விட்டான்.

ஜெய்க்குக் கையும் காலும் பறந்தன பரபரப்பான எதிர்பார்ப்பினால்.

இப்போது மட்டும் ரூப்மதி இங்கே பக்கத்தில் இருந்தால்! அவனுக்குக் கோபம் ஏற்பட்டது. பத்து நாளாகவா ஒருத்தி ஊரிலே போய் உட்கார்ந்து கொள்வாள்?

அவள் அரண்மனைக்கு வராத மறுநாளே பாட்டியிடம் போய் விசாரித்தான். பாட்டிக்கு அவனைத் தெரியும். தன்னுடன் வேலை செய்பவன் என்று அறிமுகம் செய்து வைத்திருந்தாள் ரூப்மதி.

''ரூபாவா! ஆஜ்மீருக்குப் போயிருக்கிறாள்,'' என்றாள் பாட்டி.

''ஆஜ்மீரா? என்னிடம் சொல்லவேயில்லையே!''

''அவள் அத்தை மகளுக்குக் கல்யாணம். உறவுகாரர்கள் வந்து கூப்பிட்டார்கள். தட்ட முடியவில்லை. அனுப்பியிருக்கிறேன்,'' என்றாள் பாட்டி.

ஜெய்க்கு ஆத்திரம் ஆத்திரமாய் வந்தது. என்ன பெரிய காதலி இவள்! எல்லாம் வெறும் வேஷம்! அவனிடம் ஒரு வார்த்தை சொல்லி விட்டுப் போகக் கூடாது!

இன்றைக்காவது ரூபா வந்திருப்பாளா?

அவளைத் தேடிச் சென்றவனுக்கு அதிர்ச்சி காத்திருந்தது.

படுக்கையில் படுத்திருந்த பாட்டி அவனைத் தெரிந்து கொண்டாள். கையெடுத்துக் கும்பிட்டாள். கும்பிட்ட கைகள் நடுங்கிக் கொண்டிருந்தன அவள் குரலைப் போலவே. ''தம்பி..நீயா...சரியான சமயத்துக்குத்தான் வந்திருக்கிறாய்.....''

''பாட்டி...என்ன விஷயம்...'' அவன் குனிந்து கிழவியைக் கைத்தாங்கலாக உட்கார்த்தினான். திடுக்கிட்டான். பாட்டியின் உடம்பு சுட்டது. காய்ச்சலா என்ன?

''தம்பி...என்னை மன்னித்து விடு .ரூப்மதியைப் பற்றி உன்னிடம் நான் சொன்னதெல்லாம் கட்டுக்கதை!'' என்றாள் பாட்டி

''என்னது?''



''ஆமாம் தம்பி... அவள் காணுமல் போய்விட்டாள் என்று நாலு பேருக்குத் தெரிந்தால் எவ்வளவு அவமானம்! வயசுப் பெண்ணை வீட்டிலே காணும் என்ருல் தலைக்குனிவு இல்லையா? அதற்காகத்தான் அவளுடைய அத்தை வீட்டுக்குக் கல்யாணத்துக்கு அழைத்துப் போயிருக்கிருன் என்று சொல்லிவைத்தேன். ஆனல்...''

''உண்மையில் ரூபா என்ன ஆனுள் பாட்டி?'' கிழவியை உலுக்கி எடுக்க வேண்டும்போல அவனுள் ஆத்திரம் பொங்கியது. ''எங்கே தான் போனுள் ரூபா?''

''அவள் ஓடிப் போகவில்லை தம்பி. என் பேத்தி—எங்கள் வம்சத்தில் வந்தவள் அப்படிப்பட்ட கேவலமான காரியமெல்லாம் செய்ய

மாட்டாள்...''

''பின்னே?''

''அவளைப் பாதுஷாவின் ஆட்கள் தூக்கிப் போய்விட்டார்கள் தம்பி, தூக்கிப் போய்விட்டார்கள். '' பாட்டி புடவையினால் வாயைப் பொத்திக் கொண்டு விம்மினாள்.

அவனுக்கு ரத்த நாளங்கள் வெடித்தன. ''பாதுஷாவின் ஆட்கள் தூக்கிப் போனார்களா? எப்போது? யார் சொன்னது?''

''ஒரு மாடு மேய்க்கிற சிறுமி வந்து சொன்னாள். இரண்டு பேர் குதிரையில் வந்தார்களாம். ரூபா திமிறத் திமிற அவளை மடக்கிப் பிடித்துப் பலவந்தமாகத் தூக்கிக்கொண்டு சென்றார்களாம்.'' பாட்டி தலையை நிமிர்த்திக் கொண்டாள். அவள் பார்வையில் ஓர் உக்கிரம் தெரிந்தது. பேச்சில் ஓர் ஆவேசம் வெளிப்பட்டது. ''ஆனால் ஒன்று தம்பி. என் பேத்தி மகா ரோஷக்காரி. பாதுஷாவின் அரண்மனையில் காலடி வைக்கவே மாட்டாள். அதற்கு முன்பே எப்படியாவது தன் உயிரைப் போக்கிக் கொண்டிருப்பாள்– –''

விருட்டென்று எழுந்து கொண்ட ஜெய்யை இழுத்து இருத்திக் கொண்டாள் கிழவி. ''கொஞ்சம் என் பக்கத்திலேயே இரு, தம்பி. இரண்டு நாளாய் எனக்குக் கடும் காய்ச்சல். இன்னும் சிறிது நேரம்தான் நான் உயிரோடு இருப்பேன்... ரூபா, என் செல்லமே, உன்னைக் கூடிய சீக்கிரம் மறு உலகத்திலே பார்க்கப் போகிறேனம்மா. இந்தப் பாட்டி உன்னை கை விட்டு விட்டாள் என்று மட்டும் நினைக்கவே நினைக்காதே...''

ஜெய் தன் பதற்றத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டான். உண்மையிலேயே பாட்டியின் உடம்பும் உள்ளமும் 'ரொம்ப மோசமான நிலையில் இருக்கிறது என்பது அவனுக்குப் புரிந்தது. ''பாட்டி, உங்களுக்கு ஒன்றுமில்லை. என்னைப் பிடித்துக் கொண்டு எழுந்திருங்கள். வைத்தியரிடம் போகலாம்.''

''வேண்டாம் தம்பி. எங்கிருந்தாவது கொஞ்சம் தண்ணீர் மட்டும் கொண்டு வா... மரண தாகமாயிருக்கிறது...''



மாநிலத்திலேயே அதிக மதிப்பெண்கள் பெற்று (465) முதலாவதாகத் தேறியவர் செயிண்ட் ஆண்டனிஸ் பெண்கள் பள்ளி பத்தாவது வகுப்பு மாணவி குமாரி காயத்ரி.

''நான்கு வயதுக் குழந்தையாக இருந்தபோது வீட்டுக்கு எதிரில் இருந்த பள்ளியில் சேர்த்து விட்டோம். காலையில் அவளைப் பள்ளிக்கு அனுப்புவதற்குள் பெரும்பாடாகிவிடும். அழுது அடம் பிடிப்பாள். சில சமயம் குண்டுக் கட்டாகக் கட்டித் தூக்கிக் கொண்டு போய் விடுவோம்,'' என்கிறார் தந்தை ராகவாச்சாரி. (ஆடிட் ஆபீசர்.)

லிப்கோ கிருஷ்ணசாமி சர்மா தன் வீட்டுக்கு வருகிறவர்களையெல்லாம் முகப்பில் உள்ள தென்னை மரத்தை வலது புறமாகச் சுற்றி வரும்படிதான் வரவேற்பார். திரும்பிப் போகும்போது பிரதட்சிணமாகத் தென்னைக்கு இடப்புறம் சென்று கேட்டைத் திறக்க வேண்டும்.

தாய் தந்தை இருவரின் படத்தையும் பெரிய 'ஆயில் பெயிண்டிங்'காகச் செய்து வரவேற்பு அறையில் மாட்டி வைத்திருப்பவர் நிதி யமைச்சர் நாஞ்சில் மனோகரன்.



கண்ணிலே திரை படர்ந்துவிட்டால் காரியம் மிஞ்சிப் போய்விட்டது என்று அர்த்தம். சுகுமாரின் அணைப்பில் சொக்கிப் போயிருப்பவர் புதுமுகம் ஊர்மிளா.

படம்: சின்னச் சின்ன சிட்டுக்கள்.

---

ஜெய் ஓடினான். தண்ணீர் எடுத்து வந்தான். பாட்டியை மார்போடு சாத்திக் கொண்டான். தண்ணீர் ஊற்றினான். அவள் நிலைமை விநாடிக்கு விநாடி சீர்கெடுவது தெரிந்தது.

''தம்பி ...நீ யாரோ என்னவோ எனக்குத் தெரியாது... சிப்பாய் என்று மட்டும் தெரியும்... என் பேத்தி இப்படித் தூக்கிச் செல்லப்பட்ட அநியாயத்துக்குப் பழி வாங்காமல் மட்டும் விடாதே. அந்தப் பாதுஷாவுக்குப் பாடம் கற்பிக்காமல் இராதே. நீ ஒரு சாதாரணப் படைவீரன்தான். ஆனால் நம்மால் என்ன ஆகும் என்று சும்மா இருந்துவிடாதே...'' அவளுக்கு மூச்சுத் திணறியது. ''சண்டை வேண்டாம்... அரண்மனைப் பக்கம் போகாதே... படையிலே சேர்ந்து விடாதே... இப்படியெல்லாம் என் பேத்திக்குச் சொன்னவள்தான் நான். அதெல்லாம் தப்பு. இந்த அக்கிரமத்தை எதிர்த்துப் புல் பூண்டு... துரும்பு கூடப் போராடணும்...''

அவள் பேச்சு அப்படியே நின்றது. ''பாட்டி...பாட்டி...'' என்று மென்மையாக இரண்டு முறை கூப்பிட்டான் ஜெய். பதில் கிடைக்கவில்லை. அவனுக்குப் புரிந்து விட்டது. கிழவியைத் தரையில் கிடத்தினான். மண்டியிட்டுக் கைகூப்பினான். இரண்டு பொட்டுக் கண்ணீர் கிழவியின் முகத்தின்மீது விழுந்தது.

எழுந்து கொண்டான். ரூபாவைப் பாதுஷாவின் ஆட்கள் கடத்திக்கொண்டு போனார்கள்! அவன் ரத்தம் கொதித்தது.

# திரைப்படத் தொழில் நுட்பவியல் நிறுவனம்

## அடையாறு, சென்னை-600 020

(செய்தி, மக்கள் தொடர்புத்துறை, தமிழ்நாடு அரசு)

**சென்னை, திரைப்படத் தொழில் நுடபவியல் நிறுவனத்தில் சேர்ந்து அடியிற்கண்ட டிப்ளமா பயிற்சிகள் பெறுவதற்காக விண்ணப்பங்கள் வரவேற்கப்படுகின்றன.**

| பயிற்சித் துறை | குறைந்த படச கல்வித் தகுதி | 1-7-1979 அன்று வயது | பயிற்சிக் காலம் | இடஙகளின் எண்ணிக்கை |
|---|---|---|---|---|
| டைரக்ஷன் மற்றும் திரைக்கதை | கலைகள்/அறிவியல் ஆகியவற்றில பட்டம் | 18½ முதல் 24 வரை (ஷெட்யூல்ட் இனம், மலைச்சாதி வகுப்பினர் மற்றும் பொற்கொலலர் இனத்தைச் சார்ந்தவர் களுக்கு 27 வயது வரை சலுகை) | 3 ஆண்டுகள் | 5 |
| சினிமாடோகிராபி | பௌதிகம் மற்றும் ரசாயனம் அலலது அதற்குச் சமமான பாடங்களில் புகுமுக வகுப்பில் தேர்வு அலலது தமிழ்நாடு அரசு போர்ட் ஆஃப் டெக்னிக்கல் எஜுகேஷன் அண்ட டிரெயினிங் நடத்தும் பிரீ-டெக்னிக்கல் பயிற்சித் தேர்வு | 15½ முதல் 21 வயது வரை (ஷெடயூல்ட் இனம், மலைச்சாதி வகுப்பினர் மற்றும் பொற்கொல்லர் இனத்தைச் சார்ந்தவர் களுக்கு 24 வயது வரை சலுகை) | 3 ஆண்டுகள் | 5 |
| ஒலிப்பதிவு மற்றும் ஒலிப்பொறியியல் | மேற்கண்டவாறு | மேற்கண்டவாறு | 3 ஆண்டுகள் | 5 |
| ஃபிலிம் ப்ராசஸிங் | மேற்கண்டவாறு | மேற்கண்டவாறு | 3 ஆண்டுகள் | 5 |
| ஃபிலிம் எடிடிங் | புகுமுக வகுப்பு அல்லது அதற்குச் சமமான பயிற்சித்தேர்வு (ஏதாவது குரூப்பும்) | மேற்கண்டவாறு | 2 ஆண்டுகள் | 5 |
| சினிமா நடிப்பு (ரீ-ஆர்கனைஸ்ட் சர்டிபிகேட் கோர்ஸ்) | எஸ்.எஸ்.எல்.சி. (செலக்ஷன் கமிட்டியின் முடிவிற்கேற்ப தகுதி வாய்ந்த விண்ணப்பதாரர்கள் சம்பந்தமாக இவ்விதி தளர்த்தப்படும்) | ஆண்களுக்கு 18 முதல் 25 வயது வரை<br>பெண்களுக்கு 15 முதல் 22 வயது வரை | 1 ஆண்டு | 20 (10 இடஙகள பெண்களுக்கு ஒதுக்கப்பட்டுள்ளன) |

சினிமா நடிப்புப் பயிற்சி தமிழ், தெலுங்கு, கன்னடம் மற்றும் மலையாளம் ஆகிய மொழிகளில் கற்றுக்கொடுக்கப்படும்.

குறிப்பு: 45 இடங்களில் ஒரு இடம் அயல்நாட்டு மாணவர்களுக்கென ஒதுக்கப்பட்டிருக்கிறது.

கல்லூரி முதல்வர், திரைப்படத் தொழில் நுடபவியல நிறுவனம். சென்னை-600 020 (The Principal, Institute of Film Technology, Adyar, Madras-600 020) அவர்கள் பெயருககு ரூ. 2/-க்கு வாங்கப்பட்ட, கிராஸ் செய்யப்பட்ட போஸ்டல ஆர்டர் மற்றும தஙகளது முகவரி எழுதப்பட்ட 0.85 பைசா தபால் தலை ஒட்டிய உறை (22 செ.மீ x 9 5 செ.மீ) இவைகளை "கல்லூரி முதல்வர், திரைப்படத் தொழில நுட்பவியல், அடையாறு. சென்னை-600 020" முகவரிககு அனுப்பி விண்ணப்ப படிவங்களையும், பிராஸ்பெக்டஸையும் பெறலாம். போஸ்டல் ஆர்டர் 1979 ஜூன் 1-ம தேதிககு முந்திய தேதியுடையதாக இருக்கக்கூடாது.

## விண்ணப்பங்கள் அனுப்பக் கடைசித் தேதி:

முழு விபரங்களும் அடங்கிய விண்ணப்ப படிவங்கள் 14-7-1979 அன்று மாலை 5 மணிக்கோ அல்லது அதற்கு முன்னதாகவோ கல்லூரி முதலவருக்குக் கிடைக்க வேண்டும்

"என்னது! இளவரசர் ஆக்ராவுக்குப் போகிறீர்களா? இந்தச் சமயத்திலா!'' திகைத்தான் தோழன் பீர்நாராயண்.

''ஆமாம். என்னைத் தடுக்காதே.'' முந்தின இரவு கண்டதையும் கேட்டதையும் விவரித்தான் ஜெய். ''என் ரூபா இன்னேரம் என்ன கதிக்கு ஆளாகியிருக்கிறளோ? நான் வந்து மீட்பேன் என்று துடித்துக்கொண்டிருப்பாள் ஒருவேளை. நான் உடனே போயாக வேண்டும்.''

''போய்?''

''ரூபா உயிருடன் இருந்தால் அவளை எப்பாடு பட்டாவது மீட்டு அழைத்து வருவேன். அவள் இறந்து போயிருந்தால் பழிக்குப் பழி வாங்குவேன். வழி விடு.''

''இளவரசருக்குத் தேசத்தைக் காட்டிலும் காதல் பெரிதாகிவிட்டது!'' கசப்புடன் நகைத்தான் பீர்நாராயண். ''இல்லாவிட்டால் புரட்சி திரண்டு வருகிற இந்த நேரம் பார்த்துத் தலைமையைத் துறந்துவிட்டுச் சொந்த நலனைப் பிரதானமாகக் கருதுவீர்களா!''

''புரட்சி திரண்டு வருகிறதா? என்ன சொல்கிறாய்?'' தடுமாறினான் ஜெய்.

''இப்படி என்னுடன் வாருங்கள்.''

கோட்டைச் சுவர்களை ஒட்டினாற்போலிருந்த குன்றின் பாதையில் ஏறினான் பீர்நாராயண். அவன் எங்கே அழைத்துச் செல்கிறான் என்பது தெரியாமலே பின் தொடர்ந்தான் ஜெய். வழி நெடுக அவர்கள் ஒரு வார்த்தை கூடப் பேசிக் கொள்ளவில்லை.

குன்றின் உச்சியை அடைந்தார்கள் இருவரும். நல்ல பகல் நேரம். ஒரு பாறையின் மீது ஏறி நின்றான் பீர்நாராயண். ''இளவரசர் இங்கேயிருந்து பார்க்க வேண்டும்.''

''நினைவு தெரிந்த நாள் முதலாக இந்த இடத்திலிருந்தபடி சுற்றுப்புற இயற்கையழகைப் பார்த்தவன் தான் நான். ரசித்தவன்தான் ஆனால் இப்போது என் மனம் அதில் ஈடுபட மறுக்கிறது, தோழனே.''

''இயற்கையழகு மட்டுமல்ல. புரட்சியின் அழகும் தெரிகிறது. கூர்ந்து பாருங்கள்.''

தோழன் பேசுவதெல்லாம் புதிராக இருக்கிறதே இன்று? அவனுக்கருகே போய் நின்று கொண்டான் ஜெய். முதலில் அசிரத்தையாகப் பார்த்தான். நான்கு புறத்திலும் மலைப் பாதைகள் தெரிந்தன. ஆனால்... ஆனால்...மலைப் பாம்பு ஊர்வது போல ஏதோ சிறு சலனங்கள்...இல்லை, மனித உருவங்கள் மெல்ல மெல்லத் திருட்டுத்தனமாய் வந்து கொண்டிருக்கின்றன. குதிரைகளின் மீது சில...கால் நடையாகச் சில..பிரமிப்புடன் மறுபுறம் திரும்பினான். அங்கேயும் ஒரு மனித

---




ஒருவன் வாழ்க்கையில் இடறி விழுகிறான்; இன்னொருவன் கொட்டி முழக்குகிறான். ஏன்? வெற்றி அடைந்தவனுக்கும் அடையாதவனுக்கும் உள்ள வித்தியாசங்களில், மிக முக்கியமானது பழக்கம். அறிந்தோ அறியாமலோ வாழ்க்கை நெடுகச் சில பழக்கங்களை நான் ஏற்படுத்திக்கொண்டு விட்டேன். அவை என்னைச் சிறைப்படுத்தி விட்டன. நான் மட்டுமல்ல, எல்லா மனிதர்களுமே சுதந்திரத்தை இழந்து தத்தம் பழக்கங்கள் அமைத்துக் கொடுக்கும் பாதை வழியேதான் சென்று கொண்டிருக்கிறார்கள். ஒருவனது செயல்களைப் பசி, கோபம், விருப்பு, வெறுப்பு, பேராசை, அன்பு, பயம், சூழ்நிலை, பழக்கம் ஆகியவை நிர்ணயிக்கின்றன. ஆனால் அனைத்திலும் சக்தி வாய்ந்தது பழக்கம்

ர்வலம். பிறகு இன்னொரு புறம்... டைசியில் நான்காவது புறம்...நாலு சைகளிலும் ரகசியமாக ஆட்கள் வந்து காண்டிருக்கிறார்கள். அவர்கள் கையில் லும் வேலும் ஈட்டியும்...

"பீர்! இவர்கள்...?"

"நம் தோழர்கள். முகலாய திக்கத்தை எதிர்த்துத் தாங்கள் தாடங்கவிருக்கும் புரட்சிக்காகத் ரண்டு வந்துகொண்டிருப்பவர்கள். தோ மேவார் சிங்கங்கள்...வீர த்தோர்கள்...சலும்பார் புலிகள்... சானிகரா தளபதிகள் ..சித்தூரி ருந்தும், கும்பல்கரிலிருந்தும் மால்வா லிருந்தும் பிகானீரிலிருந்தும்— ஏன், க்காணத்திலிருந்து கூட, சுதந்திரப் தாகைகளை ஏந்திக்கொண்டு ட்டம் கூட்டமாய் நம் தோழர்கள் ருவதைக் காணுங்கள். அக்பரின் ஆட் க்கு ஒருநாளும் கட்டுப்பட மாட்டோம் ன்று ஆர்த்தெழுந்து வந்திருக்கிறார் ள். எதிர்ப்புக்கு முதல் அடையா ாத்தை, புரட்சிக்கு முதல் சின்னத்தை ன்று தாங்கள் தயாரிக்கப் போகிறீர் ள். அதைக் காணுவதற்காக, கண்டு ழுச்சி பெறுவதற்காக இவர்கள் கூடி ருக்கிறார்கள்..."

"புரட்சியின் முதல் அடை யாளம்..."

"ஆம். காதலும் சொந்த ஆசாபாசமும் இளவரசரின் கண்ணை மறைத்து விட்டதால் தெரியவில்லை போலிருக்கிறது. அதோ, மகாதேவர் குகைக்கருகே பாருங்கள்."

ஜெய் பார்த்தான். சிவப்புக் கோளமொன்று தெரிந்தது. "நெருப்பு எரிகிறது?" என்றான் திகைப்புடன்.

"ஆம். அது உலைக் களம். பக்கத்திலேயே பொன்னிறப் பாளங் கள் தெரிகின்றன பாருங்கள். அவை தங்கப் பாளங்கள். கருமான் தயாராய்க் காத்திருக்கிறான். தாங்கள் போய்..." ஜெய்யின் இடுப்பைத் தடவிக் காட்டி னன் பீர்நாராயணன். "ஆக்ரா அரண் மனையிலிருந்து எடுத்து வந்தீர்களே, அதற்கு சந்தர்ப்பம் வந்தாயிற்று இள வரசே! வேளை வந்தாயிற்று—வாளின் முத்தத்துக்கு! இந்த நேரத்தில் தாங் கள் வெளியூர் போவது முடியாத காரி யம். அது ரூப்மதிக்காகவானாலும் சரி!" இளவரசனின் முகத்தைப் பார்த் தான் பீர்நாராயண்.

(தொடரும்)



"இந்த மாட்சுக்கு 'அம்பு' யார்?"

"புரியலையே...?"

"'அம்பையர்'னு சொன்னா ஜாதிப் பேர் வருதேன்னு பார்த் தேன்...!'

—எம். எஸ். ராமச்சந்திரன்

---

என்பதில் ஐயமில்லை. நல்ல பழக்கங்கள் வெற்றிக்குத் திறவுகோல். கெட்ட பழக்கங்கள் தோல்விக்கு ராஜபாட்டை. ஆக, மற்ற எல்லாவற்றிலும் சிறப்பான ரகசியம் இது.நல்ல பழக்கங்களை ஏற்படுத்திக் கொண்டு அவற்றுக்கு அடிமையாக வேண்டும்.

நான் குழந்தைப் பருவத்தில் அவ்வப்போது எழும் உணர்ச்சிகளுக்கு அடிமையாக இருந்தேன். இப்போது பழக்கங்களுக்கு அடிமையாக இருக்கிறேன். பழக்கத்தின் பிடியிலிருந்து எந்த மனிதனும் தப்ப முடியாது. நான் பழக்கத்துக்கு அடிமைப் பட்டு வாழ்க்கை நடத்துவதைத் தவிர வேறு வழியில்லை என்றால், ஏன் நல்ல பழக் கங்களுக்கு அடிமையாக இருக்கலாகாது? கெட்ட பழக்கங்களுக்கு அடிமையாக இருப் பானேன்? முன்னேற்றத்துக்குத் தடையாக இருக்கக் கூடிய கெட்ட பழக்கங்களை மெள்ள மெள்ள அகற்றிவிட்டு, அவற்றுக்குப் பதில் நல்ல பழக்கங்களை ஏன் விதைக்கலாகாது?

இனி நான் நல்ல பழக்கங்களை உருவாக்கிக் கொண்டு அவற்றுக்கு அடிமை யாவேன்.

—ஆக் மாண்டிநோ.




கதைகளில் வரும் பெயர்கள், சம்பவங்கள் அனைத்தும் கற்பனையே. கதை, கட்டுரை முதலிய எதையும் தபால் மூலமே அனுப்ப வேண்டும். அவற்றைத் திருத்தி அமைக்கவும் கடிதங்களைச் சுருக்கவும் ஆசிரியருக்கு உரிமை உண்டு. குமுதம் பிரிண்டர்ஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிட்டவர்: ஏ. பி. ஏ. பெரியகருப்பன், குமுதம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர்: பி. வி. பார்த்தசாரதி. ஆசிரியர்: எஸ். ஏ. பி. அண்ணாமலை.

முகவரி: 151, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை—600 010.



# வாளின் முத்தம்

## 'மோகினி'

## 12

மலைகளிலும் காடுகளிலும் ஓடைகளிலும் ஆறுகளிலும் திரண்டு வந்து கொண்டிருக்கும் கூட்டத்தைக் கண்டான் ஜெய். பிரமித்து வாயடைத்து நின்றான்.

பீர்நாராயண் சொன்னான்: ''புரட்சியின் தொடக்க விழா இன்றைக்கு நடக்கப் போகிறது என்று நாடெங்கும் சிதறிக் கிடக்கும் வீரர்களுக்குச் செய்தியனுப்பியிருந்தேன். வந்து கொண்டிருக்கிறார்கள் திரளாக. திரும்பிப் போகச் சொல்லட்டுமா அவர்களிடம்? அக்பரை எதிர்த்துச் சிம்மநாதம் செய்து கொண்டிருந்த எங்கள் இளவரசர் அந்தப் பேரிகையை ஒதுக்கித் தள்ளி விட்டார், ஒரு பெண்ணின் கால் தண்டையோசையைத் தேடிப் போய் விட்டார், என்று சொல்லி விடட்டுமா அவர்களிடம்?''

இந்தப் புறம் திரண்டு வரும் தொண்டர் கூட்டத்தையும், அந்தப் புறம் ஆக்ராவுக்குச் செல்லும் பாதையையும் மாறி மாறிப் பார்த்தான் ஜெய். மூர்க்கர்களிடம் சிக்கியிருக்கும் ரூப்மதியின் தீனமான கதறல் எங்கோ தொலைவில் கேட்பது போலவே இருந்தது. 'என்னைக் காப்பாற்றுங்கள்! என்னைக் காப்பாற்றுங்கள்!' என்று அவள் அலறுவது போலவே—

''வாருங்கள், போகலாம்.' மரியாதையுடன் ஆனால் பிடிவாதமாக ஜெய்யின் கையை இழுத்தான் பீர் நாராயண். ''ரூப்மதி எங்கும் போய் விடமாட்டாள். பத்திரமாகத் திரும்பி வருவாள். தங்கள் தலைமையில், இப்படி காரியங்கள் நடக்க வேண்டும். புறப்படுங்கள்.''

தயங்கியவாறே தோழனைப் பின் தொடர்ந்தான் ஜெய்.

ஆரவல்லி மலைத் தொடர்.

மூன்று குன்றுகள் சங்கமிக்கும் அடிவாரத்திலே இருந்தது அந்தப் பரந்த சமவெளி. வேலும் வில்லும் ஈட்டியும் தாங்கிய வீரர்கள் திமுதிமுவென்று கூடிக் கொண்டிருந்தார்கள். ஒரு சிலரைத் தவிர அனைவரும் கட்டிளம் காளைகள். முறுக்கி விட்ட மீசையும், வண்ண வண்ணத் தலைப்பாகைகளும், உருண்டு திரண்ட தோள்களும், கலகலப்பான பேச்சுக்களும், யாருடைய ஆயுதத்துக்கு அதிகக் கூர் என்ற விளையாட்டுப் பரிசோதனைகளும்—

மைதானத்தின் நடுவே உலைக்களமொன்று தயாராக இருந்தது. துருத்தியை இயக்கிக் கொண்டிருந்தான் ஒருவன். பொற்கொல்லனொருவன் நெருப்பைக் கிளறிவிட்ட வண்ணமிருந்தான். அருகில் தங்கக் கட்டிகள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. நெருப்பின் ஜ்வாலையில் தங்கத்தின் மஞ்சள் மேலும் மஞ்சளாகத் தகதகத்தது.

''நண்பர்களே! தோழர்களே! மதியிலும் வயதிலும் மூத்த பெரியவர்களே! உங்கள் அனைவருக்கும் இளவரசன் ஜெய்யின் தாழ்மையான வணக்கங்கள்!'' குனிந்து எல்லாத் திசைகளையும் நோக்கிக் கைகூப்பினான் ஜெய்.

''முறையல்ல! முறையல்ல!'' பெரும் முண்டாசு அணிந்த கிழவரொருவர் ஓடி வந்தார் கூட்டத்தை விலக்கிக் கொண்டு. ''சூர்யபூர் ராஜ வம்சத்தைச் சேர்ந்த இளவரசர் எங்களை முதலில் வணங்குவது தகாது! நாங்களல்லவா தங்களை வணங்கி, தங்கள் ஆணைக்குச் சிரம் தாழ்த்த வேண்டும்?''

புன்னகையுடன் அவரை அணைத்துக்கொண்டான் ஜெய். ''இருங்

எட்டுப் பெரியவரே. காலங்கள் மாறி வருகின்றன. இன்று நான் அரசகுலப் பிரதிநிதி என்ற முறையில் இங்கே பேச வரவில்லை. எங்கள் சூர்யபூர் ராஜ்யத்துக்கு ஆபத்து வந்திருப்பது உண்மை தான். ஆனால் உங்களிலே ஒருவன் என்ற முறையில்தான் சில வார்த்தைகள் சொல்லப் போகிறேன். எந்த ஆபத்து என்னுடைய அரண்மனையை நெருங்கிக் கொண்டிருக்கிறதோ அதே ஆபத்து உங்கள் குடிசைகளுக்கும் வருகிறது. என்னுடைய பால்கிண்ணம் பறிக்கப்பட்டால் பரவாயில்லை. ஆனால் உங்கள் கூழ்க் கலம் பறிக்கப்படக் கூடாதே என்று தான் நான் பதைக்கிறேன். என்னுடைய பஞ்சணை சூறையாடப் படட்டும். கவலையில்லை. ஆனால் உங்களுடைய கிழிந்த பாய்க்கு அபாயம் நேரக் கூடாது. அதுதான் எனக்கு லட்சியம். ராஜபுதனத்தின் சிங்கங்களே! ஆயிரம் ஆண்டுகளாக நாம் அனுபவித்துவரும் சுதந்திரம் இன்று சிறிது சிறிதாகப் பலியாகிக் கொண்டு வருகிறது. பார்த்துக் கொண்டுதானே இருக்கிறோம். கீர்த்தி வாய்ந்த அம்பர் ராஜபுத்திரர்கள் இன்று அன்னியருக்கு அடிமை. வீரத்தின் ஊற்றான மேவார் வற்றி மேடாகி விட்டது. கால்வாவும் கொதாரியாவும் சாஞ்சோரும் பிகானீரும் இருந்த இடம் தெரியாமல் மறைந்து கொண்டிருக்கின்றன...''

'த்சு...த்சு...' என்ற அனுதாபச் சூள்கள் காற்றை நிறைத்தன.



கூடியிருந்தவர்கள் அனைவரும் ஒருவர் முகத்தையொருவர் பார்த்துக் கொண்டார்கள். திடீரென்று ஒருவன், ''ஜெய் ஜெய் சூர்யபூர்! ஜெய் ஜெய் மகா தேவ்!'' என்று கோஷம் கொடுத்தான். மறுவினாடி ஆயிரமாயிரம் கண்டங்களிலிருந்து, ''ஜெய் ஜெய் சூர்யபூர்! ஜெய் ஜெய் மகாதேவ்!'' என்று எதிரொலி எழுந்தது.

அந்தக் கோஷங்களும் உணர்ச்சி வெளிப்பாடுகளும் அடங்கட்டும் என்று காத்திருந்தான் ஜெய். நிசப்தம் திரும்பியது. தொடர்ந்தான்.

''யானைகளெல்லாம் பூனைகளாகி விட்ட சரித்திரத்தின் வெட்கக் கேடான வாசலில் நாம் நிற்கிறோம் நண்பர்களே! எண்ணிப் பாருங்கள்! தோடர்மால் அக்பரின் ஆதிக்கத்துக்குத் தோள் கொடுக்கிறார். பகவன்தாஸ் அக்பருக்குப் பல்லக்கு தூக்குகிறார். மான்சிங் அக்பருக்குத் தூக்கம் வர மால்கோஷ் இசைக்கிறார். ராய் புருஷோத்தம் அக்பரின் பஞ்சணையருகே வெண்சாமரம் வீசி நிற்கிறார். ஏன், கூர்த்த மதி வாய்ந்தவர் என்று புகழ்பெற்ற மகேஷ்தாஸ் இன்று அக்பரிடம் பீர்பால் என்று பட்டம் வாங்கிக் கொண்டு, இரண்டொரு ஊர்களை மானியம் பெற்று, அன்னியனுக்குத் தன் மூளையை அடகு வைத்திருக்கிறார்!''

''வெட்கம்! அவமானம்!'' பீறிட்டெழுந்தன கண்டனக் குரல்கள்.

மீண்டும் சில விநாடிகள் மௌனமாயிருந்தான் இளவரசன். பின்னர் சொன்னான்.

''இந்த நிலைமையை மாற்றியமைப்பது, மண்ணின் சுதந்திரத்தைக் கட்டிக் காப்பது, இனி நம் கையிலேதான் இருக்கிறது, நண்பர்களே! ஆட்சியிலிருக்கும் பெரியவர்களை—எங்கள் குடும்பத்தாரையும் சேர்த்துத்தான் சொல்லுகிறேன்— இனிமேல் நம்பிப் பிரயோசனமில்லை. வியர்வையும் ரத்தமும் சிந்துவதற்கு நாம்தான் முன்வர வேண்டும். தயாரா தோழர்களே?''

''தயார்! தயார்!'' விண் அதிர்ந்தது வீர கோஷங்களால்.

''நல்லது! இன்று ஒரு முக்கியமான ஆரம்ப விழா நடக்கப் போகிறது. புரட்சியின் தொடக்க விழா! எதிர்ப்புக்குக் கால்கோள் விழா! அன்னியத் தளைகளை உடைத்தெறிவதற்கு அச்சார விழா...!''

உலைக் களத்தில் கட்டைகள் வெடித்தன. ஜ்வாலைகள் எழும்பின. படைவீரனொருவன் அதைக் கிளறிவிட்டான். படபடவென்று தீப்பொறிகள் பறந்தன.

மூச்சு விடுவதையும் கட்டுப்படுத்திக் கொண்டு பேச்சற்று நின்றது கூட்டம். அத்தனை கண்களும் ஜெய்யின் முகமொன்றையே மொய்த்தன. ஜெய் தலை





தீப்பெட்டி தேடி எடுக்கச் சோம்பல் பட்டுக் கொண்டு ஊதுவத்தி கொளுத்தி வைக்காமல் இருந்ததுண்டா? நுனியில் மருந்து வைத்த ஊதுவத்தி கிராமோத்யோக் பவனில் கிடைக்கிறது.

படத்தில்: பிருந்தா, மகாலட்சுமி.

---

நிமிர்ந்து நின்றான். அவன் விழிகள் பளபளத்தன. தோள்கள் புடைத்து நின்றன. மார்பு விம்மியது பெருமிதத்தினால்.

குரலை உயர்த்தி அவன் கூறினான்:

''என்ன அது அப்பேர்ப்பட்ட விழா என்று நீங்கள் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருப்பீர்கள் தோழர்களே! நான் சொல்லப் போவது ஏறத்தாழ நூறாண்டுகளுக்கு முன்பு நடந்த சரித்திரம். அக்பருக்குப் பாட்டனாரான பேபர் ராஜஸ்தானத்தைச் சூறையாடிக் கொண்டிருந்த காலம். அந்தப் பேய்க் காற்றுக்கு நமது சூர்யபூரும் தப்பவில்லை. அரண்மனை கஜானாவிலிருந்து பொன்னும் மணியும் கொள்ளை கொண்டு போகப்பட்டன. எவ்வளவோ ஒப்பற்ற பட்டாடைகளும் ஆபரணங்களும் சூறையாடப்பட்டன. ஆனால் எல்லாவற்றையும் காட்டிலும் ஒப்புயர்வற்ற பொருள் அன்று சூர்யபூரிலிருந்து கொண்டு செல்லப்பட்டது. அது பேபரிடமிருந்து ஹுமாயூனுக்கும் ஹுமாயூனிடமிருந்து அக்பருக்கும் கைமாறிச் சென்றதே தவிர, சூர்யபூருக்குத் திரும்பி வரவேயில்லை. அதை ஆக்ராவிலிருந்து மீட்டு எடுத்து வரும் பெரும் பாக்கியம் இந்த எளியவனுக்குக் கிடைத்தது. அன்று முதல் அதை என் உடம்பிலே ஓர் உறுப்புப் போல வைத்துப் பாதுகாத்து வந்திருக்கிறேன்—இன்றைய விழாவுக்காக.''

எங்கோ ஒரு குதிரை கனைத்தது. ஓர் ஒட்டகம் கழுத்தை உயர்த்திப் பார்த்தது. மற்றபடி சிறு சலனம்—சிறு சப்தம்— எதுவுமே இல்லை.

ஜெய் வெளியே எடுக்கப் போவதையே கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தார்கள் அவர்கள்.

அவன் எடுத்தான். ''இதோ.''

ஆ ஆ என்ற அரவங்கள் எட்டுத் திசையிலிருந்தும் புறப்பட, பீர்நாராயணனும் ஜெய்யின் நெருங்கிய சகாக்களும் பெருமையுடன் புன்னகைக்க, எட்டியிருந்தவர்கள் கையை நீட்ட, அதற்கடுத்த வரிசையிலிருந்தவர்கள் முண்டி முன்னேவர—

''அமைதி! அமைதி!'' கையமர்த்தினான் ஜெய். ''ஒரு கைம்

பிடிக்குள் அடங்கக் கூடிய சின்னப் பொருள்தான் இது. மரத்திலே செய்யப் பட்டது. ஒவ்வொருவராகப் பார்த்து அடுத்தவரிடம் கொடுங்கள். ஆனால் பத்திரம்!''

அவர்கள் பயபக்தியுடன் வாங்கிக் கொண்டார்கள். பார்த்தார்கள்.

அது ஒரு மர அச்சு. சதுர வடிவமான கட்டை. அதன் ஒரே ஒரு பக்கத்தில் மட்டும் சித்திர வேலைப் பாடு செதுக்கப்பட்டிருந்தது.

அந்தச் சித்திரத்தில் இரண்டு வாள்கள் எதிரெதிராக உயர்ந்தெழும்பி நின்று கொண்டிருந்தன. அவற்றின் நுனிகள் ஒன்றையொன்று முத்தமிடுவது போல் தொட்டுக் கொண்டிருந்தன.

செதுக்குச் சித்திரத்தின் கீழ்ப் புறத்தில், திரும்பின எழுத்துக்களாக வட மொழியில் 'வாளின் முத்தம்' என்று பொறிக்கப்பட்டிருந்தது. அதே போல் அதன் கீழே 'சூர்யபூர்' என்றும் காணப்பட்டது.

கூட்டத்தில் பரபரப்பு அலை மோதியது. சிலர் அதைக் கண்களில் ஒற்றிக் கொண்டார்கள். சிலர் அதைத் தலைமீது வைத்துக் கொண்டார்கள். சிலர் அதை முத்தமிட்டார்கள். சளசள வென்று பேச்சுக்கள். விவாதங்கள். விளக்கங்கள். வெகு நேரம் கழித்தே அவன் கைக்கு அந்த அச்சு திரும்பியது.

65-ம் பக்க விடை



11'ம் எண் மாணவி ரேணுகாதான் எஸ். ஐ. இ. டி. கல்லூரி மாணவி.

வண்ணப்படம்: உத்ரா.

ஜெய் உரத்த குரலில் சொன்னான். ''நண்பர்களே! இது என்ன வென்று உங்களுக்குப் புரிந்திருக்கும். நாணயம் அச்சடிக்கும் அச்சு. வாளின் முத்தம் என்ற பெயருள்ள இந்தத் தங்க நாணயத்தை சூர்யபூர் முன்பு வெளி யிட்டு வந்தது. ஒரு ராஜ்யத்தின் தனித் தன்மைக்கும் சுதந்திரத்துக்கும் இது தான் சின்னம். பேபர் இந்த அச்சை மட்டும் பறிக்கவில்லை. நாணயம் போடும் உரிமையையும் பறித்துக் கொண்டார். ஆம், நண்பர்களே! உங்களுக்குத் தெரி யும்—அன்று முதல் இன்று வரை ராஜபுதனத்தில் எந்த ராஜ்யத்துக்கும் சொந்த நாணயம் அச்சிட்டுக் கொள்ளும் உரிமை கிடையாது. டெல்லி பாதுஷா என்ன நாணயம் வழங்குகிறாரோ அது தான் ராஜபுதனம் முழுதும் செல்லும், மற்ற எந்த நாணயமும் செல்லாது!''

''வெட்கம்! வெட்கம்!'' குரலெழுப்பினார்கள் கூட்டத்தினர்.

''இந்த நாணயத் தடைக்கு அடங்கியே வந்திருக்கின்றன ராஜ புதனத்து ராஜவம்சங்கள்.'' தொடர்ந் தான் ஜெய். ''அதை இன்று உடைத் தெறிவது என்று முடிவு செய்திருக் கிறோம் எனது தோழர்களும் நானும்.''

''ஜெய் ஜெய் சூர்யபூர்! வெல்க வெல்க, இளவரசர் வெல்க!'' உற்சாகம் வானை முட்டியது. முஷ்டியை உயர்த்திய கூட்டத்தினர் தங்கள் ஆமோ திப்பையும் ஆதரவையும் கோலாகல மாக வெளிப்படுத்தினார்கள்.

''நன்றி நண்பர்களே!'' என்றான் ஜெய். ''சூர்யபூரின் தங்க நாணயம், வாளின் முத்தம்— இன்று அச்சடிக்கப் போகிறோம் வெகு காலத் துக்குப் பிறகு. அக்பரை எதிர்த்து ராஜ புதனம் ஆர்த்தெழுந்து விட்டது என் பதற்கு இது முதல் அறிகுறி! எதிரி யின் கோட்டையிலே வீசப்படும் முதல் வெடி குண்டு இது. பெரும் போர் களுக்கும் சாவுகளுக்கும் தியாகங்களுக் கும் தழும்புகளுக்கும் துன்பங்களுக் கும் இன்னல்களுக்கும் ஆரம்ப நாள் இது. அதற்கெல்லாம் தயார் என்று நீங்கள் சம்மதம் அளித்தால் சுதந்திர கீதத்தின் முதல் வரிகளை இப்போதே இசைக்கலாம்...''

''சம்மதம்! சம்மதம்!'' அவ் வளவு ஆயிரம் குரல்களும் ஓரே குர லாக ஒலித்தன.

ஜெய்யின் கண்கள் பனித்
ன, அந்த ஒற்றுமையின் உறுதியைக்
ண்டு. ''மகிழ்ச்சி! மகிழ்ச்சி!'' என்
ன். நண்பன் பீர்நாராயண் பக்கம்
நம்பினான். ''ஆரம்பிக்கலாம்,'' என்று
னுமதி கொடுத்தான்.

தீக் கங்குகள் மீண்டும் கிண்டி
டப்பட்டன. கூடியிருந்தோரின் ஆவே
த்தைப் போல அக்கினி சீறிச் சிவந்
து. உலைக்களத்தைச் சுற்றி ஒரு
ன் பூக்களை வாரியிறைத்தான். இன்
னொருவன் சம்மட்டிக்குக் குங்குமம்
வத்தான். மற்றொருவன் வாளின்
த்தம் மர அச்சுக்குச் சந்தனம் பூசித்
பம் காட்டினான். ஒரு கிழவர் முன்
ந்து சில சுலோகங்களைச் சொல்லி
ட்டுக் கும்பிட்டு நகர்ந்தார்.

பொற்கொல்லனின் உதவி
ள் தங்கப் பாளங்களில் ஒன்றை
நெருப்பில் போட்டு வாட்டிக்கொண்டே
ருந்தான். பாறைகளின் மீதும் குன்று
ளின் மீதும் மரங்களின் மீதும் வீரர்
ருக் கூட்டம் விழியசையாமல் பார்த்
க் கொண்டு நின்றது. தங்கப் பாளம்
ளகிப் போய்ப் பாகாய் உருகியதும்
க்கியால் அதை எடுத்து இரும்
க் கட்டையின் மீது வைத்தான்
ருவன். தங்கப் பாகின்மேல் மர
அச்சை வைத்தான் இன்னொருவன்.
பொற்கொல்லன் தன் சம்மட்டியை
ங்கினான். ஒரே அடி. தங்கத்தில் வாளின்
த்தம் பதிந்திருக்கும். நாணயம்
தயாராகியிருக்கும்—

அந்த வேளையில்—

யாரோ கூட்டத்தை முண்
டிப் பிளந்து கொண்டு வரும் பரபரப்பு
கேட்டது. ''வழி விடுங்கள்! வழி, வழி!
நான் இளவரசரைப் பார்க்க வேண்டும்!''
ன்று—

ஒரு பெண் குரல்.

ஓங்கிய கை ஓங்கியபடி
இருக்க, பொற்கொல்லன் நின்றான்.

''என்ன அங்கே? யாரது?''
திரும்பினான் ஜெய். திகைத்தான். அவன்
காண்பது உண்மைதானா? அல்லது
நினைத்து நினைத்து, நினைத்து நினைத்து.
மனம் கற்பனை செய்து கொள்கிற
பிரமையா!

''ரூபா!'' கூவி விட்டான்.
தான் இருக்கும் சூழ்நிலையையும் மறந்தவ
னாக. பாய்ந்தோடி அவளை இரு கைக
ளாலும் மார்புறத் தழுவிக் கொண்டு



பிரிட்டிஷ் பிரதமர் தாட்சர்

விட்டான். மறு கணம்தான் அந்தச்
செய்கையின் அவசரத்தை உணர்ந்
தான். சற்றே விலகிக் கொண்டான்.
குரலைக் கம்பீரமாக்கிக் கொண்டான்.
''பெண்ணே! இது முழுக்க முழுக்க
ஆண்களின் விழா. எந்தப் பெண்ணை
யும் இங்கே அனுமதிப்பதற்கில்லை...''

ரூபா அதைக் காதிலேயே
வாங்கிக் கொள்ளவில்லை. ''இளவரசே!
தயவு பண்ணி ஒரு விநாடி எனக்குக்
கொடுங்கள். தங்களிடம் தனியாக...''

''அப்பால் போய்க் கொஞ்ச
நேரம் காத்திரு. இந்த விழா முடிந்த
பிறகு...''

''இந்த விழாவைப் பற்றித்
தான் இளவரசே தங்களுடன் பேச
வேண்டும்—அந்தரங்கமாக, முக்கியமாக.
தயவு பண்ணுங்கள், தயவு பண்ணுங்
கள் இளவரசே!'' அவள் அவன் கைகளை
இறுகப் பிடித்துக் கொண்டு கெஞ்சி
னாள்.

பீர்நாராயணைப் பார்த்தான்
ஜெய்.

''இரண்டொரு விநாடிகளில்
என்ன ஆகிவிடப் போகிறது! இளவர
சர் கேட்டுவிட்டே வரலாம்.'' அனு
மதித்தான் தோழன்.

வேகமாக அவளை இழுத்துக்
கொண்டு கூட்டத்துக்கு வெளியே சென்
றான் ஜெய். ''ரூபா என்ன விஷயம்?
சீக்கிரம் சொல்லு. என் தோழர்கள்
காத்துக்கொண்டிருக்கிறார்கள்!''

(தொடரும்)

# எங்கே அந்த ஆட்டக் காரணம்?

வெற்றிப் பெருமிதத்தில் தலையங்கம் ஆர்ப்பாட்டமாக எழுதுவீர் என்று எதிர்பார்த்தேன். அடக்கத்தோடு எழுதித் தலையங்கத்துக்குப் பெருமை சேர்த்து விட்டீர்.

திருப்பத்தூர்
க. உ. சிவகுமார்

தஞ்சையின் வெற்றிக்கு காரணம் அ. தி. மு.க.வா, காங்கிரசா என்று சிலர் எடை போடுவதாகத் தலையங்கத்தில் கூறிவிட்டு, நாகையிலும் இந்திரா காந்தி பிரசாரம் செய்திருந்தால் அ. தி. மு. க. வெற்றி பெற்றிருக்குமோ என்று கூறியிருப்பதின் மூலம் பிள்ளையையும் கிள்ளித் தொட்டிலையும் ஆட்டும் தங்களது பணியைத் தொடர்ந்திருக்கிறீர்கள்.

சுந்தரபாண்டியபுரம் எஸ்.
சுப்பிரமணியன்

தஞ்சை மட்டுமே இந்தியா என நினைத்துக் கொண்டு தலைகால் புரியாமல் கூத்தாடும் உங்களைப்போன்ற ஞானசூன்யங்கள் இருக்கும் வரை இந்தியாவுக்குச் சத்தியமாக எதிர்காலம் இல்லை.

அனஞ்சனூர் ஞானமூர்த்தி

ஜெயமாலினி எங்கே?

சென்ற இதழைப் படித்ததும் பிரமிப்பாயிருந்தது. ஜெயமாலியின் பாணியில் நடைபோடும் குமுதமா, முழுமையான முத்தான, சத்தான, கதைகளை வெளியிட்டுத்தன் மதிப்பை உயர்த்தியிருக்கிறது!

மன்னார்குடி சரஸ்வதி இராசேந்திரன்

'வாங்க மாமி,வாங்க மாமா' மிக அபத்தமாயும், பெண்களை இழிவு படுத்துவதாயும் உள்ளது. வீட்டில் அம்மா உள்ளபோது, வந்தவர்கள் முன், தேவையில்லாமல், புடவை கட்டாமல் ஒருத்தி உபசாரம் பண்ணுவதும், மறுநாள் 'மாமாவின் பார்வை' யைக் குறை சொல்வதும் மட்டமான கற்பனை.

ஈரோடு சியாமளா ஜெயபாலன்

மயூரத்தை மறக்கலாமா?

தங்கள் 28—6—79 'குமுதம்' இதழ் அட்டைப்பட விளக்கத்தில், 'சுவேகா', 'லூனா' 'டார்ட்' பிராண்டுகள்தான் மோபெட்களில் புகழ்பெற்றவை என்று குறிப்பிட்டுள்ளீர்கள். இங்கே உள்ளூரிலேயே (சென்னை கிண்டியில்) அரசு நிறுவனத்தில் தயாராகும் எங்கள் 'மயூரம்' மோபெட்களை மறந்து விட்டீர்களே?

சென்னை—32 கே. ஜே. ராமசேஷன்

அங்கே என்ன வாழுதாம்?

நாடகம் உலகம் டல்லடிக்கிறதா? என்று கேட்டிருக்கிறீர்கள். உம் பத்திரிகைதான் டல்லடிக்கிறது.

நாகப்பட்டினம் இரா. இரவீந்திரன்

பழைய குருடி?

'முகத்தில் முகம் பார்க்கலாம்' விமரிசனத்தின் படங்களில் 'பழைய குருடி கதவை திறடி' என்று பழைய நிலைமைக்கு மாறியது ஏனோ?

சென்னை—5 ராமன்

கதைகளில் வரும் பெயர்கள், சம்பவங்கள் அனைத்தும் கற்பனையே. கதை, கட்டுரை முதலிய எதையும் தபால் மூலமே அனுப்ப வேண்டும். அவற்றைத் திருத்தி அமைக்கவும் கடிதங்களைச் சுருக்கவும் ஆசிரியருக்கு உரிமை உண்டு. குமுதம் பிரிண்டர்ஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிட்டவர்: ஏ. பி. ஏ. பெரியகருப்பன். குமுதம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர்: பி.வி. பார்த்தசாரதி. ஆசிரியர்: எஸ். ஏ. பி. அண்ணாமலை.
முகவரி: 151, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை—600 010.

# வாளின் முத்தம்

## 13

“சீக்கிரம் சொல்லு! நான் போக வேண்டும்,” என்று ஜெய் பதைத்தானே தவிர, ரூப்மதியைப் பார்த்ததில் அளவற்ற ஆனந்தமும் ஏற்பட்டது அவனுக்கு. அவளை உயிரோடு பார்க்கவே முடியாது என்றல்லவா நினைத்திருந்தான்!

“ரூபா! என் ரூபா!” அவளை மார்போடு அணைத்துக் கொண்டு நெற்றியில் அழுந்த முத்தமிட்டான். “அதோ அங்கே எதற்கு ஆயத்தம் நடக்கிறது தெரியுமா, கண்ணே? உன்னைத் தூக்கிச் சென்றார்களே, அந்த அக்கிரமக்காரர்களுக்குப் பாடம் கற்பிக்கத்தான்! நமது சுதந்திர உணர்வுக்கு முதல் அடையாளமாக நாணயம் அச்சிடப் போகிறோம்! சூர்யபூரின் புராதனத் தங்க நாணயமான வாளின் முத்தம் முதல் தடவையாக இன்று வெளிவரப் போகிறது! ஆயிரம் ஆயிரமாக ராஜபுதன வீரர்கள் திரண்டிருப்பது இந்தச் சுதந்திரத் திருவிழாவைப் பார்க்கத்தான். வா, எல்லாரும் காத்திருக்கிறார்கள். அப்புறம் பேசிக் கொள்ளலாம் மற்றதெல்லாம்.”

ரூப்மதி அவசரமாகச் சொன்னாள்: “எந்தச் சுதந்திர விழாவும் வேண்டியதில்லை என்பதைச் சொல்லத்தான் ஓடோடி வந்திருக்கிறேன், இளவரசே!”

“என்னது?”

“ஆமாம், இளவரசே! அக்பர் சக்கரவர்த்தி ”

“ஓ! நீ இன்னும் அந்தப் பழைய மயக்கத்திலேதான் இருக்கிறாயா?” எகத்தாளமாக நகைத்தான் ஜெய். “உன்னைக் கடத்திக் கொண்டு போனவர்களிடம் உனக்கு வெறுப்பு ஏற்படுமென்று நினைத்தேன். நீ பேசுவதைப் பார்த்தால் ஏகப்பட்ட உபசாரம் போலிருக்கிறது அங்கே!”

“முரட்டுத்தனமாகத் தூக்கிச் சென்றார்களே தவிர, அக்பரின் அரண்மனையில் நான் வெகு கௌரவமாக நடத்தப்பட்டேன்,” என்றாள் அவள். “உங்களுக்கு என் மூலம் ஒரு செய்தி அனுப்ப வேண்டுமென்பது தான் அக்பர் விருப்பம்.”

“ஓ! தூது வந்திருக்கிறாயா? என்ன சொல்லு. தாமதிக்க நேரமில்லை.”

ரூப்மதி கூறினாள்:

“நீங்கள் எவ்விதமான புரட்சியும் கிளர்ச்சியும் தொடங்கத் தேவையில்லை என்று அக்பர் சொல்லியனுப்பியிருக்கிறார். சூர்யபூரிலும் நாகர்கோட்டிலும் இன்னும் இந்தப் பகுதியிலுள்ள ராஜ்யங்களிலும் அவர் தலையிடப் போவதில்லையாம். ஆனால் அதை அவர் இப்போது பிரகடனமாக வெளியிட முடியாமல் இருக்கிறது. அவர் தம்பி முகம்மது ஹக்கீமின் தலைமையில் காபூலிலும் லாகூரிலும் ரகசியக் கலகங்கள் நடந்து கொண்டிருக்கும் நேரம் இது. குறிப்பிட்ட சில ராஜ்யங்களைச் சுதந்திரமாகச் செயல்படும்படி விட்டுவிடப் போகிறேன் என்று அக்பர் இச்சமயம் அறிவித்தால் கலகக்காரர்கள் வேறு சிலரைத் தூண்டிவிட வசதியாகிவிடும். ஆகவே இன்னும் மூன்று மாத காலம் பொறுமையாக இருந்தால் நிச்சயமாய் ஆக்ராவிலிருந்து அதிகார பூர்வமான பிரகடனம் வரும்.....”

குறுக்கிட்டான் ஜெய். “உ



ஆமாம், இளையராஜா தான் ஆர்மோனியம் வாசிக்கிறார். பக்கத்தில் அமர்ந்து தபேலா வாசிப்பவர் மூத்த சகோதரர் பாஸ்கர். கிட்டார் இசைப்பவர் தம்பி கங்கை அமரன்.

சிவப்பு ரோஜா ஷூட்டிங் மெரீனா கடற்கரையில் நடந்த போது, கொஞ்சம் ஓய்வு நேரம் கிடைத்தது. அப்போது எடுக்கப்பட்ட படம் இது.

கங்கை அமரன் விவரித்தார்: ''எங்களுக்குச் சொந்த ஊர் மதுரை மாவட்டத்திலுள்ள பண்ணைப்புரம். உத்தமபாளையத்துக்கு அருகில் உள்ளது.

சென்னைக்கு வந்து எப்படியாகிலும் பிழைத்துக் கொள்ளலாம் என்று நாங்கள் மூன்று பேரும் கிளம்பினோம். எங்கள் பக்கத்து ஊரான அல்லி நகரத்துவாசியான பாரதிராஜா சென்னையில் இருந்தார். அவர் தங்கியிருந்த சிறிய அறையில் நாங்கள் விருந்தினராக நுழைந்தோம்.

பிற்பகல் ஒரு வேளை சாப்பாடுதான் கிடைக்கும். நான்கு பேர்களும் பகிர்ந்து சாப்பிடுவோம்: மாறி, மாறிப் பாத்திரங்களைக் கழுவி வைப்போம். குளிக்கக்கூடத் தண்ணீர் இல்லாத இடத்தில் குடியிருந்தோம்.

'அன்னக்கிளி' கை கொடுத்தது. சகோதரர்கள் மூவருக்கும் இப்போது திருமணம் ஆகி மனைவி மக்களுடன் வசதியாகக் குடும்பம் நடத்துகிறோம்.

''ஒரு பிழைப்பும் கிடைக்காமற் போயிருந்தால் கூட, கடற்கரையில் கச்சேரி செய்தாவது காசு சம்பாதிக்கலாம் என்கிற எண்ணமும் தன்னம்பிக்கையும் இருந்தது. அந்த மாதிரி ஒரு காட்சியை நினைவில் கொண்டு இந்தப் படத்தை எடுக்கச் செய்தோம்.''

வண்ணப் படம்: ரவி-சுபா

பேருரைக்கு மிக்க நன்றி ரூப்மதி. ஆனால் ராஜபுதனம் எந்த அன்னியனது பிச்சைக்காகவும் மடியேந்திக் கொண்டிருக்கவில்லை.''

திரும்பவிருந்தவனை வழி மறித்தாள் அவள். ''இது பிச்சையல்ல. சுதந்திரப் போர் என்கிற பெயரால் தேவையில்லாமல் ரத்த வெள்ளம் பெருக வேண்டாமே என்ற பகுத்தறிவு...''

''வழியை விடு.'' பலவந்தமாக அவளை விலக்கிக் கொண்டு நடந்தான் அவன்.

பின்னாலேயே வந்தாள் அவள், ''அக்பர் எனக்குப் பொன்னும் மணியும் பட்டாடைகளும் பரிசு கொடுத்தனுப்புவதாகச் சொன்னார். அதனால்தான் நான் மனம் மாறினேன் என்று தாங்கள் எண்ணிவிடுவீர்களோ என்று பயந்து எதுவும் வேண்டாமென்று மறுத்துவிட்டேன்...''

''ஓ! என்ன தியாகம்!'' என்றான் ஜெய் கேலியாக.

''கேளுங்கள் தயவு பண்ணி நான் சொல்வதை.'' உதற உதற அவன் கைகளை மீண்டும் மீண்டும் பிடித்துக் கொண்டாள்.

பீர்நாராயண் வந்தான்.

''எல்லாரும் காத்திருக்கிறார்கள், இளவரசே. இருட்டும் சமயமாகி விட்டது.'' அருகில் வரலாமோ கூடாதோ என்று தயங்குபவன் போல எட்டத்தில் இருந்தபடியே சொன்னான். ஆனால் அவர்களிருவரும் நின்றிருந்த நிலை அவனுக்குச் சந்தேகம் ஏற்படுத்தியது. அவள் ஏதோ மன்றாடுகிறாள் என்பதையும் அவன் அதற்கு இணங்கத் தயாராயில்லை என்பதையும் ஒரு நொடியில் புரிந்து கொண்டான்.

''ஒன்றுமில்லை, தோழனே. ஒரு விசித்திரமான வேண்டுகோள் வந்திருக்கிறது என் காதலியிடமிருந்து.'' பீர்நாராயணைப் பார்த்துச் சிரித்தபடி தெரிவித்தான் ஜெய்.

தோழனின் கண்களில் அவநம்பிக்கையும் அச்சமும் வெளிப்பட்டன. தயங்கித் தயங்கி அருகில் வந்தான்: ''என்ன...''

''நமது நாணயப் புரட்சியெல்லாம் வேண்டாமாம்.''



"பின்னே?"

"அக்பர்—மன்னிக்க வேண்டும். ஷா இன்ஷா சக்கரவர்த்தி அக்பர் — எல்லாவற்றையும் சமாதான மாகவே தீர்த்துக் கொள்ள விரும்புகிறாராம். சூரியபூரின் சுதந்திரத்தில் அவர் குறுக்கிடப் போவதில்லையாம். எப்படி?"

"நம்பி விடாதீர்கள், இளவரசே! நம்பி விடாதீர்கள்!" ஜெய்யின் இரண்டு கைகளையும் சேர்த்துப் பிடித்துக் கொண்டு கெஞ்சினான் பீர் நாராயண்.

"நம்பமாட்டேன் தோழனே! கவலைப்படாதே!" நண்பனின் தோளில் கை வைத்துக் கொண்டு சொன்னான் ஜெய். "பாம்பிடம் விஷமில்லை என்றாலும் நம்புவேன். சிறுத்தையிடம் நகமில்லை என்றாலும் நம்புவேன். எரிமலையில் தீ இல்லையென்றாலும் நம்புவேன். அக்பரின் உள்ளத்திலே பகைமை இல்லை என்று மட்டும் ஒரு நாளும் நம்ப மாட்டேன்!"

ஜெய்யின் கைகளைப் பிடித்துக் கண்களில் ஒற்றிக் கொண்டான் பீர்நாராயண். "மேலும் இங்கே தாமதிக்க வேண்டாம். வாருங்கள், போகலாம்."

ரூப்மதிக்குக் கோபம் வந்தது. பீர்நாராயணனின் முன்னே போய் நின்று கொண்டாள். "இது வெறுமே ஓர் இளவரசருக்கும் அவருடைய பிரஜைக்கும் நடக்கிற பேச்சல்ல. கணவனுக்கும் மனைவிக்கும் நடக்கிற பேச்சு. அதில் தலையிட உங்களுக்கு உரிமை கிடையாது. தள்ளிப் போங்கள். என் கணவரைச் சற்றும் பொறுத்து அனுப்பி வைக்கிறேன்."

ஜெய் திடுக்கிட்டுப் போய் அவளைப் பார்த்தான். பீர்நாராயணே அந்த உறுதியின் வெப்பத்தைத் தாங்க மாட்டாதவனாகத் தலைகுனிந்து கொண்டு வெளியேறினான்.

ஜெய்யின் குரலில் குழப்பம் தெரிந்தது. "என்ன...புதிதாக என்னவெல்லாமோ சொல்கிறாய்?"

# கலையா மையழகிலே-நின்
# கலையழகு பேசுதடி கண்ணம்மா!




மான் என்பார், விண் மீன் என்பார் மையுண்ட விழிகளினை. கண்மை தீட்டப் போய் கரி பூசுவீரோ உமது கட்டழகு முகத்திற்கு! கண்ட கண்ட கண்மைகளால் விளையும் வினை அது. உமக்குத்தேவை சிங்கார் டிலக்ஸ் காஜல். இரண்டு அல்லது மூன்று முறை அதை விரலால் தேயுங்கள். விரல் பட்டுக் குழையும்; எடுங்கள் விரல் நுனியிலே ஓர் இழை...
இடுங்கள் இமையின் உள்ளும் புறமும் இலேசாக சிங்கார் டிலக்ஸ்—தீட்டியதும் சுடர் விடுமே உங்கள் திருவிழிகள். சித்திரக் கண்களுக்கு சிதையாத முத்திரை: சிங்கார் டிலக்ஸ் காஜல்...கலையா ஒவியக் கலையழகு கண்களுக்கு. பிஞ்சு விழிகளுக்கும் கொஞ்சும் எழில்...
சிங்கார் டிலக்ஸ் காஜல் (கண்மை)

## Ⓢ சிங்கார்
## டிலக்ஸ் காஜல்
## (கண்மை)

**கண்மலரும் தனிப் படைப்பு**
**தென்னகத்துப் பெண்களுக்கு**

everest/79/SH/117-tm

இடுப்பிலிருந்து ஒரு மஞ்சள் கயிற்றை எடுத்தாள் அவள். ''தயாராகக் கொண்டு வந்திருக்கிறேன். மங்கல சூத்திரத்தை என் கழுத்திலே அணிவியுங்கள்.''

''ரூபா!''

''சீக்கிரம்! வாளின் முத்தம் நாணயத்தை அச்சிடுவதற்காக இன்று நல்ல நாளும் நல்ல முகூர்த்தமும் பார்த்திருக்கிறீர்கள். இந்த முகூர்த்தத்திலேயே நான் சூரியபூர் இளவரசரின் வீர பத்தினியாக ஆகிறேன்.''

அவன் அவள் கையிலிருந்து மங்கல நாணை வாங்கிக் கொண்டான். தூரத்தில் தாரை ஒலித்தது. கொம்புகள் ஊதப்பட்டன. அவர்களின் திருமணத்துக்கு வாழ்த்துக் கூறுவதுபோல எங்கோ தொலைவில் வாத்தியங்கள் முழங்கின.

அவள் அவன் கால்களில் வீழ்ந்து வணங்கினாள். எழுந்தாள். ''என்னிடமுள்ள இன்னொரு பொருளையும் தங்களுக்குக் காட்டவேண்டும்.''

இடுப்பின் மறுபுறத்திலிருந்து வெளியெடுத்தாள் ஒரு பிச்சுவாவை.

''ரூபா...என்ன இது...''

''வெறும் பிச்சுவா அல்ல—முனையிலே விஷம் தோய்த்த பிச்சுவா.'' அவள் சோகமாகப் புன்னகை செய்தாள். ''அக்பரிடம் வாக்குக் கொடுத்து விட்டுத்தான் வந்தேன், இளவரசே!''

''என்னவென்று?''

''தங்களை நம்ப வைப்பேன் என்றேன். போர் எதிலும் தாங்கள் இறங்காத வண்ணம் பார்த்துக் கொள்வேன் என்றேன். அந்த முயற்சி பலிக்கவில்லை என்றால் என் உயிரை மாய்த்துக் கொள்வேன் என்றேன்.''

''ரூபா!''

''ஆனால் அவரிடம் சொல்லாததும் ஒன்று உண்டு. தங்கள் திருக்கரத்தால் தாலி கட்டிக் கொண்டு, தங்கள் பத்தினியாக ஒரு கணமேனும் வாழ்ந்த பிறகுதான் இறப்பேனென்பதை அவரிடம் சொல்லவில்லை. இனி—''

அவளுடைய கையைத் தட்டி விட்டான் ஜெய். பிச்சுவா ஒரு பாறையின் பின்னால் போய் விழுந்தது. கடகடவென்று உருண்டு மறைந்தது.

**38'ம் பக்க விடை**

1. 

2. 

3. 7 கோழிகள் 28 முட்டை இடும்.

4. அ) பிப்ரவரி ஸ்பெல்லிங் தப்பு, ஆ) இரண்டு வரிசையில் ஞாயிறு இருக்கிறது. இ) வாரத்துக்கு 8 நாளிருக்கிறது. ஈ) வாஷிங்டனின் பிறந்த நாளும் லிங்கனின் பிறந்த நாளும் இடம் மாறியுள்ளன. உ) 19'ம் தேதி இரண்டு இடத்தில் உள்ளது. ஊ) 1980 லீப் ஆண்டு. 29 நாள் இருக்க வேண்டும்.

5. இரண்டு கோடுகளும் ஒரே நீளம்.

---

''பிச்சுவா இல்லாவிட்டால் என்ன? வெள்ளமாக ஓடுகிறது பனாஸ் நதி. ஆரவல்லி மலையில் எத்தனையோ கிடுகிடு சிகரங்கள் இருக்கின்றன. காட்டுக்குக் காடு மரக் கிளைகள் ஆயிரக் கணக்கில் வளர்ந்திருக்கின்றன. மூலைக்கு மூலை விஷ மூலிகைகள் முளைத்திருக்கின்றன...''

''ரூபா! நீ என்னை நிர்ப்பந்தப் படுத்துகிறாய். எனக்கு உன் மீதுள்ள காதலையும் அன்பையும் பணயமாக வைத்து விளையாடுகிறாய். இது நேர்மையில்லை ரூபா! நியாயமும் இல்லை.''

''எனக்கு வேறு வழியில்லை இளவரசே. இவ்வளவு சொல்லியும் என்னை நம்ப மறுக்கிறீர்களே!''

''மறுப்பதும் மறுக்காததும் என் இஷ்டமல்ல, ரூபா. இது ஒ காதலன் தன் காதலிக்குக் கொடுக்கி பரிசு அல்ல. ஒரு புருஷன் தன் பத் னிக்குக் கொடுக்கிற அன்பளிப்பு அல்ல. தேசத்தின் கௌரவம், லட்ச கணக்கான மக்களின் தன்மானம் —அதை எப்படி உனக்காக நான் ப கொடுக்க முடியும்? அதோ உற்று கேள். ஆரவாரம் கேட்கிறதா? அவ களுடைய பிரசினை! அவர்களுடை சொந்த விஷயம்!''

அவள் ஒரு முடிவுக்கு வ தாள். ''சரி, நானே அவர்களிட

## தமிழ் நாடக உலகம் 'டல்' அடிக்கிறதா?



கே. ஆர். கோபாலன்

தமிழ் நாடகத் துறையின் தற்போதைய 'டல்' நிலைமைக்கு சபாக்களைக் காரணம் காட்டுகிறார்கள்.

எந்தச் சபாவின் வரவு செலவு கணக்கை எடுத்துப் பார்த்தாலும், அதன் செலவில் மூன்றில்இரண்டு பங்கு, தியேட்டர் வாடகைக்கும், விளம்பரங்களுக்குமே சென்று விடுகிறது. கலைஞர்களுக்கு அளிக்கப்பட வேண்டியது மிஞ்சுவதிலிருந்துதான் என்ற நிலைமை.

தியேட்டரின் வாடகை குறைந்தால் சபாக்களுக்குப் பெரிய ஆறுதலாக இருக்கும்.

ஹிந்து போன்ற பத்திரிகைகள், நாடக விளம்பரங்களுக்கென்று தனிச் சலுகை கொடுத்தால் உதவியாக இருக்கும் (சினிமாவிற்கு உள்ள சார்ஜை விடக் குறைவாக).

—கே. ஆர். கோபாலன், நாரத கானசபா

"மிகச் சிறந்த நாடகங்கள்" என ஒரிரு நாடகங்களுக்கு மட்டுமே முத்திரை குத்தக் கூடிய அளவில் சபாக்களும் இல்லை; ரசிகர்களும் இல்லை. ஏனெனில் சில நாடகங்கள் Presentation அளவில் சிறப்பாக அமைகின்றன. சில நாடகங்கள் gate collection அளவில் சிறப்பாக அமைகின்றன. இந்த இருவகை நாடகங்களையும் சேர்த்தே, தங்களது நிதி நிலைக்கு ஏற்ப சபாக்கள் அங்கத்தினர்களுக்கு அளிக்கின்றன.

—ஆர். வெங்கட்ராமன்
(சாந்தி நிகேதன் நாடகக்குழு, சென்னை.)

ஒரு பக்க விஷயசாரத்தை ஒரேவரியில் மண்டையில் அடித்தாற் போல் எழுதும் திறமை பெற்ற 'விசு' மொட்டென்றால், மொட்டுக்கே மணம் அதிகம் என்று சொல்ல வேண்டும். தமிழ் நாடகம் 'டல்'லடிக்க அவர் குறிப்பிட்ட ஒரு காரணம்தான் மொத்த காரணமும். 'நாடகக் குழுக்களின் தற்கொலை முயற்சி,' குழுக்களில் தனிப்பட்டவர்களின் வெற்றி தோல்விகளில் விளையும் ஆரோக்யமற்ற விருப்பு வெறுப்புக்களால், பல குழுக்கள் பல முறை துண்டாடப்பட்டு அதனால் ஏற்பட்ட திறமைச் சிதறல்களில், ஒன்றும் முழுமையாகச் சிறக்காமல் போவதே, மொத்த காரணமும், உண்மையும் ஆகும்.

—கே. கே. ராமன், சென்னை—28

---

சொல்கிறேன்."

"என்ன!"

"ஆம். உங்களிடம் சொன்னதையே அவர்களிடமும் சொல்கிறேன். அவர்கள் முடிவு செய்யட்டும். உங்களுக்கு அதில் ஆட்சேபம் இல்லையே?"

கடகடவென்று சிரித்தான் அவன். "தாராளமாய்! வா, இப்போதே போகலாம்!" மீண்டும் சிரித்தான். "நானாவது உனக்குக் கட்டுப்பட வாய்ப்பு இருக்கிறது! போருக்குத் தினவெடுத்த அந்தப் படை வீரர்களா! ஹாஹ்ஹாஹா!"

சிரித்துக் கொண்டேதான் தோழர்களின் முன்னே அவளைக் கொண்டு போய் நிறுத்தினான். என்னவோ ஏதோ என்று குழம்பிக் கொண்டிருந்த அவர்கள் அவனையும் அவளையும் கண்டதும் ஆவலுடன் அவர்கள் முகத்தைப் பார்த்தார்கள்.

"தோழர்களே! இந்த ரூபமதியை உங்களில் பெரும்பாலோருக்குத் தெரிந்திருக்கும் – நம் ஊரைச் சேர்ந்த பெண் என்று!" ஜெய் சொல்லலானான். "ஆனால் இன்னொருவகை அறிமுகமும் செய்து வைக்கிறேன். சில விநாடிகளுக்கு முன்பு என் பத்தினியாக ஆனவள்—ஆகவே சூர்யபூரின் புதிய இளவரசி!"

"வாழ்க இளவரசர்! வாழ்க இளவரசி!" கை தட்டல். குதூகலம். ஆரவாரம்.

"இவள் உங்களிடம் சில வார்த்தைகள் சொல்லப் பிரியப்படுகிறாள். அதைக் கேட்டு உங்களுக்குக் கோபம் வரலாம். ஆத்திரம் வரலாம். அறியாப் பெண். பாவம். மன்னித்துவிடுங்கள்," சிரித்துக் கொண்டே ஒரு பாறைமீது அமர்ந்தான் ஜெய்.

(தொடரும்)

# வாளின் முத்தம்

அமாகினி

## 14

கூடியிருந்த அத்தனை ஆயிரம் ராஜபுத்திரப் படைவீரர்களும் ரூப்மதியைப் பார்த்தார்கள். தங்கள் பிரியத்துக்குகந்த தலைவனின் புதிய மனைவியல்லவா? புத்தம் புது பட்டத்து இளவரசியல்லவா? கூட்டத்தின் முன்புறத்தில் கும்மென்று நிலவிய நிசப்தத்தில் அவர்களுடைய மகிழ்ச்சி வெளிப்பட்டது.

கூட்டத்தின் பின்புறத்திலோ, பல பேர் இன்னும் புரட்சியின் பரபரப்பிலேயே மூழ்கிக் கிடந்தனர். வாளின் முத்தம் தங்க நாணயம் முதன் முறையாக அச்சாகப் போகின்றது என்ற செய்தி—அன்னிய ஆதிக்கத்துக்குப் போடப்படும் முதல் வெட்டு—அவர்களை இனம் புரியாத கிளுகிளுப்பில் ஆழ்த்திக் கொண்டிருந்தது. "இதோ பார், முதல் காசு எனக்கு ஒன்று கட்டாயம் வேண்டும். என் மகனின் கழுத்தில் வீரப் பதக்கமாகக் கட்டிவிடப் போகிறேன்," என்று ஒருவன் சொல்லிக் கொண்டிருந்தான். "கவலைப்படாதே. இங்கே கூடியுள்ள ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு நாணயம் கட்டாயம் உண்டு," என்று இன்னொருவன் கூற, "இல்லை. இல்லை. ரொம்பக் கொஞ்சமாகத்தான் இன்று அச்சடிக்கப் போகிறார்கள். நமக்கெல்லாம் கிடைக்காது," என்று மறுத்துக் கொண்டிருந்தான் மூன்றாமவன். ஆனால் அவர்களும் கொஞ்சம் கொஞ்சமாக ரூப்மதியைக் கவனிக்கலானார்கள்.

என்ன பேசுவது, எப்படிப் பேசுவது என்பது தெரியாதவள் போல ரூப்மதி சற்றே நாணத்துடன் தயங்கி எழுந்து நின்றாள்.

"இளவரசரின் உற்ற நண்பர்களே, போருக்கு அஞ்சாத படைவீரர்களே, உங்கள் அனைவருக்கும் இந்த ஏழையின் தாழ்ந்த வணக்கம்!" மெல்லிய குரலில் சொல்லத் தொடங்கினாள் ரூப்மதி.

அங்கே இங்கே போய்க் கொண்டிருந்தவர்களும் நின்று கேட்கலானார்கள்.

"இளவரசர் என்னைப் பற்றி இளவரசி அது இது என்று சொல்லி விட்டார். நீங்கள் யாரும் என்னைப் புதுக் கண்ணோட்டத்தில் பார்த்துவிடக் கூடாதே என்பதுதான் என் பயம். நான் அரண்மனையில் பிறந்து வளர்ந்த பெரிய மனுஷி யல்ல. அன்றும் உங்கள் கிராமத்துப் பெண். இன்றும் உங்கள் கிராமத்துப்பெண். நாளையும் அப்படியே இருப்பேன். தயவு பண்ணி என்னை உங்கள் பட்டிக்காட்டுத் தங்கையாக ஏற்றுக் கொள்ள வேண்டும்."

அவர்கள் மெதுவே சிரித்தார்கள். அந்தச் சிரிப்பில் ஒரு பிரியமும் இருந்தது. எதற்குப் பீடிகை போடுகிறாள் இவள் என்ற சந்தேகமும் தெரிந்தது.

புன்னகையுடன் கூட்டத்தினரைக் கவனித்தபடி இருந்தான் ஜெய். இருப்புக் கொள்ளாமல் தவிக்கும் இவர்களா ரூப்மதிக்குக் கட்டுப்படப் போகிறார்கள்! அதோ குதிரைமீது அமர்ந்து மீசையை முறுக்கிக் கொண்டிருக்கிறானே, ராஜா சௌஹான்! ஹால்டிகார் போரில் அவன் தாய், தந்தை, தங்கை, இளம் மனைவி அவ்வளவு பேரும் அழிந்து போனார்கள். பழி வாங்கத் துடிக்கும் அவனா சமாதானத்தை நாடுவான்! இதோ, நெருப்பைக் கிளறிவிட்டுக் கொண்டிருக்கும் பஜன் கோத்தாரி—எப்போது போர் என்று தோள்களைத் தட்டிக் கொண்டிருக்கிறான்—இவனா ரூப்மதியின் பேச்சைக் கேட்டுப் பின் வாங்குவான்? இந்

தப் பக்கம் ஒருவர் தோளில் ஒருவர் கை போட்டு உட்கார்ந்திருக்கும் மது சகோதரர்கள்—பெரியவர் கிருஷ்ண தேவ்— யானைகளைப் பழக்குவதில் வல்லவனான சுராஜ்— பரம்பரை பரம்பரையாக ஈட்டி தயாரிக்கும் பூஷண்—

இவர்களெல்லாமா இவள் சொல்வதைக் கேட்டுப் போரைக் கை விட்டு ஊருக்குத் திரும்பப் போகிறார்கள்?

ரூப்மதி இப்போது சரளமாகப் பேசத் தொடங்கினாள்.

''பெரியவர்களே! உங்களிலே சிலரின் கண்களில் சந்தேகம் கூத்தாடுவது எனக்குத் தெரிகிறது. எடுத்த ஆயுதத்தைக் கீழே போடும்படி இந்தப் பெண் சொல்லப் போகிறாள் போலிருக்கிறதே என்று நீங்கள் நினைப்பது புரிகிறது. இல்லை, வீரர்களே, இல்லை. உங்கள் தினவெடுத்த தோள்கள் திமிறிக் கொண்டே இருக்கட்டும்! உங்கள் பரந்த மார்புகள் ஈட்டிக்கும் அம்புக்கும் வரவேற்பு கீதம் வாசிக்கட்டும்! உருவியெடுத்த வாளை உறையிலே திரும்பச் செருக வேண்டாம்! அக்பருடன் போர்! ஆக்ரா ஆதிபத்தியத்துடன் போர்! ரஜபுதனத்தின் சுதந்திரத்தை ரட்சிக்கும் போர்! தொடரட்டும் அது! வாளோடு வாள் மோதும் அந்த இனிய சங்கீதம் ஒரு போதும் ஓயத் தேவையில்லை!''

படபடவென்ற கைதட்டல்கள் குன்றுகளின் மூலை முடுக்குகளிலெல்லாம் எதிரொலித்தன. 'வாழ்க ரூப்மதி! வாழ்க எங்கள் இளவரசி' என்ற கோஷங்கள்!



ஜெய் நிமிர்ந்து பார்த்தான் அவளை வியப்புடன். போர் வேண்டாம் என்று என்னிடம் வாதாடியவள் வேறு விதமாகப் பேசுகிறளே இவர்களிடம்! திகைத்தான்.

''பொறுங்கள், பொறுங்கள்!'' புன்னகையுடன் கையமர்த்தினள் ரூப்மதி. ''போர் வேண்டியதுதான், ஆனல் இப்போது அல்ல என்றுதான் சொல்கிறேன்.''

திடுப்பென்று ஒரு கசப்பான மௌனம்.

முன் வரிசையில் இருப்பவர்களின் முகத்தில் எத்தனை கடுமை! ரூப்மதிக்கு மேற்கொண்டு பேசத் தைரியம் வரவில்லை, சமாளித்துக் கொண்டாள். ''ஏனெனில் நமது சூர்யபூரின் சுதந்திரத்துக்கு உடனடியாக ஆபத்து எதுவும் ஏற்பட்டு விடவில்லை....''

''இல்லை, இல்லை! உங்களுக்கு தெரியாது!'' என்று எதிர்ப்புக் கூச்சல்கள் புறப்பட்டன. ஜெய் அவர்களை நன்றியுடனும் விசுவாசத்துடனும் நோக்கினன்.

''ஆமாம், எனக்குத் தெரியாதுதான். ஒப்புக் கொள்கிறேன்,'' என்றாள் ரூப்மதி. ''நான் படிப்பறிவில்லாத, அரசியல் அனுபவங்கள் இல்லாத ஓர் ஏழை விவசாயப் பெண். உங்களுடைய தீர்க்கமான புத்தியும் ஆழமான கண்ணோட்டமும் எனக்குக் கிடையாது. இருந்தாலும் என் மனசுக்குப் பட்டதைச் சொல்லாமலிருந்தால் அது துரோகம். ஆகவே சொல்கிறேன். அக்பரின் அரண்மனையிலிருந்து நேரே நான் வந்திருக்கிறேன்...''



''என்ன! என்ன!'' ஒரு சூறைக் காற்று வீசுகிறற் போல் கூட்டமெங்கும் பரபரப்புச் சுழன்றோடியது.

எந்தக் கோடியிலிருந்தோ ஒருவன், ''ஒரு துரோகியையா இளவரசர் மணந்திருக்கிறர்!'' என்று கூவுவது துல்லியமாகக் கேட்டது.

''ஆம்! இந்த ரூப்மதி ஒரு துரோகிதான்,'' என்றாள் அவள், புன்னகையை மாற்றிக் கொள்ளாமல். ''பனஸ் ஆற்று நீரும் சம்பல் நதியின் ஜலமும் தேவையில்லாமல் ரத்தச் சிவப்பாக மாறப் போகின்றனவே என்று கவலை கொள்வது துரோகம் என்றல் இந்த ரூப்மதி துரோகிதான். விளையாடி மகிழ வேண்டிய செல்வங்கள் அனாதைகளாக சூர்யபூர் வீதியில் அலைய வேண்டுமா என்று கேட்பது துரோகமானல் இந்த ரூப்மதி துரோகிதான். எந்தத் தேவையுமில்லாமல் இளங்காளைகளின் தலைகள் ராஜபுதனத்து மண்ணிலே குலைகுலையாய் உருள வேண்டாமே என்று கருதுவது துரோகமானல் இந்த ரூப்மதி துரோகிதான்! பெரியவர்களே! தோழர்களே! சகோதரர்களே! தயவுபண்ணிக் கேளுங்கள். நீங்கள் நினைத்திருப்பது போல அக்பர் கொடியவரல்ல...''

''ஓ! பாதுஷாவுக்குச் சிபாரிசா!'' ஏளனமாகக் கேட்டான் ஒருத்தன்.

தொடர்ந்து சொன்னள் அவள்:

''சில நாட்களுக்கு நான் அக்பருடன் அவருடைய அரண்மனையிலேயே தங்கியிருந்ததால் சொல்கிறேன். அவசரப்படாதீர்கள். என்னுடைய கற்புக்கோ கௌரவத்துக்கோ துளியும் கேடு வராத முறையில்தான் அங்கே இருந்தேன். எந்த மதத்திடமும் துவேஷமில்லாத ஒரு கண்ணியவான்..''

''அவர் ஒரு மத வெறியர்!'' என்று குரலெழுப்பினன் ஒருவன்.


சங்கமத்தில் தான் சந்தோஷம்!
போற்றத்தக்க உங்கள்
அழகு சாரதாஸின்
பட்டுப் புடவையுடன்
சங்கமம் ஆவது ஒரு சந்தோஷம்.
அத்துடன் உங்கள் மனம்
கவர்ந்தவரின் கை பிடிப்பது மாபெரும்
சந்தோஷம்.
இந்த இரு
சந்தோஷங்களும சங்கமம்
ஆவதில் சாரதாஸிற்கு சந்தோஷம.
சங்கமத்தின் சிறப்பிற்கு
சாரதாஸின் முகூர்த்த பட்டுப்
புடவைகள் விசேஷமானவை.
சாரதாஸ்
(முகூர்த்தப் பட்டு புடவைகளுக்கு அதிர்ஷ்டமான இடம்)
தன் பில்டிங்
மவுண்ட் ரோடு
சென்னை-600 002
போன், 87177
N.S.B. ரோடு
திருச்சி-620 002
போன், 27077
பனாரஸ் திருமணப் புடவைகள்
புதிய டிசைன்களில் வந்துள்ளன!

''ஆம், மத வெறியர்தான். எல்லா மதங்களையும் இணைக்கக் கூடிய ஒரு புது மதத்தைக் காண வேண்டுமென்று வெறி கொண்டவர் அக்பர். நான் அங்கே இருந்த சில நாட்களில் யாரையெல்லாம் அரண்மனையில் கண்டேன் தெரியுமா? வைஷ்ணவ மத மகானான வல்லபாசாரியாரின் மகனும் சீடருமான வித்தலேசுவரரைச் சந்தித்தேன். அக்பருடன் தினம் தினம் மதத் தத்துவங்களைப் பற்றி விவாதிப்பதைக் கண்டேன். அவருடைய மடம் இருக்கும் கோகுலத்தை எந்தப் படை வீரரும் நெருங்கக் கூடாதென்று அக்பர் ஆணை பிறப்பிப்பதைக் கண்டேன். கோகுலம் மடத்துப் பசுக்கள் எங்கே வேண்டுமானாலும் மேயலாம் என்று கட்டளையிடப்பட்டதைக் கண்டேன். மதுராவில் இந்து யாத்திரிகர்களுக்கு வரி விதிக்கப்படுவதை அக்பர் நீக்கியதைக் கண்டேன். பிருந்தாவனத்திலும் வாரணாசியிலும் கோவில்கள் கட்ட அக்பரின் கஜானா தாராளமாய்த் திறந்து விடப் படுவதைக் கண்டேன். மருத்துவம், வான சாத்திரம், கணிதம் முதலிய எல்லாத் துறைகளிலும் சம்ஸ்கிருத நூல்கள் அரசாங்க செலவில் எழுதப்படுவதைக் கண்டேன். ஏன், ஒரு இந்துப் பண்டிகை தினத்தன்று அக்பர் நெற்றியில் இட்ட திலகமும் கையில் பிராம்மணர்கள் கட்டிய ரட்சையுமாக வருவதைக் கூடக் கண்டேன். மாட்டிறைச்சியையும் பூண்டையும் வெங்காயத்தையும் அவர் விட்டு விட்டார் என்பதையும் கண்டேன்.''

பொறுமை இழந்த ஒரு படைவீரன் குறுக்கிட்டான். ''சரி, சரி, அதெல்லாம் இங்கே என்ன சம்பந்தம்?''

''சம்பந்தம் இருப்பதால்தான் சொல்கிறேன்.'' ரூப்மதிக்குப்பேசப் பேசத் தைரியம் வந்தது. ''நம்முடைய மதத்துக்கும் கலாசாரத்துக்கும் சுதந்திரத்துக்கும் அந்த நல்லவரால் ஊறு வராது என்று நான் நம்புகிறேன். அவர் எனக்குக் கொடுத்த வாக்கை நான் நம்புகிறேன். நீங்களும் நம்ப வேண்டும்.''

''என்ன வாக்கு?'' அவர்கள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

''சூர்யபூர் பகுதிகளில் அக்பரின் படைகள் ஒரு நாளும் வரப் போவதில்லை. நம்முடைய சுதந்திரத்தில் அவர் ஒருபோதும் தலையிடப் போவதில்லை. ஆனால் சில அரசியல் காரணங்களை முன்னிட்டு அதை அதிகார பூர்வமாகப் பிரகடனம் செய்ய முடியாத நிலையில் இருக்கிறார். ஆகவே தனிப்பட்ட முறையில் என் மூலம் சொல்லியனுப்பினார்.''

அவர்கள் ஜெய்யைப் பார்த்தார்கள். அவர்கள் மனம் மெல்ல மெல்ல மாறிக் கொண்டிருக்கிறதென்பதை உணர்ந்தான் அவன்.

ஒரே ஒருவன் கேட்டான்:

''சரி, போர் வேண்டாம். நாணயம் அச்சடித்தால் என்ன குடி முழுகி விடும்!''

''தயவு பண்ணி வேண்டாம். அக்பர் நம்மிடம் நம்பிக்கை வைக்கும் போது நாமும் அந்த நம்பிக்கையை எதிரொலிப்பதுதான் அழகு. வாளின் முத்தம் எங்கே போய் விடப் போகிறது. நாம் எங்கே போய் விடப் போகிறோம்! மூன்று மாதம் பொறுங்கள். இதே விழாவைக் கோலாகலமாகக் கொண்டாடுவோம்.''

அந்த ஒரு எதிர்ப்பும் மடிந்தது.

''ஆகவேதான் சொல்கிறேன். அன்புகூர்ந்து இப்போதைக்குக் கலைந்து போங்கள் என்று. நிச்சயமாய் இன்னும்



வீட்டுக்காரர்: ''சார்! தயவு பண்ணி சீக்கிரம் என் பக்கத்தில் இருக்கிற சேரில் உட்கார்ந்திடுங்க! ப்ளீஸ்....''

விருந்தாளி: ''ஏன்...''

வீட்டுக்காரர்: 'நீங்க உட்கார்ந்திருக்கிறது என் கடைசிப் பையன் சேர்... அதில் அவனைத் தவிர யார் உட்கார்ந்தாலும் கையில் வெச்சிருக்கிறதாலே அடிச்சிடுவான். இப்போ கையிலே டிரான்ஸிஸ்டரோட வரான்...ரொம்ப காஸ்ட்லி செட் அது...''

—என். எஸ். வி. குருமூர்த்தி.

மூன்று மாத காலத்துக்கு நமது சுதந்திரத்துக்கு எந்த ஆபத்தும் கிடையாது. அதன் பிறகு அக்பரிடமிருந்து நேரடியாகவே பிரகடனம் வரும்—நமது ராஜ்யங்களின் சுதந்திரத்தில் குறுக்கிடப் போவதில்லை என்று. அப்படி வரவில்லையென்றால், இளவரசர் ஜெய்கூட வேண்டாம், இந்த ரூப்மதியே உங்கள் படையில் முதல் வரிசையில் முதல் ஆளாக நின்று முதல் வாளை வீசுவாள்! என்ன சொல்கிறீர்கள்?...''

ஒரு படைவீரன் எழுந்தான். ''தங்கள் விருப்பம், இளவரசி! தங்கள் ஆணைப்படியே நடந்து கொள்கிறோம்!''

என்ன, என்ன! ஜெய் திடுக்கிட்டுக் கொண்டிருக்கும்போதே பல திசைகளிலிருந்தும் கோஷங்கள் எழுந்தன. ''இளவரசி ரூப்மதி வாழ்க! இளவரசர் ஜெய் வாழ்க!''

கூட்டம் கூட்டமாக அவரவர்கள் எழுந்தார்கள். சிரித்துப் பேசியவாறு கலைந்து போகத் தொடங்கினார்கள்.

பீர்நாராயணுக்கு ஏமாற்றம் ஒருபுறம், கோபம் மறுபுறம். ஆனால் காட்டிக் கொள்ள முடியாத நிலை. ''அபாயமான பணயம்தான் வைத்திருக்கிறார் இளவரசி. பார்க்கலாம்.'' எழுந்து சென்றுவிட்டான்.

புன்னகை புரிந்தாள் ரூப்மதி. ''அரியணை ஏறிய சில விநாடிகளுக்குள்ளேயே இந்த இளவரசிக்கு முதல் வெற்றி!''

ஜெய் குமுறினான்.

''மூன்று மாதத்தில் இந்த வெற்றியின் குட்டு உடையப் போகிறது! இப்போது சிரித்துக் கொண்டு கலைந் செல்லும் இதே போர்வீரர்கள் அ போது சீறிக் கொண்டு சேர்ந் வந்து உன்மீது பாயப் போகிறார்கள் பார்!''

''பாய்ந்தால் அப்போ என்னைப் பாதுகாக்க இந்தச் சிங்கக் குட் தான் இருக்கவே இருக்கிறதே!'' முறு லுடன் அவன் தோளை மெல்ல அணை தாள் அவள்.

''என்னோடு ஒன்றும் கொஞ்ச வேண்டாம்.''

குன்றின் சரிவில், ஒரு பிர மாண்டமான வேப்ப மரத்தின் அ யில் வேண்டா வெறுப்பாக உ கார்ந்துகொண்டான் ஜெய்.

அவன் மடியில் முகத்தை புதைத்தாற்போல் குப்புறப் படுத்து கொண்டாள் அவள். குளத்திலிருக்கு தாமரை மலர்ந்து சூரியனைப் பார்ப்பது போல் அவள் முகம் அவனை நோக்கி உயர்ந்தது. அவன் கோபம் சிறிது சிறிதாகக் குறைந்தது.

கரிய விழிகளின் மேல் கச் சாட்டையாக வளைந்திருக்கும் பு வங்களை அவன் மெல்ல நீவ விட்டான். மெத்தென்று தன்மீது படி திருக்கும் தோள்களும், ரவிக்கையில் கீழே சிவந்த பட்டாகத் தெரியும் இடையும், கால்களை மடித்து ஆட்டிக் கொண்டிருக்கும் ஒய்யாரமும், பொன்னிறக் கழுத்தில் புதிய மஞ்சள் கயிறும்...

''இளவரசே!'' பீர்நாராயணின் குரல் கேட்டது. அவசரமான குரல். பதற்றமான குரல்.

''என்ன தோழனே!'' ரூப்




அந்த இளம் நடிகரின் மனைவி அவ்வளவு ஊதாரியாகச் செலவு செய்வார் என்பது ஆரம்பத்திலேயே தெரிந்திருந்தால்...? திருமணம் நடந்திருக்குமா என்பதே சந்தேகம்...! வேண்டுமென்றே மாதம் நாலாயிரம் ரூபாய்க்கு ஒரு வாடகை வீட்டை எடுத்து அதில் 'ஆர்ட் காலரி' வைத்துப் பொழுது போக்குகிறார் அந்த முன்னாள் நடிகை!

அந்த நடிகரின் அண்ணன் மெல்லவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் அவதிப்படுகிறார். தம்பியின் கால் ஷீட்டுகளை நிர்வகிக்கும் அவர் தயாரிப்பாளர்களுக்குப் போட்டிருக்கும் புதிய கண்டிஷன்!

''என் தம்பியின் மனைவிக்கு முன்னால் என்னிடம் இனிப் பணம்

மதியை விலக்கிக் கொண்டு எழுந்தான் ஜெய்.

''அதோ அங்கே பாருங்கள்.'' தூரத்தில் ஒரு குன்றின் சிகரத்தைக் காட்டினான் பீர்நாராயண்.

ஜெய்க்கு எதுவும் புலப்படவில்லை.

''என்ன அங்கே?''

''ஏதோ புழுதி மாதிரி தெரியவில்லை தங்களுக்கு?''

கூர்ந்து கவனித்தான் ஜெய். சிரித்தான். ''அது புழுதியில்லை தோழனே! புகை. நம் படைவீரர்களில் சிலர் உணவு தயாரித்துக் கொண்டிருக்கிறார்கள் போலிருக்கிறது...''

பீர்நாராயண் அதை ஒப்புக் கொள்ளவில்லை. ''இல்லை, இளவரசே! நம் படைவீரர்கள் யாரும் அந்தத் திசையில் செல்வதற்கு நியாயமில்லை. இந்தப் பக்கமாகத்தான் கலைந்து சென்று கொண்டிருக்கிறார்கள்.'' திடீரென்று அவன் குரலில் பதைப்பு அதிகரித்தது. ''இப்போது கவனியுங்கள். புழுதியின் அடர்த்தி பெரிதாகிக் கொண்டிருக்கிறது.''

ஜெய்க்கும் சந்தேகம் ஏற்பட்டது. ''பின்னே..அது என்ன இடம்? அந்தக் குன்றின் பின்னே...''

''ரணதாம்பூருக்குச் செல்லும் குறுக்கு ரஸ்தா ஒன்று இருக்கிறது. ரணதாம்பூரும் அதன் சுற்றுவட்டாரப் பிரதேசங்களும் அக்பரின் ஆளுகைக்குட்பட்டவை என்று தங்களுக்குத் தெரியுமல்லவா?''

''அதாவது?'' ஜெய்யின் கை உடைவாளைச் சரேலெனப் பற்றியது. தோழன் பதறுவதன் அர்த்தம் அவனுக்கு விளங்கலாயிற்று.

''ஆமாம்—எனக்குச் சந்தேகமாய்த்தான் இருக்கிறது,'' என்றான் பீர்நாராயண். ''அதோ! அதோ!''

புழுதி இப்போது உயரத்தில் மட்டுமின்றி அகலத்திலும் பெரியதாயிற்று. குன்றின் சகல பாகங்களிலும் வெட்டுக் கிளிக் கூட்டத்தைப் போல உருவங்கள் தென்படலாயின.

எங்கிருந்தோ ஒருவன் கூவினான். ''அக்பரின் படைகள்! அக்பரின் படைகள்!''

மறுவினாடி அந்த இடம் அல்லோல கல்லோலமாயிற்று. உட்கார்ந்திருந்தவர்கள் எழுந்தார்கள். தூங்கிக் கொண்டிருந்தவர்கள் விழித்தார்கள். போய்க் கொண்டிருந்தவர்கள் திரும்பினார்கள். அருந்திக் கொண்டிருந்தவர்கள் நிறுத்தினார்கள். உண்டு கொண்டிருந்தவர்கள் கையை உதறினார்கள். உரையாடிக் கொண்டிருந்தவர்கள் வாயடைத்தார்கள்.

அவர்கள் கடுகளவும் தயாராயில்லாத நேரத்தில்—

ஆம்! ஆயிரக் கணக்கான குதிரைகளும், யானைகளும், ஒட்டகங்களும் காலாட்படைகளும் குன்றின் உச்சியிலிருந்து வெகு வேகமாக இறங்குவது வினாடிக்கு வினாடி துல்லியமாகத் தெரிந்தது.

(தொடரும்)

---

கொடுக்கக்கூடாது. மீறிக் கொடுத்தால் தம்பி கால்ஷீட் கிடையாது!''

**அ**ந்த இரண்டெழுத்து நடிகையை உலகப்புகழ் பெறச் செய்த இரண்டெழுத்து டைரக்டரே தான் மணக்கப் போகிறார் என்று ஒரு செய்தி வந்தாலும் வந்தது. ஆடிப்போய் விட்டார் அந்த டைரக்டர். காரணம்? அதற்கு முதல் நாள்தான் அவர் கேரளாவில் பெரிய இடத்தில் பெண் பார்த்து நிச்சயமும் செய்திருக்கிறார். இந்தச் செய்தி அந்த வீட்டுக்கு எட்டாமல் இருக்க வேண்டுமே என்பதுதான் இவரது கவலை இப்போது.

**மு**ன்பு ஜெயசுதாவும் பிரமிளாவும் இழையோ இழை என்று இழைந்தார்கள். நடுவில் கிஷோர்குமார் வந்தார், இந்திப் படத்தில் புக் செய்ய. நட்பில் பிளவு ஏற்பட்டது.

இப்போது ஸ்ரீதரால் அண்மையில் அறிமுகப் படுத்தப்பட்ட நாயகியும் பாலசந்தரால் அறிமுகமான நாயகியும் மிகவும் நெருக்கமாக இருக்கின்றனர். இவர்கள் நட்பாவது நீடித்தால் சரி.

—ராம், கலேலா

●● தலைவலி எதனால் வருகிறது?

விருந்தாளிகளால். குறிப்பாக, பெங்களூரிலிருந்து வரும் விருந்தாளிகளால்.

—ஷராத் பவார் (மராத்திய முதல்வர்)

●● 'பயந்து சாகக்கூடாது.' இந்தப் பொன்மொழியைச் சொன்னவர் யார்? எப்போது?

மொரார்ஜி தேசாய்; 'ஸ்கைலாப்பின் பாதையில் டெல்லி இடம் பெறவில்லை' என்று நிச்சயமாய்த் தெரிந்தபோது.

—ஸ்டீபன்.

●● என் நண்பன் என்னைப்பற்றிய ரகசியங்களை வெளியிட்டு விடுவானோ என்று பயமாக இருக்கிறது. என்ன செய்யலாம்?

முருக ஜபம் செய்யுங்கள். சுப்பிரமண்யாய நமஹ; பாலசுப்பிரமண்யாய நமஹ.

—காந்தி தேசாய்

●● கல்யாணத்தில் மிக அவசியமான ஐட்டம் எது?

சந்தேகமென்ன, ஊர்வலம் தான்.

— நாராயணசாமி நாயுடு

●● செயற்கைக் கோள்கள் பறக்க விடுவதால் உலகத்துக்கு...

யாரப்பா பியூன்! இந்த ஆளை வெளியே இழுத்துக் கொண்டு போ.

— கார்ட்டர்

●● வெளியே காட்டிக்கொள்ள முடியாத சந்தோஷம் என்று ஒன்று உண்டா?

ஏன் இல்லாமல்? 25 பேர் அண்மையில் எனக்கு அப்படிப்பட்ட சந்தோஷத்தைக் கொடுத்தார்கள்.

— சரண்சிங்

●● நீங்கள் கேட்பதற்கு மிகவும் ஏங்கும் வாத்தியம் எது?

மில் சங்கு.

– ராகவானந்தம்

●● மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி என்ன?

விம்பிள்டனில் ஜூனியர் சாம்பியன்ஷிப் பட்டத்தை வாங்கிக் காட்டுவது.

—கிருஷ்ணன்

●● மெத்தை தைத்த நாற்காலி எத்தனை நாளைக்கு உழைக்கும்?

ஐந்து வருடத்துக்குத்தான். ஹூம்.

– பி. டி. ஜாட்டி

●● கூட்டுவது கஷ்டமா? பெருக்குவது கஷ்டமா?

கூட்டுவதுதான் கஷ்டம். முக்கியமாக, பிளவுக்கு முந்திய காங்கிரஸ் கமிட்டியைக் கூட்டுவது.

—ஸ்வரண் சிங்

கதைகளில் வரும் பெயர்கள், சம்பவங்கள் அனைத்தும் கற்பனையே. கதை, கட்டுரை முதலிய எதையும் தபால் மூலமே அனுப்ப வேண்டும். அவற்றைத் திருத்தி அமைக்கவும் கடிதங்களைச் சுருக்கவும் ஆசிரியருக்கு உரிமை உண்டு. குமுதம் பிரிண்டர்ஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிட்டவர்: ஏ. பி. ஏ. பெரியகருப்பன். குமுதம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர்: பி.வி. பார்த்தசாரதி. ஆசிரியர்: எஸ். ஏ. பி. அண்ணாமலை.

முகவரி: 151, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை—600 010.

# 5

''துரோகி!'' வெடித்தான் ஜெய். அவன் கண்ணில் தீப்பொறி பறந்தது.

திடீரெனச் சிலையாகிவிட்டவள் போல ரூப்மதி அசைவற்று நின்ருள். சிறிது சிறிதாகப் பெரிதாகிக் கொண்டிருக்கும் படைகளை அவள் விழிகள் அசைவற்றுக் கவனித்தன. இருக்காது! இது அக்பரின் படையாக இருக்காது! அவள் பார்ப்பதை அவளாலேயே நம்ப முடியவில்லை.

''மோசம் போய்விட்டோம் மன்னவரசே!'' என்ருன் பீர்நாராய்ண். ''நமது படை வீரர்கள் கொஞ்சம் கூட யுத்தத்துக்குத் தயாராயில்லை. பாதிப் பேருக்கு மேல் ஊருக்குத் திரும்பிக் கொண்—''

''கூப்பிடு அவர்களை!'' கோபாவேசத்துடன் இடைமறித்தான் ஜெய். ''திரும்ப அழை அத்தனை பேரையும்! கையில் கிடைக்கிற வேல்களையும் கட்டிகளையும் வாட்களையும் எடுத்துக் கொண்டு அணி வகுக்கச் சொல்லு. போலாராம்! நீ ஆற்றைக் கடந்து ஊருக்கு வழியாக அரண்மனைக்குப் போ. கோட்டைக்குள் இருப்பவர்களைத் தயார் செய். ஸித்ராஜ்! நீ தெற்கு வாசலில் கோட்டைப் பொறுப்பை ஏற்றுக் கொள்! அங்கே ஏற்கெனவே சுவர்கள் பலவீனமானவை. லோஹார்! அரண்மனையிலுள்ள குதிரைகளையும் யானைகளையும் சித்தப்படுத்திக் கொண்டுவா. முதல் அணி உன்னுடையது! இரண்டாவது அணி ஊர் சிங்! மூன்ருவது அணியான பைத்நாத் ராணு, எதிரிகள் பனுஸ் ஆற்றைக் கடந்து தப்பி விடாதபடி தடுத்து நிற்கட்டும்! நாலாவது நான்! வருவது வரட்டும். இருப்பது ஒரே உயிர். அது நம் தாய்நாட்டுக்காகப் போகட்டும். கூலிகளையும் உளவாளிகளையும் துரோகிகளையும் வைத்துக் கொண்டு நயவஞ்சமாகத் தாக்குகிற அந்த அக்பருக்கு இன்று ஒரு பாடம் கற்பிக்காமல் விடுவதில்லை...''

கிடுகிடுவென்று புறப்பட்டன ஆணைகள். எதிரிப் படைகள் புயல் வேகத்தில் வந்து கொண்டிருக்கும் அந்தச் சிறு நேரத்துக்குள் ஜெய்யின் அணியும் ஓரளவு திரண்டு விட்டது. ஆனல்...ஆனல்...அவன் பிரமித்தான். எண்ணிக்கையில் ஒன்றுக்கு எட்டு என்ற விகிதத்தில் எதிரி அதிகமாயிருக்கிருனே.

''ஜெய்...நான்...'' ஏதோ சொல்ல முயன்ருள் ரூப்மதி.

''தொடாதே என்னை!''

## வாளின் முத்தம்



'மோகன்'

அவள் கையை வெடுக்கென உதறினுன் அவன். ''ஆரம்பத்திலிருந்தே நான் சந்தேகித்தது உண்மையாகிவிட்டது. அக்பரின் கைக்கூலி நீ! பொய்யும் பித்தலாட்டமும் சொல்லி நாங்கள் ஏமாந்து போகும்படி செய்திருக்கிருய். நாங்கள் அசந்திருக்கும் வேளையில், நாங்கள் போருக்குக் கொஞ்சம் கூடத் தயாராக இல்லாத நேரத்தில், எங்களை அவன் தாக்குவதற்கு நீ வசதி செய்து தந்திருக்கிருய்...''

அவள் மன்ருடினுள். ''இல்லை. ஜெய்...நான் அப்படியெல்லாம் நினைக்கவில்லை. திட்டமிடவில்லை. சத்தியமாக அக்பர் சொன்னதை நம்பினேன். இப்போதும்கூட நம்புகிறேன். இதோ எதிரில் வந்து கொண்டிருப்பது அக்பரின் படைகள்தான் என்பது என்ன நிச்சயம்?''

பீகார் மாநிலத்தில் சில பல்கலைக் கழகங்களில் 1977'ம் ஆண்டு நடத்தப்பட வேண்டிய பரீட்சைகளே இன்னும் நடத்தப் படாமலிருக்கின்றன.

—ர.ர.

பீர்நாராயண் சிரித்தான். வீரர்கள் கவசங்களையும் வாட்களையும் அணிந்து கொண்டவாறே விரைந்து செல்லும் ஓசைகளின் நடுவே அவன் நகைப்பு விசித்திரமாகக் கலந்தது. ''இளவரசிக்கு இன்னும் கூடப் பிரமை போலிருக்கிறது! எதிரிப் படையின் முன் வரிசையில் ஓங்கிப் படபடக்கிறது அக்பரின் கொடி! அவர்கள் முழங்கு வது பாரசீக மொழிக் கோஷங்கள்!''

''விலகிப் போ! துரோகி!'' என்றான் ஜெய். அவன் தள்ளிய வேகத்தில் சரிந்து விழுந்தாள் ரூப்மதி. அவளை எழுப்பிக் கவனிப்பார் யாரும் இருக்கவில்லை.

டுமீல் டுமீல் என்று பீரங்கி கள் முழங்க ஆரம்பித்தன அங்கே. முகலாயர் படையின் தளபதி ஹுசேன் கானிடமிருந்து ஆணைகள் அடுக்கடுக் காகப் புறப்பட்டன.

சூர்யபூர் கோட்டையும், ஜெய்யின் படைவீரர்கள் நாணயம் அச் சடிப்பதற்காகக் கூடியிருந்த இடமும் குன்றின் சரிவில் மேட்டுப் பாங்கான இடத்தில் அமைந்திருந்தன. முகம் மதியப் படைகள் அணிவகுத்த இடம் சமவெளிப் பாங்கானது. எனவே கோட் டைக்கும் ஜெய்யின் கூட்டத்துக்கும் இலக்கு வைப்பது அவர்களுக்கு வெகு எளிதாயிருந்தது. மின்னல் வேகத்தில் மேடைகள் எழுப்பப்பட்டுப் பீரங்கி கள் அவற்றின்மீது ஏற்றப்பட்டன. இரும் புக் குண்டுகளைத் தயாரிப்பதற்கு அரு கேயே தீ மூட்டினார்கள். அவற்றின் ஜுவாலை வெளிச்சம் பல காத தூரத் துக்குத் தெரிந்தது.

மூன்றாவது குண்டு கோட் டையின் கிழக்கு வாசலருகே சுவரில் தாக்கியபோது அங்கே விரிசல் ஏற் பட்டது. நாலாவது குண்டு அங்கே பெரும் துவாரமொன்றை ஏற்படுத்தி யது. மறுபுறமிருந்த சூர்யபூர் வீரர்கள் உடனேயே ஓடிவந்து அந்தத் து ரத்தை அடைக்க முயன்றார்கள். அடு டுத்துக் குண்டுகள் வந்து விழுந் கோட்டையின் கிழக்குப் பகுதி பற்றி எரிவது தெரிந்தது. உள்ளே ருந்து வீரர்கள் தபதபவென்று வெளி வரவும், முகம்மதியப் படைகள் திமு வென்று முன்னேறி அவர்களைத் த கின.

அடுத்த வினாடி நேரு நேரான கைகலப்பு யுத்தம் மூண்ட படை வீரர்களின் கூச்சல்கள் வானை பிளந்தன. குதிரையோடு குதி யானையோடு யானை, வீரனோடு வீ மோத மோத, தரை ரத்தச் சகதிய ஆயிற்று.

''யானைகள் வரட்டு யானைகளைக் கொண்டு வாருங்கள் என்று கூவினான் ஜெய். ஆளுக்கு ஆ வாய்மொழியாகவே பறந்தது அவ கட்டளை. எதிரி அணியில் காலா படையினர் எண்ணிக்கையில் அதிக யிருக்கும்போது செய்யக் கூடியது அ ஒன்றுதான். யானைகள் வந்தா போதும். கண்மண் தெரியாமல் மோ மிதிக்கும். எதிரிகளைத் துவம்சமாக்கு



தலைமை யானையான ஹரி
ரசாத் வந்தது. அதில் வீற்றிருப்பவர்!
ரமிப்பாலும் பரவசத்தாலும் ஜெய்க்கு
ச்சு நின்றது. பெரிய அண்ணன்
னேஷ் வாளை வீசிக்கொண்டு அதன்
துகிலே வீற்றிருந்தான். மதுவையும்
துவையும் மறக்கும் அளவுக்கு அவ
க்குக் கூடச் சுதந்திர உணர்ச்சி
றந்து விட்டதா? ஜெய் ஆச்சரியப்
ட்டு முடிக்கவில்லை. அடுத்த யானை
ர்யஜோதி. அதன்மீது இரண்டாவது
ண்ணன் பூபத். அவன் கையில்
விதை எழுதும் ஏடு இருக்கவில்லை. பதி
ாக, வாள்! அதற்கடுத்து தேவராஜ்—
தன்மீது ஆரோகணித்திருப்பது கடைசி
ண்ணன் பிகாரிமால்.

ஆளுயரமுள்ள வாட்கள் பளபளவென்று அவர்கள் கரங்களில் மின்னின.

''ஜெய் சூர்யபூர்!'' தன் குதிரையின் மீது தாவி ஏறிக் கொண்டான். ''அண்ணு, நானும் வந்துவிட்டேன்!'' வாளை உதட்டில் பொருத்தி முத்தமிட்டு உயர்த்தி முழக்கமிட்டான்.

முகலாயர் படைகளிலும் யானைகள் இல்லாமற் போகவில்லை. பின்னணியிலிருந்தவை திமுதிமுவென்று முன்னுக்கு வந்தன. தளபதி கான் சூரும் அவனைச் சேர்ந்த பத்துப் பேரும் குதிரைகளை விட்டு விட்டு யானைகளின் மீது ஏறி வந்தார்கள்.

நூற்றுக்கணக்கான யானைகள் பொருதின.



மலையோடு மலை பொருதினாற் போல்; குத்தீட்டிகள் செருகப்பட்ட கவசங்களுடன் அந்த யானைகள் பக்க வாட்டாகவும் நேராகவும் மோதிய போது பெருகிய ரத்தம்— அருகில் வந்த வீரர்கள் அவற்றின் காலடியில் மிதிபட்டுத் துவைத்தபோது எழுந்த மரண அலறல்—வாண வேடிக்கை போல வானத்தில் தெறித்து எழுந்து துடித்து விழும் கைகள், கால்கள், தலைகள்—நெருப்புப் பொறி பறக்கப் பின்னிக் கொள்ளும் பட்டாக் கத்திகளின் முழக்கம். சர்சர்ரென்று பறந்து வரும் ஈட்டிகளும் அம்புகளும் கட்டாரிகளும் இலக்குகளைத் தாக்கும் சங்கநாதம்—

அவ்வளவுக்கும் நடுவே. கான் சூரையே குறி வைத்தான் ஜெய். யானைமீது வீற்றிருக்கும் அந்தத் திமிர் பிடித்த உருவத்தை—

ஆட்களையும் குதிரைகளையும் எதிர்த்து வரும் கத்தி அம்புகளையும் விலக்கி நீந்திக் கொண்டு முன்னேறினான் அவன். அவனுடைய தோழர்கள்—பீர்நாராயண் உட்பட—பின்தங்கிவிட்டார்கள். அவன் மட்டுமே முன்னேறினான்.

உயரத்தில் தெரிந்தது கான் சூரின் தலை. இந்தத் தளபதி மட்டும் வீழ்ந்துவிட்டால்...! மொத்தப் படையும் அவ்வளவுதான்.

''போ!'' என்று குதிரையின் விலாவில் ஜெய் உதைத்ததுதான் தாமதம்—



ஒருவன்: எங்க ஆபீசிலே புதிய பெண் டெலிபோன் ஆபரேட்டர் வந்திருக்கா...

மற்றவன்: அவ பேர் என்ன?

அவன்: ஹலோமேலு!

—எம். சாம்பமூர்த்தி

தாவி, கான் சூ[ரின்] யானையின் துதிக்கை மீது தன் முன்ன[ங்] கால்களைத் தூக்கி வைத்தது அந்[தப்] பழக்கப்பட்ட போர்க் குதிரை. ''தொலைந்தாய் இன்றோடு!'' — முழ[ங்]கிக் கொண்டே ஈட்டியை வீசினா[ன்] முகலாய தளபதியின் கழுத்தைக் கு[றி] வைத்து. அதே விநாடி, தனக்[கு] வரப் போகும் அபாயத்தை அந்த[த்] தளபதி கண்டு கொண்டுவிட்டா[ன்]. கண்ணிமைக்கும் நேரம்தான். ச[ட்]டெனத் தலையைக் குனிந்து கொ[ண்]டான். அவன் முதுகுக்குச் சாய்மா[ன]மாக இருந்த இரும்புப் பலகையி[ல்] மோதியது ஈட்டி. துளைக்க முடியாம[ல்] முனை மழுங்கி விழுந்தது.

ஆனால் தான் எறி[ந்த] ஈட்டி என்ன ஆயிற்று என்பதைக்கூ[ட] ஜெய்யினால் கண்டுகொள்ள முடி[ய]வில்லை. காரணம், மழைபோல் அம்[பு]கள் அவன் மீது கொட்டத் தொடங்[கி]விட்டன. தன்னுடைய சொந்த[ப்] படையை விட்டு வெகு தூரம் அவ[ன்] வந்திருந்தான். எதிரியின் அணிக்கு[ள்] வெகுதூரம் உட்புகுந்திருந்தான். அவ[ன்] குதிரையும் சூர்யபூர் கொடியும் கா[ன்] சூரின் மீது ஈட்டி எறிந்த வேகமு[ம்] அவனைத் தனித்துப் பிரித்துக் காட்டி[ன]. முகலாயப் படைகளுக்குக் கும்மாளம். நாலு பக்கத்திலிருந்தும் முகலாய[ப்] படையின் வில்லாளிகள் சரசரவென்[று] அம்புகளை எய்தார்கள் அவன் மீது.

யுத்த களத்தின் தெற்கு[ப்] பகுதியில் போரிட்டுக் கொண்டிருந்த பீ[ர்]நாராயண்தான் ஜெய்யின் அபா[ய] நிலையை முதன் முதல் கண்டவன். மறுகணமே ஒரு குதிரைமீது தா[வி]னான். தோழனை அடைந்தான். அம்[பு] மழையிலிருந்து தோழனை அணைத்து[க்] காத்து வெளியே கொண்டு வந்தான். ஜெய்யின் குதிரை நொண்டியது. யானை[]யின் நெற்றியில் இருந்த கூரிய கத்தி[]கள் தந்த பரிசு. ரத்தம் கொட்டி[க்] கொண்டிருந்தது.

''நீ போ. இதைப் பத்திர[]மாக ஓரிடத்தில் விட்டுவிட்டு வரு[]கிறேன்,'' என்றான் ஜெய்.

தோழன் தயங்கினான். ''முன்னெச்சரிக்கை இல்லாமல் ஆபத்தில் சிக்கிக் கொள்ளாதீர்கள் இளவரசே.''

''மாட்டேன் போ.''

வாளின் காட்டுக்குள்ளே பீர்நாராயண் புகுந்தான். அடுத்[த]



சில பெண்கள் (உதாரணம் உண்ணி மேரி) பேச ஆரம்பித்தால், அதை நிறுத்துவது கடினம். இதைச் சற்று தாமத மாக உணர்ந்திருக்கிறார் வின்சென்ட்.
படம்: பாவாடைக்காரி (மலே)

டி 'ஆ!' என்ற அலறல் கேட்டது னிடமிருந்து. மார்பில் பாய்ந்த டியொன்றை எடுக்க முயன்றவன் நதிரையின் மீதிருந்து அவன் துவண்டு து விழுவதைக் கண்டான் ஜெய்.

''தோழனே! இரு! இதோ வருகிறேன்!'' உரக்கக் குரல் டுத்தவண்ணம் ஜெய் குதிரை ருந்து குதித்தான். அடிபட்டு ந்து கிடக்கும் தோழனைச் சந்திக்க ரந்தோடினான். ஆனால் அதற்குள் ஒரு பெரும் கூச்சல் குழப்பம். திடுவென்று பல வீரர்கள் அவ க்கு முன்னாலும் பின்னாலும் குறுக் நெடுக்குமாய் ஓடினார்கள். ஓரடி அவன் முன்னேற முடியவில்லை. னே தள்ளிக் கொண்டும் தாண் கொண்டும் ஓடினார்கள் வீரர்கள்.

ஏனிந்தத் திடீர் குழப்பம்? வீரர்கள் கலைந்து ஓடுகிறார்கள்? ஜய் திகைத்தான். பிறகு என்ன ன் கூச்சல் என்று செவிமடுத்தான்.

'இளவரசர் விழுந்து விட் ார்!' 'இளவரசர் இறந்து விட்டார்!'— ளவரசரைக் காணோம்!'—

நொடியில் ஜெய்க்குப் புரிந் தது. அவனைப் பீர்நாராயண் விடுவித்து அப்புறப்படுத்தியதை அவர்கள் பார்க்க வில்லை. எதிரியுடன் மோதச் சென்றதை மட்டுமே கண்டிருக்கிறார்கள். அவர்களு டைய தீரத்துக்கும் வீரத்துக்கும் தூண்டு கோலாக இருந்த தலைவன் இல்லை யென்றறிந்ததும்—

''இல்லை! நான் இதோ இருக்கிறேன்! இங்கே இருக்கிறேன்! இறந்து விடவில்லை! இறந்து விட. வில்லை!''—பலம் கொண்ட மட்டும் கத்தினான் ஜெய்.

ஆனால் வதந்தியால் சிதைந்து விட்ட படைகளுக்கு அவன் கூக்குரல் காதில் விழவில்லை. மேலும் மேலும் சின்னாபின்னமாகிச் சிதறியோடும் தோழர்களைப் பார்த்தான் ஜெய். செய்வதறியாது நின்றான்.

அவனுடைய படைவீரனே ஒருவன் அவனைத் தள்ளிவிட்டு ஓடினான்.

குற்றுயிரும் குலையுயிருமாக அவன் யுத்த பூமியில் விழுந்தான்.

ரூப்மதி கண் விழித்தபோது எங்கெங்கும் இருள்தான் தெரிந்தது.

''துரோகி! விலகிப் போ!''

என்று ஜெய் சீறிய வார்த்தை... எங்கே ஜெய்? எங்கே எல்லாரும்? என்ன ஆயிற்று?

வெகு நீளமான முனகல்கள் எங்கோ தொலேவிலிருந்து கேட்டுக் கொண்டிருந்தன.

யுத்தம் முடிவடைந்து விட்டது—அதை அவள் புரிந்து கொண்டாள். நிச்சயமாய் வெற்றி சூர்யபூரின் பக்கமல்ல: அதையும் அவள் புரிந்து கொண்டாள்.

ஜெய்க்கு என்ன ஆகியிருக்கும்? அவள் மனம் தவித்தது.

ஜெய்.....ஜெய்...

அவள் எழுந்திருக்க முயன்றாள். உயிர் போகும்படி உடம்பு வலித்தது. அவள் விழுந்திருந்தபோது ஆட்களும் குதிரைகளும் அவளை மிதித்துக் கொண்டு ஓடியிருக்க வேண்டும். அதனால்தான் எள்ளத்தனை இடமும் இல்லாமல் மேனி ரணமாகியிருக்கிறது. நெற்றியைத் துடைத்துக் கொண்டாள். ரத்தம் வழிந்தது. தோளைத் தொட்டாள். ரத்தம் வழிந்தது. இடுப்பைத் தடவினாள். ரத்தம் வழிந்தது. கால்கள் நல்லவேளை இருக்கிறது. துண்டாகிவிடவில்லை.

திடீரென்று யாரோ அவள் மீது விழுந்தார்கள். 'அம்மா!' என்று ஓர் அலறல் அலறி நகர்ந்து கொண்டாள். பார்த்தாள். ஒரு நரி அவளைத் தாண்டி ஓடிக் கொண்டிருந்தது. வானத்தில் வட்டமடிக்கும் கழுகுகளின் நிழல்



ஆதிவாசிக் குடிகளிடம் பட்ட
ணத்துக் குமரிகளின் மெருகு ஏறி வரு
கிறது. ஆனால் பட்டணத்துக் குமரிகளிடம்
ஆதிவாசிக் குடிகளின் ஆரோக்கியம் வந்
திருப்பதாகச் சொல்ல முடியுமா?
வண்ணப்படம்: ரவீந்திர பல்லா

தரையில். அந்த அரைகுறை நில...யும் மறைத்துக் கொண்டு, தா...தாவி ஓடியது. ரூப்மதிக்கு உட...ஒரு சிலிர்ப்புச் சிலிர்த்து அடங்கி...

உரக்கச் சில குரல்கள் ...டன.

காட்டுப் புதர்களின் ...மாகவே அவள் ஊர்ந்தாள்.

''ஊம், ஊம்! ஏற்றுங்... எல்லாவற்றையும் வண்டியில்!''—...றியின் ஆணவம் முற்றும் வெ...பட்டது.

தலையை உயர்த்திப் பா...தாள்.

பிசாசுகள் போலப் ...உருவங்கள் தென்பட்டன. இரட்...மாடு கட்டிய வண்டிகள் ஒவ்வொ...ருய்ப் புறப்பட்டுக் கொண்டிருந்த...

அவளுக்குத் திக்கென்றது.

சூர்யபூரில் சூறையாட...பொருள்களைக் கொண்டு போகி...களா பாவிகள்!

''அள்ளிப் போடு வண்...யில்!'' மீண்டும் அந்தத் தளபதி... கட்டளை.

''இதோ ஹுசூர்.''

''இத்துடன் சரியா?''

''ஆமாம், ஹுசூர்.''

''நல்லது. எட்டு வண்...களும் ஒன்றன்பின் ஒன்றாக வரி...யாக ஆக்ராவுக்குச் செல்ல வேண்டு... புரிகிறதா?''

''சரி, ஹுசூர்.''

வண்டிகள் நகரத் தொட...கின.

ரூப்மதி எட்டிப் பார்த்தா... எத்தனை பொன்னும் மணியும் எத்த...மூட்டைகள் சூறையாடப்பட்டிருக்கி...றன என்று தெரிந்து கொள்வதற்கா...

அவள் ரத்தம் உறைந்தது.

எட்டு வண்டிகளிலும் போய்... கொண்டிருந்தவை பொன்னும் மணி...மல்ல.

தலைகள்.

போர்வீரர்களின் வெட்ட...பட்ட தலைகள். தேங்காய்க் குலைகள் போலக் குவியல் குவியலாய்க் கொட்டப்பட்டிருந்த தலைகள். குண்டலங்களும் திலதங்களும் அணிந்திருந்த சூர்யபூர் படைவீரர்களின் தலைகள்.

(தொடரும்)

# வாளின் முத்தம்

16

படபடவென்று சிறகடித்துப் பறந்து கொண்டிருந்தன ஆக்ரா அரண்மனைப் புறாக்கள். சக்கரவர்த்தியின் கையால் தானியம் தின்னும் குதூகலம் அவைகளுக்கு.

ஆனால் சக்கரவர்த்தி குதூகலமாக இருப்பதாகத் தோன்றவில்லை, எட்ட நின்று பார்த்துக் கொண்டிருந்த பிரதம மந்திரி தோடர்மாலுக்கு. இவ்வளவுக்கும் அக்பரின் விசேடப் பிரியத்துக்குப் பாத்திரமான நாலைந்து புறா ஜோடிகள் தத்தித் தத்தி அவரையே சுற்றிக் கொண்டிருந்தன. ஒன்று அவருடைய தோள்மீதேகூட வந்தமர்ந்தது. சக்கரவர்த்தி யந்திரம்போல் அவைகளுக்குத் தானியங்களை இறைத்துக் கொண்டிருந்தார். அவருடைய உள்ளம் தீவிர சிந்தனையில் ஆழ்ந்திருந்தது. தார்த்தாரிய இனத்துக்கே உரிய அவருடைய சிறிய கண்கள் யோசனை மிகுதியினால் மேலும் இடுங்கினாற் போலிருந்தன. சற்றே தலையைத் திருப்பும் போதெல்லாம் பட்டுத் தலைப் பாகையில் இழைக்கப்பட்டிருந்த வைரங்கள் ஒளிவண்ணங்களை வாரியிறைத்தன.

''சக்கரவர்த்தி சற்று இளைப்பாறலாம். நான் செய்கிறேன் அந்த வேலையை,'' என்று முன்வந்தார் தோடர்மால்.

பருப்பு வகைகள் நிறைந்த தானியக் கிண்ணத்தைப் பிரதம மந்திரியிடம் ஒப்படைத்தார் அக்பர். ஒரு பெருமூச்சு அவரிடமிருந்து வெளிப்பட்டது.

''என்னால் ஆகக்கூடியது ஏதேனும் இருந்தால்...''

''இல்லை, நண்பரே. உங்களால் ஆகக்கூடியது இல்லை. என்னால் ஆகக் கூடியது—என்னால் மட்டுமே ஆகக்கூடியது—ஒன்று இருக்கிறது. அதற்கான ஆயத்தங்களை. இப்போது பிடித்தே செய்யுங்கள்.''

''எதற்கான ஆயத்தங்கள், சக்கரவர்த்தி?''

''நான் ஹஜ் யாத்திரை செல்லலாம் என்றிருக்கிறேன்.''

''சக்கரவர்த்தி!'' திடுக்கிட்டார் தோடர்மால். ''தாங்கள்...''

''உண்மையாகத்தான் சொல்கிறேன், தோடர்மால்,'' என்றார் அக்பர், மடிமீது வந்தமர்ந்த ஒரு வெண் புறாவைத் தடவிக் கொடுத்தபடி. ''மக்கமாநகர் சென்று ஆதி இறை இல்லமான காஃபத்துல்லாஃவில் ஹஜ் செய்துவர ஆசைப்படுகிறேன். அதன் பின்னர் மதினமாநகருக்கும் சென்று நபிகள் நாயகத்தின் தலமான ரவ்லா ஷெரீபையும் இபாரத் செய்துவிட்டு வரவேண்டும். அப்புறமாவது என்னைத் தூய்மையான முஸ்லிம் என்று இவர்கள் ஒப்புக்கொள்கிறார்களா பார்க்கலாம்...''

''ஆனால் அது... பெரும் பொறுப்பாயிற்றே என்பதால் கவலைப் படுகிறேன்...இரண்டு வருடம்கூட ஆகி விடலாம் தாங்கள் திரும்பி வர. இப்போதுள்ள ராஜாங்க நிலைமையில்...''

''பார்த்துக்கொள்ளத் தாங்கள் இருக்கிறீர்கள். அறிவு நுட்பத்தில் சிறந்த மற்ற அமைச்சர்கள் இருக்கிறார்கள்,'' என்றார் அக்பர். ''முஸ்லிம் மதகுருமார்கள் எனக்கெதிராகச் செய்து வரும் விஷமப் பிரசாரத்தை முறியடிக்க அது ஒன்றுதான் வழி என்று தோன்றுகிறது...ஜோன்பூர் காஜியான முல்லா முகம்மது யாஜ்தி என்னைக் குற்றம் சாட்டிக் கடுமையான ஃபத்வா வெளியிட்டிருக்கிறார்...''

மோகினி



''சக்கரவர்த்திக்குத் தெரியாத
ல்லே...'' என்ருர் தோடர்மால்.

தாம் இஸ்லாம் மதத்தவர்
ான் என்பதை நிரூபிக்க என்னென்ன
ண்டோ அவ்வளவையும் செய்து
ார்த்துவிட்டார் சக்கரவர்த்தி. இளவர
ர்களுக்கு ஆடம்பரமான முறையில்
னத் சடங்கு செய்துவைத்து விட்டார்.
ளவரசன் சலீமுக்கு மத போதனே
ள் சொல்லித் தர ஒரு மெளலாஞவை
மர்த்தியிருப்பதும் எல்லாருக்கும் தெரி
ம். ஆஜ்மீர் தர்காவுக்கு வருடா
ருடம் அவர் பாத யாத்திரை செல்
தும் அனேவரும் அறிந்த விஷயம்.
மேவாரிலுள்ள மோஹன், ராம்புரா
மாவட்டங்களுக்கு இஸ்லாம்பூர் என்று
பெயர் மாற்றினுர் சக்கரவர்த்தி. பத்
னேரிலும் ரூலியாவிலும் பாவேப்ரா
விலும் பூரிலும் பீம்ராவரிலும் ஏராள
மான முஸ்லிம்களேக் குடியேற செய்து
அவர்களுக்கு எல்லா வசதிகளேயும்
செய்து வைத்திருக்கிருர். ஹஜ் யாத்
திரை செல்ல விரும்புவோருக்கு அர
சாங்க கஜாஞவிலிருந்து நிதியுதவிகள்
தரும்படி கட்டளே இட்டிருக்கிருர்.

இதறகுமேல் சக்கரவர்த்தி
என்னதான் செய்ய முடியும் என்று
எண்ணிக் கொண்டார் தோடர்மால்.

"ஏற்பாடுகளைக் கவனிக்றேன் சக்கரவர்த்தி," என்று புறப்ட்டார்.

சக்கரவர்த்தி நெடு நேரம் ந்தப் புறாவின் மெத்தென்ற கழுத்தை ருடிக் கொடுத்த வண்ணம் பளிங்கு மேடையில் அமர்ந்திருந்தார்.

துல்ஹஜ் மாதமும் வந்தது.

சக்கரவர்த்தி மக்கமாநக ருக்கு யாத்திரை புறப்படுவது உறுதி ாகிவிட்டது.

மஞ்சத்தினின்றும் அவர் துயில் கலைந்தபோது, ஹாஜிகளின் முழக்கம் அவர் செவிகளை எட்டியது. 'லப்பைக்க அல்லா ஹு்ம்ம லப்பைக்க!' இதே மாதிரியான முழக்கத்துடன் ஒரு நாள் அவரை வளர்த்து ஆளாக்கிய பைராம்கான் புனித யாத்திரைக்குப் புறப்பட்டதும், குஜராத்தில் சகஸ்ர லிங்கம் நீர்த் தேக்கத்துக்கருகே அவர் குத்திக் கொல்லப்பட்டு இறந்ததும் அவருக்கு நினைவு வந்தன.

சூரத்தில் கப்பல்கள் தயாராக இருப்பதாகச் செய்தி வந்துவிட்டது. சக்கரவர்த்தி புறப்படத் தயாரானர். சம்பிரதாயப்படி ஒவ்வொரு பெரியவரிடமும் சென்று வணக்கம் செய்தார். ஒவ்வொருவரிடமும், "இஸ்



லாத்தின் ஐநதாவது கடமையான ஹஜ்ஜை நிறைவேற்றச் செல்கிறேன். இன்ஷ அல்லா. என்னல் தங்களுக்கு ஏதேனும் துன்பங்கள் நேர்ந்திருந்தால் என்னை மன்னித்துவிடுங்கள். தங்கள் மனம் புண்படும்படி ஏதேனும் செய்திருந்தால் அல்லது சொல்லியிருந்தால் அல்லாவுக்காகப் பொறுத்தருளுங்கள்," என்ற வாசகங்களைச் சொல்லி விடை பெற்ருர். அதிகாலை எழுந்து தொழுகையை முடித்துக் கொண்டார். அரண்மனையின் ஒரு பகுதியாகக் கட்டப்பட்டிருந்த பள்ளிவாசலுக்குச் சென்று துஆ ஓதிவிட்டு வெளியே வந்தார்.

## கர்நாடகத்தை மறந்தாயா?



12-7-79 குமுதத்தில் 'எங்கெல்லாம் தமிழ் மணக்கிறது' என்ற பகுதியில் மைசூர் பல்கலைக் கழகத்தைப் பற்றிக் குறிப்பே இல்லை.

மைசூர் பல்கலைக் கழகத்தில் மிகச் சிறந்த முறையில் தமிழ் கற்றுத் தரப்படுகிறது. பட்டதாரிகளையும், முதுநிலை பட்டதாரிகளையும் மட்டும் உருவாக்குவது இவர்களுடைய வேலை அல்ல. ஒவ்வொரு ஆண்டும் கோடை விடுமுறையில் இந்தியாவின் ஏதாவது ஒரு இடத்தில் ஒரு மையத்தை வைத்து இந்தியாவில் உள்ள தமிழாசிரியர்கள் சிலரை அழைத்துத் தமிழ் தெரியாதவர்களுக்குத் தமிழ் கற்றுத் தருவது எப்படி என்பது பற்றி சிறப்பு வகுப்புகள் நடத்துகிறார்கள் எந்த விதமான விளம்பரமும் இன்றி.

—ச. குணசீலன்

---

அமைச்சர்களும் உதவி அமைச்சர்களும் படை வீரர்களும் வர்த்தகர்களும் அரசாங்க அதிகாரிகளும் சாதாரணக் குடிமக்களும் அலை மோதிய கூட்டத்தைக் கம்பீரமாகப் பார்த்தார் சக்கரவர்த்தி. இவ்வளவு மக்கள் நம்மிடம் நம்பிக்கை வைத்திருக்கிருர்களே என்று எண்ணுகையில் அவர் நெஞ்சு நெகிழ்ந்தது. இத்தனை மக்களில் எவருக்கும் எந்த வித அநீதியும் கிடைத்துவிடக் கூடாதே என்று அஞ்சியவர்போல் அவர் கண்கள் சற்றே மருண்டன.

"வாழ்க ஷா இன்ஷா! ஓங்குக சக்கரவர்த்தியின் புகழ்!" — நூறு நூறு சிங்கங்களின் ஒருமித்த கர்ஜனைபோல் ஆர்த்தெழுந்தது ஆசி முழக்கம். ஆயிரம் ஆயிரம் கைகள் உயர்ந்தன வானை நோக்கி, 'நாங்கள் இருக்கிறோம் தங்களுக்குப் பக்கபலமாக' என்று உறுதியளிப்பதுபோல.

சக்கரவர்த்தி முறுவலுடன் தலையசைத்து அவைகளை ஏற்றுக்கொண்டார். பின்னர் கையை உயர்த்தினர். "எல்லாம் அவன் அருள்," என்று குறிப்பிடுகிற மாதிரி பள்ளிவாசலை நோக்கிக் காட்டினர். மக்களின் ஆரவாரம் பின்னும் பெருகிற்று.

அதே வினடி சக்கரவர்த்தி இன்ஞென்றும் கண்டார்.

''நான் என் குழந்தைகளுக்கு மூன்றுலேயே குடிக்கிறேன். சிகரெட் பிடிக்கிறேன்.''



ஒரு பேட்டியில் இந்தி நடிகை தனுஜா.

—கோமதி

கூட்டத்தின் வெளி விளிம்பில் ஒரு கிழவன் முண்டிக் கொண்டிருந்தான். கும்பலைப் பிளந்து கொண்டு சக்கரவர்த்தியை நெருங்குவதற்காக அவன் படாதபாடு படுவது தெரிந்தது. நெருக்கமாக இருந்த கூட்டத்தினர் அவனுக்கு வழிவிடத் தயாராயில்லை. 'ஏனய்யா முண்டுகிறீர்?' என்று சொல்லி அவனைப் பின்னுக்குத் தள்ளிக் கொண்டிருந்தார்கள். இரண்டடி உள்ளே புகுவான்—நாலடி வெளியே தள்ளப்படுவான். அவனைப் பார்க்க மாமன்னருக்குப் பரிதாபமாயிருந்தது. ஏன் அப்படி துடிக்கிறுன் அவன் என்று ஒரு விநாடி ஆச்சரியப்பட்டார். மறுவிநாடி அவர் உதட்டில் புன்னகை அரும்பியது. கிழவன் யாரென்பதைக் கண்டுகொண்டார். புன்னகை மறைந்து யோசனை முளைத்தது அவர் புருவங்களில். ரொம்ப அவசரமான செய்தியாகத்தான் இருக்கும். என்ன அப்படி?

அருகிலிருந்த அமைச்சரிடம், ''அங்கே ஒரு பெரியவர் என்னைப் பார்க்க விரும்புகிறுர். வழிவிடச் சொல்லுங்கள், பாவம்,'' என்றுர்.

''வழி! வழி!''— மறுகணமே ஆணைகள் பிறந்தன. பறந்தன.

''எவனுவது பிச்சை கேட்பதற்காகச் சக்கரவர்த்தியைத் தொல்லை செய்யக்கூடும். நாங்கள் பார்த்துக் கொள்கிறுேமே?'' அருகிலிருந்த தளபதி அபுல்பாசல் மெல்லச் சொல்லிப் பார்த்தார்.

சக்கரவர்த்தி கேட்கவில்லை. ''இல்லை, உங்களுக்கு அந்தப் பெரியவரைப் பற்றித் தெரியாது. வரச்சொல்லுங்கள்,'' கண்டிப்புடன் கூறிவிட்டார்.

கூட்டத்தை விலக்கிக்கொண்டு முன்னே வந்தான் அந்தக் கிழவன். அவன் நெடுந்தூரம் பயணம் செய்துள்ள கதையை அவனைக் காலோடு தலை போர்த்திருந்த புழுதி சொல்லிற்று.

அருகில் வந்ததும் இருவர் கண்களும் சந்தித்துக் கொண்டன. சூழ்ந்திருந்த அந்தக் கூட்டத்தில் எவரும் கண்டுபிடிக்க முடியா வண்ணம் அவை தமக்குள் பேசிக்கொண்டன.

''என்ன முனிம்கான்?'' அவனுக்கு மட்டுமே கேட்கும்படியாகத் தாழ்ந்த குரலில் வினவினுர் ஷா இன் ஷா.

அவருடைய அந்தரங்க ஒற்றனை முனிம்கான் மின்னல்போல் பார்வையைச் சுழற்றினுன். சட்டென்று ஒரு முடிவுக்கு வந்தான். இரு கைகளையும் அக்பரின் தலைக்கு மேல் உயர்த்தி ஆசீர்வாதம் செய்தான். ''புனித யாத்திரைக்குச் செல்லும் தங்களுக்கு இறைவன் எல்லா நலன்களும் அளிப்பாருக,'' என்றுன், எல்லாருக்கும் கேட்கும்படியாக.

''நன்றி.'' தலைகுனிந்து அவன் ஆசிகளை வாங்கிக் கொண்டார்



வேனிற் காலம் வந்துவிட்டது என்றுல், அமெரிக்கர்களுக்கு ஏக உற்சாகம் ஏற்பட்டுவிடும். சனி ஞாயிறு போன்ற விடுமுறை நாட்களைச் சிறிதும் வீணுக்காமல், ஏதாவது ஒரு காரணத்தை வைத்து, விழாக்கள் ஊர்வலங்கள் என்று தொடங்கி கொண்டாட்டங்களில் ஈடுபட்டு விடுவார்கள். நியூயார்க் போன்ற பெரிய நகரங்களில், பிரத்தியேக காரணம் ஏதுமின்றியே, ஒரு தெரு முழுவதிலும்

க்பர். இவன் என்னதான் தெரிவிக்க ந்திருக்கிருனே என்ற குறுகுறுப்புப் ன்னும் அதிகமாக வளர்ந்தது அவர் ள்ளத்தில்.

"இந்த ஏழைப் பக்கிரி ஆஜ் லிருந்து வருகிறேன். துறவி முயுனித் ன் அவர்கள். இந்தப் புனித ாளில் தமது ஆசியைத் தங்க க்கு அளிக்கச் சொன்னுர்கள். அதற் ாகவே ஓடி ஓடி வந்தேன்," என்ருன் முனிம்கான், தன் அவசரத்தை வெளிக் ாட்டாதபடி.

"பாக்கியவானுனேன்." சிரம் தாழ்த்தி வணக்கம் தெரிவித்தார் அக்பர்.

"தங்களுக்காக அந்தரங்க மாக ஒரு செய்தி தெரிவிக்கச் சொன்னுர்."

"அப்படியா? இப்போதே சொல்லுங்கள்." குனிந்து அவன் வாயருகே செவியை வைத்துக் கொண் டார் சக்கரவர்த்தி.

முனிம்கான் அவர் காதில் சொன்ன செய்தி! ஒரே வினுடியில் அக்பர் தன் நிதானத்தைக் காற்றில் பறக்க விட்டுவிடுவார் போலிருந்தது. ஆனுல் ஆண்டாண்டுகளாகப் பழக்கப் படுத்திக் கொண்டிருந்த மன உறுதி அவரைக் காப்பாற்றியது. உள்ளுக்குள் பெரும் கொந்தளிப்பு. ஆனல் அதை வெளிக்காட்டாமல் மறைத்துக் கொண் டார்.

மீண்டுமொரு முறை சிரம் தாழ்த்தி வணங்கினுர். ஒற்றன் முனிம் கான், வந்தது போலவே, கூட்டத்தில் முண்டிக்கொண்டு வெளியேறிவிட்டான். சக்கரவர்த்தியின் அடுத்த கட்டளைக் காக அவருடைய முகத்தைப் பார்த்துக் கொண்டு அத்தனை பேரும் அசைவற்று நின்றனர். துரும்பு விழுந்தாலும் பிரம் மாண்டமாய்க் கேட்கக்கூடிய நிசப்தம் அங்கே நிலவியது.

"பிரதம மந்திரி அவர்களே." அழைத்தார் சக்கரவர்த்தி.

"இதோ ஷா இன்ஷா." தோடர்மால் முன்வந்தார்.

"நாமொன்று நினைக்க கீர்த்தி வாய்ந்த இறைவனின் திருவுள் ளம் வேறுவிதமாக இருக்கிறது."

"சக்கரவர்த்தி என்ன சொல் கிறீர்கள்?"

"நமது ஹஜ் பயணத்தை நிறுத்த வேண்டியவனுக இருக்கிறேன்."

அந்தக் கூட்டம் மொத்தத் துக்கும் கேட்டது சக்கரவர்த்தி கூறிய தகவல். ஏன்? ஏன்? ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். ஆளுக்கு ஓர் ஊகம். தலைக்கு ஒரு தகவல். பர பரப்பு சூறைக்காற்ருக வீசியது. ஆனல் தோடர்மால் மட்டும் தனக்குள் ஏதோ எண்ணிக் கொண்டார். அந்தக் கிழவன் அவர் நெற்றி சுருங்கியது.

"சக்கரவர்த்தி இவ்வளவு பெரிய முடிவு எடுத்திருக்கிருர் என்ருல் அதற்குத் தகுந்த காரணம் இல்லாமல் இருக்காது..."

"இப்போது எனக்குக் கால பலம் நன்ருயில்லை என்று ஆஜ்மீர் மகானவர்கள் செய்தி அனுப்பியிருக் கிருர்கள்," என்ருர் அக்பர்.

பிரமிப்பின் ஓசைகள் கூட்ட மெங்கும் வெடித்தன.

சக்கரவர்த்தி தொடர்ந் தார்: "இந்தச் சமயத்தில் நான் வெளி நாட்டுப் பயணம் ஏதும் மேற்கொள்ளக் கூடாதென்று அந்த மகான் எச்சரிக்கை செய்திருக்கிருர். அதற்குக் கட்டுப்பட வேண்டியது என் கடமை."

(தொடரும்.

---

வாகனப் போக்குவரத்தை முற்றிலும் நிறுத்திவிட்டு, வீதியோரங்களில் நிறை யக் கடைகளைப் பரப்பி 'ஸ்ட்ரீட்ஃபேர்' என்று ஆரம்பித்துவிடுவார்கள். வாத் திய கோஷ்டி இசையும், நடனங்களும், மற்றும் பல்வேறு கேளிக்கைகளும் நிறைந்த இந்த விழாக்களில் அமெரிக் கர்கள் மட்டுமின்றி, பல்வேறு வெளி நாட்டினரும், மிக உற்சாகத்துடன் கலந்துகொள்வர். இங்கு வாழ் இந்தியர் களும் இதற்கு விதிவிலக்கல்ல.

அண்மையில் நியூயார்க்கில் நடந்த ஒரு 'ஸ்ட்ரீட் ஃபே'ருக்கு நான் சென்றபொழுது அங்கு மிகக் கவர்ச்சியாக உடை தரித்து உற்சாகத் துடன் ஈடுபட்டிருந்த சில சிறுமிகளைப் புகைப்படம் எடுத்தேன்.

தகவலும் வண்ணப் படமும் :

நிர்மலா சந்தானம்



# ஓடு கிழவி ஓடுகிறாள்

'மாதங்கி'

"அம்மாடி! இப்படியா வலி உயிரை எடுக்கும். கொஞ்சம் தண்ணி குடுங்களேன். இந்தப் பாழாப்போற நர்ஸு அந்தக் கம்பவுண்டர் தடியனோடே சிரிச்சுச் சிரிச்சு எத்தனை நேரம் தான் பேசிட்டிருப்பா. அய்யோ, நர்ஸு!"

வேதாம்பாள் சற்று உரக்கவே கூப்பிட்டாள். பக்கத்துக் கொட்டகையில் நடந்த காதல்படம் ஒன்றைப் பற்றி கம்பவுண்டரிடம் லயித்துக் பேசிக் கொண்டிருந்த நர்ஸ் கல்யாணிக்கு எரிச்சலாக வந்தது. "இந்தா குடி. மறுபடியும் உடனே தண்ணின்னு என் உயிரை எடுக்கப் படாது." என்றாள் எரிச்சலுடன்.

"நான் ஏண்டியம்மா உன் உயிரை எடுக்கிறேன். என் உயிரைத் தான் அந்த எமன் எடுக்கப் பாடுபட்டுக்கொண்டிருக்கானே? இப்படியா மண்டை விண் விண்ணு தெறிக்கும். ஊரைவிட்டுக் கிளம்பின சகுனமே சரியில்லே. 'இப்போ எதுக்கு கிராமத்துக்கு போறீங்கம்மா'ன்னு மருமகள் அந்தக் கரிநாக்காலே கேட்டுது. 'ஊரிலெ மாரியம்மனுக்குப் பொங்கல் போடணும், நேர்ந்துக்கிட்டிருக்கேன்'னு நம்பிணுத்தானே? மாப்பிள்ளே வேறு ரயிலடிக்கு வந்து பொங்கல் வச்சுட்டுச் சீக்கிரம் வந்துடுங்கன்னான். பக்கத்து வீட்டு பங்கஜம் 'இங்கே வெயில் கொளுத்தது. நீங்க மட்டும் ஜாலியா கிராமத்துக்குப் போய், தோப்பு துரவுன்னு அனுபவிக்கப் போறீங்க'ன்னுது. எல்லாம் வயித்தெரிச்சல். இங்கே இதோ அனுபவிக்கிறேனே. தலையிலே கட்டுப் போட்டுச் சோறு தண்ணியில்லாமே... அய்யோ நர்ஸ், இந்தத் தலையணையைக் கொஞ்சம் திருப்பி வைய்யேன், உயிர் போவுதே வலி."

"ஏ கிழவி; சும்மா பிணத்திக்கிட்டிருக்காதே. மற்ற நோயாளிங்க தூங்கணும்."

"நல்லா தூங்கட்டுமே. யாரு வேண்டாம்னு சொன்னா? என் விதி என்னை ஆட்டுது. நல்ல வேளை எப்படியோ வெள்ளிப் பாத்திரங்களைக் கொண்டு வந்தாச்சு. நகைகளும் கொண்டு வந்தாச்சு. யார் இருந்தாலும் யார் போனாலும் சாகிற வரையிலே வயித்தைக் கழுவிக்க ஏதாச்சும் சொத்து வேணுமே—கையிலெ காசில்லாட்டி பெண்ணென்ன புள்ளே என்ன..."

"ஏய் தொண தொணப்புப் பொம்புளே—இதோ உன்னைப் பார்க்க ஒரு புள்ளெ, பொண்ணு பசங்க எல்லாம் வருங்க. இனிமே கொஞ்சம் அவுங்ககிட்டே சொல்லி அழு!" நர்ஸ் சொன்னாள்.

"அய்யோ வாருங்களா? அப்படீன்னா! சென்னையிலே ஒண்ணும் நடக்கலியா? அதென்னமோ 'ஸ்கைலாப்' விழப்போவுது என்று சொன்னீங்களே. அதுக்குப் பயந்துக்கிட்டுத்தானே வெளியே சொன்னா குடும்பத்தோட கிளம்பும்னு பயந்து இருக்கிறதை எடுத்துக்கிட்டு மாரியாத்தாளுக்குப் பொங்கல் போடணும்னு பொய்யைச் சொல்லிட்டு கிராமத்துக்கு வந்து என்னைக் காப்பாத்திக்கலாம்னு நினைச்சேன். மாரியாத்தா என்னைப் பழி வாங்கிட்டாயே. கிராமத்துக்கு வந்தவள் தலையிலெ பரணிலெ வச்சிருந்த உலக்கை வந்து விழணுமா? நான்தான் எதுக்காக முக்காலியிலே எறிப் பரணைச் சுத்தம் பண்ணப் போனேன்... எல்லாம் மகமாயி கோபம். இனிமே பொய் சொல்லமாட்டேம்மா. சென்னையிலெ 'ஸ்கைலாப்' விழலையா?"

"இங்கே இருக்கிற மகமாயி அங்கேயும் இருக்கா இல்லே. நாங்க எல்லாம் மாரியாத்தாளை அங்கிருந்தே வேண்டிக்கிட்டோம். யாருக்கும் ஒண்ணும் ஆகாமெ அவ காப்பாத்திட்டா."

பேரன் பேசிக்கொண்டிருந்தான்.

# வாளின் முத்தம்

'மோகினி'

## 17

ஹஜ் யாத்திரையை நிறுத்திவிட்டதாகச் க்கரவர்த்தி அறிவித்ததும் ஒரே பர ரப்பு!

தோடர்மால் திகைத்தார். ாதக்கணக்காகச் செய்துவந்த ஏற்பாடு ளை ஒரு கணத்தில் முறித்துவிட்டாரே மாமன்னர்! காலபலம் நன்ருயில்லை ன்று காரணம் வேறு சொல்கிருரே!

ஆனல் அந்த மாபெரும் கூட்டத்திலிருந்த சின்னஞ்சிறு குழந் தைக்குக்கூடத் தெரியும்-- சிற்சில ஆழமான நம்பிக்கைகள் சக்கரவர்த்திக்கு உண்டு என்று. அவைகளை மூட நம்பிக்கைகள் என்றும் சிலர் சொல் வார்கள். மதப் பெரியவர் ஒருவர் ஒரு கோடு கிழித்தால் என்ன நேர்ந்தாலும் அதைச் சக்கரவர்த்தி தாண்டமாட்டார் என்று அவர்களுக்குத் தெரியும். நாள் நட்சத்திரங்களைப் பெரிதும் நம்புகிறவர் அவர் என்பதும் அவர்களுக்குத் தெரி யும். போருக்குப் புறப்படு முன்னல் அரண்மனைச் சோதிடர்கள் நல்ல நாளும் முகூர்த்தமும் குறித்துத் தந்த பின்னரே அவர் அரண்மனையை விட்டு வெளியே காலடி வைப்பார் என்பது சாம்ராஜ்யமெங்கும் தெரிந்த சேதி.

அக்பர் தொடர்ந்தார்: ''நான்தான் செல்ல வேண்டா மென்று பெரியவர் சொல்லியனுப்பி யிருக்கிருரே தவிர பதிலி ஹஜ் ஒரு வரை நியமிக்க வேண்டாமென்று அவர் சொல்லவில்லை. என் சார்பில் வேறெரு ருவர் மக்கமாநகர் சென்று வரட்டும். அது சாத்திர சம்மதமானதே. அதற்கு நமது பெரியவர்கள் அங்கீகாரம் கொடுத் திருக்கிருர்கள்.''

தோடர்மால் சிந்தனை வயப் பட்டவரானர். அங்கு குழுமியுள்ள ஒவ் வொருவர் மீதும் அவர் பார்வை சென் றது. சக்கரவர்த்தி யாரைக் குறிப்பிடப் போகிருர்? அவர் கண்கள் தேடின.

''இதோ இங்குள்ள என தருமை நண்பர் இதிமத்கான் அவர் களைப் பதிலி ஹஜ்ஜாக நியமிக்கிறேன்,'' என்று அறிவித்தார் அக்பர்.

'நல்ல தேர்வு! நல்ல தேர்வு!' என்ற ஆமோதிப்புகள் சக்கரவர்த்தி யின் காதை எட்டின. தூர நின்றிருந்த இதிமத்கானுக்கு ஆச்சரியம்—இந்துஸ் தானத்தின் புகழ்பெற்ற சக்கரவர்த்தி, சாதாரணக் குடிமகனை தன்னை பதிலி ஹஜ்ஜாக நியமிக்கிருரே என்று. ஆனல் அவரைத் தவிர வேறு யாருக்கும் ஆச்சரியம் இருக்கவில்லை. சென்ற ஆண்டு அவரும் ஷா அபு திராப் என்ற இன்னெரு பெரியவரும் புனித ஹஜ் யாத்திரையிலிருந்து திரும்பி வந்தபோது, மக்கமாநகரிலிருந்து ஒரு பெரும் கல்லை அரும்பாடு பட்டு எடுத்து வந்திருந்தார்கள். நபி பெருமானின் திருவடித் தடம் படிந்திருப்பதாக நம்பப்பட்ட திருக்கல் அது. சூரத்தில் கப்பலில் இறங்கி, குஜராத் வழியாக அது அஜ்மீருக்கு வந்து சேர்ந்தபோது, சக்கரவர்த்தி அதை யானை மீது ஏற்றி ஊர்வலமாக எடுத்து வருமாறு பணித் தார். பின்னர் அது பள்ளிவாசலுக்குக் கொண்டு செல்லப்படுவதற்காக இறக் கப்பட்டபோது அதைத் தோள் சுமந்த வர்களில் சக்கரவர்த்தியும் ஒருவர். சில அடி தூரம் நடந்து சென்ற பின் னரே அந்தப் புனிதக் கல்லை மற்றவர் களிடம் ஒப்படைத்தார். அந்தப் பெரும் பேற்றைப் பெற்ற நாள் முதல், அதற்குக் காரணமாக இருந்த பெரிய



ஸான்டிகோ குழந்தைகள் ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வருகிறது பென்னி வான்டைன் என்ற 5 வயதுப் பெண் குழந்தை.

நோய்?

இந்த வயதிலேயே வயோதிகம் வந்துவிட்டது. சருமம் சுருங்கி உலர்ந்து தலை வழுக்கையாகி, கைகால்கள் மெலிந்து வற்றிவிட்டன. ரத்த அழுத்தம், காது கேளாமை, பார்வைக் குறைவு, சிறுநீரகக் கோளாறு—முதலிய கிழவர்களுக்கு மட்டுமே வரக்கூடிய நோய்கள் இவளுக்கு வந்திருக்கின்றன.

காக்கெய்ன் ஸிண்ட்ரோம் என்ற இந்த நோய் உலகத்தில் இதுவரை ஐம்பதே பேர்களுக்குத்தான் வந்திருக்கிறது.

—நியூஸ்வீக்

வர் இதிமத்கானிடம் அக்பருக்குக் குன்றாத மதிப்பு உண்டு என்று எல்லாரும் அறிவார்கள்.

இதிமத்கானை நெருங்கினார் சக்கரவர்த்தி. "தாங்கள் எனக்காகப் பதிலி ஹஜ்ஜாக இருந்து இந்தப் புனிதக் கடமையை முடித்துத் தர வேண்டுகிறேன்," அவருடைய இரு கைகளையும் பிடித்துக் கொண்டு கேட்டுக் கொண்டார்.

"எனக்குக் கிடைத்த பாக்கியம் ஷா இன் ஷா," என்றார் இதிமத்கான்.

சற்று நேரத்துக்கெல்லாம் மற்ற ஏற்பாடுகள் முடிவடைந்தன. நகர மக்கள், சக்கரவர்த்தி பயணம் செய்யவில்லை என்பதாலேற்பட்ட ஏமாற்றத்தைத் தங்களுக்குள் பேசிப் பகிர்ந்து கொண்டு கலைந்தார்கள்.

சக்கரவர்த்தி அரண்மனைக்குத் திரும்பினார். அவருடைய முகத்தில் பதிந்திருந்த சிந்தனைக் கோடுகளும் அவர் காட்டிய ஆழ்ந்த மௌனமும் பெரும்பாலான அமைச்சர்களைப் பயம் கொள்ளச் செய்தன. ஒவ்வொருவ அவர்கள் பின்தங்கினார்கள். தோ மால் ஒருவர் மட்டுமே சயன அ வரையில் சக்கரவர்த்தியைப் தொடர்ந்தார்.

அக்பர் மஞ்சத்தில் சா தார். பணியாட்களை வெளியே போ படி சைகை காட்டினார்.

தோடர்மாலும் அக்ப மட்டுமே தனித்திருந்தார்கள். வாசனைப் புகைகள் மனத்தை மயக்கும் அந் சயனக் கிருகத்தில்.

"பிரதம மந்திரி எதற்கவோ காத்திருக்கிறாற்போல் தோன்றுகிறதே?" நீண்ட நேர மௌனத்துக்குப் பிறகு வினவினார் மாமன்னர்.

"ஆம். சக்கரவர்த்தி உண்மையைச் சொல்லப் போகிறேனென்றுதான்," என்றார் தோடர்மால்.

"உண்மையா?" பிரதம மந்திரியைக் கூர்ந்து பார்த்தார் அக்பர்.

"அந்தக் கிழவன், அஜ்மீர் பெரியவரிடமிருந்து வந்திருக்கவில்லையென்று எனக்கொரு சந்தேகம்."

"இருக்கலாம்."

"அவன் சக்கரவர்த்தியின் அந்தரங்க ஒற்றனை முனிம்கானைப் போலிருந்ததாக மேலும் சந்தேகம்."

"அதுவும் இருக்கலாம்." கைகளைத் தலையின் பின்னே கோத்துக் கொண்டு நன்றாக மஞ்சத்தில் சாய்ந்தார் சக்கரவர்த்தி.

"ஆகையால், சக்கரவர்த்தி பயணத்தை நிறுத்தியதற்குக் காலபலன் காரணமாக இராது என்று மீண்டுமொரு சந்தேகம்."

"உண்மைதான்." விருட்டென்று எழுந்து கொண்டார் சக்கரவர்த்தி. வைடூரியங்கள் இழைத்த அவருடைய பாதுகைகள் மோதிப் பட்டென்று ஓசையிட்டது. பிரதம மந்திரியை அவர் நிமிர்ந்து நோக்கினார். அந்த முகத்தின் ரத்தச் சிவப்பைக் கண்டு தோடர்மால் பயந்தே போனார். தாள முடியாத கடும் சீற்றம் சக்கரவர்த்தியின் உள்ளத்திற்குள் குமுறிக் கொண்டிருக்கிறது என்பதை அந்தச் சிவப்புப் புலப்படுத்தியது.

"தோடர்மால்!" என்றார். மற்றவர்களின் முன்னே காட்டிக் கொண்டுவிடக் கூடாதென்று வெகு



நேரமாக அவர் அடக்கிக் கொண்டிருந்த சினம் குரலில் பீரிட்டுப் பாய்ந்தது. "அந்தக் கான் சூர் நம்பிக்கைத் துரோகம் செய்துவிட்டான்! என் திட்டத்தையெல்லாம் பாழாக்கிவிட்டான்! இந்துஸ்தானத்தின் வரலாற்றில் எனக்கு அழியாத களங்கம் இடம் பெறும்படி பண்ணிவிட்டான்...அவனை... அவனை..."

"கான் சூரா!" தோடர்மாலின் எண்ணங்கள் கிடுகிடுவென்று ஓடின. அக்பரின் செவிலித் தாயான மாகம் அனகாவின் இரண்டாவது பிள்ளையல்லவா அவன்?

"அவன் என்ன காரியம் செய்துவிட்டான் தெரியுமா தோடர்மால், என்ன காரியம் செய்துவிட்டான் தெரியுமா!" பிரதம மந்திரியின் தோளை உலுக்கிப் பேசினார் சக்கரவர்த்தி. "என் உத்தரவு இல்லாமல் சூர்யபூரின்மீது படையெடுத்திருக்கிறான். போருக்குத் தயாராயில்லாத மக்களைப் படுகொலை செய்து, அரண்மனையைச் சூறையாடியிருக்கிறான். போரில் வெட்டப்பட்ட தலைகளை வண்டிகளில் ஏற்றித் தலைநகருக்குக் கொண்டு வந்து கொண்டிருக்கிறான்!"

தோடர்மால் இந்தத் தகவலை எதிர்பார்க்கவேயில்லை. ராஜபுதனத்தில் இப்போது போர் மூளக்கூடாதென்று சக்கரவர்த்தி எடுத்துக்கொண்ட அக்கறை என்ன, அவ்வளவையும் ஒரு நொடியில் இவன் பாழாக்கியதென்ன!

"கான் சூர். . . அவனையும் அவன் படைகளையும் நாம் ரணதாம்பூரில் அல்லவா நிறுத்தி வைத்திருந்தோம்?"

"ஆம். அங்கேயிருந்து அவனாகவே புறப்பட்டுச் சூர்யபூரைத் தாக்கியிருக்கிறான்!" சக்கரவர்த்தி குறுக்கும் நெடுக்குமாக வெறி பிடித்தவர்போல நடந்தார். "அந்தப் பெண் ரூப்மதிக்கு நான் கொடுத்த வாக்கு என்ன ஆயிற்று! சூர்யபூர் ராஜவம்சத்தினரும் மக்களும் என்னை எப்படிப்பட்ட நம்பிக்கைத் துரோகியாக, நயவஞ்சகனாக எண்ணுவார்கள்? கேவலம், கேவலம்!



பல்லியின் நடு உள்ள கறுப்புப் புள்ளியைப் பதினைந்து— இருபது வினாடிகள் உற்றுப் பாருங்கள். பிறகு அண்ணாந்து விட்டத்தை உற்றுப் பாருங்கள். சில வினாடிகளில் அந்த வெறும் விட்டத்தில் ஒரு கறுப்புப் பல்லி கண்ணுக்குப் புலப்படும்.

— டிட்பி

என் மதிப்பையும் பெயரையும் கௌரவத்தையும் கெடுத்த அந்த கான் சூரை...''

தோடர்மால் அஞ்சினார் சக்கரவர்த்தியின் சினத்தைக் கண்டு.

மாகம் அனகாவின் மூத்த பிள்ளையான ஆதம்கானுக்குத்தான் அப்படியொரு முடிவு நேர்ந்ததென்றால் இரண்டாவது பிள்ளையான கான் சூருக்குமா...

நினைக்கும்போதே நடுக்கமாயிருந்தது.

''சக்கரவர்த்தி அவசரப்பட்டு விட வேண்டாம். தங்கள் செவிலித் தாயின் தளர்ந்த வயதையும் நிலைமையையும் கவனிக்க வேண்டும்,'' என்றார் தயக்கத்துடன்.

''தாட்சண்ணியம் காட்டிக் காட்டித்தான் இந்த நிலைமை வந்தது.'' அக்பர் கோபத்துடன் எழுந்து அடுத்த அறைக்குச் சென்று விட்டார். பிரதம மந்திரி தம்மைப் பின் தொடர வேண்டாம் என்பதை அவருடைய வேகம் காட்டியது. சற்றுக் காத்திருந்துவிட்டுத் தோடர்மால் ஒரு பெருமூச்சுடன் திரும்பி விட்டார்.

ஷா இன் ஷா கைகளைப் பின்புறம் கோத்தபடி வெகு நேரத்துக்கு உலாவிக் கொண்டிருந்தார். சாளரத்தின் வழியே நோக்கிய போது தொலை தூரத்தில் கறுப்புச் சரமாக யமுனை ஓடுவது தெரிந்தது. சக்கரவர்த்தியின் ஹஜ் பயணத்துக்காக நகரம் பூண்டிருந்த கோலாகல அலங்காரங்கள் இன்னும் அங்கங்கே தோரணங்களாக ஆடிக் கொண்டிருந்தன; கொடிகளாக படபடத்துக் கொண்டிருந்தன. மெல்லிய ஒலியலைகளில் வாத்தியங்களின் இசை வந்து கொண்டிருந்தது. நந்தவனத்தினருகே இளவரசர்கள் ஓடிப்பிடித்து விளையாடும் கல்கலச் சிரிப்பு... அணிலொன்று கிளையிலிருந்து தரைக்குக் குதிப்பதும், மறுபடி கிளைக்குத் தாவுவதுமாக விளையாடும் வேடிக்கை...

சக்கரவர்த்தி ஒரு முடிவுக்கு வந்தார். மஞ்சத்தினருகே இருந்த வெண்கல மணியில் இரண்டு முறை தட்டினார். ஓடிவந்த காவலாள் தலை தாழ்த்தி வணக்கம் சொன்னான்.

''அமீர் ஹுசேனை நான் வரச்சொன்னதாகச் சொல்லு. உடனே வரச் சொல்!'' என்று கட்டளையிட்டார் சக்கரவர்த்தி.

சற்றைக்கெல்லாம் அமீர் ஹுசேன்—ஆக்ரா கோட்டையின் பிரதான தளபதி—''அடிமையின் வணக்கம், சக்கரவர்த்தி,'' என்றபடி அவர் முன்னே வந்து நின்றான்.

''கேள். சூர்யபூரிலிருந்து கான் சூர் வந்து கொண்டிருக்கிறான், போரில் வெட்டிய தலைகளை வண்டியிலேற்றிக் கொண்டு. அவனை மட்டும் உள்ளே விடு. அவனுடைய அருவருப்பான வண்டிகள் உள்ளே வந்து கோட்டையை அசுத்தப்படுத்த வேண்டாம். புரிகிறதா?''

''கட்டளை ஷா இன்ஷா.'' கோட்டைத் தளபதி ஓடினான் உத்தரவை உடனே நிறைவேற்ற.

## ...என்ன உசத்தி?



பல வருட முன்பு...சென்னை தமிழ் இசைச் சங்கத்தின் வெள்ளி விழா.

வாரியார் அவர்கள் தம் உரையின் இடையே, ''அப்பனும் நீ, அம்மையும் நீ, மாமனும் நீ,'' என்று வரும் திருமுறைப் பாடல் ஒன்றைக் குறிப்பிட்டார். சபையிலிருந்த ஒருவர், ''கடவுள் எப்படி மாமன் ஆகமுடியும்?'' என்று சந்தேகம் எழுப்பினர்.

''மாமன் என்பவன் யார்? தான் பெற்ற பெண், பொன், பொருள், பூமி, செல்வங்கள் இவற்றை வேறொருவனுக்குக் கொடுத்து அவன் அவற்றை அனுபவித்து மகிழ அதைப் பார்த்துத் தான் மகிழ்ச்சி அடைபவன் தான் மாமன் என்பவன். இந்த வையகமும் இதில் உள்ள நீர் நிலவளங்களும் இயற்கைச் செல்வங்களும் உங்கள் அப்பன் சொத்தா அல்லது பாட்டன் சொத்தா? இறைவன் படைப்பு. இறைவன் சொத்து. அவன் சொத்தை மக்களாகிய நாம் அனுபவித்து மகிழ்கிறோம். அதைக் கண்டு இறைவன் தான் மகிழ்கிறான். எனவே நமக்கு மாமன்,'' என்றார் வாரியார்.

—ஏ. சண்முக சுந்தரம்.

---

இன்னொரு காவலன் மெல்ல உள்ளே வந்தான். ''சக்கரவர்த்தியைப் பார்க்க...''

அக்பர் வெடித்தார். ''நான் யாரையும் பார்க்கத் தயாராயில்லை.''

''என்னைக் கூடவா குழந்தாய்?''—சிரித்தபடி அவருடைய தமக்கையார் குல்பதன் பேகம் உள்ளே நுழைந்தாள்.

''என்னை மன்னியுங்கள் தமக்கையாரே.'' சக்கரவர்த்தியின் குரல் வலுக்கட்டாயமான மரியாதையால் தாழ்ந்தது. ''யாருடனும் நிதானமாய் பேசக் கூடிய மனப் பக்குவத்தில் நான் இல்லை...''

''தெரியும் குழந்தாய். தோடர்மால் எல்லாம் சொன்னர்.'' மஞ்சத்தினருகே இருந்த இருக்கையில் உட்கார்ந்தாள் குல்பதன் பேகம். ''கான் சூர் செய்தது ரொம்பத் தப்பு. ரொம்ப ரொம்பத் தப்பு. ஆனல் அவனை அளவுக்கு மீறித் தண்டித்து விடக் கூடாது" என்று சொல்லத்தான் இப்போது வந்தேன். உன் வளர்ப்புத் தாய் மாகம் அனகாவை நீ மறந்து விடக் கூடாது...''

''இதோ பாருங்கள்.'' தன்னை மறந்து கோபப்படவிருந்தவர் திருத்திக் கொண்டார். ''இன்றைய ராஜாங்க நிலைமை தங்களுக்குத் தெரியாது...''

''தெரியுமப்பா, தெரியும். அதற்காக உன்னைத் தாலாட்டிச் சீராட்டி ஆளாக்கிய வளர்ப்பு அன்னைக்கு மன வருத்தம் ஏற்படுத்தலாமா? ஏற்கெனவே நீ அவருடன் பேசுவது கிடையாது. நோய்ப் படுக்கையில் கிடக்கிறார் பாவம். செய்தியைக் கேள்விப் பட்டு, உன்னிடம் நேரில் பேச வேண்டுமென்று...''

''வேண்டாம், வேண்டாம். நான் அவரைப் பார்க்கமாட்டேன்!''

''வெளியே காத்துக் கொண்டிருக்கிறார்.'' தம்பியின் ஆட்சேபத்தைப் பொருட்படுத்தாமல் குல்பதன் பேகம் அறைக்கு வெளியே சென்றாள். மாகம் அனகாவை அழைத்துக் கொண்டு திரும்பினள்.

''என்ன சொல்ல வேண்டுமோ அதை உங்கள் மகனிடம் நீங்களே சொல்லுங்கள்.'' மாகம் அனகாவைத் தம்பியின் முன்னிலையில் நிறுத்தி விட்டுச் சென்று விட்டாள் தமக்கை.

பல விஞடிகளுக்கு அங்கே மௌனமே நிலவியது. இறுதியில் ''சக்கரவர்த்தி...'' என்று மெல்ல அழைத்தாள் மாகம் அனகா. ''முப்பது வருடங்களுக்கு முன்னுல் ஒருநாள், ஹுமாயூன் சக்கரவர்த்தி இந்துஸ்தானத்தில் தங்கியிருந்தால் அபாயம் என்று பாரசீகத்துக்கு ஓடிவிட நினைத்தபோது, தன் ஐந்து வயதுப் பாலகனை எந்தச் செவிலித் தாயிடம் ஒப்படைத்துவிட்டுச் சென்றுரோ அந்த மாகம் அனகா வந்திருக்கிறேன்.''

''தெரிகிறது.'' வெறுப்பு நிறைந்த குரலில் பதில் வந்தது மாமன்னரிடமிருந்து.

''அது மட்டும்தான் தெரிகிறதா? குழந்தை அக்பரை அவருடைய சொந்தச் சிற்றப்பாவான காம்ரான் காபூல் கோட்டையில் பிடித்து அடைத்து வைத்திருந்தது தெரிகிறதா? ஹுமாயூனின் பீரங்கிகள் கோட்டையைத் தாக்கிய போது, காம்ரான் குழந்தையை கொண்டு வந்து கோட்டையின் உச்சியில் வைத்து, ஹுமாயூனைப் பயமுறுத்தியது தெரிகிறதா? அப்போது இந்த மாகம் அனகா பீரங்கியின் வீச்சுக்குக் குறுக்கே நின்று குழந்தை அக்பரின் உயிரைக் காத்தது தெரிகிறதா?''

''தெரிகிறது, தெரிகிறது தெரிகிறது!'' சீறினர் சக்கரவர்த்தி நேருக்கு நேராக மாகம் அனகாவை நோக்கினர் இப்போது. ''என்னை வளர்த்து ஆளாக்கிய சேவைக்காகத் தங்களுக்கு நான் எல்லையற்ற சுதந்திரம் கொடுத்ததும் தெரிகிறது. கிட்டத்தட்டப் பிரதம மந்திரியைப் போல நீங்கள் சர்வாதிகாரம் செலுத்தியதும் தெரிகிறது. நீங்கள் கொடுத்த துணிச்சலில் உங்கள் மூத்த மகன் ஆதம்கான் உஜ்ஜயினிலும் சாரங்கபூரி

# ஸாரி, மிஸ்டர் சுஜாதா!

சுஜாதா அளவிற்கு மற்ற மொழி நாடகங்களை நான் பார்த்திருக்க முடியாது. ஆனுல் நானும் ஒரு சில பெங்காலி, மராத்தி, மலையாள நாடகங்களைப் பார்த்திருக்கிறேன். சத்தியமாகச் சொல்லுகிறேன். அந்த type of subjects –ம் கதை சொல்லும் விதமும் இங்கே எடுபடாது. வேண்டுமானுல் ஆசைக்கு ஒரே ஒரு முறை செய்யலாம். அதற்குப் பிறகு அதைக் கிட்ட விடமாட்டார்கள். Exposure இல்லாமல் நான்கு சுவர்களுக்குள் என்ன சாதனை வேண்டிக்கிடக்கிறது?

ஏன் Mr. Sujatha, ஒன்று வேண்டுமானுல் செய்யலாமே. 200 மைல்களுக்கு அப்பால் உட்கார்ந்து கொண்டு destructive criticism செய்வதைவிட அந்த ஈஸிசேரை மடக்கி வைத்துவிட்டு இங்கு time இருக்கும் போது வாருங்களேன். புதுமாதிரியான ஐடியாக்களை இங்குள்ள கலைஞர்களுடன் பகிர்ந்துகொள்ளுங்களேன். ஒரு வித்தியாசமான subject, ஒரு வித்தியாசமான approach - கொண்டு வாருங்களேன். (உங்களுடைய own 'ஒரு கொலை-ஒரு பிரயாணம்!,'. 'கடவுள் வந்திருந்தார்' ஆகியவை உங்கள் sweeping statement க்குள் அகப்பட்டுக் கொண்டுவிட்டதால் அவைகளை மறந்துவிடுவோம்) இங்கு கலைஞர்கள் என்று யாரையாவது நீங்கள் recognise செய்திருந்தால், அவர்களிடம் கொடுத்து, guide பண்ணி, அவசியமானுல் டைரக்ட் செய்து மேடையேற்றச் சொல்லுங்களேன். We welcome fresh air from any direction!

ஜன்னல்கள் என்ன, வாசற்கதவையே திறந்து வைத்திருக்கிறேம்... வாருங்கள்.

—ஏ. ஆர். எஸ்.

நாடகம், அதிலும் குறிப்பாகத் தமிழ் நாடகங்களை அதிகம் பார்க்கும் ரசிகன் என்ற வகையில் நண்பர் சுஜாதாவின் கட்டுரைக்கு மறுப்புச் சொல்லும் தகுதி எனக்கு உண்டு.

ம் கொள்ளையடித்தது தெரிகிறது. ராசாங்கத்துக்குச் சேர வேண்டிய பான்னையும் மணியையும் யானைகளை ம் அடிமைகளையும் கொண்டுவந்து ன்னிடம் ஒப்படைக்காமல் தானே டுத்துக் கொண்டதும் தெரிகிறது. டைசியில், மன்னிக்க முடியாத திமி டன் இதே ஆக்ரா அரண்மனையில், க்கரவர்த்தி நான் இருக்கும்போதே, ன் அன்புக்குரிய அமைச்சர் ஷம்சுதீன் புட்காவைக் குத்திக் கொலை செய்ததும் தெரிகிறது. எதுவும் எனக்கு மறக்க வில்லை.''

''அவன் செய்த தவறுக்குத் தான் அன்றே, அப்போதே, அங்கேயே, தங்கள் கையாலேயே தண்டனை தந்து விட்டீர்களே சக்கரவர்த்தி?'' மாகம் அனகாவின் கண்களில் நீர் வழிந்தது. 'தாங்களே ஆதம்கானை முஷ்டியால் குத்தி உப்பரிகையிலிருந்து கீழே தூக்கிப் போட்டீர்கள். கருங்கல் முற்றத்தில் விழுந்தான். குற்றுயிரும் குலையுயிருமாக இருக்கிறானே தவிர உயிர் போகவில்லை என்று அறிந்து மறுபடி அவனை உப்பரிகைக்கு எடுத்து வரச் சொல்லி மறுபடியும் கீழே வீசியெறியச் சொல்லிக் கொன்றீர்கள்... சக்கரவர்த்தி, என்னுடைய மூத்த மகனை அப்படி நான் இழந்தது போதும். இரண்டாமவனாவது மிஞ்சி இருக்கட்டும். என் கடைசிக் காலத்தில் என் இரண்டாவது மகன் கான் சூரின் மடியில் படுத்துப் பிராணனை விட வேண்டுமென்று நான் விரும்புகிறேன். இரக்கம் சாட்டுங்கள் ஷா இன்ஷா.''

யமுனையின் பிரவாகம் போல அவளுடைய அழுகை நீண்டுகொண்டே போயிற்று.

(தொடரும்)

பெங்களூருக்கு அடிக்கடி வருகிறவன் நான். கன்னட நாடகங்களையும் சினிமாவையும் அதிகம் பார்த்தவன் (நீங்கள் சொன்ன 'சத்தவர நெரளு'வைப் பார்த்திருக்கிறேன்).

தமிழ்நாட்டில் மனோகரின் கடும் உழைப்பையும், சோவின் இதமான சடையரையும் அவ்வளவு சுலபமாக இக்னோர் செய்ய முடிகிறதா உங்களால்? மெரினாவின் நாடகங்களில் இல்லாத அளவு இயல்பான காரெக்டர்களையா நீங்கள் சொன்னவர்களின் நாடகங்களில் பார்த்துவிட்டீர்கள்? மௌலி, விசுவின் நாடகங்களை நீங்கள் பார்க்கவில்லை என்றே நினைக்கத் தோன்றுகிறது.

எந்தத் தொழிலிலும் இரண்டு பக்கங்கள் உண்டு. நீங்கள் சொன்னவர்களின் நாடகங்கள் ஒரு பக்கம்தான். அவர்களின் மறுபக்கம் பார்த்தால் நம்மவர்களிடம் இருப்பதை போலவே குப்பையும் கூளமுமிருக்கத்தான் செய்யும்.

நம்மவர்களைப் பாராட்டும் தாராள மனப்பான்மை நம்மிடமில்லாததினால்தான் நாம் முன்னேற முடிவதில்லை.

—ராஜேந்திரகுமார்.



தேவராஜ் மோகனின் உதவியாளரான வேந்தன்பட்டி அழகப்பன் புதிய படமொன்றை இயக்குகிறார். பெயர்: 'ராமாயி வயசுக்கு வந்துட்டா'

இப்படத்தில் கதாநாயகியாக நடிக்க விண்ணப்பித்தவர்கள்: எண்ணூறு பெண்கள். ஒருவர் கூடத் தேறவில்லை, மேக்கப் மூவி டெஸ்டில். எண்ணூற்று ஒராவது பெண்ணாக அறிமுகமானார் இந்த ரேணுகா. தேர்ந்தெடுக்கப்பட்டார்.

# அந்த நேரத்திலே அங்கே

கற்பழிப்பு ஸீனுக்கு எல்லா ஆயத்தங்களும் ரெடி. காளை சிகரெட்டை மெதுவாக ஒரு சிந்தனையுடன் புகைத்துக் கொண்டிருந்தான்.

புதுமுகம் வினுதா ஈர உள்பாவாடைக்குள் ஜட்டியை ஒரு தரம் இறுக்கிக் கொண்டாள். ஏழெட்டுப் படங்களில் கற்பழிப்பு ஸீன்களில் அவளுக்கு நல்ல பெயர்.

வினுதா என்றால் அவள் கற்பழிக்கப்பட்டே தீர வேண்டும் என்பது திரை மரபாகிவிட்டதில் அவளுக்கு உள்ளூரப் பெருமை.

வில்லன் காளையை ஒரு தரம் பார்த்தாள். அவன் அப்படி ஒன்றும் புதுமுகமல்ல.

அவளைக் காட்டிலும் நிறையப் படங்களில் பெண்களை உரித்திருக்கிறான்.

படப்பிடிப்பு இன்னும் துவங்கவில்லை.

கன்டின்யூட்டிக்கு ஒரு பூ ஜாடி முக்கியமாகத் தேவைப்பட்டது. குறிப்பிட்ட ஜாடியால்தான் வில்லனை அவள் ஏற்கனவே சில ஸீன்களில் தாக்கியிருந்தாள்.

காளையின் அருகில் அவளாக வலியச் சென்றாள்.

''என்ன, ஒரே மூடியா இருக்கீங்க!''

காளை சிகரெட்டை அணைத்து விட்டு அவளைப் பார்த்தான்.

அவள் மேல் கார்ப்பரேஷன் தண்ணீரைக் கொட்டி நனைத்திருந்தார்கள். ஏற்கனவே ஈரப் புடவை. கிராமியக் காட்சி.

ஆற்றிலிருந்து குளித்து விட்டு அவள் வரும்போது வில்லன் அவளைக் கண்டு துரத்துகிறான். அவள் ஓடிப் போய் வில்லன் வீட்டிலேயே புகுந்து கொள்ள, இந்த போராட்டம், பூஜாடியால் தாக்குவது முதலியன.

காளை அவளைப் பார்த்துக் கொண்டே இன்னொரு சிகரெட்டைப் பற்ற வைத்தான்.

அவள் லேசாகச் சிரித்தாள். ''இந்த ஆம்பிளைங்க ஏன்தான் சிகரெட் பிடிக்கிறாங்களோ இப்படி?''

''ஏன்?'' என்றான் அவ ஒப்புக்கு.

''உதட்டைக் கொண்டு வந் மூக்கிலே தேய்க்கிறப்போ குப்பு நாறுது. எங்க சிரமம் உங்களுக் எங்கே தெரியுது?''

''என்ன, இன்னும் ஜா வரலியா? இப்போ ஜாடிதான் ஹீரே போலிருக்கு.''

''ஆர். பி. ஸ்டுடியோவி ஒரு கால்ஷீட். போகணும். இங்கே நீங்க விட மாட்டீங்க போலிருக்கு.''

அவனுக்குச் சிரிப்பாக வ தது. ''நான் ரெடிம்மா. டைரக்ட ஒப்புக்கொள்ளணுமே.''

''ஒரே டேக்கிலே ஓ பண்ற மாதிரி அமைஞ்சுட்டாப் ப வாயில்லை. நீங்க நல்லா ஃப்ரீயாவே ப்ளவுஸைப் பிடிச்சுக் கிழிங்க. டைரக் டர் காதுலே டர்ர்ர்ருனு சத்தம் கேட் டாத்தான் அவர் நேச்சுரல் என் பார்.''

''நான் ரெடி. ஜாடி இன்னும் வரலை. எனக்கும் முக்கியமாக ஒரு ஷூட்டிங் ரெட்டியார் படத்திலே இருக்கு. அப்புறம் ஆறுமணிக்கு மலையாளப் படம்...''

அவர்கள் பேசிக் கொண்டிருந்தபோதே ஜாடி வந்து விட்டது.

வினுதாவைத் துரத்திப் பிடித்து, அறைக்குள் கீழே தள்ளி அவள்



ரவிக்கை உள் பாவாடை இவைகளைக் கிழித்து, மார்புமேல் தன் பளுவைத் தள்ளி, கட்டி, புரண்டு, கசக்கி, பெரு மூச்சுகள், சிறல்கள், இரைப்புகள் எல் லாம் கொடுத்து ஒரு வழியாகக் கற்பழித்து முடிப்பதற்கு இரண்டு மணி நேரம் ஆகிவிட்டது. வினுதாவின் உடைகள் அடியோடு கிழிந்து அவள் மார்புகள் வெளிப்படையாகத் தெரிந் தன.

காமெராக்காரர் பர பர வென்று பிடித்துத் தள்ளிக் கொண்டார். 'ஸென்சாரில் வெட்டுவானுகளோ குத்து வானுகளோ, நீ ஏன் அய்யா கவலைப் படறே? அது எங்க ஹெட் ஏக். நீ புடிச்சுத் தள்ளு' என்பார் டைரக்டர்.

---

**எஸ். வி.**

டிரஸ்ஸை ஒழுங்கு செய் மேக்கப்பைச் சீர் செய்து கொண் வினுதா ஆர். பி. புற பட்டாள்.

காலை நடிக்கும் மலையாள பட ஷூட்டிங்கும் அதே ஸ்டுடியே வின் வேறு ஒரு ஃப்ளோரில்தான் நடந் கொண்டிருந்ததால், "ஆர். பி. ஸ் டியோதானே? நானும் வரலாமா என்றான்.

வினுதாவுடைய கார் அவனும் ஏறிக் கொண்டான்.

"ஏன் ஒரு மாதிரி டல் இருக்கீங்க?" என்று கேட்டாள்.

அவன் ஒரு சிகரெட்டை பற்ற வைத்துக் கொண்டான். "என் பிழைப்புன்னு நினைச்சுத்தான் வருத் படறேன்."

அவன் குரலிலிருந்த களைப்பும், அங்கலாய்ப்பும் அவளுக்கு என்னவோ போலிருந்தது அவளும் அவனைப் போல 'இது என்ன பிழைப்பு?' என்று பலதரம் நினைத்திருக்கிறாள். ஆனால் காட்டிக் கொள்ளாமல், ''ஏங்க காளை, நீங்கதான் இப்ப நிறய பிக்சர் பண்றீங்க? ஏன் சலிக்கிறீங்க?'' என்றாள்.

''அதில்லை. தினமும் கற்பழிச்சிகிட்டே இருக்கறதுன்னா அது எவ்வளவு கஷ்டமாயிருக்கு.''

''நாங்கள்ள கஷ்டப் படணும். உங்களுக்கென்ன?''

''அப்படியில்லே. உணர்ச்சியில்லாமல் யந்திரம் மாதிரி நடிச்சா, காட்சி நல்லா வராது. உணர்ச்சி வசப்பட்டால் வேறு தொந்தரவெல்லாம் இருக்கு.''

''வேறு தொந்தரவுன்னா?''

''கற்பழிப்புக் காட்சியிலே நடிக்கறதுக்கு மனுஷனுக்கு பாலன்ஸ் கண்ட்ரோல் ரொம்ப வேணும்.''

''ஃபீல்டுலே உங்களுக்கு ரொம்ப நல்ல பேரு.''

''ஃபீல்டுலே பேரு இருந்து என்ன பிரயோசனம்?''

''சொல்லுங்க ''

''வீட்டிலே அவள் கிட்டே பெயர் எடுக்க முடியலை. ஷூட்டிங் முடிஞ்சு வீட்டுக்குப் போனால் ஒரு மாதிரியாப் பார்க்கிறாள்.''

''அதெப்படி? சினிமாக்காரனைக் கல்யாணம் பண்ணிகிட்டா அப்படியெல்லாம் பார்க்கலாமா? தொழிலாச்சுங்களே? நாய் வேஷம் போட்டாக் குரைக்கத்தான் வேணும்.''

அவன் குரல் கரகரத்தது.

''அதில்லை. அவள் என்னை தப்பா நினைச்சுக்கறா.''

''அப்படின்னா?''

அதற்குள் அவர்கள் இறங்கும் ஸ்டுடியோ வந்து விட்டது.

இரண்டு பேரும் இறங்கி அவரவர் நடிக்க வேண்டிய ஃப்ளோருக்குப் போனார்கள்.

சொல்லி வைத்தாற்போல இரண்டு பேர் ஷூட்டிங்கும் கான்ஸல்.

''வீட்டுக்குப் போய் ரெஸ்ட் எடுக்க வேண்டியதுதான்,'' என்றாள் வினுதா.

''அவளைக் கூட்டிட்டு இன்னிக்கி ஒரு சினிமா போகலாம்னு பார்க்கறேன். வருவாளோ முகத்தைத் தூக்கிக்குவாளோ?''

''ஏன், முரண்டு பண்ணுவாங்களா?''

''அவளுக்கு என் பேரில் நம்பிக்கையில்லே. நான் கற்பழிக்கிற ஸீன்லே நடிச்சுட்டு வீட்டுக்குப் போறப்போ களைச்சுப் போயிடறேன். அவள் இல்லறம் அதுக்கு அப்புறம் தான் ஆரம்பமே ஆகுது. அவள் கிட்டே என்னாலே கொஞ்ச முடியறதில்லை. அவள் கை என் மேலே பட்டாலே பயமாயிருக்குது. சலிப்பா இருக்குது. உடம்பு களைப்பாயிருக்குன்னு சொன்னால் கோபிச்சுப்பா. உற்சாகமா அவள் கிட்டே பழகலைன்னா, நீங்க சினிமாக்காரியையே நினைச்சுக்கிட்டிருக்கீங்கன்னு கோபிச்சுப்பா. நடிச்சு முடியறதுக்குள்ளேயே என் வலிமை போயிடுதுன்னு அவள் கிட்டே விவரமாச் சொல்ல முடியுமா? களைப்பு களைப்புன்னு சொல்லிக்குவேன்.''

''உங்க நிலைமை பரிதாபமாயிருக்குங்க உண்மையிலே.''

---

கோவணம் கட்டிய கிராமத்து ஆள் ஒருவர், தியேட்டரில் உள்ள ரெஸ்டாரண்ட் முன் நின்று, ''எனக்கு ஒரு காப்பி கொடுங்கள்,'' என்றார்.

''என்னய்யா! சினிமாவுக்கு வரும்போது ஒரு வேட்டி கட்டிக்கொண்டு வரக்கூடாதா?'' என்றார் கடைக்காரர்.

''வேட்டியோடதான் வந்தேன். என் இடத்திலே வேறு யாராவது உட்காராம இருக்கிறதற்காக, வேட்டியைக் கழற்றி போட்டு வந்திருக்கேன்.''






''அரங்கேற்றம்'' படத்தின் மையக் கருத்து குடும்பக் கட்டுப்பாடாம். டெல்லி தமிழ்ச் சங்க வரவேற்பில் டைரக்டர் கே. பாலசந்தர் இந்தத் தகவலை வெளியிட்டார்!

—டி. ஆர். ரவீந்திரன்

''இப்ப வீட்டுக்குப் போற க்கே நடுக்கமாயிருக்கு. வெளியே பாக ஒண்ணும் 'வேணும். சந்தோஷ ாய் பேசிக்கிட்டு இருக்கலாம்'னு மேலே ந்து இடிப்பாள். அவளுக்கு என் மலே கொள்ளை ஆசை. நான்தான் ந்த அளவுக்கு ஆசையை வெளிப் டையாக் காட்ட முடியாம கஷ்டப் டறேன். மனசுக்குள்ளே ஆசைதான். தைச் சொன்னுல் ஒத்துப்பாளா? ரு நாளைக்குப் பத்து மணி நேரம் டுடியோவில் உழைச்சிட்டு, களைச்சுப் பாய்ப் படுக்கப் போறப்போ, மறு டி அதே மாதிரி நடந்துக்கணும்னு? ரண்டு நாளா இடைவிடாத ஷூட் டங். . ஒரு இடத்திலே படுத்தால் 'பாதும்னு இருக்கு. ஆனல் வீட்டுலே போய்ப் படுக்கவும் பயமா இருக்கு.''

வினுதா அவன் கைகளை அனுதாபத்துடன் பிடித்தாள் ஆறுத லாக.

''நீங்க நம்ம வீட்டிலே வந்து ரெஸ்ட் எடுத்துக்குங்க. உங் களுக்கு ஒரு தொந்தரவுமில்லாமல் நீட்டா ரெஸ்ட் எடுத்துக்கலாம்.''

வினுதாவுக்கு அவன் மனப் பூர்வமாக நன்றி சொன்னுன். அவள் வீட்டுக்குப் போனுன்.

மாடியிலிருந்த அறை வசதி யாக இருந்தது. ஒற்றைக் கட்டில். மெத்தென்ற மெத்தை. மின் விசிறி.

''ஏதாவது சாப்பிடறீங் களா?'' என்றுள்.

''நான் ஸ்டுடியோக் களைப்புப் போக நிம்மதியாத் தூங்கணும். அவ் வளவுதான். சாப்பாடு கூட வேணும்.''

கதவைச் சாத்திக் கொண்டு அவள் வெளியேறினுள்.

அவன் அயர்ந்து நிம்மதியாகத் தூங்கினுன். மூன்று மணி நேரம் நல்ல ஓய்வு எடுத்துக் கொண்டு அவளிடம் நன்றி சொல்லிவிட்டு வீட்டுக்குப் புறப் பட்டான்.

அடுத்த வாரம் ஸ்டுடியோ வில் அவனைப் பலரும் ஒரு விதமாகப் பார்த்தனர்.

ஒரு பத்திரிகையில் கீழ்க் கண்ட செய்தி வெளியாகியிருந் ததே காரணம்.

'வில்லன் நடிகர் காளை நடிகை வினுதாவின் வீட்டில் கும்மாளம்! படப்பிடிப்பு முடிந்ததும் நடிகையின் வீட்டுக்குச் சென்ற மர்மம் என்ன?'

வினுதா அந்தப் பத்திரிகை யைப் பார்த்து வரண்டு சிரித்துக் கொண்டாள்.

'பாவிகளா? வேறு எவ்வ ளவோ விஷயங்கள் என் வீட்டிலேயே நடந்திருக்கு. அதையெல்லாம் விட் டுட்டு, உடம்புக் களைப்பைப் போக்கிக் கொள்ள இரண்டு மணி நேரம் தூங்கு வதற்கு வந்த அப்பாவி காளைதானு உங்களுக்கு அகப்பட்டான்!'


ஒரு ட்யூன் - ஒரு ஸ்பூன் - ஒரு கொலை
9
கதை: கமலின
சித்திரம்:
ரமேஷ் சந்தரின் தங்கை குழந்தை சந்திரிகா விடுமுறைக்காக வந்திருந்தாள்.
அங்கிள்! இந்த டேப் ரிகார்டர் எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு. இட் இஸ் லவ்லி...
தேவிக்கும் அவளிடம் ஒரு பாசம்.
சந்திரிகா, டிரைவ் இன் தியேட்டர் போகிறோம். வர்ரியா?
இல்லே, நான் இங்கேயே பாட்டுக் கேட்டுட்டிருக்கேன்..

ளின்



முக்கம்

ரமோகினி

# 18

ஜெய்! நீங்கள் என்ன ஆனீர்கள்? எங்கே ருக்கிறீர்கள்

ரூப்மதி பிரமை பிடித்த ளாகவே திரிந்துகொண்டிருந்தாள்.

போர் முடிந்து பதினைந்து ாட்களாகிவிட்டன. சூர்யபூர் என்ற பிட்சம் கொழித்த நாடு, சுடுகாடு ப்படியிருக்கும் என்பதைச் சுட்டிக் ாட்டிக் கொண்டிருந்தது. அரண்மனை ல் ஈ காக்கை இல்லை. சித்திரங்கள் ிந்துக் கொண்டிருந்த சுவர்கள் யின் புகைச் சுருள்களில் கருகிப் பாயிருந்தன. சிற்பங்கள் நடனமாடிய டங்களில் இடிந்த மொட்டைச் சுவர் ள் மட்டுமே அழுது கொண்டிருந்தன. ூக்கொள்ளையாய் இருந்த நந்தவனங் ள் காட்டெருமைகளுக்கு மேய்ச்சல் ாடாகத் திகழ்ந்தன. இருட்டிவிட்டால் ால் வைக்கவே நடுக்க மேற்படுத்தின பாம்பு ஊர்வலங்கள்.

ஆனாலும் ரூப்மதி அந்தப் பகுதிகளிலேயே சஞ்சரித்துக் கொண்டி ருந்தாள். அவள் கண்கள் ஜெய்யைத் தேடிக்கொண்டிருந்தன.

அரண்மனையை நம்பியே பயிர்த் தொழில் செய்து கொண்டிருந்த அவளுடைய உறவினர்கள் குடிபெயர்ந்து விட்டார்கள் தூர தூர தேசங்களுக்கு. அவளுடைய ஒன்றுவிட்ட மாமன் பிர தாப் எவ்வளவோ சொல்லிப் பார்த் தான். "ஒண்டிக்காரியான சிறு பெண் இந்த ஊரில் எப்படியம்மா தனியாய் இருக்கப் போகிறாய்? நாங்கள் தெற்கே போகிறோம். எங்களுடன் வந்துவிடு," என்று மன்றாடினான்.

"என்னை விட்டு விடுங்கள் மாமா. எனக்கு இந்தச் சூர்யபூரிலே வேலை இருக்கிறது." பிடிவாதமாய்ச் சொன்னாள் ரூப்மதி.

"வேலையா! இந்த ஊரிலா!" வெறுப்புடன் சிரித்தான் மாமன். "நூற்றுக் கணக்கில் தீயில் விழுந்து மடிந்தார்களே அரச குமாரிகள், அந்தச் சாம்பல் மேட்டிலே கேழ்

வராத பயிரிடப் போகிறாயா? இடிந்து தூள் தூளாய் விழுந்திருக்கிறதே ஆலயங்கள், அந்தச் செங்கல் பொடியைத் திரித்து நெசவு செய்யப் போகிறாயா? நாயும் நரியும் சேர்ந்து நள்ளிரவில் ஊளையிடும்போது அவைகளுக்குச் சாரங்கியை வைத்துக் கொண்டு பக்க வாத்தியம் வாசிக்கப் போகிறாயா? என்ன வேலையம்மா பார்க்கப் போகிறாய் இந்த மயான பூமியில்?'' என்று திட்டிவிட்டுப் போய்விட்டான்.

ஜெய்! நீங்கள் உயிருடன் தான் இருக்கிறீர்களா? ரூப்மதி தவித்தாள். அவனுடன் விளையாடிய மரங்களையும் மலைகளையும் சுனைகளையும் சோலைகளையும் கேட்டாள். அவை துயரத்துடன் தலை குனிந்தனவே தவிர அவளுக்கு மறுமொழி தரவில்லை.

இன்று காலை கொஞ்சம் நம்பிக்கை துளிர்த்தது.

ஜெய்யின் நெருங்கிய தோழனை சூரஜ் என்பவன் மகாதேவர் கோவிலுக்குப் பின்னால் இருக்கிறானாம். ஆட்டுக்காரப் பையனொருவன் ஓடி வந்து சொன்னான். விழுந்தடித்துக் கொண்டு அங்கே சென்றாள்.

சூரஜ் இருந்தான். ஆனால் பேசுகிற நிலையில் இல்லை. எதிரியின் வாளினால் அவன் மண்டையில் விழுந்த அடி அவனைப் பிரமை பிடித்தவனாக ஆக்கியிருந்தது. ''ஜெய் எங்கே? இளவரசர் ஜெய்! அவர் எங்கே? உனக்குத் தெரியுமா?'' உலுக்கினாள் அவனை.

உலுக்க உலுக்க அவன் பதுமைபோல் உட்கார்ந்திருந்தான். அவன் கண்கள் அவளை இமைக்காமல் பார்த்தன. பார்த்துக் கொண்டேயிருந்தன எவ்வித உணர்வும் இல்லாமல். திடீரென்று அவன் அட்டகாசமாய்ச் சிரித்தபோது அவளைப் பயம் கௌவிற்று.

இணைபிரியாமல் இடுப்பிலேயே வைத்திருக்கும் அந்தப் பொருளைத் தொட்டுப் பார்த்தாள்.

மந்திர சக்தியினால் பலம் பெற்ற மாதிரி அவள் மனமும் உடலும் தெம்பு பெற்றன.

மரண தேவன் ஊழிக் கூத்தாடிய அந்தப் பயங்கர இரவு—சூர்யபூர் கோட்டையும் அரண்மனையும் எதிரிகளிடம் தூள் தூளாகிப் போன அந்த இழிந்த இரவு—

''இளவரசி! ஓடுங்கள்! ஓடி விடுங்கள் இங்கிருந்து!'' பீர்நாராயண் குதிரை மீதிருந்து கத்தியபடி ஓடினான்.

அரண்மனைக்கு ஓடினாள் ரூப்மதி. போர்க் களத்தைக் காட்டிலும் அமளியாக இருந்தது அங்கே. கோட்டைச் சுவரைத் துளைத்துக் கொண்டு வந்த பீரங்கிக் குண்டுகள் அரண்மனையின் பிரதான உப்பரிகையைத் தகர்த்து வீழ்த்தியிருந்தது.

அரண்மனையின் பின் வாசலுக்கும் மகாதேவர் கோவிலுக்கும் நடுவே இருந்த அந்த அக்கினி குண்டம்—



## வெளிநாட்டுக்கு

''அன்னை அழைக்கிறாள்'' என்ற படத்தை, இங்கிலாந்து, இத்தாலி ஆகிய வெளிநாடுகளில் எடுப்பதற்காக டைரக்டர் கே. பாலசந்தர் கொஞ்சநாள் முன்பு அந்த நாடுகளுக்குச் சென்றிருந்தார். ஆனால் இப்போது அயல்நாடுகளில் படப்பிடிப்பு எடுக்கும் எண்ணத்தை 'டிராப்' செய்து விட்டார் ஏன்?

''கிட்டத்தட்ட இருபது நாட்கள் பல ஐரோப்பிய நகரங்களுக்குச்

கற்பையும் மானத்தையும் காத்துக் கொள்வதற்காக ராஜபுத்திரப் பெண்கள் கட்டி வைத்திருக்கும் பிரத்தியேகக் கோட்டை! நெருப்பின் நாக்குகள் நாற்புறமும் காவல் காக்கும் பவித்திரக் கோட்டை! அன்னியனின் கை பட்டு விடுமுன்னே உயிர் பட்டு விட வேண்டும் என்பதற்காக வீராங்கனைகள் வேலி கட்டிய புனிதக் கோட்டை!

ஓடிச் சென்று பார்த்தாள்.

அந்த வேள்வித் தீயில் சூர்யபூரின் ராஜவம்சம் வெந்து சாம்பலாகிக் கொண்டிருந்தது. பட்டு ஆடைகளின் பொசுங்கல் நெடி— அக்கினிக்குள் ஆர்வத்துடன் பிரவேசிக்கும் நங்கையரின் 'ஜெய் ஜெய் சண்டி! ஹர்ஹர் மகாதேவ்!' என்ற கடைசிக் கோஷங்கள்—அதோ—

ரூப்மதியை அழைத்துத் தின்பண்டங்களை அன்புடன் கொடுக்கும் பெரிய ராணி— பால பருவத்திலேயே இறந்த தம் அவர் பேத்தி— வகை வகையான தாம்பூலங்களைத் தரிப்பதிலே வெகு ஆர்வமுள்ள மூத்த இளவரசி— கலீர் கலீரென்ற சதங்கையொலியினால் அரண்மனைச் சுவர்களை இளக வைத்துக் கொண்டிருந்த கலையரசி கம்லாவதி— அனைவரும் தங்களை நெருப்புக்குப் பலி கொடுத்துக் கொண்டுவிட்டார்கள்!

ரூப்மதியுட தீக்குண்டத்தை நோக்கி நடந்தாள். அன்றுதான் தாலி கட்டிக் கொண்ட புத்தம் புது இளவரசியாயிற்றே! அவள் மட்டும் தீக்குளிக்காமல் பின்தங்கலாமா?

பெரும் ஆரவாரம் அவளை நிற்கவைத்தது. முகலாயப் படைகள் அரண்மனைக்குள் புகுந்து விட்டார்கள் மிஞ்சியிருந்த இரண்டொரு காவலாட்களும் வெட்டி வீழ்த்தப்படும் ஓலம் வானத்தை நிறைத்தது.

அவள் சரேலெனத் தர்பார் மண்டபத்தின் சிறிய வாசலுக்குள் நுழைந்து கொண்டாள். இருட்டி விட்டது. கோடி சூரியப் பிரகாசமாக எங்கெங்கும் தொங்கும் அலங்கார விளக்குகள் இன்று செத்திருந்தன. கால் வைக்கும் இடமெல்லாம் உடைந்த கண்ணாடித் தூள்கள்.

ஒரு முனகல் சப்தம்.

எவனோ படைவீரன் விட்டெறிந்து விட்டுப் போன தீப்பந்தம் கிடந்தது. அதை எடுத்துக் கொண்டு சத்தம் வந்த திசையில் சென்றாள். காலில் இடறியது. குனிந்து நோக்கினாள்.

"மகராஜா!" தன்னையும் மீறி உரக்கக் கூவிவிட்டாள்.

ஜெய்யின் இரண்டாவது அண்ணனான பூபத்! அவன் மார்பிலிருந்து ரத்தம் ஆறாகப் பெருகிக் கொண்டிருந்தது. மூச்சுத் திணறிக் கொண்டிருந்தான்.

ரூப்மதி தன் புடவையைக் கிழித்தபோது அவன் குறுக்கிட்டான். "வேண்டாம் பெண்ணே! என்னைக் காப்பாற்ற முயன்று...நீ சிக்கிக்

# போய் எடுக்காத படம்

சென்று எங்கெங்கு எந்தெந்த காட்சிகள் எடுக்கலாம் என்று முடிவு செய்தேன்.

சென்னைக்குத் திரும்பியபோது நான்கு முக்கிய கம்பெனிகள் அடுத்தடுத்து ஒரே சமயத்தில் வெளிநாடுகளில் அவுட்டோர் போக முடிவு செய்திருப்பது பற்றித் தெரிந்தது. இவ்வளவு குழுக்கள் செல்லும்போது நானும் இப்போதே செல்ல வேண்டுமா? இந்தப் போட்டி நமக்குத் தோதுப்படாது என்று முடிவு செய்தேன்.

'நினைத்தாலே இனிக்கும்' படத்துக்காக, சிங்கப்பூரில் நீச்சல் குளத்தில் ஒரு பாடல் காட்சி எடுத்திருந்தேன். 'ப்ரியா' படத்திலும் அதே இடத்தில் ஒரு பாடல் காட்சி எடுத்திருந்தார்கள். அந்தப் படம் முன்னதாக வெளிவந்து விட்டது. நினைத்தாலே இனிக்கும் காட்சி ப்ரியா படத்திலே வந்து விட்டதே என்றார்கள் நம் படத்திற்காக புது சிங்கப்பூரையா கட்ட முடியும்?" என்றார் பாலசந்தர்.

பேட்டி: எஸ். [illegible]



## உடைக்கு விடை

ராதிகா—B
ரத்தி—C
மீரா—A
சங்கீதா—D

சலன்

அவள் பதறினாள்: "இல்லை மகாராஜா, நான் போய் யாரை யாவது அழைத்து வந்து..."

"முடியாது பெண்ணே. காலம் கடந்து விட்டது...அது... எனக்குத்தான் தெரியும்..." வினாடிக்கு வினாடி அவன் தீனறல் அதிகரித்தது. "அதோ அந்தப் பெட்டியில் நான் எழுதின... திரட்டி வைத்த பல கவிதைப் பொக்கிஷங்கள்... அதைக் காப்பாற்ற இங்கே ஓடி வந்தேன் ..ஆனால்...பாவிகள் அவைகளை அதற்குள் எடுத்துக் கொளுத்தி விட்டார்கள்..."

மரணத்தையும் விடக் கொடுமையான துயரம் இது! ரூப்மதிக்குப் புரிந்தது. அவள் என்ன ஆறுதல் சொல்ல முடியும்?

"இந்தா..." இடுப்பிலிருந்து எதையோ எடுத்து அவள் கையில் ஒப்படைத்தான் அவன். "போர்க்களத்தில் இதை யாரோ..என்னிடம் கொடுத்தார்கள்...இதை நீ...நீ..." சொற்களை முடிக்கு முன்பே பூபதின் காலம் முடிந்து விட்டது.

அவன் கொடுத்ததைப் பார்த்தாள். அந்த விலைமதிக்க முடியாத மாணிக்கம்! அவளுக்குப் புல்லரித்தது.

ஜெய்! நீங்கள் எங்கே இருக்கிறீர்கள்? இதோ இதை நீங்கள் பார்த்தால்....! அவள் உள்ளம் கூவியது. அவன் ஒரு வேளை போரில் இறந்திருப்பானோ என்று நினைத்தாள். நினைக்கையிலேயே நடுங்கினாள். நிச்சயமாய் இறந்திருக்க முடியாது என்று அவளுக்குத் தெரிந்தது. ஜெய்யின் தோழர்கள் இங்கொருத்தர் அங்கொருத்தர் அவள் கண்ணில் பட்டார்கள். ஆனால் ஜெய்யைப் பற்றிய கேள்விகளுக்கு ஏனோ மழுப்பினார்கள்.

திடீரென்று ஒரு யோசனை. அந்தத் தோழர்களிலொருவனின் பின்னாலேயே சென்றாலென்ன? ஜெய் ஒளிந்திருக்கும் இடம் தெரிந்து விடுமே?

அவள் முடிவு செய்த கணத்திலேயே, தலையில் கூடையுடன் ஒருவன் போய்க் கொண்டிருப்பது கண்ணில் பட்டது. இடிந்துவிட்ட கீர்த்தி ஸ்தம்பத்தின் பின்புறமாக நொண்டி நொண்டிப் போய்க் கொண்டிருந்தான் அவன்.

பூனைபோல் பின் தொடர்ந்தாள்.

கூடையில் சாப்பாடு எடுத்துப் போகிறான் போலிருக்கிறது. ஜெய்க்குச் சாப்பாடு.

நுனிக் காலில் அவனைப் பின் தொடர்ந்தாள். அப்படியும் ஒரு மரக்கிளை அவளை இடித்தபோது அந்த ஓசை அவனை எச்சரித்து விட்டது.

"யார் நீ? எதற்காக என் பின்னால் வருகிறாய்?" கரகரத்த தொண்டையில் அவன் கத்தினான்.

"இளவரசரைப் பார்க்கத்தானே நீங்கள் போகிறீர்கள்? நானும் அங்கேதான் வருகிறேன்," என்றாள் அவள்.

"இளவரசர் யாரையும் பார்க்க மாட்டார்." கண்டிப்புத் தெறித்தது அவன் குரலில்.

"என்னைப் பார்க்க மாட்டேனென்று சொல்லமாட்டார்."

"உன்னைத்தான் முக்கியமாய் பார்க்க மாட்டார். துரோகியை அவர் சந்திக்கத் தயாராயில்லை!" உணர்ச்சி வசப்பட்டவுடன் அவன் உண்மைக்குரல் வெளிப்பட்டுவிட்டது! ஜெய்!

சரேலென அவனைக் கட்டிக் கொண்டாள் ரூப்மதி. "ஜெய்... ஜெய்..."

"விடு! விடு என்னை!" உதறினான் அவளை ஜெய். "என் முன் நிற்காதே. போ!"

"சரி, போய் விடுகிறேன்." அணைத்துக் கொண்டிருந்த கரத்தை விலக்கினாள். "ஆனால் நான் போவதற்கு முன்னால் இதைப் பார்த்து விடுங்கள்."

இடுப்பிலிருந்து அவள் அதை எடுத்துக் காட்டியதும் அவன் துள்ளினான். "வானின் முத்தம்! இந்த நாணயம்...உனக்கு எப்படி..."

"சூர்யபூரின் முதல் சுதந்திர நாணயம்!" அதைப் பக்தியுடன் முத்தமிட்டாள் ரூப்மதி. பழையபடி இடுப்பில் பத்திரப் படுத்திக் கொண்டாள். "போர்க் களத்தில் பல கைமாறிக் கடைசியில் தங்கள் அண்ணன் பூபத் வழியாக என்னிடம் வந்தது!"

"கொடு அதை இப்படி!" அவன் அதட்டினான். "அது புனிதமானது. தூய்மையானது. துரோகிகளின் கையால் தொடத் தகாதது."

"முன்னாள் துரோகி தொடலாமல்லவா?" அவள் விழிகள் உயர்ந்து அவனை ஆராய்ந்தன.

"என்ன சொல்கிறாய்?"

"நான் தங்கள் கட்சியில் சேர்ந்தாயிற்று என்று சொல்கிறேன். அக்பரைப் பற்றிய பிரமை எனக்குத் தெளிந்து விட்டது என்று சொல்கிறேன். எங்கேயோ மண்ணில் புதைந்து காணாமற் போயிருக்க வேண்டிய வாளின் முத்தம் என் கைக்கு வந்ததிலிருந்து, எனக்குத் தெய்வத்தின் கட்டளை வந்திருப்பது போல் தோன்றுகிறது என்கிறேன்."

"என்ன கட்டளை?"

"எந்தவொரு திட்டத்தை நிறைவேற்றுவதற்காகத் தாங்கள் இப்படிக் காட்டிலும் மேட்டிலும் ஒளிந்து மறைந்து வாழுகிறீர்களோ, அந்தத் திட்டத்தை நானே நிறைவேற்றப் போகிறேன்."

அவன் அவளைக் குழப்பத்துடன் பார்த்தான். அவள் சொன்னாள்: "சூர்யபூர் படைகள் அக்பருடன் மோதித் தோற்றுப்போனால் என்ன செய்வீர்கள் என்று அன்றொரு நாள் உங்களை நான் கேட்டேன். குத்துக் கத்தியைத் தொட்டு, அதற்குத் தனியான திட்டம் வைத்திருக்கிறேன் என்று பதில் சொன்னீர்கள்....."

"சரி?"

"உங்கள் திட்டத்தை நானே நிறைவேற்றப் போகிறேன். அந்த நய வஞ்சகனை, ஷா இன்ஷா என்ற பெயரால் நடமாடும் நரியை, அக்பர் என்ற அந்தக் கபடக்காரனை நானே என் கையால் கொல்லப் போகிறேன்," என்றாள் ரூப்மதி. அவளுடைய மென்மையான வதனம் பாறையாக இறுகி ரத்தச் சிவப்பு ஏறிற்று. ஒவ்வொரு நரம்பும் ஆத்திரத்துடன் புடைத்துக் கொண்டு நின்றன.

(தொடரும்)

# வாளின் முத்தம்

'மோகினி'

## 19

"உங்கள் பிள்ளையைப் பற்றி மேலும் நான் பேசத் தயாராயில்லை. இதை முன்பே ரு முறை சொல்லி விட்டேன்," ன்றார் சக்கரவர்த்தி அக்பர். அவர் ரலில் அளவற்ற வெறுப்பு. ஆயினும், ளர்ப்புத் தாயின் வயோதிகத்தை முன் ிட்டு அதை அடக்கிக் கொள்ள அவர் பரும் பிரயத்தனப்படுவதும் தெரிந் து.

மாகம் அனகா அப்போதும் னம் தளரவில்லை. "மாமன்னர் இன் ும் என் மடியில் வளர்ந்த குழந் தையாகவே இருக்கிறார். அந்த நாளில் இப்படித்தான். கண்மண் தெரியாமல் கோபம் வரும். ஆனால் என் முகத் தைப் பார்த்து ஐந்து விநாடி பேசிக் கொண்டிருந்தால் போதும். சினமெல் ாம் பறந்து விடும். அதுபோல் இப் போதும் என்னுடன் கொஞ்ச நேரம் பேசினால் கோபம் போய்விடப் போகி றதே என்று பயப்படுகிறார்." சிரிக்க முயன்றாள் செவிலித் தாய்.

"ஆம். பயப்படுகிறேன். ஆனால் கோபம் போய்விடப் போகி றதே என்றல்ல. ஒரு ராஜத் துரோகி தண்டனையிலிருந்து தப்புவதற்கு நான் இடம் கொடுத்து விடுவேனோ என்று பயப்படுகிறேன். நீதியிலிருந்து நான் வழுவி விடுவேனோ என்று பயப்படு கிறேன். தயவு செய்து நீங்கள் இப்போதே போகாவிட்டால்..."

அக்பர் வாசற்புறத்தைப் பார்த்தார். 'காவலாளைக் கூப்பிட்டு உங்களைப் பலவந்தமாக வெளியேற்ற நேரிடும்' என்பதை அவர் குறிப்பால் உணர்த்துகிறார். அது மாகம் அனகா வுக்குப் புரிந்தது. சற்று நேரம் தரை யைப் பார்த்தவாறு நின்றிருந்தாள். பிறகு வெளியேறினாள்.

சக்கரவர்த்தி சாளரத்தின ருகே நின்றிருந்தார். ஆடாது அசை யாதிருந்தது அவருடைய கம்பீரமான உருவம். நீண்ட அங்கியின் நுனியிலி ருந்த பட்டுக் குஞ்சங்கள் மட்டுமே யமுனையிலிருந்து வரும் காற்றில் மெல்ல ஆடிக் கொண்டிருந்தன.

சேவகனொருவன் உள்ளே வந்தான். "தளபதி கான் சூர் வந் திருக்கிறார், ஷா இன்ஷா."

"வரச் சொல்லு."

"உத்தரவு சக்கரவர்த்தி."

சற்று நேரத்துக்குக் கீழ் தட்டைக் கடித்துக் கொண்டு யோசனை செய்தார் அக்பர். பிறகு அவர் தோற் றத்தில் ஒரு தீவிரம் பிறந்தது. மஞ் சத்தின் பின்னே சுவரில் எப்போதும் தொங்கிக் கொண்டிருக்கும் குத்துக் கத்தியை எடுத்தார். இடுப்பில் செரு கிக் கொண்டார்.

காலடியோசை கேட்டது.

அக்பர் சக்கரவர்த்தி தன் வதனத்தில் ஒரு குறுநகையைத் தவழ விட்டுக் கொண்டார். கான் சூர் அறைக் குள் காலடியெடுத்து வைத்ததுமே—

"வருக! வருக! சூர்யபூரின் வெற்றி வீரரே! வருக!" என்று வர வேற்றார்.

கான்சூர் குழம்பினான்.

சக்கரவர்த்தி கோபமாக இருக்கிறாரென்றல்லவா கோட்டைத் தளபதி சொன்னான்! அவன் ஒரு முட்

டாள்? ஒன்று கிடக்க ஒன்று கற்பனை செய்து கொண்டு பிதற்றியிருக்கிருன்.

உடைவாளைக் கழற்றினன் கான் சூர். சக்கரவர்த்தியின் காலடியில் வைத்தான். மண்டியிட்டு அக்பரின் வலது கையை முத்தமிட்டான். ''இந்த அடிமைக்குத் தனிப்பட்ட வெற்றி ஏது? எல்லாம் ஷா இன்ஷாவின் மாட்சிமை!''

''இருந்தாலும் உம்முடைய வீரத்தைக் குறைத்து மதிப்பிடலாமா? உம்மைப் போலச் சில தளபதிகளாவது இருப்பதாலல்லவோ இந்தச் சாம்ராஜ்யத்தின் பெருமை மங்காமலிருக்கிறது!'' என்ருர் அக்பர்.

''போர் முறை வழக்கப்படி எதிரிகளின் தலைகளைப் பத்து வண்டிகளில் கொண்டு வந்தேன். அவைகளை உள்ளே எடுத்து வர வேண்டாமென்று சக்கரவர்த்தி சொன்னதாக...''

''ஓ, அதுவா! ஆமாம், ஆமாம்; உமது தீரத்துக்கும் வீரத்துக்கும் அத்தாட்சி வேண்டியதில்லையே

---

56'ம் பக்க விடை

# நம்பிக்கை பெறுங்கள்



தோல்வி வேறு. வாழ்க்கை வேறு. தேர்வுகளில் தோல்வி ஏற்பட்டால் வாழ்க்கையே போய்விடாது.

ஐன்ஸ்டின், தன்னுடைய பதினைருவதுவயதில் பாலி டெக்னிகில் புகுவதற்கான தேர்வில் தோல்வியடைந்தவர்.

ராமானுஜம் கல்லூரித் தேர்வுகளில் தோல்வியடைந்தவர்.

அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர் எம். ஏ. தேர்வில் தோல்வியடைந்தவர்.

அண்ணு பள்ளியிறுதித் தேர்வில் தோல்வி அடைந்தவர்.

ராஜாஜி பி. ஏ. வகுப்பில் தமிழ்ப் பாடத்தில் முதலில் தோல்வியுற்றவர்.

டால்ஸ்டாய் பள்ளித் தேர்வுகளில் தோல்வியுற்ருர். பி. நாராயணன்.

---

என்பதால் சொன்னேன்; அதிருக்கட்டும். சூர்யபூர் போரில் பலந்த சாத[...]கள் நிகழ்த்திவிட்டீர்கள் போலிருக்கிறது.''

கான் சூரின் முகத்திலும் கு[...]லும் வெற்றிப் பெருமிதம் தொ[...]தது. ''எல்லாம் சக்கரவர்த்திய[...] ஆசி. மூவாயிரம் பெண்கள் நெருப்பி[...] விழுந்து மடிந்து விட்டார்கள். [...] நூறு யானைகள் கொல்லப்பட்டன[...]

''சபாஷ். குதிரைகள் நா[...]ருவது இருக்குமே?''

''எழுநூறு சக்கரவர்த்தி[...]

''மனிதர்கள்?''

''இரண்டாயிரம் பேர் இரு[...]கும்.''

''போருக்கு வந்தவர்க[...] மட்டும்தான் உமது வாளுக்கிரையாகு[...]களா? அல்லது ஊருக்குள் இருந்தவ[...]களையும்...''

''விட்டுவைப்பேனு அவர்க[...] மட்டும், ஷா இன்ஷா? சூர்யபூ[...] படைகளுக்கு உணவு, தண்ணீர்— ஏ[...] ஆயுதங்கள் கூட அவர்களிடமிருந்[...] வந்து கொண்டிருப்பது தெரிந்த[...] ஆகவே அவர்களையும் அழிக்க வேண்டி[...]தாயிற்று.''

''நியாயம்தான். அவர்களி[...] கிழவர்கள் மட்டுமில்லாமல் குழந்தை[...]களும் இருந்திருப்பார்களே?''

''இருந்தார்கள். அவர்க[...] இன்றைக்குத் துரோகியில்லாவிட்ட[...]லும் நாளைக்குத் துரோகியாக மாற[...] போகிறவர்கள்தானே? ஆகையால் அவ[...]களையும் அழித்து வ்ட்டேன்.''

''சபாஷ், சபாஷ்!'' சக்க[...]வர்த்தியின் முகம் கறுத்தது. ''நீ[...] தலைநகருக்கு வரும் வழியில் சில்லறை[...] கிராமங்கள் சில எதிர்ப்புக் காட்டியிரு[...]குமே?''

''காட்டின. அவைகளுக்[...] நெருப்பின் ஜ்வாலை எப்படியிருக்கு[...]மென்று காட்டிவிட்டேன்.'' மரியாதை[...] குறைவாக இருக்குமென்று தன் புன்[...] சிரிப்பை மறைத்துக் கொண்டான்[...] கான் சூர்.

''நல்ல காரியம் செய்தீர்[...] தளபதி. நல்ல காரியம் செய்தீர்.'' அவனை முதுகில் தட்டிக் கொடுத்[...]தார் சக்கரவர்த்தி. ''உம்முடைய[...] போர்த் தந்திரத்தையும் ராணுவ[...] சேவையையும் மெச்சிச் சில வார்த்[...]



தைகள் நானே கைப்பட எழுதித் தரவேண்டும். அரசாங்க ஆணையை இப்படிக் கொடும். அதிலேயே எழுதி விடலாம்.''

கான் சூர் திகைத்தான். ''என்ன ஆணை, சக்கரவர்த்தி?''

''ராஜாங்க ஆணை தான். ரணதாம்பூரில் இருந்த நீர் சூர்யபூர் கோட்டையைத் தாக்கவும், ராஜபுத்திரப் பெண்கள் தீக்குளிக்கும்படி செய்யவும், கிழவர்களையும் குழந்தைகளையும் கொலை செய்யவும், கிராமங்களைக் கொளுத்திச் சூறையாடவும் ராஜாங்க ஆணை உமக்கு வந்திருக்குமே? என் முத்திரையுடனே பிரதம மந்திரியின் முத்திரையுடனே ஆணை வராமல் நீர் அவ்வளவும் செய்திருப்பீரா?''

''வந்து ... ஷா இன்ஷா ... அப்படி எதுவும் எனக்கு வரவில்லை...''

''கான்சூர்!'' இடியென இறங்கியது அக்பரின் குரல். ''என்ன தைரியமிருந்தால் இத்தனை அக்கிரமங்களை நீ எதேச்சாதிகாரமாகச் செய்து விட்டு, மார்பை வேறே நிமிர்த்திக் கொண்டு என் முன்னே வந்து நிற்பாய்!''

''ஷா இன் ஷா ... நான்.. சக்கரவர்த்தியின் சாம்ராஜ்யத்தை விஸ்தரிக்கத்தான் ...''

பளீரென்று புறங்கையால் அவனைக் கன்னத்தில் அறைந்தார் அக்பர். ''நேற்று முளைத்த நீ, எனக்குக் கற்றுத் தருகிறாயா ராஜாங்க நிர்வாகம்! சைத்

தானே! அணு அணுவாக நான் பாடு பட்டு ஸ்தாபித்திருக்கிற புனிதமான ராஜபுத்திர உறவுகளை எவ்வளவு வேரோடு நீ வெட்டிச் சாய்த்திருக்கிறாய் தெரியுமா? கான் சூர்! இதே போல என்னை மீறி உன் அண்ணன் காரியங்கள் செய்தான். ஆட்களை விட்டு அவனை உப்பரிகையிலிருந்து தூக்கியெறியச் செய்து கொன்றேன். உன் விஷயத்தில் நான் அப்படிச் செய்யப் போவதில்லை!'' இடுப்பில் கை வைத்தார் அக்பர்.

''சக்கரவர்த்தி!'' கான் சூர் நடுங்கினான்.

''என் கையாலேயே உனக்குத் தரப் போகிறேன் மரண தண்டனை! அப்போதுதான் என் ஆத்திரம் அடங்கும்!''

பிச்சுவாவை உருவி அவனுடைய அடிவயிற்றை நோக்கி ஓங்கிய அதே கணத்தில்—

''நான் உள்ளே வரலாமா சக்கரவர்த்தி?'' என்ற கனிவு நிறைந்த குரலொன்று கேட்டது.

அக்பர் நிமிர்ந்தார். வந்தவர் யாரெனக் கண்டதும் அவர் கையிலிருந்த குத்துக் கத்தி தானாகவே தளர்ந்து கீழே விழுந்தது.

பாரசீகப் பேரறிஞரும் ஜாருதுஷ்டிர ஆசாரியருமான தஸ்தூர் மகர்ஜி ராணா நிதானமான நடையில் உள்ளே நுழைந்தார். வெள்ளை வெளேரென்ற அவரது உடைகள், அவருடைய சாந்த முகத்துக்குச் சன்னது தந்தன.

''தாங்கள் தலைநகருக்கு வந்ததே தெரியாதே?'' குனிந்து வணங்கினார் சக்கரவர்த்தி.

''ரொம்பக் கோபமாக

---

நான்கு பேர் உட்காரக் கூடிய ஆட்டோ ரிக்ஷாக்கள் டெல்லியில் உபயோகத்துக்கு வரப் போகின்றனவாம்.

—ஹிந்துஸ்தான் டைம்ஸ்



---

●● தெற்கே தலைவைத்துப் படு... கூடாது என்கிறார்களே, ஏன்?

ஸ்ரீ ஹரிகோட்டா அந்... திசையில் இருக்கிறதோ என்னவோ... (போச்சே அநியாயமாய் 27 கோ... ருடாய்!)

—சி. சுப்பிரமணி...

●● நகரசபைகள் இருக்க வே... டியதுதானா? எடுத்துவிட்டால் என்ன ஆ...

ஐயையோ! கூடாது! அ... புறம், நிச்சயம் வரப்போகிறது தே... தல் என்று எதைக் சுட்டிக் காட்... சொல்வது?

—அமைச்சர் காளிமுத்...

●● சுதந்திர தினத்தைச் சி... பாகக் கொண்டாட என்ன வழி?

அன்றைக்குப் பார்த்து ரூ... கால் அழ வேண்டும்.

—சஞ்சீவ ரெட்...

●● மூப்பனார் என்றால் என்ன அர்த்தம்?

போன பதவி திரும்புவ... மோப்பனார் என்று அர்த்தம்.

—கருப்பையா மூப்பனா...

●● விழுங்குவதற்குச் சுலபமான... திருநெல்வேலி அல்வா என்கிறார்களே... உண்மைதானா?

விஷயம் தெரியாதவர்க... தான் அப்படிச் சொல்லுவார்கள். மு... னாள் குற்றச்சாட்டுக்கள் மாதிரி விழுங்... வதற்குச் சுலபமானதும் கிடையாது... இனிப்பானதும் கிடையாது.

—பகுகுண...

●● கர்ண கடூரமான சத்தம் எது...

கடகட கடகட கடகட கடகட?

—நாஞ்சில் மனோகரன்

●● மூன்றெழுத்தில் என் மூச்... சிருக்கும் என்று பாடினார் ஒருத்தர். அது எந்த மூன்றெழுத்து?

அது எனக்குத் தெரியாது.
கப் போகும் மூன்றெழுத்து தான்
ரியும்; லுசாகா.

—அயல்நாட்டு அமைச்சர் மிஸ்ரா

என் மனைவி எப்போது பார்த்
ும் அக்கம் பக்கத்தில் கடன் வாங்கிக்
ண்டேயிருக்கிறாள். இந்தப் பழக்கத்தை
டி நிறுத்துவது?

நிறுத்த வேண்டாம். எங்கே
வது 1200 கோடி ரூபாய் வாங்கித்
முடியுமா என்று பார்க்கச் சொல்
ங்கள். எனக்கு இப்போது அது
சரத் தேவை.

—பெட்ரோல் அமைச்சர் டி. ஏ. பை

திகில் ஏற்படும்போது என்ன
ய வேண்டும்?

20'ம் தேதி வரை கண்ணை
டிக்கொண்டு இருக்க வேண்டும்.

—சரண்சிங்

எங்கள் வீட்டு மதில்சுவரில்
பூனை உட்கார்ந்து கொண்டு ராத்திரி
கத்துகிறது. அதை எந்தப் பிராணி
ர்ப்பு நிலயத்திலாவது சேர்த்துக்கொள்
ர்களா?

எழுதவும்: சோஷலிஸ்டுக்
சி, புது டெல்லி.

—பொனுண்டஸ்

உங்கள் கையில் ஒன்றை
வத்து மூடிக் கொண்டிருந்தால் என்ன
வத்திருக்கிறீர்கள் என்று என்னால்
சால்ல முடியும். அந்த வித்தையை
களுக்குக் கற்றுத் தரட்டுமா?

ராஜ்நாராயண், ஜகஜீவன்
ம் விலாசம் தருகிறேன். உடனே
ங்கே போங்கள்.

—எம். ஜி. ஆர்.

'துள்ளிக் குதிக்கச் செய்யும்
ந்தோஷமான விஷயம்' என்ற நீண்ட
ர்த்தைக்குச் சுருக்கமான சின்ன
ர்த்தை உண்டா?

ட்ராஜ

—வெங்கட்

இலவுகாத்த கிளியை ஏமாற்றி
து எது?

சுப்பிரமணியம்.

—அளகேசன்

இருந்த சமயத்தில் வந்திருக்கிறேன் போலிருக்கிறது?'' புன்னகை செய்தார் தஸ்தூர் மகர்ஜி.

''ஆமாம், ஆசாரியரே..? இவன் செய்த காரியத்தைத் தாங்கள் கேட்டால்...''

''இருக்கட்டும்,இருக்கட்டும்.'' கையமர்த்தினார் பெரியவர். ''தாளமுடியாத கோபம் வரும்போது, அதோ சாளரத்தின் வழியே தெரிகிறதே, அந்த மாமரத்தை ஒரு பார்வை பார்த்துக் கொள்ளும்படி நான் சொல்லியிருக்கிறேனே, மறந்து விட்டதா?''

ஓங்கி வளர்ந்திருந்த அந்த மரத்தின் மீது மாமன்னரின் பார்வை சென்றது. தலையைக் குனிந்து கொண்டார்.

தஸ்தூர் மகர்ஜி சொன்னார்:

''அங்கே போய்ச் சற்று நேரம் அமர்ந்திருந்தால் சக்கரவர்த்தியின் மனம் அமைதிப்படும் என்று நினைக்கிறேன்.''

கான் சூரை வெறுப்புடன் ஒருமுறை பார்த்தார் அக்பர்.

''இவன் இங்கேயே இருக்கட்டும். ஓடி விடாதபடி நான் பார்த்துக் கொள்கிறேன்.''

சக்கரவர்த்தி அறையை விட்டு வெளியேறினார். உப்பரிகையிலிருந்து இறங்கினார். தோட்டத்துக்குச் சென்றார். அந்த மாமரத்தின் கீழே போட்டிருந்த பளிங்குக் கல் மேடையில் கண்ணை மூடிக் கொண்டு உட்கார்ந்திருந்தார்.

பற்பல வருடங்களுக்கு முன்பு, சூரத்தைப் படையெடுக்கச்சென்றபோது குஜராத்திலுள்ள நௌசாரியில் இந்தப் பார்ஸி அறிஞரைச் சந்தித்தது அவருக்கு ஞாபகம் வந்தது. ஜாருதுஷ்டிர மதத்தின் போதனைகளைச் சக்கரவர்த்திக்கு அவர் எடுத்துச் சொன்னார். அக்பருடன் ஆக்ராவுக்கு வந்தார். தினசரி சூரிய நமஸ்காரம் செய்யலானார் அக்பர். அஸ்தமிக்கும்போது அரண்மனை பூராவும் விளக்குகள் ஏற்றப்பட வேண்டுமென்றும், எல்லா அதிகாரிகளும் சாஷ்டாங்கமாக விழுந்து வணக்கம் செய்ய வேண்டுமென்றும் கட்டளையிட்டிருந்தார். அந்தச் சமயம், ஒருநாள், சக்கரவர்த்தி பிற்பகல் சிறிது நித்திரை செய்துவிட்டு வெளியே வந்தபோது இருட்டியிருந்தது. விளக்கை ஏற்ற வேண்டிய வேலைக்காரன், தீபத்தின் அருகே கால் நீட்டிக் கொண்டு படுத்

ந்தான்: அன்றே அங்கேயே அவ
க்கு மரண தண்டனை விதித்தார்
கரவர்த்தி. தண்டனை நிறைவேற்றப்
டு விட்டது.

தஸ்தூர் மகர்ஜிக்கு விஷ
ம் தெரிந்தது. "மத விஷயத்தில்
ங்கள் இத்தனை கொடூரம் காட்டி
நக்கக் கூடாது," என்று சக்கரவர்த்
யைக் கண்டித்ததோடு மட்டுமல்ல,
ரண்மனை நந்தவனத்தில் ஒருமூலையைச்
ட்டிக் காட்டினார். "கோபம் வரும்
மயங்களில் அங்கே போய்த் தனியாக
ட்கார்ந்து தியானம் செய்யுங்கள்.
னம் அமைதியடையும்," என்று வழி
ம் சொல்லித் தந்தார்.

முதல் சில நாட்களுக்கு
க்பருக்கு எவ்வித வித்தியாசமும்
தரியவில்லை. பிறகு ஒருநாள் திடீ
ரன்று அவர் உள்ளத்துக்குள் ஓர்
ளி வீசினாற்போலிருந்தது. வார்த்தை
ளால் விவரிக்க முடியாததோர் சாந்தி
னக்குள்ளே பரவுவதை உணர்ந்தார்.

அந்த இடத்தில், அன்று
வர் நட்டு வைத்த மாஞ்செடி இன்று
ரி குலுங்கும் மரமாகத் திகழ்ந்தது.

தஸ்தூர் மகர்ஜியின் ஆணைப்
டி இன்றும் அதே மரத்தடியில் உட்
ார்ந்து கொண்டிருந்த போது தமது
ருதயத்தில் ஒரு தெளிவு பிறப்பது
தரிந்தது அக்பருக்கு.

அரண்மனைக்குத் திரும்பினார்.

தன் கதி என்ன ஆகப்
பாகிறதோ? திகிலுடன் காத்திருந்
ான் கான் சூர். அருகிலேயே அமைதி
ாக நின்றிருந்தார் பார்ஸிப் பெரியவர்.

"இவனை விட்டு விடுகிறேன்,"
ன்றார் அக்பர்.

"நல்ல முடிவு." பாராட்டி
ர் தஸ்தூர் மகர்ஜி.

"அதாவது இப்போதைக்கு
விட்டு விடுகிறேன்," என்றார் அக்பர்.
எப்போது எப்படித் தண்டனை தர
வண்டும் என்பதை எனக்கு இறை
ன் விரைவிலேயே சொல்லப் போகி
ன். அது நிச்சயம்."

அந்தக் குரலில் எப்படிப்
ட்ட உஷ்ணம்! கான் சூர் நடுங்கிய
ாறு வெளியே சென்றான். கொடிய
ண்டனை ஏதோ ஒரு வகையில் வரப்
பாகிறது. ஆனால் எந்த வகையில்?

(தொடரும்)



ஏவி. எம் ஸ்டுடியோ:

'உதிரிப் பூக்கள்' டப்பிங்:

அந்தப் பக்கம் காரில் வந்த நடிகர் செந்தாமரை, "அலெக்ஸ்—சௌக்கியமா?" என்று கேட்டதும் சிரித்துக்கொண்டே தலையை ஆட்டினார் டைரக்டர் மகேந்திரன்.

"என்ன இது? 'அலெக்ஸ்' என்பது உங்களுக்குள் ஏதாவது சமிக்ஞை வார்த்தையா?" என்று கேட்டேன்.

"நோ, நோ: என் பெயரே அலெக்ஸாண்டர்தான்: இந்த சினிமா இண்டஸ்ட்ரியில் என்னை 'அலெக்ஸ்' என்று கூப்பிடு பவர் செந்தாமரை மட்டும்தான். அவர் எனது நீண்ட நாள் நண்பர்; அதனால் நிஜப் பெயர் தெரியும்!"

"அப்படியானால் மகேந் திரன் என்பது?"

"நான் காலேஜில் ஹிஸ் டரி ஸ்டுடண்ட். பல்லவ காலத்து மன்னன் மகேந்திரவர்மனின் பராக் கிரமங்கள் என்னைக் கவர்ந்தது: அதனால் என் பெயரை கெஜட்டில் விளம்பரம் கொடுத்து காலேஜில் படித்தபோதே மகேந்திரன் என்று மாற்றிக்கொண்டேன்."

இந்தியில் நூதன் நடித்த ரோல். கதையைக் கேட்டார்—இந் திப் படத்தையும் பார்த்தார் கே. ஆர். விஜயா. வேடம் பிடித்திருந் தது. அவருடைய பதினைந்து ஆண்டு கால திரையுலக வாழ்க்கையில் ஏற்றி ராத ஒரு புதிய வேடம் அது; ஒப்புக்கொண்டார்

விதவை வேடம்! படம்! நீல மலர்கள். இந்தி 'அனுராக்'கின் தழுவல்.

—ராதா







கதைகளில்வரும் பெயர்கள், சம்பவங்கள் அனைத்தும் கற்பனையே. கதை கட்டுரை முதலிய எதையும் தபால் மூலமே அனுப்ப வேண்டும். அவற்றைத் திருத்தி அமைக்கவும் கடிதங்களைச் சுருக்கவும் ஆசிரியருக்கு உரிமை உண்டு. குமுதம் பிரிண்டர்ஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிட்டவர்: ஏ. பி. ஏ. பெரிய கருப்பன். குமுதம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர்: பி. வி. பார்த்தசாரதி. ஆசிரியர்: எஸ். ஏ. பி. அண்ணாமலை.

முகவரி: 151, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை-600010.

# வாளின் முத்தம்

## 20

சூர்யபூர் கோட்டையின் தெற்குப் புறத்தில், இடிந்துபோன கடைவீதி கொஞ்சம் கொஞ்சமாக உயிர் பெறத் தொடங்கியிருந்தது. ஒவ்வொரு கடையாகப் புதுப்பித்து வந்தார்கள். அப்பாடா! களை திரும்ப ஆரம்பித்திருந்தது சூர்யபூர் பகுதியில். அங்கொன்று இங்கொன்றாக மக்களின் அன்றாட வாழ்க்கை தலைதூக்கலாயிற்று.

"சித்தூர் தாத்தா இப்போது எங்கே இருக்கிறார்?" ஒவ்வொருவராக விசாரித்தபடி சென்று கொண்டிருந்தாள் ரூப்மதி. இரண்டொருவர் வழி சொன்னார்கள். பெரும்பாலோர் வெறுப்புடன் முகத்தைத் திருப்பிக் கொண்டார்கள். பொறுத்துக் கொண்டாள். இவர்களுடைய கோபம் நீங்குவதற்கு வெகு நாளாகும். உயிருக்குயிரான ஜெய்யே இன்னும் அவளை மன்னிக்கவில்லையே! அன்று அவ்வளவு தூரம் மன்றாடிய பிறகும் கூடப் பதிலொன்றும் சொல்லாமல் தானே போய்விட்டான்! இருக்கட்டும். இருக்கட்டும். நாம் யார், என்ன செய்யப் போகிறோம் என்பது இவர்களுக்கெல்லாம் தெரிந்தால்...!

விடிகாலை நேரத்துக்கு அவள் சித்தூர் தாத்தாவின் வீட்டைக் கண்டுபிடித்தாள்.

எவரையும் காணோம். வில் போரில் பெரும் ஆசாரியரான அவர் வீடு இன்று அனாதையாகக் கிடந்தது. போர் வீரர்களின் கலகலப்பான நடமாட்டம் இப்போது செத்திருந்தது.

"தாத்தா!" மெல்லக் கூப்பிட்ட வண்ணம் கதவைத் திறந்தாள் ரூப்மதி. உள்ளே நுழைந்தாள்.

கும்மிருட்டு; முனகல்; காய்ந்த ரத்தக் காயத்தின் நெடி; கசகசவென்ற குப்பை—இவையே அவளை வரவேற்றன.

"தாத்தா — சித்தூர் தாத்தா." மீண்டும் குரல் கொடுத்தாள் அவள்.

"யார்?" மெல்லப் பதில் வந்தது, இருளில் தவழ்ந்து செல்லும் பூனையைப் போல். அந்தக் குரலின் மிகுமிஞ்சிய வேதனை—சோகம்! ரூப்மதிக்கு அடுத்து என்ன பேசுவது என்று விளங்கவில்லை. "நான்தான் ரூப்மதி வந்திருக்கிறேன் தாத்தா," என்றாள்.

சரேலென்று யாரோ எழுந்து கொள்கிற சத்தம் கேட்டது. சித்தூர் தாத்தாவின் குரலில் வேதனை மறைந்து சீற்றம் பிறந்தது, "என்ன பெயர் சொன்னாய்? ரூப்மதியா? எனக்கு அப்படி யாரையும் தெரியாது. போ, போய் விடு இங்கிருந்து. போ போ போ!" வெறி பிடித்தவர் போலக் கிழவர் கத்தினார்.

ரூப்மதியின் கண்ணில் நீர் பெருகியது. "தாத்தா! உங்கள் பேத்தி ரூப்மதி தாத்தா நான். உங்கள் அன்புக்குரிய அருமைப் பேத்தி! எத்தனை திருவிழாக்களில் நான் உங்கள் தோள் மீது ஏறிக் கொண்டிருக்கிறேன்! எவ்வளவு உற்சவங்களுக்கும் பண்டிகைகளுக்கும் நீங்கள் உங்கள் கையால் என் வாயில் இனிப்பு ஊட்டியிருக்கிறீர்கள்! நினைவில்லையா தாத்தா?"

"ஓ! நினைவிருக்கிறதே! தாராளமாய் நினைவிருக்கிறது!" சிரித்தார் பெரியவர். வெறுப்பும் கோபமும் கலந்த அந்தச் சிரிப்பு, சுற்றியிருந்த கும்மிருட்டில் ஒரு துஷ்ட மிருகத்தைப் போல அவளை நோக்கிப் பாய்ந்து வந்

'மோகினி'

# ராஜம்மா

காலம்சென்ற எழுத்தாளர் ஸி.ஆர். ராஜம்மாவின் குடும்பத்துக்காக புதுடில்லி–5 ஆர். ஸ்ரீமான், ரூ. 51; பெங்களூர்–5 அமுதவன் ரூ. 25; சென்னை–18 எஸ். என். கோபாலகிருஷ்ணன் ரூ. 11; விசாகப்பட்டினம்–7 சுசிலா ராஜகோபாலன் ரூ. 10; திருச்சி என். பாலு ரூ. 5; ஈரோடு உ. பொ. ராமசாமி ரூ. 5; அனுப்பியிருக்கிறார்கள்.

---

தது. "குழந்தை என்று பாராட்டிச் சீராட்டித் தோளில் போட்டு உன்னை வளர்த்தேன். எல்லாவற்றுக்கும் தக்க பரிசுதான் கொடுத்து விட்டாயே! எனக்கு மட்டுமா கொடுத்தாய்! சூர்யபூர் மொத்தத்துக்கும், ராஜபுதன தேசம் பூராவுக்கும் பரிசு கொடுத்து விட்டாய் ரூப்மதி! அக்பருக்குப் பரிந்து பேசி, சூர்யபூரின் சுதந்திரத்தைக் காவு கொடுத்த சுத்த வீராங்கனையாயிற்றே நீ!"

"தாத்தா! அதெல்லாம் என் முட்டாள்தனம்! அதற்காக நீங்கள் என்ன தண்டனை கொடுத்தாலும்—"

"தண்டனை நான் ஏன் கொடுக்க வேண்டும்? எல்லாத் துரோகங்களையும் பார்த்துக் கொண்டிருக்கிறானே மேலேயிருந்து ஒருவன், அவன் கொடுப்பான்!" சித்தூர் தாத்தா மீண்டும் கசப்புடன் சிரித்தார். "நல்ல காலம், இருட்டாயிருக்கிறது— உன் முகம் தெரியவில்லை. இல்லாவிட்டால் அந்த முகத்தைப் பார்த்தோமே என்று என் கண்களைக் குத்திக் கொண்டிருப்பேன்."

"தாத்தா, அப்படியெல்லாம் சொல்லாதீர்கள் தாத்தா. நான் செய்த தவறுக்குப் பிராயச்சித்தம் செய்ய வேண்டுமென்றுதான் உங்களிடம் ஓர் உதவி நாடி வந்திருக்கிறேன்..."

"உதவியா! உனக்கா! நானா? இந்த ஜன்மத்தில் அது கிடையாது பெண்ணே, இந்த ஜன்மத்தில் கிடையாது. சூர்யபூரின் துரோகிக்கு நான் உதவி செய்தேனென்பது தெரிந்தால், என் ஏழேழு தலைமுறைகளும் என் பெயரைக் கேட்ட மாத்திரத்தில் காறித் துப்புவார்கள்!"

"தாத்தா, உங்கள் காலைப் பிடித்துக் கொள்கிறேன் தாத்தா." இருட்டில் அவள் முன்னேறினாள். தாத்தா உட்கார்ந்திருந்த மூலையை அடைந்தாள். அவருடைய கால்களைக் கையால் துழாவினாள். பிடித்துக் கொள்ள—

அதிர்ச்சி அவள் மூச்சை அடைத்தது.

சித்தூர் தாத்தாவின் ஒரு பாதம் மட்டுமே அவள் கைக்கு அகப்பட்டது. இன்னொரு பாதம்—அது இருக்க வேண்டிய இடம்—முழங்காலோடு மொக்கையாக நின்று விட்டது.

"தாத்தா! உங்கள் கால்—" பதைத்தாள்.

"துரோகிகள் நடமாடுகிற பூமியை நான் தொட மாட்டேன் என்று தன்மானத்தோடு போய் விட்டது!" அவர் குரல் தழுதழுத்தது. "அந்த ஒருநாள் நடந்த அக்கிரமமான, அதர்மமான யுத்தத்தில், என் பிள்ளைகள் மூன்று பேர், பேரன்கள் ஏழு பேர், உறவுக் குழந்தைகள் இருபத்தெட்டுப் பேர் வீர சுவர்க்கம் போய் விட்டார்கள். நான்தான் வெட்கமில்லாமல் உயிரோடு உட்கார்ந்திருக்கிறேன். என் ஒரு காலையாவது பலி கொடுத்தோமே என்று கொஞ்சத்துக்குக் கொஞ்சம் ஆறுதலாக இருக்கிறது!"

ரூப்மதிக்கு நாக்கு உலர்ந்தது. உடம்பு நடுங்கியது. "தாத்தா! நீங்களும் உங்கள் குடும்பத்தினரும் மகத்தான தியாகம் செய்திருக்கிறீர்கள்..அது வீண் போகக் கூடாது. அதற்காகத்தான் நான் ஒரு திட்டம் வைத்திருக்கிறேன். தயவு பண்ணிக் கேளுங்கள். அழுது கொண்டிருக்கும் ஒவ்வொரு அன்னையின் துயரத்துக்கும் பழி வாங்க நான் துடிக்கிறேன். விளக்கணைந்த ஒவ்வொரு வீட்டுக்காகவும் வஞ்சம் தீர்க்க நான் தவிக்கிறேன். இந்தப் பரந்த ராஜபுதனத்தில் நீங்கள் ஒருத்தர்தான் எனக்கு உதவி செய்யக் கூடியவர். செய்கிறேனென்று எனக்கு வாக்களியுங்கள் தாத்தா."

இருட்டில் தேடி அவருடைய கைகளைப் பிடித்துக் கொண்டாள் அவள். அந்த ஒரு விநாடிக்குள்— எங்கே அந்த இடத்திலும் கை இருக்க வேண்டியதற்குப் பதில்— அவள் இ

ம் படபடத்தது; நல்லவேளை, சித்
ர் தாத்தாவின் கரங்கள் உரம்
ற்று வலுப் பெற்று எஃகுத் துண்டங்
ாகத் திண்மையுடன் தட்டுப் பட்
ன.

தன் கைமீது விழும் சூடான
த் துளிகளை அவர் உணர்ந்தார்
போலும், ஏதும் பேசாமல் மௌனமாக
இருந்தார்.

ரூப்மதிக்குத் தைரியம் வந்தது. "விளக்கை ஏற்றுகிறேன், தாத்தா," என்றவள் இருட்டில் தடுமாறித் தீபத்தைக் கொளுத்தினாள். .

சுவர் ஓரமாகப் படுத்திருந்த



சித்தூர் தாத்தா நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டார். அவருடைய கம்பீரமான முகத்தில் சோதனைகளின் கோடுகள் குறுக்கும் நெடுக்கும் ஓடியிருந்தன. ரூப்மதியின் மீது கோபம் ஓரளவு தணிந்திருந்தது. ஆயினும் அவளை முழுதுமாகப் பார்க்க அவருக்கு இன்னும் பிடிக்கவில்லை. பார்வையைத் தாழ்த்திக் கொண்டார்.

''தாத்தா! இதோ பாருங்கள்.'' புடவைத் தலைப்பில் இருந்த முடிச்சை அவள் அவிழ்த்தாள். பிரித்தாள். காட்டினாள்.

''ரூப்மதி!'' அவர் குரலில் அலாதியான வீறு தென்பட்டது. பார்வையில் அசாதாரணமான ஒளி புலப்பட்டது. ''வாளின் முத்தம்! இந்தப் புனிதமான நாணயம்—''

''பெரிய இளவரசர், உயிர் பிரியும் சமயத்தில் ஒப்படைத்தார் என்னிடம்.'' அந்தத் தங்க நாணயத்தைக் கண்களில் ஒற்றிக் கொண்டாள். பழையபடி இடுப்பில் முடிந்து கொண்டாள். ''அரச வம்சத்தின் முத்திரை மோதிரம் போல இது. ஒவ்வொரு சூர்யபூர் பிரஜையும், ஒவ்வொரு ராஜபுதனப் புத்திரனும் இதை வைத்திருக்கும் எனக்கு எல்லாவித ஒத்தாசைகளும் செய்யக் கடமைப் பட்டிருக்கிறார்கள். ஆகவே, உங்களையும் உரிமையுடனேயே உதவி கேட்க முடியும் நான். ஆனால் அன்பு முன்னாலே, அதிகாரம் அப்பாலே. தாத்தா, நான் எடுத்துக் கொண்டிருக்கும் சபதத்துக்கு நீங்கள் தான் கை கொடுக்க வேண்டும். என் லட்சியம் நிறைவேற நீங்கள்தான் வழி காட்ட வேண்டும்.''

அவர் மௌனமாக இருந்தார் நீண்ட நேரத்துக்கு. சூர்யபூரின் நாசத்துக்குக் காரணமாயிருந்தவள் என்பதால் அவள் மீதிருந்த கோபத்துக்கும், வாளின் முத்தத்தை வைத்திருப்பவள் என்பதால் அவள் மீது ஏற்படும் மதிப்புக்கும் அவர் உள்ளத்தினுள் போராட்டம் நிகழ்ந்தது. முடிவில் மதிப்பு வென்றது. கோபம் தோற்றது. அவர் உதட்டில் முதன் முறையாகக் கனிவு பிறந்தது.

அவர் முகத்தின் மாறுதலைக் கவனித்தாள் அவள். ''உதவி செய்கிறேன் என்று சொல்லுங்கள் தாத்தா. சொல்லுங்கள்,'' என்று மீண்டும் வற்புறுத்தினாள்.

''ஆகட்டும், சொல்லு.''

அவள் மேற்கொண்டு பேசவில்லை. எழுந்து கொண்டாள்.

அவள் என்ன செய்யப் போகிறாள்? குறுகுறுப்புடன் கவனித்தார் சித்தூர் தாத்தா. தீபத்தின் ஜோதி ஆடி ஆடி அசைந்தது. அவளுடைய நிழல் நீளமாக அவர் முன்னே நகர்ந்தது. வெளியேயிருந்து பனாசி நதியின் குளிர்ந்த காற்று அவரை இதமாகப் போர்த்துக் கொண்டது.

அவள் சுவரில் மாட்டி வைத்திருந்த வில்லையும் அம்பையும் எடுத்து வந்தாள். அவர் காலடியில் விழுந்து வணங்கினாள்.

''என்ன ரூப்மதி, என்ன கேட்கிறாய்?'' அவர் திகைத்தார்.

''எவ்வளவோ ஆயிரக் கணக்கான ராஜபுதன ஆண்மக்களை நீங்கள் வில்லாளியாக்கியிருக்கிறீர்கள், தாத்தா. இப்போது ஒரு ராஜபுதனத்துப் பெண்ணுக்கும் அந்த வித்தையைக் கற்றுக் கொடுங்கள்.''

''ரூபா!''

''ஆமாம் தாத்தா. என்னைச் சிறந்த வில்லாளியாக ஆக்குங்கள்.''

''எந்தப் போரில் நீ கலந்து

---



எந்த பொட்டானிகல் கார்டன்? என்ன அற்புதமான மரம் இது? இப்படியெல்லாம் விசாரிக்கத் தோன்றியது.
கிடைத்த பதில்: இடம்— வித்யா பள்ளிக்கூட மைதானம்.
மரம்: சாதாரண தூங்கு மூஞ்சி மரம்
படத்தில்: தே.
எடுத்தவர்: உத்ரா

ாள்ளப் போகிறுய்? எந்தப் படையில் ர்ந்து கொள்ளப் போகிறுய்?''

''இது என் சொந்தப்போர்' த்தா! ரூபமதியின் ஒரே ஒற்றை ! இந்தப் படையின் தளபதியும் ன் ஒருத்திதான். படைவீரனும் ன் ஒருத்திதான்.''

''பகைவன் யார்? '

''பகைவன்?'' குரோதத்து ன் நகைத்தாள் அவள். ''பகைவன் ரரென்று கேட்கிறீர்கள், தாத்தா? ர்யபூர் மண்ணில் உயிரோடு மிஞ்சி நக்கும் எந்தப் பச்சைக் குழந்தைக்கும் தரியுமே, பகைவன் யாரென்பது! ரஜபுதன நாடு மொத்தத்துக்கும் ஒரே ந பகைவன்தானே உண்டு! அந்தப் கைவனைத் தீர்த்துக் கட்டுவதுதான் ந்த ரூப்மதியின் ஒரே குறிக்கோள்.''

அவர் அவள் முகத்தை ராய்ந்தார். இவள் பேசுவதெல்லாம் ள்ளத்திலிருந்து வருகிறதா, உதட்டு னியிலிருந்தா என்று ஆராய்ந்தார். ண்மையாகத்தான் பேசுகிறுளென்று வருக்கு உறுதியாயிற்று. ''நல்ல லட் மந்தான்.'' பாராட்டினுர். ''உனக் ாக இல்லாவிட்டாலும் உன் கையி ள்ள வாளின் முத்தத்துக்காகவேனும் ான் உதவி செய்யக் கடமைப்பட்டி க்கிறேன். விவரமாகச் சொல்லு.''

''எப்போது, எப்படி என் ட்டத்தை நிறைவேற்றப் போகிறேன் ன்பதை நானே இன்னும் தீர்மானித் துக் கொள்ளவில்லை தாத்தா. ஆனுல் ன் ஆயுதத்தையும் போர் முறை யையும் தீர்மானித்து விட்டேன். இந்த வில்லும் அம்பும்தான் என் ஆயுதங்கள். வெகு தூரத்துக்கு அப்பா லுள்ள இலக்கை எப்படிக் குறி வைத் துப் பிளப்பது என்று நீங்கள் எனக் குக் கற்றுத் தர வேண்டும். எங்கிருந்து அம்பு வந்து உயிரைப் பறிப்பது என் பதை உடனே கண்டு பிடிக்க முடியா திருக்க வேண்டும். அதைக் கண்டுபிடித்து அவர்கள் என்னைத் தேடி வருமுன் நான் சிட்டாய்ப் பறந்து விடக் கூடிய அளவு எனக்கும் இலக்குக்கும் இடை வெளி தூரம் இருக்க வேண்டும்.''

அவர் மறுவல் பூத்தார். சுவரைப் பிடித்துக் கொண்டு மெல்ல எழுந்தார். ரூப்மதி சட்டென அவர்



எழுத்தாளர் 'மெரினு'வை (மேற்கு) தாம்பரம் லயன்ஸ் கிளப் பில் பேச அழைத்தார்கள் அரிமா சங்கத்தினர். ஒவ்வொரு கூட்டத்தி லும் உலக சமாதானத்திற்காக ஒரு நிமிடம் மௌனம் கடைப்பிடிப்பது அவர்கள் வழக்கம். மெரினு, ''இரங்கல் கூட்டத்தில் தான் மௌனமாக எழுந்து நிற்பது வழக்கம். உலக சமா தானம் இறந்து விட்டது என்று கருதுகிறீர்களா? உலக சமாதானத் திற்காக ஒரு நிமிடம் எழுந்து நின்று மௌனமாகப் பிரார்த்தனை செய் வோம் என்று அறிவித்தால் நல் லது,'' என்று கூறினர்.

அவருடைய யோசனையை ஒப்புக் கொண்டனர் தாம்பரம் லயன்ஸ் கிளப் உறுப்பினர்கள்.

—ப—

கையைப் பிடித்துத் தன் தோள்மீது சுற்றிக் கொண்டாள்.

மெதுவே அவர் வாசலுக்கு வந்தார். ஆரவல்லி குன்றுகளின் மீது கொஞ்சம் கொஞ்சமாக ஒளி படர்ந்து கொண்டிருந்தது. பொழுது விடிவதற்கு இன்னும் சிறிது நேரமே இருக்கிறது என்று அவர் ஊகித்தார்.

''ரூபா, உன் லட்சியத்துக்குக் கட்டாயம் நான் உதவி செய்கிறேன்.'' அவள் முகத்தை மெல்ல வருடிக் கொடுத்தார் சித்தூர் தாத்தா. ''கடவு ளின் சித்தம் அப்படி. இல்லாவிட்டால் இந்த நல்ல நாள் பார்த்து என்னிடம் நீ வந்திருக்க மாட்டாய். இன்றைக்கு என்ன விசேடம் தெரியுமா?''

''என்ன தாத்தா?''

''ராம நவமி. வில்லாளிகளில் எவன் சிரேஷ்டமானவனே அவனு டைய திருநாள். இன்றைக்குப் பார்த்து உன்னுடைய வில் பயிற்சி ஆரம்ப மாவது ரொம்பப் பொருத்தம்தான்.''

''இன்றைக்கே ஆரம்பித்து விடுகிறீர்களா தாத்தா?'' அவள் குரல் பரவசத்தால் துள்ளியது. ''இன்றைக் கேயா?''

''ஆமாம், இன்றைக்கே. அதோ பார், சூரியோதய நேரம் சமீபித்துக் கொண்டிருக்கிறது. புறப்படத் தயாராகலாம்.''

''ஒரு சின்ன விஷயம், தாத்தா.''

''என்னம்மா?''

''உங்களிடம் நான் வில் பயிற்சி பெறுவது ரகசியமாகவே இருக்கட்டும். அது வெளியே தெரிந்தாலும், எதற்காகப் பயிற்சி செய்கிறேன் என்பது கண்டிப்பாகத் தெரிய வேண்டாம்.''

''அப்படியே ரூபா.''

பலபலவென்று பொழுது விடிந்த சமயம் அவர்கள் குன்றின் உயரத்தில் ஏறிக் கொண்டிருந்தார்கள். ரூப்மதியின் தோளில் அந்தப் பிரம்மாண்டமான வில்லும் கணைகளும் ஆரோகணித்திருந்தன. அவள் முன்னே போனாள். சித்தூர் தாத்தா கட்டையை ஊன்றிக் கொண்டு பின்னே நடந்தார்.

''என்ன தாத்தா இந்தக் காலை வேளையில்?'' சுள்ளிகளைக் கட்டி எடுத்துச் சென்று கொண்டிருந்த இளைஞன் பதேசிங் எதிர்ப்பட்டான்.

முன்னே நோக்கினார் சித்தூர் தாத்தா. ரூப்மதி அவர்களைக் கவனிக்காமல் முன்னேறிக் கொண்டிருந்தாள். யாரிடமும் சொல்ல வேண்டாமென்ற அவளுடைய எச்சரிக்கை அவருக்கு ஞாபகம் வந்தது. இருந்தாலும் இந்தப் பதேசிங் அவருடைய அன்புக்குரிய பையனாயிற்றே! உயிருக்கு[illegible]ரான தோழனாயிற்றே! இன்பத்தி[illegible] துன்பத்திலும் போரிலும் சமாதா[illegible]திலும் தோளோடு தோள் நி[illegible] பங்கு கொள்பவனாயிற்றே!

''மனசுக்குள் வைத்[illegible] கொள். யாரிடமும் சொல்லிவிடாதே[illegible] எச்சரிக்கை செய்துவிட்டு அ[illegible] காதோடு கிசுகிசுத்தார் சித்தூர் தாத்[illegible]

''அப்படியா?'' அவன் க[illegible]கள் விரிந்தன. ''கடவுள் அவளு[illegible] எல்லா வெற்றியும் தர வேண்[illegible] தாத்தா!'' கண்களை மூடிப் பிரார்[illegible]தனை செய்துவிட்டு அவன் தன் வழி[illegible] நடந்தான்.

சித்தூர் தாத்தாவும் [illegible]மதியும் குன்றின் உயரத்துக்கு ஏ[illegible]னார்கள். மரங்களின் குறுக்கீடு இல்லா[illegible] திறந்த வெளியை அடைந்தார்கள்.

''இது வசதியான இடம்.'' என்றார் தாத்தா.

ஒரு பாறையில் சாய்ந்தா[illegible] போல் நின்று கொண்டவர், எப்ப[illegible] வில்லைப் பிடிக்க வேண்டும் என்பதை கற்றுத் தரத் தொடங்கினார் ரூப்[illegible]திக்கு.

அதே சமயம் அவருடைய[illegible] 'நம்பிக்கை'க்குரிய இளைஞன் பதேசி[illegible] ஒரு குதிரையில் பறந்து கொண்டிரு[illegible]தான் ஆக்ராவை நோக்கி! சக்கர[illegible]வர்த்தி அக்பரின் அரண்மனையை நோக்கி!

(தொடரும்)

---

''கொஞ்ச நாட்களாக புட்பால் ஆடுகிற மாதிரி கனவு கண்டு, பக்கத்தில் படுத்திருக்கும் என்னை எகிறி உதைத்துவிடுகிறார் என் கணவர்'' என்று முறையிட்டாள் அவள், டாக்டரிடம்.

டாக்டர்: ''இன்று இரவு படுக்கப் போகுமுன் இந்த மருந்தைக் கொடுங்க; எல்லாம் சரியாகிவிடும்; நிம்மதியாகத் தூங்குவார்.''

கூட வந்திருந்த கணவன் சொன்னான்: ''நல்லாயிருக்கே நீங்க சொல்றது? இன்னைக்கு நைட்தான் ஃபைனல்ஸ் மாட்ச்!''

—ஜோதி சிங்கராஜ்



# வெள்ளை ரத்தம்

## 'மோகினி'

21

சூர்யபூரிலிருந்து பதேசிங் குதிரையில் பறந்துகொண்டு புறப்பட்ட மூன்றுவது தினம்.

பிரதம மந்திரி தோடர்மால் ஹாஜி பேகத்தை மரியாதையும் பணிவுமாக வழியனுப்பிக் கொண்டிருந்தார் ஆக்ராவில். அக்பரின் சிற்றன்னை ஹாஜி பேகம் தன் கணவர் ஹுமாயூனின் ஞாபகார்த்தமாக டெல்லியில் ஒரு மசூதி எழுப்பிக் கொண்டிருந்த சமயம் அது. தோடர்மாலிடம் அது பற்றிச் சில யோசனைகள் கேட்பதற்காகவே வந்திருந்தார்.

அவரை அனுப்பிவிட்டுத் தம் அலுவல்களில் அவசரமாக மூழ்கினுர் தோடர்மால். பீகார் புறப்படுவதற்கு ஆயத்தங்கள் செய்ய வேண்டும். பாட்னுவில் ஆப்கானியச் சிற்றரசன் தாவூதின் கலகக் கொடியை முறித்தாக வேண்டும்.

தளபதிப் பொறுப்பை ஏற்குமுன் பிரதம மந்திரிப் பொறுப்புக்களை யாரிடம் ஒப்படைத்து விட்டுச் செல்வது? ராய் ராம்தாஸ்—

அவர் நினைத்தார். ராய் ராம்தாஸ் வந்தார். அமைதியாக அல்ல, பதற்றமாக.

''சந்தைக் கடையில் ஓர் ஆள் கண்டபடி பேசிக் கொண்டிருந்தானும். பிடித்து வந்திருக்கிருர்கள்,'' என்ருர் வந்தவர்

''என்ன பேசினனும் அப்படி?''

''சக்கரவர்த்தியின் உயிரைப் பறிக்கப் போகிருர்களாம் யாரோ. சதி நடைபெறுகிறதாம். அவரிடம் நேரில் சொல்லுவதற்காக வந்திருக்—''

அவர் பேச்சை முடிக்கு முன்னே தோடர்மால் விருட்டெனக் கிளம்பினுர். ''எங்கே அவன்?''

''அந்தரங்க ஆலோசனை அறையில்.''

தோடர்மால் போனபோது மந்திரி சபை மொத்தமுமே அங்கு குழுமியிருந்தது. ராஜா பீர்பால், மான்சிங், ஷபாஜ்கான், கல்தான் க்வாஜா... எல்லாரும் அந்த ஆளைச் சூழ்ந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் முகத்தில் கவலை, பதற்றம், பரபரப்பு. கிசுகிசுவென்ற குரல்கள் அறையைப் புகைபோல் மண்டியிருந்தன.

பதேசிங் கையை இரண்டு காவலாட்கள் பின் கட்டாக முறுக்கிக் கொண்டிருந்தார்கள்.

''சக்கரவர்த்தியிடம்தான் சொல்வானும். நம்மிடம் பேச மாட்டானும்,'' என்ருர் ஷபாஜ்கான்.

பதேசிங்கின் பிடிவாதமான முகத்தைப் பார்த்தார் தோடர்மால். ''பேச மாட்டேனென்று சொல்கிறவனைப் பேச வைக்க இரண்டு வழிகள்தான் உண்டு. ஒன்று அடி, மற்றது மது.''

''அடித்துப் பார்த்தாயிற்று,'' என்ருர் மான்சிங்.

சாளரத்தின் வழியே வெளியே

எட்டிப் பார்த்தார் பிரதம மந்திரி. அரண்மனையை அடுத்த மதுக் கடையில் சில பேர்தான் இருந்தார்கள். மருத்துவரின் நற்சான்றிதழைக் காட்டி, கணக்கரிடம் தங்கள் பெயரையும் முகவரியையும் பதிவு செய்தபின் மதுவைப் பெற்றுச் சென்று கொண்டிருந்தார்கள். குடிப் பழக்கத்தைக் கட்டுப்படுத்துவதற்காகச் சக்கரவர்த்தி செய்திருந்த ஏற்பாடு அது.

''போய் வாங்கி வா,'' காவலாட்களில் ஒருவனை அனுப்பினார் தோடர்மால்.

ராஜா பீர்பாலுக்கு மட்டும் சிறிது தயக்கம். ''வந்து...சக்கரவர்த்தியிடமே இவன் போய்ச் சொல்லட்டுமே? நமக்குத் தெரியாமலா போகும்?'' என்றார்.

''அப்படியில்லை, பீர்பால் அவசியமான தகவல்கள் சக்கரவர்த்தியின் காதுக்கு எட்டும்படி செய்வது மட்டுமல்ல நமது வேலை. அனாவசியமான தகவல்கள் அவருக்கு எட்டாமல் தடுப்பதும் தான்.''

ஜாடிகளிலும் கிண்ணத்திலும் மது வந்தது. அவனைக் குடிக்க வைத்தார்கள்.

''இப்போது சொல்லு,'' என்றார் பிரதம மந்திரி.

''என்ன...என்ன சொல்லச் சொல்கிறீர்கள்?'' பதேசிங்குக்கு பேச்சு அவ்வளவாகக் குழறவில்லை. இன்னும் தெளிவுள்ள சிந்தனையுடன் இருந்தான் பார்வை தள்ளாடாமல் இருந்தது.

''நான் யார் தெரிகிறதா?' என்றார் மான்சிங்.

''மான்சிங்,'' என்றான் அவன்

''இன்னும் கொஞ்சம் ஊற்று,' என்றார் தோடர்மால்.



36'ம் பக்கத்தில் இருப்பவர் மான்சிங் பிரதமராவார் என்று சோதிடம் கூறிய பி.டி. சுந்தரம்

வேலையாள் மீண்டு கோப்பையை நிரப்பினான். பதேசி தயங்கினான். ''குடி'' கட்டளை பிறந்த தோடர்மாலிடமிருந்து அவருடை வாளின் முனை அவன் நெஞ்சைத் தொட்டு கொண்டிருந்தது.

அவன் அந்தக் கோப்பையையு காலி செய்தான். இப்போது அவனுடைய கண்கள் செருகலாயின. முகத்தில் பயப மறைந்தது. விகாரமானதோர் இளிப்பு



பரவத் தொடங்கியது. ''ஊற்றுங்க... இன்னும் கொஞ்சம் ஊற்றுங்க...'' என்று வாங்கி வாங்கிக் குடிக்கலானான்.

''போதும். விழுந்துவிடப் போகிறான். அப்புறம் நமக்கு ஒரு தகவலும் கிடைக்காமல் போய்விடும்,'' என்றார் மான்சிங்.

அறையின் வாசலில் காவலிருந்தார் ராஜா பீர்பால். சக்கரவர்த்தியின் ஆட்கள் யாரேனும் வந்து பார்த்துவிடப் போகிறார்களே என்ற அச்சம் அவருக்கு இருந்து கொண்டேயிருந்தது. பதேசிங் மடக்மடக்கென்று குடிப்பதையும் குடி மயக்கத்தோடு உளறுவதையும் கவனித்தார்.

''பிரதம மந்திரி, இது என்னவோ தப்பான காரியம் என்று எனக்குத் தோன்றுகிறது,'' என்றார்.



''சந்தேகமென்ன? தப்பான காரியம்தான்,'' என்முர் தோடர்மால்.

''சக்கரவர்த்தி சம்பந்தப்பட்ட ஒரு விஷயத்தை நாம் இப்படித் தெரிந்துகொள்ள முயலுவது சரி தானு?'' என்முர் பீர்பால்.

''சரியில்லைதான்,'' என்முர் தோடர்மால் அழுத்தமாக. ''ஆனல் அவருடைய நன்மையை முன்னிட்டேதான் இந்தத் தப்பான காரியங்களைச் செய்கிருேம். இந்துஸ்தானத்தில் இன்று விலை மதிக்க முடியாத பொருள் ஒன்று உண்டென்ருல் அது ஷா இன் ஷாவின் உயிர்தான். அதைக் காக்க வேண்டியது நம் கடமை. நாளைக்கு ஒன்று கிடக்க ஒன்று நேர்ந்துவிட்டால், இத்தனை மந்திரிகளும் என்ன செய்து கொண்டிருந்தார்கள் என்று நாடு நம்மை நோக்கி விரலைச் சுட்டுமே? மக்கள் நம்மைக் கழுவில் ஏற்றிவிட்டுத்தான் மறு வேலை என்று பொங்கி எழுவார்களே அப்போது என்ன செய்வீர்கள், பீர்பால்?''

'உஷ்!' என்று உதட்டில் விரலை வைத்து எச்சரித்தார் சுல்தான் க்வாஜா. 'இவன் ஏதோ பேசுவான் போலிருக்கிறது... கொலை கொலை என்று முணுமுணுக்கிருன்.''

ஓர் இழை மயிர் விழுந்தால் கூடச் சத்தம் கேட்டிருக்கும். அப்படிப்பட்ட துல்லியமான நிசப்தம் நிலவியது. ராஜா பீர்பால் கூடத் தமது ஆட்சேபணையை நிறுத்திக் கொண்டார். கதவைச் சாத்திவிட்டு அமைச்சர்களின் வட்டத்தில் தானும் ஒருவராகச் சேர்ந்து கொண்டார்.

தூண்டினுர் தோடர்மால்.

''சொல்லு... என்ன கொலை?''

''கொலை தானே... ஆமாம்... அம்பு விட்டு... சக்கரவர்த்தியைச் கொல்லப் போகிறதாய்... அந்தப் பெண்...''

''எந்தப் பெண்?''

''சூரியபூர் பெண்... அவளை...

இருந்த
பெயர்கள்

1. செல்லப்பா, கலா
2. மாதவி, ரவி
3. பரத, உஷா
4. தாமஸ், ராதா
5. ராஜப்பா, ரமா
6. லதா, வைத்தி

—விஜயலட்சுமி ராமாமிர்தம்

அதான்... அந்த இவன்... இளவரசன் இல்லே? அவனைக் கல்யாணம் பண்ணிக் கொண்ட பெண்...''

அமைச்சர்கள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். ''ஜெய்,'' என்றார் மான் சிங் தாழ்ந்த குரலில்.

''ஆ... ஜெய்... ஜெய். அவனே தான்... அவன் பெண்டாட்டி... இளவரசி... அவள் பெயர்... பெயர்...''

தள்ளாடிக் கீழே விழுந்து விடுவது போலிருந்தவனை நிமிர்த்தி உட்கார்த்தி வைத்தார் ராஜா பீர்பால் பதேசிங்கின் கன்னத்தில் பளீரென்று ஓர் அறை விட்டு அவனை விழிக்க வைத்தார் ஷபாஜ்கான். ''அவள் பெயர் என்ன?''

ரூப்மதி...

''ஓ...'' ஒரே சமயத்தில் அத்தனை அமைச்சர்களிடமிருந்தும் ஆச்சரியக் குரல் எழுந்தது.

''இங்கே வந்திருந்தாளே, அந்தப் பெண்... சக்கரவர்த்தி அவள் மீது அளவுக்கு அதிகமாகவே நம்பிக்கை வைத்திருந்தார். 'கான் சூர் செய்த துரோகத்தினால் அவள் என்னை எவ்வளவு மட்டமாக நினைக்கப் போகிறாளோ' என்று புலம்பிக் கொண்டேயிருந்தார், அவள் மட்டமாக எதுவும் நினைக்கவில்லை. சக்கரவர்த்தியின் உயிரை வாங்குவதென்ற உயர்வான தீர்மானத்துக்குத்தான் வந்திருக்கிறாள்.'' தோடர்மால் வெறுப்புடன் நகைத்தார்.

பீர்பாலின் பிடி தளர்ந்து விட்டதால் பதேசிங் தொப்பென்று விழுந்தான். அவன் உதடுகள் ஏதேதோ உளறின. பின்னர் சுருண்டு படுத்து விட்டான். அவனைக் காலால் அறையின் ஓரத்துக்குத் தள்ளினார் அமைச்சர் ஷெரீப்கான். ''அடுத்து என்ன செய்ய வேண்டும் என்பதைப் பிரதம மந்திரிதான் சொல்ல வேண்டும்,'' என்றார்.

'சக்கரவர்த்தியிடம் பக்குவமாகச் சொல்லி எச்சரிக்கை பண்ண வேண்டியதுதான்,'' என்றார் மான்சிங். ''அதைச் செய்யப் பிரதம மந்திரியைக் காட்டிலும் தகுதியானவர் யார் இருக்க முடியும்?''

'இருந்தாலும் வேறு யாராவது...''

''வேறு யாராவதா?'' சிரித்தார் பீர்பால். ''ஷா இன் ஷாவின் முன்னிலையில் நேருக்கு நேர் நின்று உரத்த குரலில் பேசக் கூடிய உரிமையும் தைரியமும் உங்கள் ஒருவருக்குத்தான் உண்டு, தோடர்மால். நீங்கள் வெறும் லாஹர்பூர் கிராமத்திலிருந்து வந்த ஒரு சாதாரணக் கணக்குப் பிள்ளை என்று உங்களை எண்ணாதீர்கள். படிப்படியாக உயர்ந்து குஜராத்திலும் வங்காளத்திலும் லாகூரிலும் பெரும் போரை நடத்திச் சக்கரவர்த்தியின் பேரன்பைப் பெற்றவர். தாங்கள் கிழித்த கோட்டைத் தாண்ட மாட்டார் சக்கரவர்த்தி. நிலைமையின் அபாயத்தைத் தாங்கள்தான் அவருக்கு விளக்கிச் சொல்ல வேண்டும். தயங்காதீர்கள் தோடர்மால்.''

வயதில் பெரியவரான பீர்பால் அதட்டிச் சொன்னார். ஒப்புக் கொண்டார் தோடர்மால். கீழே கிடக்கும் பதேசிங்கை ஒரு முறை காலால் புரட்டினார்.

'இவன் தேவையான அளவு உளறியாகி விட்டது. மேற்கொண்டு உளறாதபடி காவல் போட்டு வையுங்கள்.''

அமைச்சர்கள் ஒவ்வொருவராய் மெல்ல வெளியேறினார்கள்.

''உலகம் ஒரு பாலம்; அதைக் கடந்து செல். அதில் வீடு கட்டாதே.''

—ஏசுநாதரின் பொன்மொழி பளபளவென்று பொறித்திருந்தது புலாந்த் தர்வாஸாவின் உள் சுவரில்.

அதையே உற்றுப் பார்த்த வண்ணம் சிந்தனையில் ஆழ்ந்து நின்றிருந்தார் சக்கரவர்த்தி அக்பர். அவரைச் சுற்றிப் பதேபூர் சிக்ரியின் எழும்பி வரும் கட்டிடங்கள் கோலாகலமாகச் சப்தித்துக் கொண்டிருந்தன. உளிகள் சிணுங்கின; கட்டப்பாரைகள் முழங்கின; சம்மட்டிகள் உறுமின; இழைப்புளிகள் சரசரத்தன.



கோகு சிதரா ராமானுஜம் பந்தயம் கடடியது ஒரு பஸ் ஸ்டாண்ட கடடுவதாக

பந்தயத்தை நிறைவேற்றும்படி எல்லாரும் கேலி செய்யவே, பலரிடம் நிதி வசூல் செய்து கடடிவிட்டார்

சுவர்களின் வேலைபபாடுகளில் அவரது விரல்கள் ஆசையுடன் ஓடின. இந்தச் சின்னஞ்சிறு சித்திரப் பூவின் இதழ் முதல், அங்கே நூற்று எழுபத்தாறு தூண்களுடன் ஒன்றன் மேலொன்றாக முளைத்து நிற்கிறதே அந்தப் பஞ்ச் மகால் வரை, எல்லாம் அவருடைய மனத்திலே முதலில் உருவாகி அசலாகப் பின்னர் வடிவெடுத்தவை அல்லவா?

தொலைவில் தெரியும் ஷேக் சலீம் சிஷ்டியின் மசூதியை நோக்கினார் மாமன்னர் கொடிய விலங்குகள் நிறைந்த காட்டுப் பிரதேசமான இந்த இடம் அந்த மகானின் அருளாலன்றோ இவ்வளவு உயிர்ப்புள்ள நகரமாக மாறுகிறது! ஏழு வருடங்களுக்கு முன்பு ஒரு நாள், ஆக்ரா அரண்மனையைக் கட்டுவதற்காக சிவப்புச் சலவைக் கல்லை இங்கே சில தொழிலாளிகள் வெட்டியெடுத்ததும்; இங்கே வசித்து வந்த சலீம் சிஷ்டிக்காக அந்த ஏழைக் கூலிகளே ஒரு பள்ளி வாசல் கட்டித் தந்ததும்; அதைக் கேள்விப்பட்டுத் தாம் இங்கே வந்து அவரிடம் ஆசி பெற்றதும்; ஆசியின் விளைவாக சலீம் பிறந்ததும்; அதைக் கொண்டாடும் பொருட்டு சிக்ரியைப் பதேபூர் சிக்ரியாகப் பெயர் மாற்றி, அரண்மனைகளும் கட்டிடங்களும் கட்டும்படி—

''சக்கரவர்த்திக்கு வணக்கம்.''

எதிரில் வந்து நின்ற தோடர்மால் அக்பரின் சிந்தனையைக் கலைத்தார்.

''பார்த்தீர்களா பிரதம மந்திரி!'' கைகளைப் பெருமையுடன் வீசினார் சக்கரவர்த்தி. ''புலியும் சிங்கமும் பாம்பும் தேளும் நடமாடிய இடம் பூலோக சொர்க்கமாக மாறிக் கொண்டிருப்பதைப் பார்த்தீர்களா? உங்களிடம் ஒரு ரகசியம் சொல்லட்டுமா, தோடர்மால்?''

'என் பாக்கியம் ஷா இன் ஷா.'

''இந்தக் கட்டிட வேலைகளைக் காணும்போது என் கைகள் பரபரக்கின்றன. அந்தக் குறுகுறுப்புத் தாங்காமல் ஒரு நாள் மாறு வேடம் அணிந்து கொண்டேன். நானும் இந்தத் தொழிலாளியோடு தொழிலாளியாகச் சேர்ந்து என் கையால் இரண்டு கற்களை அடுக்கினேன்''

தோடர்மாலுக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது.

''அப்படியெல்லாம் சக்கரவர்த்தி விளையாட்டுத்தனமான காரியங்களில் ஈடுபடக் கூடாது என்று கேட்டுக் கொள்ளத்தான் முக்கியமாக இங்கே வந்தேன்''

அக்பர் அவரைக் கூர்ந்து பார்த்தார் ''ஏதோ எச்சரிக்கை மாதிரியல்லவா இருக்கிறது?''

''ஆமாம்,'' அருகில் யாரும் இல்லையென்பதை நிச்சயப்படுத்திக் கொண்டார் தோடர்மால் சக்கரவர்த்திக்கு இருபத்தொரு வயதாக இருந்தபோது நடந்தது நினைவிருக்கலாம். அல்லது மறந்து போயிருந்தால், தோளிலே உள்ள வடுவைப் பார்த்தாலும் ஞாபகம் வரும்.''

அக்பர் புன்னகை பூத்தார். ஆனால் தோடர்மால் தீவிரமான குரலிலேயே தொடர்ந்தார்: ''அப்போது டெல்லியில் தாங்கள் இருந்தீர்கள். ஷேக் நிஜாமுத்தீன் ஒளலியாவின் சமாதியைத் தரிசித்து விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தீர்கள். ராணியாக்கிக் கொள்வதென்று தாங்கள் தேர்ந்தெடுத்திருந்த சில பெண்கள் விஷயமாக டெல்லிக் குடும்பங்களிடையே பெரும் பூசல்கள் மூண்டிருந்த சமயம் அது. அந்தக் குடும்பத்தைச் சேர்ந்த மிர்ஸா ஷர்புதினின் அடிமையொருவன் ஒரு மதரசாவின் கூரையிலிருந்து தங்களை நோக்கி அம்பு எய்தான். நல்ல வேளையாக அது தங்கள் தோளில் தைத்தது அவனை அங்கேயே பிடித்துக் கண்டதுண்டமாக வெட்டிப் போட்டார்கள். பத்து நாளாயிற்று தங்களுக்குக் காயம் ஆற. பிறகு ஒரு தொட்டிலிலேதான் ஆக்ராவுக்குத் திரும்பினீர்கள்.''

''எல்லாம் நினைவிருக்கிறது,'' என்றார் அக்பர் புன்சிரிப்புடன். 'இப்போது அதற்கென்ன?''

''இரண்டாம் முறையும் அதே மாதிரி நேர்ந்துவிடக் கூடாதே. என்று பயப்படுகிறேன்.''

அக்பரின் கண்கள் இறுகின. ''அதாவது? என்னை அம்பினால் கொல்வதற்கு யாரோ திட்டமிட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்று சொல்கிறீர்கள்?''

''ஆம் என்று வருத்தத்துடன் சொல்ல வேண்டியவனாயிருக்கிறேன், சக்கரவர்த்தி. திட்டமிட்டிருப்பவர்—''

''யார்?''

தாங்கள் மிகவும் பிரியம் வைத்திருக்கும்-''

''வைத்திருக்கும்?''

''ரூப்மதிதான் ''

''ஓ.'' வெகு நேரம் வரை உலாவிக் கொண்டிருந்தார் சக்கரவர்த்தி. ஃபதேபூர் சிக்ரியின் நூறாயிரம் கட்டிட ஓசைகளும் அவர் சிந்தனையைக் கலைக்கவில்லை.

பிறகு நிமிர்ந்தார் ''நல்லது பிரதம மந்திரி. ஆகவே என்ன சொல்கிறீர்கள்?''

''மாமன்னர் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். எங்கேயும் வெளியே போக வேண்டாம். அரசாங்கக் காரியமாக எங்கே செல்வதாக இருந்தாலும் இன்னும் ஆறு மாத காலத்துக்கு அதையெல்லாம் ரத்து செய்துவிட வேண்டும்.''

''முட்டாள்தனம்.'' நறுக் கென்று பதில் வந்தது அகபரிட மிருந்து

''சக்கரவர்த்தி!''

''முட்டாள்தனம் என்றேன்! கேவலம், என் வயதில் பாதிகூட இல்லாத ஒரு சிறுமிக்குப் பயந்து இந்த ஷா இன் ஷா அக்பர் அரண்மனைக்குள் ஒளிந்து கொள்ளுவதா? ஒரு நாளுமில்லை தோடர்மால்!''

''சக்கரவர்த்தி .. வந்து...''

''கேளுங்கள். வருடா வருடம் நான் ஆஜ்மீருக்குப் பாத யாத்திரை செல்லும் விழா, அடுத்த மாதம் வருகிறது. அதை நான் எக்காரணம் கொண்டும் நிறுத்த மாட்டேன்.''

''சக்கரவர்த்தி!''

''இன்னொன்று. அந்தப் பெண் ரூப்மதியை நீங்கள் எக்காரணம் கொண்டும் பிடிக்க முயலக் கூடாது. அவள் மீது துரும்பு பட்டதாகத் தெரிந்தாலும் சரி—அக்பர் அக்பராக இருக்கமாட்டான். புரிகிறதா?''

''புரிகிறது.'' என்று சொல்ல வெகு நேரம் கஷ்டப்பட்டார் தோடர்மால்.

[தொடரும்]



உங்கள் கவனம் அடிக்கடி
தேவைப்படுகிறது
குழந்தைக்கு. அவனை சீராட்டி
வளர்க்க நீங்கள் எதனையும்
செய்வீர்கள்: குளிப்பாட்டி,
உடை உடுத்தி; உணவு
ஊட்டி, உடல் நலம் பேணிக்
காப்பதில் நீங்கள் எடுத்துக்
கொள்ளும் கவனம் தான்
எவ்வளவு?

கருத்துள்ள அதே கவனம்
பளிச்சிடுமே நீங்கள்
அவனுக்கு தேர்ந்தெடுக்கும்
பிஸ்கட்டிலும். திண்ணம்
அதுவே, தீவிர சுகாதார
முறையில் கைபடாத் தூய்மை-
யோடு தயாரித்த பிஸ்கட்.

நீங்கள் அவனுக்கு ஊட்டும்
உணவிலே உள்ளதைப்
போன்ற நிகரான ஊட்டச்
சத்து அதிலே: பால்,
சர்க்கரை, க்ளுகோஸ்,
செரிப்பதற்கு எளிதாக
இழைய அரைத்த கோதுமை.

கண்மணிக்கென்று
உங்கள் கரம் தொடும் அந்த
பிஸ்கட், கரகரப்பானது,
சுவை மிக்கது. கொரித்து,
ரசித்து மகிழ்வானே உங்கள்
குழந்தை.

எண்ணிப் பாருங்கள்:
7, உலக விருதுகளை வென்ற,
இந்தியாவின் அதி நவீன
பிஸ்கட் தயாரிப்பாளர்களின்
படைப்பை.

பாப்பா படம் போட்ட
இந்த வண்ணமய உறையை
பார்த்து வாங்குங்கள்.




7, உலக விருதுகளை வென்றது.

பார்லே
க்ளுகோ

உங்கள் பாசத்தைப் பேசிடும் குழந்தை பராமரிப்பு பிஸ்கட்.

# முத்தம்

## 22

'என்ன ஜெய்? ஏன் நீ இப்படி ஆகிவிட்டாய்? என்ன ஆயிற்று உனக்கு?'

பஞசி ஆற்றின் கறுத்த நீர் ஜெய்யின் கால்களைச் சுழித்துக் கொண்டு சுழித்துக் கொண்டு விளுக்களைத் தொடுத்தது.

ஜெய் மௌனமாகக் குனிந்து கைகளால் நீரை அளைந்தான்— 'நல்ல குழந்தையல்லவா? என்னைத் தொந்தரவு செய்யாதே' என்று சொல்வது போல.

நாகர்கோட்டின் அரசன் பானுசந்த் ஒருவன்தான் அவனுக்கு நம்பிக்கை நட்சத்திரமாக இருந்தான். அவனும், கம்லாவதி தீக்குளித்த பின்னர் மாறிப் போய்விட்டான். 'ஜெய், உன் சகோதரி நாட்டியத்துக்காகவே உயிர் வாழ்ந்தவள். அதை வெகு நாள் வரை நான் அறியவில்லை. சூர்யபூரில் போர் மூண்ட செய்தி கேட்டு நான் ஓடி வந்தபோது, எல்லாம் முடிந்து விட்டது. ராஜகுமாரிகளுடன் சேர்ந்து கம்லாவதியும் தீக்குளிப்புக்கு ஆயத்தம் செய்து கொண்டிருந்தாள். சின்ன வயதில் எப்போதோ ஒரு முறை அவளிடம் நான் 'விலை மாதர்களின் கலையல்லவா நாட்டியம்?' என்று சொல்லி விட்டேனும். எனக்கே அது நினைவில்லை. ஆனால் அது அவள் மனதத்தே ஆழப் பதிந்து என்னை வெறுக்க வைத்து விட்டது. தீக்குளிக்கச் செல்லுகையில் அவள், 'என் மீது நீங்கள் கொண்டிருக்கும் காதல் உண்மையானால், ஆடல் கலை வளர உங்கள் நாட்டில் ஆதரவு கொடுங்கள்' என்று கேட்டுக் கொண்டாள். ஜெய், என்னை மன்னித்து விடு. என் நாட்டைப் போர்க்களமாக்கப் போவதில்லை. ஆடலரங்கமாகப் பண்ணப் போகிறேன்,'' என்று சொல்லி விட்டான்.

சொன்னதோடு மட்டுமல்ல— நாகர்கோட்டின் வீதிகளில் ஈட்டிகளின் கடகடப்புக்குப் பதில் சலங்கைகளின் ஓசை கேட்கலாயிற்று. வீரர்களின் போர் முழக்கங்களுக்குப் பதில் பாடகர்களின் கீதம் ஒலிக்கலாயிற்று.

ரூப்மதி எங்கே இருக்கிறா(ள்) என்பது தெரிந்தாலாவது...

தலையில் கூடையுடன் ஒ(ரு) கிராமத்துப் பெண் வந்(து) கொண்டிருந்தாள். ''ஏம்மா, இங்கே—'' என்று அவன் கேட்கத் தொடங்(கு)முன்பு—

''ஓகோ! உன்னைப் போல கோழைகள் போல இன்னு(ம்) இரண்டொருத்தர் உயிரோடுதா(ன்) இருக்கிறீர்களா!'' என்று வெறுப்புட(ன்) சீறினாள் அவள்.

''அம்மா, நான்—''

அலைச்சலும் கவலையும் தாடி(யு)ம் மீசையும் ஜெய்யை அடையாள(ம்) தெரியாமல் மாற்றிவிட்டிருந்த(ன) போலும்.

''தெரிகிறது, தெரிகிறது! நா(டு) அமளி துமளிப்பட்டு(க்) கொண்டிருந்தபோது காட்டிலு(ம்) மலையிலும் ஒளிந்து கொண்ட ஆட்க(ளில்) நீயும் ஒருத்தன்!'' அவள் தலையிலிரு(ந்த) கூடையை இறக்கினாள். ''இந்தா(,) புடவை! கட்டிக் கொள்!'' பழை(ய) சிவப்புச் சேலையொன்றை அவன் (மீது) வீசியெறிந்தாள். போய் விட்டாள்.

சூர்யபூரைச் சேர்ந்த சாதாரணக் குடிமகன் என்று நினை(த்)து இவள் இத்தனை ஆத்திரப்படுகி(றா)ள். இளவரசன் ஜெய்தான் உயிரோ(டு) இருக்கிறேன் என்று தெரிந்தால்...!

**'மோகினி'**



காலின் கீழுள்ள சொந்தப் மியே அவனுக்கு அன்னியமாயிருந் து. நினைவு தெரிந்த பிராயம் முதல் ்வளவு ஆயிரம் தடவை இந்த இடங் நக்கெல்லாம் அவன் வந்திருப்பான். ன்னையின் கையைப் பிடித்துக்கொண்டு. ட வீரர்களின் குதிரை மேலே, மன்மார்களின் தோளின்மீது, பல யம் தனியாக—சஞ்சரித்துள்ள இந்த மெல்லாம் இன்று தன் வாழ்க் கக்குச் சம்பந்தமில்லாத இடம் லாகிவிட்டன. இந்தப் பூ புதிதா ந்தது. இந்தப் புல் புதிநாயிருந்தது. ந்தக் காற்றும் மணங்களும் ஆகாய ம் மேகங்களும் அவனுடன் ஒட்டா வபோல் காட்சி தந்தன. எவற்றின் ந்திரத்துக்காகவோ அவையெல்லாம் ன்று அவனைக் கைவிட்டுவிட்ட மாதிரி நந்தது.

ஏற்கனவே நாகர்கோட்டை அடைந்த ஏமாற்றம்—இப்போது சர்வசாதாரணமான கிராமத்துப் ன் கேட்டுவிட்டுப் போன கேள்வி—

அவன் வெறுப்புடன் சிரித்துக் காண்டான். இனி யாருக்காகவும் ற்க வும் உயிர் வாழக் தேவை ல்லை. இப்படியே படுந்திருக்கலாம். ஜைனர்கள் அன்னம் தண்ணீரைத் துறந்து சும்மா படுத்தபடியே உயிரை விட்டுவிடுவார்களாம். அந்த மாதிரி நாமும் பிராணனைப் போக்கிக் கொள்ள லாம். ஆனால் சாவதற்கு முன் ஒரு கடைசி ஆசை—ரூபாவைப் பார்த்தால் நன்றாயிருக்கும். 'நான் தோற்றுவிட்ட இடத்தில் நீயாவது வெற்றி பெறு' என்று அவளுடைய பட்டுப் போன்ற கூந்தலை வருடிக்கொண்டே சொல்ல வேண்டும்...ஆனால் ரூபா! நீ எங்கே இருக்கிறாய்? எப்போது உன்னை நான் பார்க்கப் போகிறேன்?

சூரியநாதரின் கர்ப்பக் கிரு கத்தை ஒரு முறை கையெடுத்துக் கும் பிட்டான். தரையின் வழவழப்பான குளிர்ச்சி அவனைக் கவர்ந்து இழுத்தது. படிக்கட்டில் தலையை வைத்துக்கொண்டு படுந்தான். கைகளைக் கோத்துத் தலை யின் கீழே வைத்துக்கொண்டான். திறந்த வெளியின் இதமான காற்று அவனைப் போர்த்துக் கொண்டது. கண் களை மூடிக்கொண்டான். யாரோ அவன் முகத்தை மெல்ல வருடிக் கொடுக் கிற மாதிரி இருந்தது. ருக்மிணியின் பூங்கரமாக இருக்குமோ? ஒரு கணம் சிலிர்ப்பு ஏற்பட்டது. கண்ணை விழித்துப்

பார்த்தான்: சிரிப்பு வந்தது:

அந்தப் பெண் ஏளனமாக எறிந்துவிட்டுப் போன புடவை—சிவப்பு வண்ணத்தில் அவன் மீது படபடத்துக் கொண்டிருந்தது.

அன்னியப் பெண்ணின் ஆடை என்பதால் சங்கடத்துடன் அதை அகற்றித் தள்ளினான். சற்றைக்கெல்லாம் காற்றில் புரண்டு மீண்டும் அவனிடமே வந்தது.

அதைப் பந்தாகச் சுருட்டினான். தலைக்குத் தலையணையாக வைத்துக் கொண்டான். மெத்தென்றிருந்தது. சில விநாடிகள்தான். நித்திரைச் சித்ராங்கி அவனை இறுக அணைத்துக் கொண்டாள்.

"இழு," என்றார் சித்தூர் தாத்தா.

ரூப்மதி இழுத்தாள் நாணை.

"இன்னும்."

அவள் இன்னும் இழுத்தாள்.

"போதாது," என்றார் தாத்தா.

மேலும் அவள் நாணை இழுத்தாள். வில் ஒடிந்துவிடும்போல் வளைந்தது. அம்பின் சிறகைப் பிடித்திருந்த விரல்கள் செக்கச் செவேலென்று சிவந்தன. வில்லின் தண்டைப் பிடித்திருந்த கை இரும்பென இறுகிற்று. ஊன்றியிருந்த காலின் அழுத்தத்தில் தரை பிளந்துவிடும்போல் ஆழம் பதிந்தது. அவள் கண்கள் இமைக்கவில்லை. மூச்சு விடவில்லை. சிலையிலடித்த மாதிரி அவள் தேகம் சலனங்களற்று நின்றது.

"ஊகூம்." உதட்டை பிதுக்கினார் சித்தூர் தாத்தா.

சோர்வுடன் வில்லையும் அம்பையும் கீழே வைத்தாள் ரூப்மதி. விரல்களை நெட்டி முறித்துக் கொண்டாள். "பதினைந்து நாளைக்கு மேலாயிற்று நான் தங்களிடம் பயிற்சி பெற ஆரம்பித்து. இன்னும்கூட ஊகூம் என்கிறீர்களே, தாத்தா?"

"வலு போதாது என்கிறேன்..."

"இதற்கு மேல் நான் எப்படி தாத்தா வலு அடைவது? வில் பயிற்சி பெறும் நேரம் போக மீதி நேரமெல்லாம் நீங்கள் சொல்லியிருக்கிறபடி உடற்பயிற்சி செய்கிறேன். யோகாசனம் பண்ணுகிறேன். உணவில் மிக நியமத்துடன் இருந்து வருகிறேன். எதையெல்லாம் நீங்கள் தள்ள வேண்டும் என்றீர்களோ, அதையெல்லாம், அவை எனக்கு எவ்வளவுதான் பிரியமான உணவாக இருந்தாலும் தள்ளிவிட்டேன். எதையெல்லாம் நான் உண்ண வேண்டும் என்று சொன்னீர்களோ அதையெல்லாம், எவ்வளவு கசப்பாக இருந்தாலும் சாப்பிடுகிறேன். தூங்குவதைக் குறைத்துவிட்டேன். விடிகாலை எழுந்து கொள்கிறேன்..."

அவள் பேசப் பேச, சித்தூர் தாத்தா தன் முடமான காலைத் தடவிய வண்ணம் புன்னகையுடன் கேட்டுக் கொண்டிருந்தார். "முடித்தாயிற்று?" என்றார் கடைசியில்.

அவருடைய கேலி அவளுக்குப் புரியவில்லை. "ஏன் தாத்தா சிரிக்கிறீர்கள்?"

"நான் வலு போதாது என்று சொன்னபோது உடல் வலுவைச் சொல்லவில்லை. மன வலுவைச் சொன்னேன்."

"அதற்கென்ன குறைச்சல் தாத்தா? என் எதிரி அந்த அக்பரை ஒழிக்க வேண்டுமென்ற உறுதியில் நான் சிறிதும் பின்வாங்கவில்லை," என்றாள் ரூப்மதி ரோஷத்துடன்.



தொலை நோக்கிக் கண்ணாடியுடன் இருக்கும் குமாரி ப்ரீதா புகைப்படக்காரர் உத்ராவிடம் அங்கலாய்த்துக்கொண்டார்: 'முகம் தெரியாமல் செய்து விட்டீர்களே!' குமாரி ப்ரீதா—'மைனஸ் தொலை நோக்கிக் கண்ணாடி 90'ம் பக்கம்.

"அது மட்டும் போதாது குழந்தாய். மனத்தில் வேறு ஆசாபாசங்கள் இருக்கக்கூடாது. ஏக்கங்கள் இருக்கக்கூடாது. உயர்ந்த லட்சியத்திலேயே குறியாயுள்ளவர்கள், சாதாரண மனிதர்களுக்கு உள்ள ஆசைகளைத் துறந்து விடுவார்கள். தெரியுமல்லவா?"

ரூப்மதி தலை குனிந்தாள். "நீங்கள் எதைக் குறிப்பிடுகிறீர்கள் என்று புரிகிறது, தாத்தா. அவரை... ஜெய்யை...இன்னும் என்னால் மறக்க முடியவில்லை என்பது வாஸ்தவம்தான். அவரை எப்போது பார்ப்போம் என்று என் இதயம் துடிப்பது உண்மைதான். அவர் மீதுள்ள காதலைத் துறக்க முடியாமல் இந்தப் பாழும் மனம் தவிப்பது நிஜம்தான்."

"புத்திசாலி, புரிந்துகொண்டு விட்டாய்." தாத்தா அவளை முதுகில் அன்போடு தட்டிக்கொடுத்தார். "உன்னைப்போன்ற வயசுப் பெண்ணுக்கு ஆசைகளைத் துறப்பது அவ்வளவு சுலபமான காரியமில்லை, குழந்தாய். கொஞ்சம் கொஞ்சமாக முயற்சி பண்ணு."

ஒரு நெடு மூச்சுடன் ரூப்மதி வில்லை மறுபடி வளைத்தாள்.

சித்தூர் தாத்தா தொடர்ந்து சொன்னார்: "ஏன் சொல்கிறேனென்றால், உன்னுடைய பயிற்சி லட்சியம் விசேடமானது. விசித்திரமானது. இரண்டு காத தூரத்துக்கப்பால் இருந்து கொண்டு, அம்பு எய்து ஒரு குறிப்பிட்ட இலக்கை வீழ்த்த வேண்டும் என்பது உன் குறிக்கோள். இரண்டு காத தூரத்தை வெறுமே எட்டுவதுகூட மிகச் சிறந்த வில்லாளிகளுக்குக் கஷ்டமான காரியம். எட்டுவதோடு, அடித்து வீழ்த்தவும் வேண்டும் என்கிறாய் நீ. உன் மனம் இன்னும் பக்குவமடைந்தால் தான் அது சாத்தியம். இப்போதுதான் ஒரு காத தூரத்தில் இலக்கை அடிக்க வந்திருக்கிறது. இந்த விகிதத்தில் போனால்—"

"போனால்?"

"இன்னும் மூன்று மாத காலமாவது ஆகும்."

"கூடாது தாத்தா, கூடாது. கூடாது." பதைத்துப் போனாள் ரூப்மதி. அடுத்த மாதம் பதினைந்து தேதிக்குள் என் பயிற்சி முடிய வேண்டும். இரண்டு காத தூரத்திலுள்ள இலக்கை அடிப்

# டாங் டாங்

'அவிட்டம்'

●● சினிமாவுக்குப் போனால் உங்களுக்குப் பகல் ஆட்டம் பிடிக்குமா, மாலை ஆட்டம் பிடிக்குமா?

ஆட்டம் என்று ஏன் பயங்கர வார்த்தையெல்லாம் போடுகிறீர்கள்? ஷோ என்று எளிமையாகச் சொல்லுங்களேன்.

—பஞ்சாப் முதல்வர் பாதல்

●● அடுத்தபடி தாங்கள் எழுதப் போகும் புத்தகம் என்ன?

'பகவத் கீதைபற்றிச் சில புள்ளி விவரங்கள்.'

—விநோபா

●● ஸ்ரீநகரில் கிரிக்கெட் விளையாடுவதற்கு ஏன் சில பேர் தயங்குகிறார்கள்?

கைகால்கள் நடுங்குவதால் சரியானபடி பந்தை அடிக்க முடியாதே என்றுதான். (கைகால் நடுக்கத்துக்குக் காரணம் குளிர்தான்.)

—ஆஸ்திரேலியக் காப்டன் ஹ்யூஸ்

●● தினசரி காலையில் எழுந்து கொள்வதற்காக டேப் இசை போட்டுக் கொள்வதுண்டா?

இல்லை. வறட்சியைப் பற்றிய திடீர் சொப்பனங்கள் என்னை எழுப்பி விட்டு விடுகின்றன.

—கரண்சிங்

●● ஒரு கட்சி எதேச்சாதிகாரக் கட்சி என்பது எப்போது தெரியும்?

நாம் உறவு கொள்ள ஆரம்பித்து இரண்டு வருடங்கள் கழித்துத் தெரியும்.

—கல்யாணசுந்தரம்

●● நீங்கள் படித்துக் கொண்டிருந்த காலத்தில் எல்லாப் பாடங்களிலும் பாஸ் செய்திருக்கிறீர்களா?

கேள்வியை இன்னும் ஒரு மாதம் கழித்துக் கேட்கவும். பாஸ்

என்கிற வார்த்தையைக் கேட்டாலே தலையைச் சுற்றுகிறது.

—டி. ஏ. பை

◆◆ இந்தியாவிலேயே எந்தக் கட்சி மோசமான கட்சி?

இந்திரா காங்கிரஸ்தான். (ஆனால் மேற்கு வங்காளத்தை இந்தியாவில் சேர்க்க வேண்டாம்)

—வாஜ்பாய்

◆◆ நாம் ஒரு கட்சியில் இருந்து கொண்டிருக்கிறோம் என்பதை எப்படி நாலு பேருக்குத் தெரிவிப்பது?

அந்தக் கட்சியிலிருந்து ராஜிநாமா செய்துவிட்டு இன்னொரு கட்சியில் சேர்ந்து விட்டதாக அறிவிப்பதன் மூலம்.

—கே. கே. ஷா

◆◆ எநத நகைச்சுவை நடிகருடன் ஜோடி சேர்ந்தால் உங்களுக்குத் திருப்தி?

ராஜ்நாராயணுடன். அதனால் தான் அவரைத் தேர்தலில் எதிர்த்து நிற்கப்போகிறேன்.

—ஐ. எஸ். ஜோகர்

◆◆ ஒரு விடுகதை சொல்லுங்களேன்?

மந்திரிதான்—ஆனால் மந்திரி இல்லை. பதவிதான்—ஆனால் பதவியில்லை. அதிகாரம்தான்—ஆனால் அதிகாரம் இல்லை. யார் அவர்?

—சத்தியவாணிமுத்து

◆◆ உங்களை மிகவும் கலங்க வைத்த தந்தி எது?

வதந்தி.

—நாஞ்சில் மனோகரன்

◆◆ ஹைதராபாத்தில் தங்கள் செல்வாக்குக் கொடி கட்டிப் பறக்கிறதா?

ஆமாம். கறுப்புக் கொடி கட்டி.

—சரண்சிங்

◆◆ டிரான்ஸிஸ்டர் எப்போது ரொம்ப ஈனசுரத்தில் பாடுகிறது?

பவர் கம்மியாகும்போது என்று நானே என்னைப் பற்றிச் சொல்லிக் கொள்ள வேண்டுமாக்கும்?

—பம்பாய் முதல்வர் பவார்

◆◆ ஒரே சமயத்தில் இரண்டு குதிரைகள் மீது சவாரி செய்ய முடியுமா?

சவாரி செய்ய முடியுமோ முடியாதோ, ஒரே சமயத்தில் இரண்டு குதிரைகளோடு பேசிக் கொண்டிருக்க முடியும்.

—கருணாநிதி

பதில் நான் பரிபூரணத் தேர்ச்சி பெற்றவளாகத் திகழ வேண்டும்.''

''அதென்னம்மா, அடுத்த மாதம் பதினைந்தாம் தேதி?''

''என் பகைவன் ஆஜ்மீருக்கு வரும் நாள். அதையொட்டித்தான் என் திட்டத்தை வைத்திருக்கிறேன். தாத்தா, எப்பாடு பட்டேனும் என் பயிற்சி அதற்குள் முடிவடைய வேண்டும். தயவு பண்ணுங்கள் தாத்தா. தினம் தினம் இன்னும் எத்தனை நேரம் வேண்டுமானாலும் பயிற்சி செய்கிறேன்.''

''நல்லது. பதற்றப்படாதே; வெற்றிக்கு இன்னொரு முக்கியமான அம்சம் பதற்றமின்மை.'' சித்தூர்த் தாத்தா நொண்டிய வண்ணம் அவள் முதுகின் பின்னே வந்து நின்றார்; நாணை நன்கு இழுக்கும்படி சொல்லி, கணையைக் கையில் கொடுத்தார்.

''நேர் தெற்கே பார்.''

''பார்க்கிறேன் தாத்தா.''

''என்ன தெரிகிறது?''

''சுனை தெரிகிறது— விஷ்ணு தீர்த்தம்.''

''அதன் அடிவாரத்தில்?''

''சூரியநாதர் கோவில்.''

''அது இங்கிருந்து ஏறத்தாழ ஒன்றரைக் காத தூரம் இருக்கும். கீழே படிக்கட்டு தெரிகிறதா?''

''தெரிகிறது தாத்தா!''

''இலக்கு ஏதாவது தெரிகிறதா?''

''சிவப்பாய் ஒரு துண்டு தெரிகிறது—கல்லோ, துணியோ, பூவோ தெரியவில்லை. சிவப்பு நிறம் மட்டும் தான் தெரிகிறது.''

''நல்லது. அதுதான் உன் இலக்கு. ஒரே அடியில் அதை இரண்டாகப் பிள, பார்க்கலாம்.''

ரூப்மதி குறி பார்த்தாள்.

ஜெய் உறங்கிக் கொண்டிருந்தான்.

(தொடரும்)

# பொன்னின் முத்தம்

## 23

சுரீலென்று நெருப்புப்பட்ட மாதிரி இருந்தது ஜெய்க்கு. 'ஆ!' என்று அலறிய வண்ணம் எழுந்தான். காதின் ஓரமாக—

கையை வைத்தான். கொடகொடவென்று ரத்தம் கொட்டுவது தெரிந்தது. வன விலங்கு எதுவாவது தாக்கியதா என்ன? காயத்தைக் கையால் பொத்தியபடி திரும்பி நோக்கினன்.

அவன் தலைக்கு உயரமாக வைத்துக் கொண்டிருந்த அந்தப் புடவைப் பந்து எட்டத்தில் போய் விழுந்திருந்தது. அதன் குறுக்காக ஓர் அம்பு பாய்ந்திருப்பதைக் கண்டான்.

தன்னை யாரோ கொலை செய்ய முயன்றிருக்கிறார்கள்! யாரோ என்ன? அக்பரின் ஆள்தான். நாட்டையும் சுற்றத்தாரையும் தோழர்களையும் படைகளையும் பறித்துக் கொண்டது போதாது என்று அவனையும் வேட்டையாட முயலுகிறார்கள். யார் செய்த புண்ணியமோ தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போயிற்று. கழுத்துக்கு வைத்த குறி சற்றுத் தப்பித் தலையின் ஓரத்தையும் தலையணைத் துணியையும் தாக்கியிருக்கிறது!

கன்னத்துக்கு மேலாகக் கணை உராய்ந்து சென்ற இடத்தில் தாள முடியாத வலி. சட்டென்று அந்த சிவப்புத் துணியை எடுத்தான். அம்பைப் பறித்து வெளியே வீசியெறிந்தான். துணியினால் காயத்தை அழுந்தப் பொத்திக் கொண்டான். ரத்தப் பெருக்கு நிற்பது தெரிந்தது.

கணை எந்தத் திசையிலிருந்து வந்தது என்று அவன் பார்க்கவில்லை. அவன் தூங்கிக் கொண்டிருந்தபோது அது பறந்து வந்து தாக்கியிருக்கிறது. ஆனாலும், தலையில் பட்டிருந்த காயத்தின் பிளவிலிருந்தும், சிவப்புத் துணி எகிறிப் போய் விழுந்திருந்த இடத்திலிருந்தும் அவன் கணக்கிட்டான் — எதிரே கிழக்குப்புறமாகத் தெரியும் குன்றிலிருந்துதான் கணை வந்திருக்க வேண்டும் என்று.

எப்போதும் உடையின் உட்புறம் மறைத்து வைத்திருக்கும் குத்து வாளைத் தொட்டுப் பார்த்துக் கொண்டான். பத்திரமாக இருந்தது. தாக்கியவன் எப்படியும் சில விநாடிகளில் இங்கே வருவான் — தாக்கப்பட்டவன் என்ன நிலையில் கிடக்கிறான் என்பதைக் காண்பதற்காக. அப்போது அவனை—

மரத்தின் மறைவில் பதுங்கிக் கொண்டு காத்திருக்கலாம். அருகிலே அவன் வந்ததும்—

எழுந்து இரண்டடி வைத்திருப்பான்.

''ஜெய்!'' — பின்னாலிருந்து கூப்பிட்ட அந்தக் குரல்!

திரும்பிப் பார்த்தான். நின்றான். அவன் உதடுகள் துடித்தன. அவன் கண்களில் கண்ணீர் கரகரவென்று

மோகினி



வழிந்தது. அடிபட்ட வேதனையினால் அல்ல. தன் இனியவளைச் சந்தித்த ஆனந்தத்தினால்.

''ரூபா!'' பாய்ந்து சென்று அவளை அணைத்துக் கொள்ள முன்னோடினான் அவன்.

கையிலிருந்த வில்லைக் கீழே போட்டுவிட்டு, இரு கைகளையும் நீட்டி அவளும் ஓடி வந்தாள். அவன் மார்புச் சுவரிலே ஒட்டிக்கொண்டு அவன் கைச் சங்கிலியில் கட்டுண்டிருக்க வேண்டியவள்—கடைசி வினாடியில் விலகிக் கொண்டாள்.

''உங்களை... உங்கள் மீதா நான் அம்பு எய்தேன்?'' — தவிப்புடன் கேட்டாளேயன்றி அவனை ஆதுரத்துடன் அணைத்துக் கொள்ளவில்லை. தன்னுடைய கணை அவனைக் குத்தியிருந்த இடத்தைப் பரிவோடு தடவிக் கொடுக்கவில்லை.

''ரூபா... ஏன் அப்படி நின்று விட்டாய்?'' மேலும் ஓரடி முன்னேறினான் அவன். விலகி நின்றவளை இழுத்து அணைத்துக் கொள்ளக் கைகளை நீட்டினான்.

அவள் இமைகள் துடித்தன அதரங்கள் நடுங்கின. அவன் கை தன்னைத் தொட்டு விடாதபடி மேலும் பின்னுக்கு நகர்ந்து கொண்டாள். ''வேண்டாம் ஜெய்... உங்களைத் தொடும் பாக்கியம் இன்னும் கொஞ்சம் நாளைக்கு எனக்குக் கிடையாது... என் குருநாதருக்குச் சற்று முன்னால்தான் வாக்குக் கொடுத்தேன்.''

''ரூபா... என்ன. என்னவெல்லாமோ பேசுகிறாய்? என்ன குருநாதர்?'' அவன் திகைத்தான். அவள் வில்லும் கையுமாக வந்ததைப் பார்த்து—அவள்தான் கணை எய்தவள் என்பதை அறிந்து—ஏற்கனவே அவன் குழம்பிப் போயிருந்தான். இப்போது அவள் பேச்சு இன்னும் அவனைக் குழப்பியது.

''அதோ நீரோடை இருக்கிறது. முதலில் காயத்தைக் கழுவிக் கொள்ளுங்கள்.'' கையை நீட்டி அவனைப்

பிடித்துக் கொள்ள வந்தவள் தன்னைத் தானே கட்டுப்படுத்திக் கொண்டாள்.

மெல்ல நடந்து நீரோடைக்குப் போகும் வழியில் அவள் கூறினாள்: ''திடீரென்று நீங்கள் காணாமற் போய் விட்டீர்கள். நாகர்கோட்டைக்குப் போயிருப்பதாக உங்கள் நண்பர்கள் சொன்னார்கள். சூரியபூரின் சுதந்திரத்தைப் பற்றி அப்புறம் பார்த்துக் கொள்ளலாமென்று தீர்மானித்து நண்பரின் ஊரில் ஓய்வெடுத்துக் கொள்கிறீர்கள் போலிருக்கிறது என்று நினைக்கிறேன்...''

''இல்லை, ரூபா. படை உதவி கேட்கத்தான் அங்கே போனேன். ஆனால் பானுசந்துக்கு இப்போதெல்லாம் வாளின் ஓசையில் நாட்டமில்லை. சலங்கைகளின் ஒலியிலே மெய் மறந்து கிடக்கிறான். ஏமாற்றத்துடன் திரும்பிவிட்டேன்.''

அவள் தொடர்ந்தாள்: ''என் இலட்சியத்தை நானேதான் நிறைவேற்றிக் கொள்ள வேண்டுமே தவிர, யார் துணையையும் தேடக் கூடாது என்று முடிவு செய்தேன். சித்தூர் தாத்தாவிடம் மன்றாடிக் கெஞ்சி, வில் பயிற்சி பெறுகிறேன். இரண்டு காத தூரத்திலிருந்து இலக்கை அடித்து வீழ்த்த வேண்டுமென்பது என் லட்சியம். இப்போது ஒன்றரைக் காத தூரம் வரை அடிக்கத் தெரிந்து விட்டது.''

''இலக்குக்கு நான்தான் அகப்பட்டேனா ரூபா?'' நீரோடையின் குளிர்ந்த நீரில் காயத்தைக் கழுவிக் கொண்டவாறு அவன் சிரித்தான். ரூப்மதி அவனை நெருங்கிச் சென்று காயத்தின் ஆழத்தைக் கவனித்தாள். ''நல்ல காலம், மேலோடுதான் அம்பு பட்டிருக்கிறது.''

''அதுகூட நீ ஒரு தடவை தடவிக் கொடுத்தால் சரியாகிவிடும், ரூபா,'' அவன் கண்கள் ஏக்கத்துடன் [illegible].

அவள் விலகிக் கொண்டாள் 'சித்தூர் தாத்தாவுக்கு வாக்குக் கொடுத்திருக்கிறேன். என் லட்சியம் நிறைவேறுகிற வரையில் மனத்தைச் சிதறவிடும் எந்தச் சிற்றின்பத்திலும் [illegible]பட மாட்டேன் என்று.''

அவன் புரிந்து கொண்டான்..

''வழி வழியாய் ஒரு மதத்தில் இருந்து வருகிறவர்களைக் காட்டிலும் [illegible] மதம் மாறி வருகிறவர்களுக்கு அதிக வெறி இருக்கும் என்று சொல்வதுண்டு. நான் பழைய சுதந்திர வீரன் தோல்விகளும் ஏமாற்றங்களும் என்னைக் கூர் மழுங்க வைத்திருக்கின்றன. நீ அப்படியல்ல. புதியவள். வேகமும் ஆவேசமும் தாபமும் உனக்கு நிறைய இருக்கின்றன. நிச்சயமாய் உனக்கு வெற்றி கிட்டும் ரூபா.'' அவன் சற்று நேரம் பேசாமலிருந்தான். பிறகு சொன்னான். ''இருந்தாலும் உன் நோக்கம் நிறைவேற வேண்டுமானால் நீ ஒருத்தியாய், ஒண்டியாய், வேலை செய்வதைவிட நாம் இருவராய்ச் சேரலாமே என்று தோன்றுகிறது. நீ விரும்பினால் நானும் உனக்கு உதவி செய்கிறேன்.''

'ஜெய்!'' அவளுக்குக் குரல் தழுதழுத்தது. ''தாங்கள் சூரியபூரின் ராஜ வம்சத்தைச் சேர்ந்தவர். கடைசி இளவரசர். இன்றைக்கு உயிருடன் இருக்கும் ஒரே வாரிசு. பெரிய இளவரசர் வாளின் முத்தம் நாணயத்தை என்னிடம் ஒப்படைத்தாலும், அறியாத்தனமாக நான் அக்பருக்காகப் பரிந்து பேசி, சூர்யபூரின் அழிவுக்கு வித்திட்டதற்குப் பிராயச்சித்தம் செய்வதற்காகவும் இந்தத் தனிப்பட்ட போரில் இறங்கியிருக்கிறேனே தவிர, மற்றப்படி என்றும் நான் தங்கள் அடிமை. உத்தரவு இடுங்கள். தங்கள் கீழே நான் பணியாற்றுகிறேன்.''

'வேண்டாம்,'' என்றான் ஜெய். ''தற்சமயம் என்னைக் காட்டிலும் உனக்குத்தான் புத்தி நன்றாய் வேலை செய்கிறது. நன்கு திட்டமிட்டு செயலாற்றி வருகிறாய் என்ன உன்



பொன்னடை போர்த்தபபட்டவர் பாரதிராஜாவின் அம்மா.



# முழுமையான, வளமான தேக ஆரோக்கியத்துக்கு ஏற்ற 3000 ஆண்டு பழமை வாய்ந்த மருந்துத் தயாரிப்பு

# டாபர் ச்யவனப்ராஷ்

## நான்கு வழிகளில், குடும்பத்து தேக ஆரோக்கியத்தை வளர்க்கிறது



விடமின் சி
ளமிக்க.
சுவையான.
இனிப்பும்
புளிப்பும் கலந்த
இனியதொரு
சேர்மானம். அதை
இயற்கை வடிவில்
கிடைக்கிறது.

**1. உடல் திசுக்களை இளமை குன்றாமல் பராமரிக்கிறது.**

டாபர் ச்யவனப்ராஷ், உடல் திசுக்கள் தேய்ந்து வலுவிழந்துபோகும் வேகத்தைக் குறைத்து, தாமதப்படுத்துகிறது.

**2. உடலுக்கு, நல்ல தாக்குப் பிடிக்கும் சக்தியைக் கொடுத்து வளர்க்கிறது.**

டாபர் ச்யவனப்ராஷ், மொத்தமாக உடலின் தாக்குப்பிடிப்புத் தன்மையை அதிகரிக்கிறது. இருமல், சளி போன்றவற்றுக்கு எதிராகவும் தாக்குப் பிடிக்கும் சக்தியை அளிக்கிறது.

**3. சுறுசுறுப்பை வளர்க்கிறது.**

குழந்தைகளிடையே சுறுசுறுப்பை வளர்ப்பதில், டாபர் ச்யவனப்ராஷ் துணைபுரிவதுடன், முதுமைக் காலத்தில் செயல் வலிமையையும் வளர்க்கிறது

**4. இதில் உயிர்ப்பொருள் கட்டமைப்பு சார்ந்த தன்மைகள் உள்ளன.**

டாபர் ச்யவனப்ராஷ், உடல் வலிமையைப் பெருக்குவதற்குத் துணைபுரிகிறது.

**தேவர்களின் மருந்துப் படைப்பு**

ச்யவனப்ராஷ் மருத்துவக் குறிப்பு 3000 ஆண்டுகள் பழமை மிக்கது; ச்யவன முனிவரின் இளமையைக், குன்றாமல் குறையாமல் நீடித்து பராமரிப்பதற்காக தேவர்களின் வைத்தியர்கள் இதைத் தயாரித்ததாகச் சொல்லப்படுகிறது. உலகிலேயே, மிக மிகப் பழமை வாய்ந்த ஒரு டானிக் இது என்றாலும்கூட, இன்று டாபர், இதனை மிக நவீனமான தேக ஆரோக்கியத்துக்கு உகந்த சுத்தமான, தானியங்கி சாதன வசதியுடன் கொண்ட தொழிற்சாலையில் தயாரிக்கிறார்கள்.

## தேக ஆரோக்கியத்துக்கான ஒரு ஆயுர்வேத டானிக்.

# டாபர் ச்யவனப்ராஷ்

டம் என்பதை மட்டும் விளக்கு. அதில் றைகள் தோன்றினல் சொல்கிறேன். ற்று யோசனை சொல்கிறேன்.''

அவள் எழுந்து சென்று ங்குமிங்கும் தேடி ஒரு மெல்லிய சியை எடுத்து வந்தாள். ஆற்றங் ரைப் பரப்பில் கைகளாலும் ல்களாலும் சீர்ப்படுத்தினள்.

''இதோ இது ஆக்ராவிலிருந்து ஜ்மீர் செல்லும் பாதை. ஆஜ்மீரிலுள்ள ாஜா முயினுத்தீன் சிஷ்டியின் காவுக்கு இந்த வழியாகத்தான் கிருன் நம் பகைவன். ஒவ்வோர் ண்டும் பாத யாத்திரையாக இங்கே வது அவன் வழக்கம்.'' குச்சியினல் ரற் பரப்பில் கோடு கிழித்தபடி ாக்கினள் அவள். ''இதுதான் அக்பர் க்கமாக வரும் பாதை. இதோ ஆக்ரா. தபூர் சிக்ரி. இது பரத்பூர். இங்கே ளசா. இங்கே ஜெய்ப்பூர். இதோ படி வந்தால் ஸாங்னேர். இது ன்காட். இதோ ஆஜ்மீர். இந்தப் தை நெடுகக் குன்றுகளும் காடுகளும் ாளமாயிருக்கின்றன. நமக்கு மிக தியானது..'

அவள் விவரிக்க விவரிக்க அவன் ட்டுக் கொண்டிருந்தான்

மாமன்னரின் அறையில் சிரிப் பொலிகள் அலைஅலையாய்ப் புறப்பட்டுக் கொண்டிருந்தன.

உள்ளே செல்வதற்குச் சந்தர்ப்பத்தை நோக்கி வெளியே காத்திருந்தார் முதலமைச்சர் தோடர் மால். ஆனல் சக்கரவர்த்தியிடமிருந்து அழைப்பு ஏதும் வருவதாகத் தெரியவில்லை. சிரிப்புத்தான் மேலும் மேலும் வந்து கொண்டிருந்தது

தோடர்மால் பின் கை கட்டிய வண்ணம் குறுக்கும் நெடுக்கும் உலாத்திக் கொண்டிருந்தார். இளைஞன் ஒருவன் எதிரில் வருவதைக் கண்டதும் அவர் முகம் மலர்ந்தது.

அவன் அப்துர் ரஹீம். ஆரம்ப காலத்தில் அக்பரின் சாம்ராஜ்யத்துக்கு வித்தூன்றிய பைராம் கானின் புதல்வன். பிற்காலத்தில் மாமன்னரின் அதிருப்தியைப் பெற்றுக்கொண்டு மர்மமான முறையில் கொலை செய்யப்பட்டதால், பைராம் கானின் குழந்தையை எடுத்து நல்ல முறையில் வளர்ப்பதில் தனி அக்கறை காட்டினர் அக்பர். அறிவும் ஆற்றலும் நிறைந்தவனுக அரண்மனையில் வளர்ந்தான் அப்துர் ரஹீம். கான் கானன் என்ற பெரும்



குமரி அனந்தன்

பதவிக்கு அவனைத் தயார் செய்து வந்தார் சக்கரவர்த்தி. அரண்மனைக்குள் எங்கு வேண்டுமானாலும் செல்ல அவனுக்குச் சலுகை உண்டு.

''முதலமைச்சருக்கு வணக்கம்,'' என்றான் அப்துர் ரஹீம்.

''வணக்கம்.'' அவன் தோளைத் தொட்டுத் தனியே அழைத்துச் சென்றார் தோடர்மால். ''ரஹீம், எனக்காக ஓர் உதவி செய்வாயா?''

''கட்டாயமாய்,'' என்றான் அவன் இன்முறுவலுடன்.

''உள்ளே வெகு நேரமாய் யாருடனோ சிரித்துப் பேசிக் கொண்டிருக்கிறார் சக்கரவர்த்தி. யாரென்று பார்த்து வந்து சொல்லேன். எனக்கு உள்ளே போக வேண்டிய வேலை இருக்கிறது.''

''இதோ.'' அக்பரின் அறைக்குள் சென்ற இளைஞன் இரண்டு விநாடியில் திரும்பி வந்தான்.

''கான் சூர்.''

தோடர்மாலுக்குப் பிரமிப்பில் மூச்சடைத்தது. ''கான் சூர்? மாகம் அனகாவின் பிள்ளை? சக்கரவர்த்தியால் மரண தண்டனை கொடுக்கப்பட்டு, கடைசி விநாடியில் மன்னிப்பு அளிக்கப்பட்டவன்? அவனுடனா மாமன்னர் சிரித்துப் பேசிக் கொண்டிருக்கிறார்?''

''அவரேதான்,'' என்றான் அப்துர் ரஹீம். ''முதலமைச்சருக்குத் தெரியாதா? கொஞ்ச நாளாகக் கான் சூரோடு வெகு சினேகமாய் பழகி வருகிறார் ஷா இன் ஷா. சில சமயங்களில் எனக்கே பொறாமையாக இருக்கிறது.''

தோடர்மாலுக்குக் கோபம் வந்தது. உள்ளே இருப்பவர் கான்சூர் என்பது தெரியாமல் இத்தனை நேரம் காத்திருந்தோமே!

ரோஷத்துடன் உள் நுழைந்தார். ''வாருங்கள் தோடர்மால்'' என்று வரவேற்றார் சக்கரவர்த் ''இந்தப் புதுமைப் பொருள்களையெல்ல பார்த்தீர்களா? நம் கான் பீஜபூரிலிருந்து கொண்டு வந்திருக்கிறார்

கான் சூரின் கூட பீஜபூர்க்காரர்கள் சிலரும் ஆஜ பெக்கும் அரண்மனை வைத்தியரும் அமர்ந்திருந்தார்கள். சக்கரவர்த்திய முன்னே வெள்ளியிலும் தங்கத்தி தந்தத்திலும் செய்த வேலைப்பாடமை பல பொருள்கள் பரப் வைக்கப்பட்டிருந்தன. ஒவ்வொன்றை பற்றி வேடிக்கையாகக் கான் வர்ணிக்க, மாமன்னர் ரசித்துச் சிரித்தா

மணிகள் இழைக்கப்பட்ட பெரும் ஜாடி அக்பரின் முன் வைக்கப்பட்டிருந்தது. அதில் நீண் வெள்ளிக் குழாயொன் பொருத்தப்பட்டிருந்தது. சில இலை அதில் அடைத்து, தங்க விளக்கி கொளுத்தினான் கான் சூர். குழாயின் முனையில் மெல்லிய புகை வெளி புறப்பட்டது.

''இந்த முனையில் சக்கரவர் வாயை வைத்து உறிஞ்சிப் பார் வேண்டும்,'' என்று குழாயை நீட்டின கான்சூர். ''பீஜப்பூர் சுல்தா பிரத்தியேகமாய் எனக்குத் தந்தது இ தற்சமயம் ஐரோப்பாவில் ரொம் பிரபலமாக இருக்கிறதாம்.''




''இந்திரா சிக்மகளூர் வெற்றி நினைவு நிழற்பந்தல்'' குறித்துக் குமுதத்தில் தவறு செய்தி வெளிவந்துள்ளது.

நான் யாரிடமும், பணம் வசூல் செய்யவில்லை, எனது சொந்த உழைப்பில், சுமார் ரூ. 1700 செலவு செய்து அதை நிறுவி இருக்கிறேன்.

மேலும், நான் இந்திரா தோற்று விடுவார் என யாரிடமும், பந்தயம் கட்டவில் கட்டாயம் ஜெயிப்பார் என்றுதான், அவர் அபேட்சை மனு தாக்கல் செய்யும் நாளில் க நட்டேன், அவர் வெற்றி பெற்ற அந்த நல்ல நாளில் கட்டி முடித்தேன்.

—கோகுசித்ரா ராமானுஜ

டாக்டர்: ''உடம்பு இளைக்க மருந்து சாப்பிட்டு நேற்றுவரை நல்ல பலன் ஏற்பட்டு, பார்க்க இளைத்து இருந்தீர்கள்...இன்று என்ன ஆயிற்று, திடீரென்று உப்பி விட்டீர்கள்...?''

நோயாளி: ''இன்று காலை கண்ணாடியில் என் உடம்பைப் பார்த்தேன்... ஆஹா .. இவ்வளவு அழகாக இருக்கிறேமே என்ற பூரிப்பில் உடம்பு பெருத்து விட்டது. டாக்டர்...''

என். எஸ். வி. குருமூர்த்தி.



''வேடிக்கை, வேடிக்கை!'' பர் குழாயின் முனையை உறிஞ்சினர். நமினர். வளையம் வளையமாகப் புகை ப்பட்டது. ''புதுமையாய்த்தான் நக்கிறது. கான்சூர், இதற்கு என்ன யர்?''

''புகையிலை என்கிறார்கள். த்துவ முறையில்கூட...''

அரண்மனை வைத்தியர் குறுக் டு, சில இலைகளைக் கசக்கி, முகர்ந்து ர்த்தார்.. ''சக்கரவர்த்தி இதையெல் ம் பயன்படுத்தக் கூடாது. இது ாதை வகை. மருத்துவ சாத்திரங் ில் இது தடுக்கப் பட்டிருக்கிறது.''

''இருக்கட்டும், இருக்கட்டும். ாஞ்ச நேரம் வேடிக்கைக்குத்தானே.'' க்பர் மேலும் இரண்டு மூன்று முறை கையை இழுத்து விட்டுவிட்டு, ''பிரதம ்திரியும் சிறிது அனுபவிக்கலாமே?'' ன்றார் தோடர்மாலிடம்.

முதலமைச்சர் சங்கடத்து ன், ''இல்லை...ஷா இன் ஷாவைப் ாலத் திடகாத்திரமான சரீரம் ந்த ஏழைக்குக் கொடுத்து வைக்க ில்லை,'' என்று மறுத்தார்.

''கான் சூருக்கு இந்த மாதிரி துமைகளில் ஒரு தனி ஈடுபாடு. வைகளைச் சேகரிப்பதில் ஒரு அலாதி ன பிரியம். என்ன நினைக்கிறீர் ?'' என்றார் அக்பர்.

''ஆமாம்,'' என்றார் தோடர் ல். 'பத்து வண்டிகள் நிறைய வெட்டப்பட்ட தலைகளைத் திரட்டி ந்தானே இவன்!' என்று எண்ணிக் காண்டார். ''சக்கரவர்த்தியிடம் வெருரு முக்கியமான அலுவலாக ந்தேன்.''

''ஹூம்! கொஞ்ச நேரம் நான் மகிழ்ச்சியாக இருந்தால் என் பிரதம மந்திரிக்குப் பிடிக்காது!'' அக்பர் சிரித்தார். அவர் தலையசைப்பைப் புரிந்து கொண்டு மற்றவர்கள் வெளியேறினர்கள்.

''என்ன, இப்போது சொல்லுங்கள்.''

''ஆஜ்மீர் யாத்திரை...'' என்று தோடர்மால் சொல்லத் தொடங்கியதுமே அக்பரின் முகம் கறுத்தது.

''எக்காரணம் கொண்டும் அதை நிறுத்தப் போவதில்லை என்று நான் முன்பே சொல்லிவிட்டதாக ஞாபகம்.''

''நிறுத்த வேண்டாம். ஒரு சிறு மாறுதலாவது செய்யலாம்.''

''என்ன?''

''வழக்கமாகத் தாங்கள் பரத்பூர், தௌசா, சாங்னேர், ஜெய்ப்பூர் வழியாகச் செல்வீர்கள்...அதற்குப் பதில்..''

''பதில்?''

''தௌல்பூர், சவாய் பதோபூர், டோங்க், வீமல்பூரா வழியாக ஆஜ்மீரை அடையலாம். யாத்திரை மார்க்கத்தை மாற்றியுள்ள விஷயத்தை ரகசியமாகவே வைத்துக் கொள்ளலாம்.''

அக்பரின் பதிலுக்காக அவர் முகத்தை நோக்கியபடி நின்றார் தோடர்மால்.

(தொடரும்)

# அதை யார் திருத்துவது?

**பயனுள்ள சிந்தனை**

"சித்தார்த்த தனி சிந்தனைகள்"—ஒரு பயனுள் பகுதி. 'கதர்' தோன்ற உண்மையான காரணத்தை வெகு சிறப்பாக... எடுத்து காட்டியிருக்கிறார்.

கோயமுத்தூர்—9 கே. கோபால கிருஷ்ண

**அடுத்தது யா..?**

கொஞ்ச நாளாகக் குமுதம் கதைகளில் அதிகம் கவனம் செலுத்துவதுபற்றி ஆச்சரியப்படுகிறேன். ஆனால் 'சிண்டு' முடித்துக் கொடுக்கும் புத்தியை யார் திருத்துவார்கள்? இப்போது பாலசந்தர்—பாரதிராஜா. அடுத்தது யாரோ?

சென்னை—4 சி. எஸ். பாஸ்கரன்

பாரதிராஜா டைரக்ஷனில் சரக்கு இருந்தாலும் இல்லாவிட்டாலும் தூக்கிவைத்து விமரிசனம் எழுதும் பத்திரிகைகளுக்கிடையே குமுதம் மாதிரி ஒரு பத்திரிகையும் இருக்கிறதே என்பதை நினைக்கும்போது என் உள்ளம் பெருமிதப் படுகிறது.

திண்டுக்கல்—1 சிநா சுந்தர்

**தேர்தல் சமயம் பார்த்து...**

தேர்தல் நெருங்கி வரும் இந்தச் சமயம் பார்த்து இளம் பேச்சாளர்களுக்கு அறிவுரைகளை இலவச இணைப்பாக வழங்கியிருக்கும் உமது புத்திசாலித்தனம் பாராட்டுக்குரியது.

திருநெல்வேலி கிருஷ்ணன்

**அது வேறு விழா**

"நூறாவது நாள்" மூன்றாவது கதையில் பரிசளிப்பு விழாவில் படத்தின் பின்னணியில் நடிகர், நடிகைகள் உள்ள புகைப்படம் அருமை. ஆனால் அவர்கள் வந்தது, நூறாவது நாள் விழாவுக்கு அல்ல. நடிகர்கள் சங்கக் கட்டிடத் திறப்பு விழாவுக்கே.

அரகண்டநல்லூர் ப. விஜயன்மாருதி

**ஆபாசமான மலர்**

ஆபாசமாக இருந்தாலும் கருத்தும், முடிவும் ஆபாசத்தை மறைத்து கதையைச் சிறப்படையச் செய்து விட்டது, சுகந்தியின் "ஒரு மலர்".

விருத்தாசலம்—1 எஸ். எம். சையது அ

**ஜோக்கா, ஜோதிடமா, பேத்தலா?**

நீர் குழந்தையாக இருக்கும்பொழுது தலைகீழாக நின்று கொண்டு தூங்கினீர்களாக்கும்! அதுதான் மூளை குழம்பி, 'படுக்கை ஜோதிடம்' போன்ற பைத்தியக்காரத்தனமான ஜோதிடத்தை ஜோக்காகவும் அல்லாமல் ஜோதிடமாகவும் இல்லாமல் சொல்லியிருக்கிறீர்கள்!

திருப்பூர்—2 அ. லோகநாத

**செய்தி இல்லாமலே...**

செய்தி படித்துச் சிறுகதை எழுதும் கவிஞர், கேள்விப் பட்டு செய்தி என்ன என்று சொல்லாமல் கதையை மட்டும் சொன்னால் எப்படி

கீழப்பாலூர் த. அரிகிருஷ்ணா

**சனிக்கிழமை பெய்த மழை**

இவ்வார இதழில் ஓர் அதிசயம். ஒரு சினிமா 'ஸ்டில்'கூடப் பிரசுரிக்காததுதான். அதனால்தான் சனிக்கிழமை காலை ஆறு மணிக்கு மழை ஆரம்பித்துவிட்டது.

திருப்பூர்—20 இரா. திருப்ப

---

## இது செய்தி

சென்னை பெசன்ட் நகரில் ஒரு பெரிய நவீனமான பங்களாவில் விபசார விடுதி நடத்தியதாகச் சந்திரசேகர் என்பவரும், அவருடைய தங்கை இந்திரகுமாரி என்பவரும் போலீசாரால் கைது செய்யப்பட்டனர். விபசாரத்துக்குச் செல்வது போல் ஒரு நபரை நடிக்க வைத்துப் போலீசார் இவர்களைப் பிடித்தார்கள்.

கண்ணதாசன் கதை 66'ம் பக்கம்,

# 24

"அதென்ன இரண்டு காதக் கணக்கு?" என்று ஜெய் வினவினன்.

அரண்மனையின் முன்னுள் சேவகனெருவன் விசுவாசத்துடன் கொண்டு வந்து கொடுத்த பழங்களைச் சுவைத்துக் கொண்டிருந்தார்கள் இருவரும். நீரோடையின் சலசலத்த நீர் அந்தக் காதலர்களை எட்டி எட்டிப் பார்த்துச் சிரித்துச் சுழித்துக் கொண்டே சென்றது.

சற்று முன் சித்தூர் தாத்தா வந்து பார்த்தவர், ஜெய்யை அடையாளம் கண்டு கொண்டு விட்டார். சிவப்புத் துணியையும் அவனுடைய தலைக் காயத்தையும் கண்டதும் நடந்ததை ஊகித்துவிட்டார். பதறிப் போனுர். "இந்தப் பெண்ணிடம்..." என்று ஆரம்பித்தவர், ஜெய்யின் மனைவி அவள் என்பதை ஞாபகப்படுத்திக் கொண்டார்.

"பெண்களுக்கு வில் பயிற்சி அவ்வளவு எளிதில்லை என்று சொன்னேன்....இவர் கேட்கவில்லை..."

"இன்னென்றும் சொன்னீர்களே, அது மறந்து விட்டதா தாத்தா?" என்று ரூப்மதி சிரித்தாள்.

"என்ன இளவரசி அது?"

"பயிற்சி நன்ருக வர வேண்டுமென்ருல் இளவரசரைப் பற்றி நினைக்கவே கூடாது என்று..."

"அதுவா...அது ஒரு வார்த்தைக்காகச் சொன்னேன்..." என்று நழுவி விட்டார் சித்தூர் தாத்தா. போகுமுன் ஜெய்யிடம், "நான் போய் யாராவது வைத்தியரை அனுப்பட்டுமா?" என்று கேட்டார். ஜெய்யை ரூப்மதி காயப்படுத்தியதில் தனக்கும் ஒரு பங்கு உண்டு என்று அவருக்குக் குறுகுறுத்தது போலும்.

"அது பரவாயில்லை. நீங்கள் மனக் கஷ்டப்படாதீர்கள்." புன்னகையுடன் அவரை அனுப்பி வைத்தான் ஜெய்.

"இனி இளவரசியாருக்கு என் பயிற்சி தேவையில்லை. சகல வித்தைகளிலும் நிபுணரான தாங்களே வந்து விட்டீர்கள்," என்று கூறி விட்டுப் புறப்பட்டார் அவர்.

அப்போதுதான் ஜெய் கேட்டான் அவளை, அது என்ன இரண்டு காதக் கணக்கு என்று.

அவனைத் தன் மடியில் சாய்த்து வைத்துக் கொண்டு பேச வேண்டும் போலிருந்தது அவளுக்கு. அந்த ஆசையை அடக்கிக் கொண்டாள். அவள் கண்கள் கனவுலகத்தில் சஞ்சரிப்பது போல் மூடிக் கொண்டன. "ஜெய்...சக்கரவர்த்தி, ஷா இன்ஷா என்றெல்லாம் வர்ணிக்கப்படுகிருரே தவிர அக்பர் ஒரு சாதாரண ஆள் தான். பிரமாதமான பாதுகாப்பு எதுவும் செய்து கொள்ளாமல் சாதாரணமாகத்தான் நடமாடுகிருர். ஆகவே அவரை வெகு சுலபமாக நேருக்கு நேர் சந்தித்து ஒரே வெட்டில் அல்லது ஒரே குத்தில் மாய்த்து விட முடியும். ஆனல் அப்படி நான் செய்ய விரும்பவில்லை."

"ஏன்?"

"அக்பர் கொலை செய்யப்படும் அந்த இடத்திலேயே என்னை அவருடைய ஆட்கள் பிடித்து விட்டால் அங்கேயே என்னைக் கண்ட துண்டமாக வெட்டிப் போட்டு விடுவார்கள். அப்படி நான் இறந்து போக விரும்பவில்லை. காரணம், உயிரின் மீதுள்ள ஆசை அல்ல. ஜெய்யின் மீதுள்ள ஆசை."

"புரியவில்லையே?"

"அக்பர் மாண்டதும் ராஜ



தனம் மொத்தமும் சுதந்திரம் பெறும். சூரியபூரின் விடுதலைக் கொடி பட்டொளி யுடன் அரண்மனைக் கொடிக்கம்பத்தில் பறக்கும். அப்போது ஜெய்யின் அருகிலே தோளோடு தோளாக நானும் நின்று அந்தக் காட்சியைக் கண்டு மகிழ வேண்டும். சுதந்திர சூரியபூரில் மக்களுக்காகப் பல நூறு நல்வாழ்வுத் திட்டங் களை ஜெய் தீட்டும் போது நானும் என் கருத்துக்களைச் சொல்ல வேண்டும். புதிய சூரியபூரின் வளப்பத்தில் எனக்கும் ஒரு பங்கு இருக்க வேண்டும். அதற் காகத்தான் நான் அக்பரை வெகு தூரத்திலிருந்து கொல்ல வேண்டுமென்று, அதே சமயம் நான் உயிரோடு இருக்க வேண்டுமென்று திட்டமிட்டிருக்கிறேன்.''



''ரூபா.'' அவன் அழைப்பில் ஆசையின் வெப்பம் தென்பட்டது. தன் பொருட்டு, தன் ராஜ்யத்தின் பொருட்டு, இவள் எத்தனை திட்டங்களைத் தன் நெஞ்சில் தேக்கி வைத்திருக்கிறாள்! நினைக்கும்போது அவனுக்கு உள்ளம் நெகிழ்ந்தது.

அவள் அக்பரின் ஆஜ்மீர் யாத்திரை மார்க்கத்தை மறுபடியும் சுட்டிக் காட்டினாள். ''இதோ இந்த இடத்தில் பஞ்ஜனி ஆற்றை அக்பர் கடப்பார். அதற்காக ஆற்றில் படகுகளை ஒன்றின் பக்கம் ஒன்றாக நிறுத்



திப் பாலம் அமைப்பது வழக்கம்: இதோ பக்கத்தில் ஒரு குன்று தெரிகிறது பாருங்கள். அங்கே இருந்தபடி நான் அம்பு எய்யப் போகிறேன். அதற்கு ஓர் இடம் தேர்ந்தெடுத்து வைத்திருக்கிறேன். படகுப் பாலத்துக்கும் நான் மறைந்திருக்கப் போகும் இடத்துக்கும் இடையே ஏறத் தாழ இரண்டு காத தூரம் இருக்கும். அதனுல்தான் அந்தக் கணக்கு.''

ஜெய் சிறிது நேரம் யோசனை செய்து விட்டுச் சொன்னுன். ''இரண்டு காத தூரத்துக்கு அம்பு எய்வது லேசுப் பட்ட காரியமல்ல. என்னைப் போலப் பல வருடங்கள் டயிற்சி செய்தவர்களுக்கே கஷ்டம்.''

''புரிகிறது,'' என்ருள் அவள்.

''என்ன புரிகிறது?''

''எனக்கு ஏதேனும் ஆபத்து நேர்ந்துவிடப் போகிறதே என்பதற்காக என் உற்சாகத்தைக் குறைக்கப் பார்க்கிறீர்கள்.''

''உனக்கு ஆற்றல் இருக்கிற அளவுக்கு அறிவு இல்லை'' செல்லமாய்க் கோபித்தான் அவன். ''இன்னும் தீவிரப் பயிற்சி செய்தால் உன் இலக்கை அடைந்து விடலாம். நான் அதற்கு சொல்லவில்லை. வேறு ஒரு முக்கியமான குறை எனக்குத் தோன்றுகிறது. வா. நாம் போலாம். நீ ஒளிந்திருக்கப் போகும் இடத்தையும் அக்டரில் படகுப் பாலம் இருக்கப் போகிற இடத்தையும் காட்டு.''

இரண்டரை நாட்கள் அவர்கள் வேடிக்கையாகப் பேசிக் கொண்டும் சிரித்துக் கொண்டும் நடந்தார்கள்.

பனுஸி நதியில் படகுப் பாலம் கட்டப்படும் இடம் வந்தது. நுரையும் நுரையுமாக ஆற்றில் நீர் சுழித்தோடிக் கொண்டிருந்தது.

''இதோ இங்கே அக்பர் ஆற்றைக் கடப்பார். சுற்று வட்டாரம் எங்கும் கட்டிடம் எதுவும் இல்லை. அக்பர் என் அம்புக்கு வெகு சுலபமான இலக்காக இருப்பார்,'' என்ருள் ரூபமதி.

''நீ எங்கே இருந்து அம்பு எய்யப் போகிருய்?'' என்று அவன் கேட்டான்.

''அதோ அந்தக் குன்றில்.'' அவள் முன்னே வழி காட்டிக் கொண்டு நடந்தாள். குன்றின் உயரத்தை அடைந்தார்கள் அவர்கள்.

''இந்தப் பாறை வசதியாக, மறைவாக இருக்கிறது. இதைத்தான் தேர்ந்தெடுத்திருக்கிறேன்.''

அவன் அதன் பின்னே குனிந்து உட்கார்ந்தான். ஆற்றில் பாலம் கட்டப்படவிருக்கும் இடத்தை நோக்கினுன். யோசனையுடன் எழுந்து கொண்டான்.

---



சொல்கிறார்

பாரதியார் சொல்கிருர்:

மனேதைரியமில்லாத பேடிகள் புழுக்களாகப் பிறப்பார்கள்.

பிறர் துன்பங்களை அறியாமல் தமதின்பத்தை விரும்பினேர் பன்றிகளாகப் பிறப்பார்கள்.

சொந்த மொழி கற்றுக் கொள்ளாதவர்கள் குரங்குகளாகப் பிறப்பார்கள்.

சோம்பேறிகள் எருமைகளாகப் பிறப்பார்கள்.

அநீதி செய்வோர் தேளாக பிறப்பார்கள்.

பிறரை அடிமைப் படுத்துவோர் கழுதைகளாகப் பிறப்பார்கள்.

ஸ்திரிகளை இம்சை செய்வோர் நபும்ஸகராகப் பிறப்பார்கள்.

சமத்துவத்தை மறுப்போர் நொண்டிகளாகப் பிறப்பார்கள்.

கருணையில்லாதவர்கள் குருடராகப் பிறப்பார்கள்.

தமது கல்வியைப் பிறருக்குக் கற்றுக் கொடாதவர் ஊமைகளாகவும் பிறப்பார்கள்.

அச்சமுடையோர் ஆந்தைகளாகவும் பிறப்பார்கள்.

மறுஜன்மம் வரை கூடப் போக வேண்டாம். இந்த ஜன்மத்திலேயே பாவி கோழை முதலியவர்கள் தாழ்ந்த ஜந்துக்களாக இருப்பதைப் பார்க்கலாம்.

—கங்கா ராமமூர்த்தி

"ரூப்மதி, உன் உற்சாகத்தைக் குறைக்கிறேன் என்று மறுபடியும் சொல்லாதே. ஆனால் உன் நோக்கம் நிறைவேறுவது கஷ்டம்."

"ஏன்? ஏன்?"

"நீ வெறுமே தூரத்தை மட்டுமே கணக்கிட்டிருக்கிறாய். இங்கிருந்து அங்குள்ள தூரத்தை மட்டுமே கவனித்திருக்கிறாய். அது சரியில்லை."

"பின்னே?"

"உன் இலக்கு ஒரு மனிதன்: ஆறடி உயரமே உள்ள ஒரு மனிதன். இங்கிருந்து பார்க்கும்போது அவன் கடுகுமாதிரி தெரிவான். அது மட்டுமல்ல. முன்னும் பின்னும் பரிவாரங்கள் போகும்போது அக்பர் யார் என்றே உன்னால் கண்டுபிடிக்க முடியாது."

அவள் திகைத்து நின்றாள். "வந்து...ஆமாம்...அதை நான் நினைத்துப் பார்க்கத் தவறி விட்டேன்."

"இலக்குத் தவறி வேறு யாரேனும் கொல்லப்பட்டார்கள் என்று வைத்துக்கொள். அந்த விநாடியே அக்பர் உஷராகி விடுவார். இன்னொரு முறை நீ முயற்சி செய்ய இடமே கொடுக்க மாட்டார். பெரும் பாதுகாப்புகள் செய்து ஒளிந்துகொள்வார்."

"உண்மைதான் ஜெய்! எனக்கு அது தெரியாமல் போச்சே," தலையைக் குனிந்து கொண்டாள் அவள்.

"அதைரியப்படாதே. ஒரு வழி இருக்கிறது," என்றான் அவன்.

"என்ன?" ஆர்வத்துடன் அவள் தலைநிமிர்ந்தாள்.

"அக்பரின் கூடவே நம்மாகமான ஓர் ஆள் இருக்க வேண்டும். பாலத்தை அக்பர் கடக்கும்போது, ஏதாவது ஒரு வகையில் அடையாளம் காட்ட வேண்டும். அதாவது, இந்தச் சிவப்புத் துணி இருக்கிறதே..." தன் தலையில் கட்டியிருந்த துணியை அவிழ்த்தான் அவன். "அக்பரின் பின்னே நின்று இதை விசிறிக் காட்டினால் நீ தெரிந்து கொள்வாய்."

"அப்படி யார் இருக்கிறார்கள்?"

"நான் இருக்கிறேன்."

"ஜெய்!"

"பயப்படாதே, எனக்கு ஓர்

மகான்கள் நம்மோடு வாழ்தல் நாம் செய்த பேறு, அவர்கள் நம்மை விட்டு நீங்குதல் அவர்கள் செய்த பேறு.

—ஜெயகாந்தனின் 'சுதந்திரச் சிந்தனை' என்ற நூலிலிருந்து.

—எக்ஸ்

ஆபத்தும் வராது. என்னவாவது செய்து அக்பரின் நெருக்கமான பரிவாரத்திலே ஒருவனாகச் சேர்ந்து விடுகிறேன்," என்று தைரியம் சொன்னான் ஜெய்.

சக்கரவர்த்தி உடனே பதில் தரவில்லை. சாளரத்தருகே போய் மௌனமாக நின்று கொண்டிருந்தார்.

தோடர்மால் காத்துக் கொண்டிருந்தார். 'என்ன சொல்கிறீர்கள்?' என்று கேட்கவும் அச்சமாயிருந்தது. சில சமயங்களில் எதையாவது அளவுக்கு மீறி வற்புறுத்தினால் சக்கரவர்த்தி நேர் எதிராகத் திரும்பிவிடுவது உண்டு.

"முதலமைச்சர் இப்படி வந்தால் ஓர் அருமையான காட்சியைக் காணலாம்," என்று அழைத்தார் அக்பர்.

தோடர்மால் சாளரத்தருகே சென்று பார்த்தார். அரண்மனையின் வெளி முற்றத்தில், பளிங்குத் தடாகத்தினருகே இளவரசன் சலீம் விளையாடிக் கொண்டிருந்தான் ஒரு மான்குட்டியுடன். ஜனானாவைச் சேர்ந்த இளம் தாதியொருத்தி அவனுடன் ஓடிப் பிடித்துச் சிரித்துக் கொண்டிருந்தாள். மான்குட்டியைத் தூக்கிப் பந்துபோல அவள் மீது விட்டெறிவதும் அவள் திருப்பி எறிவதுமாக இருந்தார்கள்.

அந்த விளையாட்டை ஆழ்ந்து ரசித்துக் கொண்டிருந்தார் அக்பர். அந்த மகிழ்ச்சியைக் கெடுக்கக்கூடாதென்று தோடர்மாலும் பக்கத்திலேயே மௌனமாக நின்றிருந்தார்.

"இப்போதுதான் ஞாபகம் வருகிறது." பிரதம மந்திரியை நோக்கித் திரும்பினார் அக்பர். "ரொம்ப நாளாயிற்று இல்லை?"

"எது ஷா இன்ஷா?"

"நிலவில் மான்வேட்டை யாடி?"

தோடர்மாலுக்குச் சற்றுச் சினம்கூட மூண்டது. சக்கரவர்த்தியின் உயிருக்கே அபாயம் நேரக்கூடிய சந்தர்ப்பங்கள் ஏற்பட்டிருப்பதாக அவருக்கு ஒற்றர்கள் மூலம் செய்தி கிடைத்திருக்கிறது. அதைப்பற்றி எச்சரிக்கை செய்ய இங்கே வந்தால், மாமன்னர் நிலவிலே மான் வேட்டையாடுவது பற்றிப் பேசுகிறார்!

அக்பரின் கண்கள் மூடின. அவருக்குப் பிடித்தமான அந்த விளையாட்டைப் பற்றிய இன்பக் கற்பனையில் அவர் உள்ளம் மூழ்கியது. அவர் உதடுகள் முணுமுணுத்தன. "தோடர்மால்....நினைத்துப் பாருங்கள். நல்ல பௌர்ணமி இரவுகளில், பால் போல நிலா வீசும் வேளைகளில், நாம் மான் வேட்டைக்குப் போவோமே, ஞாபகமிருக்கிறதா? மான்களின் மஞ்சள் நிற உடல்கள்—அந்தக் கரும்புள்ளிகள் தாங்கிய தேகங்கள்—மின்னல் போல் துள்ளிக் கொண்டு ஓடுவதும்....தாரை தப்பட்டைகளின் ஓசையில் அவை மிரண்டு பார்க்கும் அழகும்.... மேகங்களின் பின்னே சந்திரன் மறைந்துவிட்டால் நமது ஆட்கள் தீவட்டிகளைக் கொளுத்திக் கொண்டு அவைகளைத் துரத்துவதும்.....அந்த வெளிச்சத்தில் அவை தாவும்போது சரக்கென்று ஈட்டிகள் அவைகளைத் துளைப்பதும்...தோடர்மால், மான்வேட்டைக்கு நான் போய் வெகு நாளாகிறது. ஆஜ்மீருக்கு வேறே போகிறேன். திரும்பி வரப் பல நாட்களாகும். அதற்குள் ஒரு தடவை மான் வேட்டைக்கு ஏற்பாடு செய்யச் சொல்லுங்கள்..."

இந்த மட்டில் ஆஜ்மீர் யாத்திரை பற்றிப் பேச்செடுத்தாரே மாமன்னர்! தோடர்மாலுக்கு நிம்மதி ஏற்பட்டது. "சக்கரவர்த்தி அதைப் பற்றித்தான் எதுவும் சொல்லவில்லை," என்றார்.

"எதைப்பற்றி?"

"ஆஜ்மீருக்குச் செல்லும் யாத்திரை மார்க்கத்தை மாற்றி வைத்துக்கொள்ள வேண்டும் என்று சொன்னேனே...."

"ஓ, அதுவா? மறந்து போனேன்," என்றார் அக்பர். "ஆமாம் அதற்கு என்ன அவசியம்?"

தோடர்மால் ஒரு பதில் தயாராக வைத்திருந்தார். "இப்போது மழைக்காலமாகையால் வழக்கமான சாங்னேர் ஜெய்பூர் பாதையில் நிறையச் சேதங்கள் ஏற்பட்டிருக்கின்றன. சக்கரவர்த்தி பயணம் செய்யக்கூடிய விதத்தில் அந்தச் சாலைகள் இல்லை என்று தெரிகிறது."

"அப்படியானால் வேறு பாதையில் செல்வது பற்றி யோசிக்க வேண்டியதுதான்," என்றார் அக்பர். "எதற்கும் சாயந்தரம் இது பற்றிச் சொல்கிறேனே? முதலமைச்சர் அதுவரையில் பொறுத்திருக்கலாமில்லையா?"

"தாராளமாய்," என்றார் தோடர்மால்.

சாயந்தரம் அவர் சென்றபோது அக்பர் மிகுந்த நிதானத்துடன் மஞ்சத்தில் சாய்ந்திருந்தார். "வாருங்கள் தோடர்மால்," என்று அமைதியாக வரவேற்றார். "ஆஜ்மீர் செல்லும் பாதையை மாற்றுவது பற்றித் தாங்கள் சொன்ன யோசனையைப் பரிசீலனை செய்தேன்."

"சரி."

"நான் மட்டும் பரிசீலனை செய்தால் போதாதென்று ராஜா மான் சிங்கின் மூலம் நெடுஞ்சாலைகளைக் கவனிக்கும் அதிகாரிகளையும் வரவழைத்துக் கேட்டேன்."

தோடர்மாலுக்குச் சொரே



"நம்ம சேது வீட்டிலேர்ந்து விதவிதமா பல கிண்ணிகள் மத்தியான சாப்பாட்டுக்கு அனுப்பறுங்க போலிருக்கு?"

"அப்படியெல்லாம் இல்லை. வீட்டில கழுவ நேரமில்லேன்னு அதுகளை ஆபீசுக்கு அனுப்பிக் கழுவச் சொல்றுங்க. அவ்வளவுதான்."

—கிருஷ்.

ரென்றது. வெளியே காட்டிக்கொள்ளாமல் இருந்தார். ''சரி?''

''பரத்பூர், சாங்னேர், ஜெய்ப்பூர் பாதை மிக நன்ருக இருக்கிறதென்றும், நமது படைகளும் பரிவாரங்களும் ஆஜ்மீருக்கு அந்தப் பாதையில் இடையூறின்றிப் போகலாமென்றும் அவர்கள் சொல்கிருர்கள்.''

தோடர்மாலினுல் எதுவும் பேச முடியவில்லை. ''நான் எதற்குச் சொன்னேனென்ருல்...''

''எதற்குச் சொன்னீர்கள் என்றுதான் எனக்கு முன்பே தெரியுமே?'' அக்பர் சிரித்தார் ''அந்த சூர்யபூர் சிறுமியினுல் என் உயிருக்கு ஆபத்து—அந்தக் குறிப்பிட்ட பாதையில் வரப்போகிறது - அப்படித்தானே?''

''ஷா இன்ஷா எல்லாவற்றையுமே விளையாட்டாக எடுத்துக் கொள்ளக்கூடாது.''

''ஆழ்ந்த யோசனைக்குப் பின்னர்தான் சொல்கிறேன்.'' மஞ்சத்திலிருந்து இறங்கி வந்தார் அக்பர் தோடர்மாலின் தோளைப் பாசத்துடன் தட்டிக் கொடுத்தார். ''என்மீது முதலமைச்சர் காட்டும் அன்புக்கு மிக்க நன்றி,'' என்ருர். 'இந்தச் சந்தர்ப்பத்தில் தங்களிடம் இரண்டு விஷயங்கள் சொல்லப் போகிறேன் பதற்றமில்லாமல் கேட்க வேண்டும்.''

''காத்திருக்கிறேன், சக்கரவர்த்தி.''

''வடமேற்குத் திசையில் உஸ்பெக்கிலிருந்து படையெடுப்பு நிகழக் கூடுமென்று எனக்குச் சில தகவல்கள் வந்திருக்கின்றன.''

''அப்படியா!'' என்று ஆச்சரியப்பட்டார் தோடர்மால் பல சமயங்களில் அவருக்குத் தெரியாத சமாசாரங்கள் மாமன்னரின் செவிக்கு எட்டி விடுகின்றன 'அப்படியானுல் அதை உடனடியாகத் தடுக்க...''

''ஆம் அதற்கான ஏற்பாடுகளைக் கவனிக்கும்படி காபூலுக்கு அனுப்பப் போகிறேன்—'' சக்கரவர்த்தி வேண்டுமென்றே நிறுத்திச் சொன்னுர். —''ஜான்குரை.''

''ஜான் சூர்; ஷு இஷ ஷா. இது நான் கொஞ்சமும்...

''ஒப்புக்கொள்ள முடியாத முடிவுதான் இருந்தாலும் பல கோணங்களிலும் ஆராய்ந்து பார்த்துவிட்டேன். ஜான் சூரை அங்கே அனுப்புவதுதான் மேல்,''






தோடர்மால் பேசாமல் இருந்தார்.

''இரண்டாவது விஷயம் என்னவென்று தாங்கள் கேட்கவில்லையே?'' என்ருர் அக்பர் அவரைச் சீண்டுகிற மாதிரி.

''சொல்லுங்கள்,'' என்று சொல்லவே பயமாயிருந்தது தோடர்மாலுக்கு. தலையை அசைத்தார்

மஞ்சத்துக்குப் பக்கத்திலிருந்த இரும்புப் பெட்டகத்தை நோக்கி நடந்தார் மாமன்னர் திறந்தார் ராஜாங்கப் பிரகடனங்கள் சுருட்டி அடைக்கப்படும் தங்கக் குழல் அது அதன் வாய்கள் அரக்கு முத்திரையிடப்பட்டிருந்தன.

''இதை வெகு நம்பிக்கையாக உங்களிடம் ஒப்படைக்கிறேன், தோடர்மால்,'' என்று கூறிப் பிரதம மந்திரியிடம் கொடுத்தார் அக்பர்

தோடர்மாலுக்குத் திகைப்பு. ''என்ன... என்ன இது?''

''ஒரு முக்கியமான பிரகடனம்,'' என்ருர் சக்கரவர்த்தி ''இதை உம்முடனேயே எப்போதும் வைத்துக் கொள்ள வேண்டும் எனக்கு ஏதாவது திடிரென்று நேருமானுல்—''

''சக்கரவர்த்தி!''

''உடனே தாமதிக்காமல் அரக்கு முத்திரையை உடைத்து இதனுள்ளிருக்கும் பிரகடனத்தை எடுத்துப் பகிரங்கமாகப் படிக்க வேண்டியது. இது என் கட்டளை ''

மாமன்னரின் பேச்சையும் எண்ணத்தையும் புரிந்து கொள்ள முடியாதவராகச் சிலைபோல் நின்ருர் தோடர்மால்,

(தொடரும்)

# சித்தார்த்தனின் சிந்தனைகள்

முருக. சித்தார்த்தன்

சீர் கெட்ட பொருளாதார நிலையை மாற்றத்தான் இடைநிலை செயலகங்களாக இயங்க வேண்டிய வங்கிகள், இரயில்கள், ஆகாய விமானங்கள்கூடச் சிக்கனத்தை மேற்கொள்ள முடியாத நிலையை மாற்றி, ஊழியப் பணிக்காக அவற்றை நாட்டுடைமையாக்கி இருக்கிறார்கள். சிக்கனத்தை ஆற்றலோடு இணைத்து, லாப ஆசையைக் குறைத்துச் செயல்படுவது தான் இதன் நோக்கம்.

பழமைப் பொருளாதாரத்திற்கு விஞ்ஞான ஆற்றல் துணை நிற்கும்போது, காந்தியப் பொருளாதாரம் புதுமையோடு இணையும்போதுதான் சீர் கெட்ட பொருளாதாரம், சிக்கனப் பொருளாதாரமாக மாறுகிறது.

இதையே பொருளாதார மேதை சூமேச்சர், காந்தியம்தான் நம் நாட்டிற்கு வழி யென்று உறுதியோடு கூறி இந்த இடை நிலைத் தொழில் நுட்பப் பொருளாதாரத்தை (Intermediate Technology) சிபாரிசு செய்கிறார்.

தொழில்நுட்பம் மாதம் மூவாயிரம் ரூபாய் பெற்றாலும், உழைப்பவனுக்கு உற்ற துணையாக நின்றால் இரண்டு வேளைப் பட்டினியை ஒரு வேளையாகக் கரைத்துக் கொடுத்தால் கற்றவர்கள் ஆயிரம் இரண்டாயிரம் என்று சம்பாதிப்பதை அந்த ஏழை மறுப்பதில்லை— கண்டிப்பதில்லை.

எனவேதான் உழைப்பிற்கும், உபயோகிப்பதற்கும் இடையே உள்ள வங்கிகள், இரயில்கள், தனியார் தொழிலகங்கள், பெரும் பெரும் கம்பெனிகள் உற்பத்திக்கும், ஆற்றலுக்கும் ஏற்ப எடுப்பது சரி. ஆனால் லாபம், வட்டியை அபரிமிதமாகக் கொண்டு கொஞ்சம் கொஞ்சமாக ஒவ்வொரு நிலையிலேயும் கிள்ளிக்கொண்டேபோனல் பூனைகளின் இடையே உள்ள குரங்காக மாறும் நிலைமை வரும். இந்த நிலையை மாற்றித்தான் ஊழியப் பொருளாதாரமாக மாற்ற வேண்டும். இதுதான் நாட்டுடைமை ஆக்குவதன் நோக்கம்.

சென்னையில், மாம்பலம் ஸ்டேஷன் எதிரில் உள்ள ரங்கநாதன் தெருவில் 300 பேர் கடை விரித்து வருவாய் தேடுகிறார்கள். ''ஐயா, ஐயா,'' என்று நம்மைப் பார்த்துக் கெஞ்சும் ஒவ்வொருவரின் பின்னாலும் ஒரு குடும்பம் பசியோடு அன்று இரவு அவன் கொண்டுவரும் ஐந்து ரூபாயை நம்பி வாழ்கிறது. நூறு ரூபாய் முதல் இருநூறு ரூபாய் வரை லேவாதேவி செய்யும் அவன் ஐந்து—பத்து ரூபாய் சம்பாதிப்பதற்காக, முதலுக்குப் பங்கு கொடுத்துவிட்டு விற்கும் சரக்கின் விலையாகப் பெரும் பகுதியைக் கொடுத்துவிட்டு, வீட்டை நோக்கிப் பத்து ரூபாயோடு போனால் பெரிய அதிர்ஷ்டசாலி. ஆனால் அந்தத் தெருவிலிருக்கும் இவர்கள் நடத்தும் வணிகம் ஆண்டுக்கு ஒரு கோடி முதல் இரண்டு கோடி வரை. எப்படி? அதை யார், யார் பங்கு போட்டுக்கொள்கிறார்கள்.—உழைப்பாக, வட்டியாக, லாபமாக என்பதை அறிந்தால், தரகு பொருளாதாரத்தை ஊழியப் பொருளாதாரமாக மாற்றும் திறமை வரும். இதைத் தெரிந்த மானேஜர்கள் பலர் இருக்கிறார்கள். வங்கிகளில் அவர்கள் துடிப்பு, ஆர்வம், கடல் அலைபோல் இன்னும் எழாமல் இருக்கிறது. அவர்கள் வல்லவர்கள். நல்லவர்களாக வாழும் ஆசையை விரும்புகிறார்கள். எனவேதான் என் நம்பிக்கை இன்னும் குறையாமல் இருக்கிறது.

தை மாதத்தின் கடைசிப் பகுதி.

அக்பர் சக்கரவர்த்தி ஆக்
ிலிருந்து ஆஜ்மீருக்குப் புறப்படும்
நெருங்கிக் கொண்டிருந்தது.

நாளொன்றுக்குப் பத்து அல்
பன்னிரண்டு காதம் வீதம் பிர
ணம் நடைபெறுவது வழக்கம். எப்
தும் தை மாதம் பத்தாம் தேதி
க்கில் புறப்படுவார். மாசி முதல்
வாக்கில் ஆஜ்மீரை அடைவார்.
த ஆண்டு அவர் இட்டம் சற்றுத்
டப்பட்டிருந்தது. காரணம் சக்கர

கள் கிளம்பி விட்டன. பாத யாத்தி
ரையாகத்தான் சக்கரவர்த்தி செல்கிறு
ரெனினும் அவசிய மேற்பட்டால் ஏறிக்
கொள்வதற்காகப் பல்லக்குகள் தயா
ராகின. இளவரசிகளும் வயோதிகர்களும்
செல்வதற்கு மூடு பல்லக்குகள் புறப்
பட்டன. சமையல்காரர்களும் சல
வைக்காரர்களும் தச்சர்களும் கருமான்
களும் கூட்டம் கூட்டமாகச் சென்ருர்
கள்.

மாமன்னரோடு கூடவே
செல்வதற்காக இசைக் குழு தயாராகிக்
கொண்டிருந்தது. புலவர்களுக்கும் வறி
ஞர்களுக்கும் கலைஞர்களுக்கும் வாரி
வாரித் தானம் வழங்கிக் கொண்டிருந்
தார் அக்பர். திருக் குர்ஆனிலிருந்து
வாசகங்கள் ஓதப்பட்டன.

"...நலத்தின்பால் நெஞ்
சைத் திருப்பிய அவனுக்கே புகழ்
யாவும். நேர்வழி காட்டியவன் அவனே:
அவன் வழிகாட்டவில்லையெனில் நாம்
நல்வழி சென்றிருக்க முடியாது. அந்த

# வாளின் முத்தம்

## 'மோகினி'

ர்த்தியின் அன்னையார் பேகம்
ரமீதா பானு சுகவீனமடைந்
ருந்ததே. அவரும் வழக்கமாகச்
க்கரவர்த்தியின் பாத யாத்திரையில்
லந்து கொள்வார். உடல்நிலை சற்றுத்
தறியதும் அழைத்துச் செல்லலாமெ
க் காத்திருந்தார் மாமன்னர். ஆனுல்
வர் நோய்ப் படுக்கையிலிருந்து எழுந்
ருக்கக் காணோம். ஜனுனவிலிருந்து
ற்றச் சில முக்கியமான இளவரசிகளை
ட்டும் அழைத்துக் கொண்டு கிளம்பு
தென முடிவாயிற்று.

யானைகளிலும் ஒட்டகங்களிலும்
க்பரின் கூடாரங்களுக்கான பொருள்

அல்லாஹ்வுக்கே புகழ் யாவும்: வழி
பாட்டிற்குரிய இறைவன் அவனின்றி
இல்லை. அவன் இணையற்றவன். ஆட்சி
அவனுக்கே உரியது...."

பெரியவர் ஒருவர் முன்வந்து,
ஆஜ்மீரிலுள்ள குவாஜா முயீனுத்தீன்
சிஷ்டியின் தர்கா விசேடத்தையும்,
அந்த மகானின் சிறப்பையும் உரத்த
குரலில் பாட்டாக விவரிக்கலானுர்.

ஆண்டு தோறும் கேட்கும்
வரலாறுதான். ஆனுலும்
கேட்கக் கேட்கத் தன் மனம்
மேலும் மேலும் தூய்மை
யுறுவதாகக் கருதினுர் அக்பர்.



பெரியவர் பாடினார்!

''ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு ஆப்கானிஸ்தானத்தில் அவதரித்தார் குவாஜா முயினுத்தீன் அவர்கள். தந்தையின் வழியில் ஒரே ஒரு தோட்டம்தான் இருந்தது அவர் ஜீவனத்துக்கு. அதையும் விற்று ஏழைகளுக்குத் தானம் செய்தார் மகான் முயினுத்தீன். மக்கமா நகரத்துக்கும் மதினா திருநகரத்துக்கும் பாக்தாத் பட்டணத்துக்கும் யாத்திரைகள் சென்றார். கோரி சுல்தான் பிருதிவிராஜைத் தோற்கடித்த சமயம் அவருடன் இந்துஸ்தானம் வந்தார். ஐம்பத்திரண்டாவது வயதில் ஆஜ்மீரை அடைந்து அற்புதங்கள் புரிந்தார். சக்கரவர்த்திகள்கூடக் கை கட்டிக் காத்திருக்கும் வகையில் செல்வாக்குப் படைத்திருந்தும் தன் கந்தல் துணிகளைத் தானே துவைத்துக் கட்டிக் அந்த மகான். எட்டு நாள் சேர்ந்தா போல் உபவாசம் இருந்து ஒன்பதா நாள் ஒரே ஒரு சப்பாத்தி மட்டு சாப்பிட்டுவிட்டு மீண்டும் உபவாச தைத் தொடரக் கூடிய அளவு ம திடமும் தேகதிடமும் கொண்டிருந் பெரியார். அவருடைய தர்காவில் வ படச் செல்லும் சக்கரவர்த்திக்கு எல்லா கீர்த்திகளும் கிட்டுவதாக...''

அவர் பாடி முடித்தார் இசைக் குழுவின் தேன்மழை தொடர் தது அந்தத் தர்பார் மண்டபத்தில்

சாந்த்கானும் சூரஜ்கானும் தங்கள் சாரீரத்தின் அற்புதத் திறமை களை வெளிப்படுத்த, கற்கண்டு சிங் என்று புகழ் பெற்ற டாகுர் சன்முக்சிங் கின் வீணையிலிருந்து தெய்வீக நாதம்

பொங்கி வழிய—

'சபாஷ்! சபாஷ்!' சிரக்கம்பம் செய்த சக்கரவர்த்தி, தன்னருகே வீற்றிருக்கும் சங்கீத சாம்ராட் தான்சேனை அவ்வப்போது பிரியத்துடன் நோக்கினார்

''நண்பரே! வருடம் தவறாமல் என்னுடன் யாத்திரை வருகிறவர் தாங்கள். வழி நெடுகத் தங்கள் இசையருவியில் நீராடிய வண்ணமே ஆஜ்மீர் செல்வேன். பிருந்தாவன வாசியும் தங்கள் குருநாதருமான சுவாமி ஹரிதாசரின் கிருஷ்ண கானம்ருதத்தைத் தாங்கள் பாடுகையில், எல்லா மதங்களுக்கும் அடிப்படையான அந்த ஆன்மிக உணர்வில் நான் மெய்சிலிர்த்துப் போவேன். இம்முறை தாங்கள் என்னுடன் வர இயலாத பண்ணம்—''

''என் உடல் நிலை குறுக்கிடுகிறது ஷா இன்ஷா. இல்லாவிட்டால் மகா ரசிகரான தங்களுடன் யாத்திரை வருவதைக் காட்டிலும் பெரிய ஆனந்தம் எனக்கு ஏது?'' என்று பதிலளித்தார் தான்சேன்.

''புரிகிறது. ஆனால் ஓர் ஆசை.''

'கட்டளையிடுங்கள் சக்கரவர்த்தி.''

''யாத்திரை நெடுக நான் நினைத்து நினைத்து மகிழும் வகையில் தாங்கள் சிறிது நேரம் பாட வேண்டும்.''

''என் உடல்நிலை அதற்கு இடம் கொடுக்கவில்லை. இருந்தாலும் தங்கள் ஆணைப்படி பாடுகிறேன். என் இசையிலே குற்றம் கண்டால் மன்னித்தருள வேண்டும்.''

கம்பீரமும் இனிமையும் பொருந்திய தான்சேனின் குரல் அலையலையாய்ப் பொங்கியது அந்த மண்டபமெங்கும். சுவாமி ஹரிதாசர் இயற்றிய 'நாத் கட் கட்' என்ற துருபத கீதம் தன் அழகனைத்தையும் கொண்டு நடனமாடியது அங்கே ஆக்ரா நகரமெங்கும் அவருடைய இசையின் துளிகள் தெளிக்கப்பட்டன அந்தத் துளிகளின் ஸ்பரிசத்தில் பறவைகளும் விலங்கினங்களும் கல்லும் மரமும்கூட மயங்கி நின்றன.

திடீரென—

தன்னை மறந்து பாடிக்கொண்டிருந்த தான்சேன் மயங்கி ஆசனத்தில் சாய்ந்தார். அவர் கண்கள் செருகிக் கொண்டன. உடம்பு அசையாமல் நின்றது.

''என்ன நண்பரே, என்ன?'' சக்கரவர்த்தி பதறினார்.

''வைத்தியர்! வைத்தியர்! ஒரு வைத்தியரைக் கூப்பிடுங்கள்!'' பல குரல்கள் எழுந்தன.

கூட்டத்தை முண்டிக்கொண்டு ஓர் இளம் வைத்தியர் ஓடிவந்தார். நீண்ட அங்கியின் பைகளிலிருந்து ஒரு சுருக்குப் பையை எடுத்தார். பையின் அறைகளைக் கவிழ்த்தார். பல மூலிகைத் துண்டுகளைத் தரையில்கொட்டினார். ஒன்றைத் தேர்ந்தெடுத்தார். சங்கீத சிம்மத்தின் மூக்கருகே வைத்து முகரச்செய்தார். கிண்ணத்தில் தண்ணீர் எடுத்து வரச் சொல்லி, இன்னொரு மூலிகையைத் தேய்த்து அந்தச் சாற்றைத் தான்சேனின் நாக்கில் தடவினார்.

தான்சேன் கண்களை மெல்லத் திறந்தார். சக்கரவர்த்தியின் முகம் மலர்ந்தது. ''நண்பரே! ஒரு நொடியில் எங்கள் உயிரையெல்லாம் கலக்கி விட்டீர்களே? என்ன நேர்ந்தது திடீரென்று?'' இசை மேதையைத் தன்

---



காதலி: நாம் தினமும் பஸ்ஸில் சேர்ந்து போவதை அப்பா பார்த்திருக்கிறார் நேற்று மிகவும் கண்டித்தார்.

காதலன்: ஐயோ! அப்புறம்?

காதலி: காதலைப் பற்றி அப்பா கண்டிக்கவில்லை தினமும் நானே உங்களுக்கு பஸ் சார்ஜ் கொடுப்பதைத்தான் கண்டித்தார்.

—[illegible]

'மயக்கங்களும் சிலந்திக் கூடு
களும்' கதை போலவே இல்லை. ஒரு
உண்மையான 'ட்ரக் அடிக்ட்' படும்
துன்பத் துயரினைக் கண்முன்னே காணு
வதுபோல் இருந்தது.

வாண்டையார்இருப்பு கே. தயாளசாமி

கதை சுமார்தான். ஆனால்
சொன்ன விதத்திற்காக நூறு தரம்
படிக்கலாம்.

மதுராந்தகம் ஆர். நவநீதராஜன்

அதுசரி, நோய் குணமான
வர்களெல்லாம் டாக்டரைக் காதலிக்க
ஆரம்பித்தால் டாக்டர்கள் பாடு அவ்
வளவுதான்.

கோடங்கிபாளையம் ஆபிர் எம். அல்போன்ஸ்

வித்தியாசமான தலைப்பு.
அருமையான சப்ஜெக்ட். ஆனாலும் கதை
யில் விறுவிறுப்பு குறைவுதான்

சென்னை—44 பி. எஸ். பாலசங்கர்

அந்த நேபாளத்துக்
குளிர்ந்த சூழ்நிலை என்றும் நெஞ்சை
விட்டு அகலாது. கதை முடிவுற்ற
போது மனம் ஓர் உணர்ச்சிகரமான
திருப்தியை அடைந்தது.

மேட்டுப்பாளையம் கே. அய்யாசாமி

கதையின் நடுவில் இருந்த
விறுவிறுப்பு ஆரம்பத்திலும் முடிவிலும்
இல்லை. டாக்டர் ஒரு நோயா
ளிப் பெண்ணுக்காக வீட்டையும்
ஊரையும் வளர்த்த நர்ஸிங் ஹோமை
யும் விட்டுச் செல்லுவது என்பது வாஸந்
திக்கு நல்ல முடிவாக இருக்கலாம்.
ஆனால் வாசகர்கள் ஏற்றுக் கொள்ளக்
கூடியதாக இல்லை.

திருவாரூர் டி. கே. சாந்தா

திகைப்பூட்டும் நிகழ்ச்சிகளை
வகை யடாமல் தந்து, களைப்பூட்டா
வண்ணம், அலுப்பூட்டாத நடை
யில் அமைந்திருந்தது.

வக்கலாகண்ணி அ. சேக்மைதீன்



மார்போடு சாத்திக் கொண்டு வின
வினார்.

"எனக்கும் அதுதான் தெரிய
வில்லை. திடீரென்று கண்கள் இருண்டு
வந்தன. மூச்சு அடைக்கிற மாதிரி
இருந்தது." தான்சேனின் பார்வை
அந்த இளம் வைத்தியர்பால் திரும்பி
யது. "ஆகா! தன்வந்திரியின் அவ
தாரம் என்றால் தாங்கள்தான்!" என்று
அவர் கைகளைப் பற்றிக் கொண்டார்.

வைத்தியர் இளநகை செய்
தார். "நான் ஊர் ஊராக யாத்திரை
சென்று கொண்டிருப்பவன். தற்செய
லாய் இன்று ஆக்ராவுக்கு வந்தேன்.
ஒரு சங்கீத ரத்தினத்தைச் சரியான
சமயத்தில் காப்பாற்ற நேரிட்டது
என் பாக்கியம்."

"இந்துஸ்தானமே தங்களுக்
குக் கடமைப் பட்டிருக்கிறது, வைத்தி
யரே," என்ற அக்பர் மந்திரிகள்
பக்கம் திரும்பினார். இவருக்கு அபரி
மிதமாகச் சன்மானம் கொடுங்கள்
என்ற கட்டளை அவருடைய பார்வை
யில் இருந்தது.

தான்சேன் சக்கரவர்த்தி
யைப் பார்த்தார். "எனக்கு ஒன்று
தோன்றுகிறது."

"என்ன தோழரே?"

"சக்கரவர்த்தி பரிபூரண
ஆரோக்கியத்துடன் பிரயாணம் செய்ய
வேண்டும். எனக்கு நேர்ந்த மாதிரி எது
வும் நேராமல் இருக்க வேண்டுமே என்ற
சஞ்சலம் ஏற்பட்டு வருகிறது. இப்
போது தாங்கள் நீண்ட தூரம் பயணம்
புறப்படுகிறீர்கள. பல தேர்ந்த பல
மருத்துவர்கள் தங்களுடன் வருகிறார்கள்
என்பது உண்மைதான். இருந்தாலும்
இந்த இளம் வைத்தியரும் தங்களு
டன் கூடவே இருந்தால் எனக்கு மனக்
கிலேசம் சற்றுக் குறையும்."

"அப்படியே செய்தால்
போயிற்று!" என்றார் அக்பர்.

"நான் ஒரு சாதாரணமான
மருத்துவன். எனக்குப் போய் இவ்வளவு
பெரிய பொறுப்பைக் கொடுப்பது..."
அந்த இளம் மருத்துவர் ஏதோ முணமு
ணுத்தார். ஆனால் எதிர்பாராத பெரும் பதவி
பெற்ற மகிழ்ச்சி அவர் முகத்தில் நன்கு
தெரிந்தது.

"தான்சேனைப் படுகையில்
விட்டுவிட்டு மற்ற மருந்துகளும்

இந்தியா—இங்கிலாந்து கடைசி டெஸ்ட் கடைசி நாள். (ஒன்பதே
...ில் இந்தியா வெற்றி வாய்ப்பை இழந்த நாள் நினைவிருக்கலாம்)

இந்தி நேர்முக வர்ணனையாளர் வானொலி மூலம் ஒரு விண்ணப்பம்
...தார் நேயர்களுக்கு: இருதய நோய் உள்ளவர்கள் தயவுசெய்து ரேடியோ
...ும் எதுவும் கேட்க வேண்டாம். காரணம், எந்த
...லாம். ஆகவே டாக்டர்கள் தங்களுடைய நோயாளி
தயவு செய்து ரேடியோ கேட்பதைத் தடுக்கவும்...''



...டுத்துவிட்டு வாருங்கள்.'' கட்
...ாயிட்டார் சக்கரவர்த்தி.

இளம் மருத்துவர் அரண்
...யின் மறுபுறத்திலிருந்த தான்சேனின்
...ளிகைக்குச் சென்றார். வேலையாட்
... அகன்றதும் தான்சேனின் கைகளை
...த்துக் கொண்டார்: ''மிக்க நன்றி
...ா, மிக்க நன்றி. தாங்கள் இந்த
...சமாதியிராவிட்டால் என் திட்டம்
...றவேறியிருக்காது,'' என்றார்

'இது எனக்கு ஒரு சந்தர்ப்
..., ஜெய்,'' என்றார் தான்சேன்.
...ர் குரலில் நோயின் களைப்பு தெரிய
...லை.. படுக்கையில் நன்கு சாய்ந்து
...கார்ந்து கொண்டார். ''என்
...க் கசப்பை ஓரளவு அகற்றிக்கொள்ள
...க்கு இது ஒரு சந்தர்ப்பம்.'' அவரிட
...ந்து பெருமூச்சு வெளிப்பட்டது.
...ந்தேல்கண்டிலிருந்து என்றைக்கு
...் புறப்பட்டு இங்கு வந்தேனோ அன்று
...ல் இந்த இதயத்தில் எவ்வளவு
...ா முடியாத வேதனை தெரியுமா,
...ய்! என்னை இங்கே அனுப்பித்தாகவே
...ண்டும் என்று பிடிவாதமாக ஆணை
...டார் அக்பர். ரீவா மகாராஜா
...ன ராம்சந்தர்—என் குருநாதரின்
...ர்—என்னை அனுப்ப விரும்பவில்லை.
...ால் பாதுஷாவின் ஆணைக்குப் பயந்து
...ுப்பினார். நான் புறப்பட்டபோது
... மொத்தமும் அழுது கொண்டு
... தொடர்ந்தது. கொஞ்ச தூரம்
...ன்றதும் பல்லக்கிலிருந்து எட்டிப்
...ர்த்தேன் எப்பேர்ப்பட்ட அதிர்ச்சி!
... மகாராஜாவும் அன்று அவரது
...ந்தினராக வந்திருந்த உன் தந்தை
...ன சூர்யபூர் மகாராஜாவும் தமது
...து தோள்களினால் பல்லக்கில் ஒரு
...த்தைச் சுமந்து சென்று கொண்டிருந்
...ர்கள். அந்த அன்பின் வலிமை என்னைக் கொன்று விட்டது, ஜெய்! என்னை இங்கே எவ்வளவோ மகோன்னதமான பதவியில்தான் வைத்திருக்கிறார் சக்கரவர்த்தி. இருந்தாலும் அன்று தன் அதிகாரத்தைப் பயன்படுத்தி ரீவா மகாராஜாவுக்கும் மக்களுக்கும் அக்பர் இழைத்த கொடுமை—அதை என்னால் மறக்கவும் முடியவில்லை, மன்னிக்கவும் முடியவில்லை. அதனால்தான் உன் நாடகத்துக்கு இணங்கினேன். உன் லட்சியம், உன் சுதந்திரப் போர் வெற்றி பெறட்டும்.''

அவர் கால்களைத் தொட்டுக் கண்ணில் ஒற்றிக் கொண்டான் ஜெய்.

ரூப்மதியின் தவிப்புத் தெரியாமல் ஒரு குருவி கீச்கீச்சென்று கத்திக் கொண்டிருந்தது. பொறுமையற்று அவள் இருக்கிறாள் என்பதை அறியாமல் அணிலொன்று அவள் மடிமீது புரண்டு விட்டு ஓடியது. காலைச் சூரியனின் மெல்லிய கிரணங்கள் புதர்களின் இடுக்கு வழியே அவளை எட்டிப் பார்த்தது. உயரமான குன்றுகையால் இரவு பூரா பெய்து கொண்டிருந்த பனியின் துளிகள் செடிகளின் கிளைகளிலிருந்து ஒவ்வொன்றாய்ச் சொட்டி, பக்கத்தில் வைத்திருந்த அவளுடைய வில்லை நனைத்துக் கொண்டிருந்தன. தை இருபத்தைந்து தேதியாகி விட்ட போதிலும் மார்கழிக் குளிரின் சந்ததிகள் இன்னும் சஞ்சரித்துக்கொண்டிருந்ததால் அவள் மேனி வெடவெடவென்று நடுங்கிக் கொண்டிருந்தது.

தேகத்தின் கஷ்டங்களோ பருவநிலைகளின் உபாதைகளோ அவளை வருத்தவில்லை. தன் நோக்கம் நிறைவேறாமலே போய்விடுமோ? அது ஒன்று தான் அவள் கவலை.

## அந்த மர்மம்

நாய் ஓர் இடத்தில படுக்கு முன் அவ்விடத்தில் சுற்றிச் சுற்றி வந்து படுப்பது ஏன்? காற்று எந்தப் பக்கம் வீசுகி றதோ அதற்கு எதிர் புறத்தில் மூக்கை வைத்துக் கொள்வதற்காகத்தான்.

—இனியராஜா



வெள்ளிக் கோடாக மினு மினுத்துச் சென்று கொண்டிருக்கும் பஞ்சி ஆற்றை உற்றுக் கவனித்தாள். மூன்று நாட்களாக வைத்த கண்ணை எடுக்காமல் அவள் பார்த்துக் கொண்டு தானிருக்கிறுள் அந்தத் திசையை. ஊகூம். எப்போதாவது ஓர் ஆட்டிடை யனே, ஒட்டகத்தை அழைத்துச் சென்று கொண்டிருக்கும் பெண்ணே அவள் கண்ணில் பட்டதோடு சரி. மற்றப்படி வேறு நடமாட்டத்தைக் காணேம்.

இந்த இடத்தில் சென்ற ஆண்டு படகுப் பாலம் அமைத்தார் கள். வழக்கமான தேதியில் அக்பர் புறப்பட்டிருப்பாராளுல் இன்னேரம் படகுப் பாலம் கட்டி முடிவடைந்திருக்க வேண்டும். அல்லது குறைந்த பட்சம் கட்டுவதற்கான ஏற்பாடுகள் மும்முர மாய் நடந்து கொண்டிருக்கவேண்டும்.

மூச்சுப் பேச்சைக் காணேம்.

இந்த வருடம் அக்பர் தன் ஆஜ்மீர் யாத்திரையைக் கைவிட்டு விட்டாரா?

அவளுக்குத் தகவல் தரக் கூடியவர் யாருமில்லை. ஜெய் அன்று போனவன்தான் அக்பரின் பரிவாரத்தில் சேரப் போகிறேனென்று. பிறகு எவ் விதச் செய்தியும் இல்லை.

கதிரவன் வானத்தின் உய ரத்துக்கு ஏற ஏற அவளுக்கு நிலை கொள்ளவில்லை. அர்த்தமில்லாத சோம் பேறித்தனத்தில் மேலுமொரு நாள் கழியப் போகிறதா? எழுந்து கொண் டாள். பாறையின் மறைவில் வில்லை யும் அம்புகளையும் ஒளித்து வைத்த குன்றின் உச்சியிலிருந்து சமவெ இறங்கினள். சலசலவென்று அவ பார்த்துச் சிரித்துக் கேலி செ பஞ்சி நதியில் தெள்ளிய நீரோட்

நாலு காதம் கடந்து டது. நடந்து கொண்டேயிருந்த

ஆற்றின் ஒரு வளைவு தது. திடீரெனப் பல பேச்சுக் ( கள். நடமாட்டங்கள். சத்தங்

பார்த்தவள் திகைத்து ருள்.

மாட்டு வண்டிகள் ஏ மாய் அவிழ்த்து விடப்பட்டிருந் ஒட்டகங்களிலிருந்து பாரங்களை இற கொண்டிருந்தார்கள். ஆற்றின் யில் பல படகுகள் கிடந்தன. பெ பெரும் மரக் கட்டைகளை ஆட்கள் இ துச் சென்று கொண்டிருந்தார்கள்.

ரூபமதிக்குப் புரிந்து டது. இருந்தாலும் ஓர் இளை நெருங்கிக் கேட்டாள். "என்ன இ நடக்கிறது அண்ணு?"

"தெரியாதா பஹென்ஜி? பர் சக்கரவர்த்தி ஆஜ்மீர் யாத்தி காக வந்து கொண்டிருக்கிருரே? இடத்தில் ஆற்றைக் கடக்க வேண் அதற்காக ஆற்றின் குறுக்காகப் ப களைக் கொண்டு பாலம் கட்டப் போ ரேம்," என்ருன் அவன்.

இந்த இடத்திலா! ஏமா அவள் நெஞ்சைப் பிளந்தது. "அ அங்கே யல்லவா வழக்கமாய். கையைக் காட்டினள்.

"அதென்னவோ, எ புதிய தலைவர் இந்த இடத்தைத் தேர்ந்தெடுத்திருக்கிருர்," என்று வித்துவிட்டு அவன் தன் வேலை கவனிக்கச் சென்று விட்டான்.

அவள் சுற்று முற்றும் ப தாள். அவள் உற்சாகங்கள் குறை தோல்வியுணர்ச்சி இருதயத்தைப் ப தது.

ஜெய்யுடன் ஏற்பாடு செ கொண்ட இடம் மாறிவிட்டது என் மட்டுமல்ல. கண்ணுக்கெட்டிய து துக்குக் குன்ருே உயரமான மேடு கட்டிடமோ எதுவும் காணப்படவில் மறைந்திருந்து அம்பு எய்வத ஏற்ற வகையில் ஒரு மரம்கூடத் தெ வில்லை. எல்லாம் வெட்ட வெளிய திறந்த மைதானமாக இருந்தது.

(தொட

# வாளின் முத்தம்

## மோகினி

## 26

இங்கேயா! இங்கேயா கட்டப் போகிறார்கள் வடகுப் பாலத்தை.

இடிந்து போய் ஆற்றங்கரையில் உட்கார்ந்து விட்டாள் ரூப்மதி. அவள் திட்டங்கள் இனிப் பிரயோசனமில்லை. இந்த இடத்திலேதான் பாலம் கட்டப் போகிறார்களென்றால், இந்த இடத்திலேதான் அக்பர் பஞசி ஆற்றைக் கடக்கப் போகிறாரென்றால்—

அவளுடைய வில்லுக்கும் அம்புக்கும் வேலையில்லை. இத்தனை காலம் இரவும் பகலுமாகப் பயிற்சி பெற்றதற்கெல்லாம் அர்த்தமில்லை. ஒன்றரைக் காத தூரத்துக்கல்ல, ஐந்து காதம் பத்து காத தூரத்துக்குக் கூட மலையோ காடோ தென்படாதபோது அவள் எங்கே மறைந்து கொள்ளப் போகிறாள்? எங்கிருந்து எய்யப் போகிறாள்? எப்படி ராஜஸ்தானத்தின் பரம விரோதிக்கு மரண அடி கொடுக்கப் போகிறாள்? ஒரு நாளுமில்லை.

திடீரென்று இன்னோர் எண்ணம் உதித்தது. இப்போது என்ன கெட்டுவிட்டது? ஏன் அக்பரைக் கொல்லாமல் விட வேண்டும்! நேருக்கு நேர் நின்று வீழ்த்தினால் சுற்றியுள்ளவர்கள் அங்கேயே நம்மைப் பிடித்து அங்கேயே கொலை செய்து விடுவார்களே என்று எண்ணியது உண்மைதான். பிறகு சூர்யபூரின் விடுநிலைத் திருவிழாவை ஜெய்யுடன் சேர்ந்து கண்டு களிக்க முடியாமற் போய்விடுமே என்று நினைத்ததும் உண்மைதான். வேண்டாம். நாம் உயிரோடிருக்க வேண்டும் என்று சுயநலமாகத் திட்டமிட்டதால்தான் இப்போது தெய்வம் உதவி செய்ய மறுக்கிறது போலும். பரவாயில்லை. பகைவன் மடிய வேண்டியதுதான் முக்கியம். வேறு வழியில்லையென்றால், அக்பரை நேருக்கு நேராகவே குத்துக் கத்தியினால் ஒரே ப்பாய்ச்சலில்—

''எழுந்திரம்மா, எழுந்திரு! இங்கே வந்து உட்கார்ந்து கொண்டு!'' காவலாட்களில் ஒருவன் அவளை அதட்டினான்.

அலுப்புடன் எழுந்து கொண்டாள். படகுப் பாலம் அமைப்பதை மேற்பார்வையிடுவதற்காகப் பல பேர் வந்து கொண்டிருந்தார்கள். அவர்களில் இருவர் அதிகாரிகள் என்பது உடையிலிருந்தே தெரிந்தது. ஒருவர் வாட்டசாட்டமானவர். மற்றவர் எலிக்குஞ்சு. இருவரும் காரசாரமாக விவாதிப்பது காதில் விழவே ரூப்மதி சற்று நின்றாள்.

''எதற்காக இந்த இடத்தைத் தேர்ந்தெடுத்ததாகச் சொல்கிறீர், நண்பரே?'' என்று கேட்டார் வாட்டசாட்டமான மனிதர். மரியாதையுடன் கேட்கிற மாதிரி தோன்றியதே தவிர அவர் குரலில் கேலி இருந்தது. அறிவில்லாமல் இப்படிச் செய்திருக்கிறீரே என்று கேட்காமல் கேட்டது அவர் தொனி.

சின்ன உருவமுள்ள அதிகாரி முன்னவருக்குச் சளைத்தவரல்ல. ''சக்கரவர்த்தியின் வசதி, ஆற்றைச் சீக்கிரமாக அவர் கடக்க வேண்டிய அவசியம் முதலியவற்றைக் கணக்கெடுக்கிறவர்கள் இந்த இடத்தைத்தான் தேர்ந்தெடுப்பார்கள்,'' என்றார் அவர். ''ஏனென்றால் நதி இங்கேதான் மிகக் குறுகலாக இருக்கிறது. பாலத்துக்காக அதிகமான படகுகளைக் கொண்டு வர வேண்டிய அவசியம் கிடையாது. ஷா இன்ஷாவும் அதிக தூரம் அபாயமான பிரயாணம் செய்து கொண்டிராமல் சட்டுப் புட்டென்று கடந்து விடலாம்.'' அவர்



தன்னைச் சுற்றியிருந்த உதவியாளர்களைப் பெருமையுடன் பார்த்துக் கொண்டார். ஆமாமாம் என்று தலையாட்டினார்கள், அதைக் கடமை என்று உணர்ந்திருந்த உதவியாளர்கள்.

"அபாயம் எது, அபாயமற்றது எது என்பதைப் பற்றி நண்பருக்கு விசித்திரமான கருத்து இருப்பது தெரிகிறது," என்றார் பெரியவர். "ஏனென்றால், மாமன்னருக்கு ஆபத்து நேரிடக்கூடாதென்று சொல்லிக் கொண்டு, எது மிக ஆபத்தோ அதையே செய்திருக்கிறீர்களே!"

கூலிப் பெண்களுடன் கூலிப் பெண்ணாக நின்றிருந்த ரூப்மதி கரத்தைத் தட்டிக் கொண்டாள். இரண்டு அதிகாரிகளுக்குள்ளும் இந்த இடத்தைப் பற்றிக் கருத்து வேற்றுமை ஏற்படும் போலிருக்கிறதே! அவள் உள்ளம் படபடத்தது.

"சக்கரவர்த்திக்கு இந்த இடத்திலே அபாயமா? எப்படி?" சின்னவர் திகைத்தார்.

பெரியவர் தொடர்ந்தார்: "நதி இங்கே குறுகலாக இருக்கிறது என்பதை மட்டும்தான் தாங்கள் கணக்கிட்டீர்கள். ஆனால் ஆற்றில் ஆழம் குறைவான இடமும் இதுதான் என்பதைக் கணக்கெடுக்க மறந்துவிட்டீர்கள்!" அவர் பேச்சில் பெருமை தொனித்தது.

சின்ன அதிகாரி உண்மையிலேயே தடுமாறித்தான் போனார். "அப்படியா? நான் கவனிக்கவில்லையே?"

"நான் கவனித்தேன்," என்றார் மற்றவர் மார்பை நிமிர்த்திக் கொண்டு. "அதனால்தான் வழக்கமாக அதோ அங்கே நான் பாலம் கட்டுவேன். தாங்கள் புதிய பொறுப்பேற்று இம்முறை இந்த இடத்தைத் தேர்ந்தெடுத்துவிட்டீர்கள். இங்கே ஆழம் குறைவு. சக்கரவர்த்தியின் பரிவாரமோ மிகப் பெரிது. யானைகள் மட்டுமே பன்னிரண்டு வருகின்றன என்று எனக்குத் தகவல் கிடைத்திருக்கிறது. அவ்வளவு சுமைகளையும் தாங்க வேண்டுமானால், படகுகள் தண்ணீரில் வலுவாக நிற்க வேண்டுமானால், ஆற்றில் ஆழம் அதிகம் இருக்க வேண்டும்."

சின்ன அதிகாரிக்குக் இவி பிறந்தது. "தாங்கள் சொல்வதைப் பார்த்தால்..."

பெரிய அதிகாரிக்கு ஆனந்தமும் பெருமையும் பிடிபடவில்லை. அவருடைய கண்ணில் அது தெரிந்தது. ஆனால் அந்த உணர்ச்சிகளை வேண்டுமென்றே மறைத்துக் கொண்டார். எதிராளி இன்னும் முழுமையாகச் சரணடைய வேண்டுமென்பது அவர் ஆசை. ''ஆழம் இல்லாததால் பாலம் கவிழ்ந்து விடப் போகிறதே என்பதற்காகச் சொன்னேன். மற்றப்படி தாங்கள் இந்த இடம்தான் சரியானது என்று நிச்சயமாக எண்ணினால் அப்படியே இருந்துவிட்டுப் போகட்டும்,'' என்றார்.

''இல்லை, இல்லை. ஷா இன் ஷாவின் பந்தோபஸ்துதான் முக்கியம். அதற்கு எந்த இடம் சரியானதோ அந்த இடத்தில் பாலம் கட்டுவோம்,'' என்று, பெரியவர் விரும்பியபடியே சின்னவர் நெடுஞ்சாண் கிடையாகச் சரணாகதி செய்தார். ''இந்தாப்பா, யாரங்கே! கூப்பிடு எல்லாரையும். பண்டங்கள் தளவாடங்கள் எல்லாவற்றையும் தூக்குங்கள். வருடா வருடம் பாலம் கட்டுகிற இடத்துக்கே போகலாம். அதோ அங்கே.''

கேட்டுக் கொண்டிருந்த நூப்மதி வானத்தை நோக்கினாள். அவள் கண்ணில் நீர் தளும்பியது. கடவுள் நம் பங்கில் இருக்கிறார். அக்பரை ஒழித்துக் கட்டுவதில் துணை செய்யத்தான் போகிறார்.

வில்லையும் அம்பையும் மறைத்து வைத்திருக்கும் மலைக் குகையை நோக்கி ஓட்டமாய் ஓடினாள் அவள்.

மாசி ஐந்தாம் தேதி.

சக்கரவர்த்தி அக்பரும் அவரது பரிவாரத்தினரும் ஆக்ராவிலிருந்து புறப்பட்டு அன்று பதினொன்றும் நாள்.

இன்னும் ஆறு நாள் பயணத்தில் அவர்கள் ஆஜ்மீரை அடைந்து விடுவார்கள். இரண்டு தினம் அங்கே முயினுத்தீன் சிஷ்டியின் தர்காவில் தங்கியிருப்பார்கள். பிறகு ஆக்ராவை நோக்கித் திரும்ப வேண்டியதுதான்.

பனாசி ஆற்றங்கரையில் ஷா இன்ஷாவின் கூடாரங்கள் கண்ணுக்கெட்டிய தூரத்துக்குப் பரந்து விரிந்து அமைந்திருந்தன. ஒவ்வொன்றும் அதில் தங்கியிருப்போரின் அந்தஸ்தைக் காட்டும் வண்ணம் காட்சி தந்தன. அரச குடும்பத்துப் பெண்களின் கூடாரங்கள், ஓரங்களில் தங்கச் சரிகை போட்ட பளபளப்பான பட்டுத் துணிகளில் படபடத்தன. அங்கே பர்தா அணிந்த வேலைக்காரிகள் கைகளில் வெள்ளித் தட்டும் தங்கப் பாத்திரங்களும் ஏந்திய வண்ணம் இங்குமங்கும் சஞ்சரித்துக் கொண்டிருந்தார்கள். அந்தப் பகுதியெங்கும் மனத்தை மயக்கும் அத்தர்களும் ஊதுவத்தி நறுமணங்களும் காற்றிலே கலந்து வந்தன. அந்தக் கூடாரங்களுக்கு வெளியே இசை வல்லுனர்கள் செவிக்கு இனிமையாகவும், இதமாகவும் பல்வேறு வகையான கருவிகளை முழங்கிக் கொண்டிருந்தார்கள். அந்தக் கூடாரங்களுக்குப் பின்புறமாக, ஆனால் அதிகாரிகளின் கூடாரங்களுக்கு முன்புறமாகச் சக்கரவர்த்தியின் கூடாரம் அமைக்கப்பட்டிருந்தது. தர்பாருக்காக ஒன்று, உணவு அருந்துவதற்காக ஒன்று, சயனத்துக்காக ஒன்று, ஸ்னானபானாதிகளுக்காக ஒன்று என்று அடுத்தடுத்து நான்கு தனித்தனி அறைகள் கொண்ட பிரம்மாண்டமான கூடாரம் அது. ஆயுதம் தாங்கிய எட்டுக் காவலர்கள் கூடாரத்தை எதிரெதிர் வட்டமாகச் சுற்றிச் சுற்றி வந்துகொண்டிருந்தார்கள். டக்டக்கென்ற ராணுவ நடையையும் இடுப்பிலிருந்த ஆயுதங்கள் உராயும் ஓசையையும் தவிர, பயபக்தியான நிசப்தம் அங்கே நிலவியது. சக்கரவர்த்தியின் கூடாரத்துக்குப் பின்னே தளபதிகள், அதிகாரிகள், கலைஞர்கள் முதலியோர் தனித்தனிக் கூடாரங்களில் தங்கியிருந்தார்கள். அவர்களுக்கும் அப்பால் தொழிலாளர்கள்,

முதல் அடிதான் முக்கியம். சில சமயம் தாக்கக்கூட வேண்டாம். நேருக்கு நேர் பார்த்தாலே போதும். துணிவோடுள்ள முறைப்புதிகில் மூட்டக்கூடியது. முகத்தைக் கடுமையோடு பார்க்கும் மனிதனை, வெறிபிடித்தாற் போல் பாயும் நாய், குரங்குகூடத் தாக்கமாட்டா, உங்கள் கண்ணில் பயமே இருக்கலாகாது.

—சீக்கிய தலைவர் தாராசிங்


ஹேண்ட்லூம் ஹவுஸ் ஆடை உடுத்தி
கோல மயிலெனத் திகழுங்கள்!
ஹேண்ட்லூம் ஹவுஸ், தரமான துணிகளை மட்டுமே பல ரகங்களில் உங்களுக்காகத் தேர்ந்தெடுதது அளிக்கிறது.
எனவே காஞ்சீபுரம், பனாரஸ், பெங்கால், போச்சம்பள்ளி, காத்வால், கோயம்புத்தூர் ஆகிய இடங்களின் மிகச் சிறந்த புடவைகளே உங்களுக்குக் கிடைக்கின்றன.
பிரத்யேகமான ரெடிமேட் ஆடைகள், படுக்கை விரிப்புகள், அலங்காரத் துணி வகைகள், குழந்தைகளுக்கான ஆடைகளும் கூட!
செப்டம்பர் 26 முதல் எல்லா வகைகளுக்கும்
10%
தள்ளுபடி உண்டு.
ஹேண்ட்லூம் ஹவுஸ்
9, ரத்தன் பஜார்
சென்னை 600 003
● ஞாயிறும் திறந்திருக்கும்
ADWAVE HH/1128

வேலையாட்கள் முதலியோர் இருந்தனர்.

சக்கரவர்த்தி இப்போது தமது கூடாரத்தில் இருக்கவில்லை. பஞ்சி ஆற்றங்கரையில் இயற்கையின் எழிலை ஓவியமாய்த் தீட்டிக் கொண்டிருந்தார். ஆற்றின் கறுத்த நீரும், நீரில் விளையாடும் கொக்குகளும், அவற்றின் பின்னே நீல வானத்தில் கூடிக் கலந்து கொண்டிருக்கும் மேகங்களும் சக்கரவர்த்தியின் தூரிகையில் பிடிபட்டு, சீலையில் சிறைப்பட்டுக் கொண்டிருந்தன.

மாமன்னரின் ஆருயிர் நண்பரான குவாஜா அப்துஸ் சமத் அடிமேலடி வைத்து மெல்ல அங்கே வந்தார். சக்கவரவர்த்தியின் ஒரு முனைப்பட்ட சிந்தனையைக் கலைத்துவிடக் கூடாதே என்று அவர் அஞ்சுவது அந்த நடையில் தெரிந்தது. அப்படியும்கூட நிழலாடுவதை அக்பர் கண்டு விட்டார். ''வாருங்கள் நண்பரே,'' என்று இன்முகத்துடன் வரவேற்றார். பாரசீகத்திலிருந்து வந்த இந்தக் கலைஞர், தந்தையார் ஹுமாயூனின் நெருங்கிய நண்பராக இருந்தவர் என்ற காரணத்தால் குவாஜா அப்துஸ் ஸமத்திடம் அக்பருக்குப் பெரும் மதிப்பும் மரியாதையும் உண்டு. அந்தக் கலைஞரைக் கௌரவிக்க வேண்டும் என்பதற்காகவே நானூறு பேர் கொண்ட ஒரு சிறு படைக்கு அவரைத் தளபதியாக ஆக்கி, மூல்தானுக்குத் திவானாகவும் நியமித்திருந்தார். கண்ணிலும் கைவிரலிலும் அபாரக் கலைத்திறன் கொண்டவர் என்று சக்கரவர்த்தி அவரை அடிக்கடி பாராட்டுவது வழக்கம்.

''ஷா இன்ஷா பார்க்க வேண்டும்.'' வெல்வெட் துணி தைத்த சிறு பேழையைத் திறந்து நீட்டினார் குவாஜா அப்துஸ் ஸமத். கூடவே ஒரு பூதக் கண்ணாடியையும் தந்தார்.

''என்ன இது, நண்பரே!'' தூரிகையைக் கீழே வைத்துவிட்டு அவைகளை வாங்கிக் கொண்டார் அக்பர்.

''ஒரு சின்னஞ்சிறு விதை அந்தப் பேழையில் இருக்கிறது. பூதக் கண்ணாடியால் பார்த்தால் அதில்—''

''ஓ!'' அக்பரின் கண்கள் ஆச்சரியத்தால் விரிந்தன. பூதக்கண்ணாடியின் துணைகொண்டு பார்த்தபோது அந்த விதையில் எழுத்துக்கள் பொறிக்கப்பட்டிருப்பது தெரிந்தது. படித்தார்:



''நேத்து உங்க மனைவியோடு சினிமாவிற்குப் போயிருந்தீங்களே! எப்படி இருந்தது சார்?''

''நரக வேதனை சார்.''

''படம் அவ்வளவு மோசமா?''

''படமில்லை சார். மனைவியோடு போனது!''

—எஸ் நரசிம்மன்

---

''கருணை வாய்ந்த இறைவனின் பெயரால் கூறுகிறேன். அல்லா ஒருவரே இறைவன். அவரே நித்தியமானவர். அவர் பெறுவதுமில்லை பிறப்பதுமில்லை. அவருக்கு இணையானவர் எவரும் கிடையாது...'' பேழையை மூடிக் குவாஜா அப்துஸ் ஸமத்திடம் கொடுத்தார் அக்பர். ''அற்புதம் நண்பரே, மிக அற்புதம்.''

''என் பாக்கியம், ஷா இன்ஷா. கலைத்திறன் எள்ளளவேனும் என்னிடம் இருக்குமானால் அது தாங்கள் தரும் ஊக்கத்தால் வருவதுதான்.''

விட்ட இடத்தில் ஓவியம் தீட்டலானார் சக்கரவர்த்தி. ''ஆனால் எனக்கென்னவோ ஓவியம் தீட்டுவதுதான் கலைகளுக்கெல்லாம் சிகரமான கலையென்று தோன்றுகிறது, நண்பரே.''

''எப்படி ஷா இன் ஷா?''

''இறைவனின் படைப்பு எப்படி அமைந்திருக்கிறதோ அதை அப்படியே நகலெடுக்கிறான் ஓவியன். கண்ணும் மூக்கும் வைக்கிறான். காலும் கையும் கொடுக்கிறான். ஆனால் என்ன செய்தாலும் தன் படைப்புக்கு உயிர் கொடுக்க முடியவில்லையே என்று உணர்கிறான். அங்கேதான் இறைவனின் எல்லையற்ற சக்தியை அவன் தெரிந்து கொள்கிறான். அவ்வாறு கடவுளைப்பற்றி எண்ணவைக்கும் கலை ஓவியக் கலையைத்

தவிர வேறெது உண்டு?''

''உண்மைதான் சக்கர வர்த்தி.''

காற்று சுகமாய் வீசிற்று. பஞசி நதியின் நீர்ப்பரப்பில் சின்னச் சின்னத் திவலைகள் வெடித்தன. சக்கர வர்த்தி அக்பர் தூரிகையை வைத்து விட்டு மெல்ல உலாப் புறப்பட்டார்.

ஒவ்வொரு கூடாரத்தையும் அவர் தாண்டும்போதும், ராஜாங்க சம்பிரதாயப்படி அந்தக் கூடாரத்துக்கு உரியவர் வெளியே வந்து மா மன்னரின் பாதத்தடியில் ஒரு பவுன் நாணயத்தை வைத்துக் குனிந்து சலாமிட்டு ஒதுங்கிக்கொண்டார்கள். அக்பரும் அவரது வணக்கத்தை ஏற்றுக்கொண்டதற்கு அடையாளமாகப் புன்னகையுடன் தலையசைத்த வண்ணம் மேலே நடந்தார். முக்கியமானவர்களின் கூடாரங்களாக இருந்தால் நின்று இரண்டு வார்த்தை பேசிவிட்டு நகர்ந்தார்.

தான்சேன் அறிமுகப்படுத்திய புதிய வைத்தியரிடம் சில விஞடிகள் கூடுதலாகவே தாமதித்தார். பாதத்தடியில் நாணயத்தை வைத்து அவர் வணங்கி எழுந்ததும்—

''ஓ, வைத்தியர் என் பரிவாரத்தோடுதான் இன்னும் இருக்கிருரா?'' என்ருர் அக்பர் கேலியாக.

''ஏன், கூடவேதான் வந்து கொண்டிருக்கிறேன்?''

''ஓகோ, தாங்கள் என்னை விட்டு ஓரடிகூடப் பிரியாமல் இருப்பீர்களென்று தான்சேன் சொன்னதாக நினைவு..அதனுல்தான் விசாரித்தேன்..'' புன்சிரிப்புடன் சக்கரவர்த்தி நடையைத் தொடர்ந்தார்.

மருத்துவர் வேடத்திலிருந்த ஜெய் இடுப்புத் துணியினுல் முகத்தைத் துடைத்துக்கொண்டான். ஏனோ சக்கரவர்த்தியின் முன்னிலையில் அவனுக்கு இருப்புக் கொள்ளாமலே இருந்து வருகிறது. ஆனுல்—

வெகு வெகு தொலைவிலே மெல்லிய கோடாகத் தெரியும் குன்றை நோக்கினுன் அவன். அங்கே ஒரு பாறையின் மறைவில், வெய்யிலுக்கும் மழைக்கும் அஞ்சாமல், தோளிலே வில்லும் நெஞ்சிலே லட்சியமுமாய்க் காத்துக் கொண்டிருக்கிருளே ஒரு பெண்—

ருபா! உனக்கு உறுதுணை



'அவிட்டம்'

மல்யுத்தம், குத்துச் சண்டை முதலியவற்றைத் திறந்த வெளியில் நடத்துவது நல்லதா, கட்டிடத்துக்குள் நடத்துவது நல்லதா?

திறந்த வெளியில் நடத்துவது தான் நல்லது. யாராவது பெரியவர்கள் சமாதி கிடைக்கிறதா என்று பாருங்கள். அதன் மீது நடத்தினுல் இன்னும் விசேஷம்.

—ராஜ்நாராயண்

உங்களுக்கு நெருங்கின உறவினர் யார்?

இப்போதைக்கு நெடுமாறன் தான். அதனுல்தான் என் கட்சியின் பெயரையே அவரும் எடுத்துக் கொண்டிருக்கிருர்.

—குமரி அனந்தன்

மறக்க முடியாத நாள் எது?

பிறந்த நாளுக்கு முந்தின நாள்.

—சிவாஜி கணேசன்

பக்கம் பார்த்துப் பேசு என்கிருர்களே, ஏன்?

முதலமைச்சர் இருக்கக் கூடும்.

—ராகவானந்தம்

உங்கள் இனிஷியல் என்ன?

எச். என். பகுகுணு. ஆனுல் கே. ஜி. பி. என்றும் சிலர் சொல்வதுண்டு.

—பகுகுணு

எங்கள் பக்கத்து வீட்டில் குழந்தை பிறந்த மூன்றும் நாளே கணவன் மனைவிக்குள் குடுமிப்பிடி சண்டை. என்ன செய்வது?

குழந்தைக்கு லோக நாதன் என்று பெயர் வையுங்கள்.

—சரண்சிங்

# சொல்லலே நல்லா மெல்லு

ஒவ்வொரு வாக்கியத்திலும் மூன்று வெற்றிடங்கள் உள்ளன. பூர்த்தி செய்யவும். ஒரு நிபந்தனை: வார்த்தைகளுக்குள் உச்சரிப்பில் ஒற்றுமை இருக்க வேண்டும். உதாரணமாக

**நான் கமலஹாசனின் ஃபேன் ஆதலால் அவருக்கு ஃபோன் செய்து கல்யாணராமனில் அவர் நடிப்பை ஃபைன் என்றேன்.**

1. ---------படித்துப்-------வாங்கியுள்ள சோ, அரசியல்வாதிகளை---- தட்டுவதில் சமர்த்தர்:
2. மக்கள் மகிழும்------------- இந்திராவின் ----------- நிறைவேறுவது ----------
3. காவஸ்கர் ஆளென்னவோ--------தான். ஆனால்---------பிடித்துவிட்டால் எந்த போலிங்கும் அவருக்கு-------------இல்லை.
4. சாவித்திரியின் உடையில்--------இருந்ததில்லை. ஆனால் அவர் முகத்தில் ------யும் நடிப்பில் ------யும் இருந்ததுண்டு.



விடை: அடுத்த இதழில்

ச இதோ வந்து கொண்டிருக்றன். கவலைப்படாதே...

ஆற்றின் குறுக்கே பாலம் மைந்துவிட்டது. அன்று பகலுக்குல் அக்பரின் பரிவாரங்கள் ஒவ்ாரு படகாகக் கால் வைத்து நதிக் கடக்கலாயின.

அக்பர் முதல் படகில் ினார்.

அவரை அடியொற்றிப் பின் ாடர்ந்தான் ஜெய். அவன் உள்ளத் எத்தனை படபடப்பு! தலையில் றியிருந்த அந்தச் சிவப்புத் துணியை ழ்த்துத் தயாராக வைத்துக்கொண் ன். இன்னும் நான்கு படகுகள் ந்தால் ஆற்றின் மத்தி. அந்த த்தை அடையும்போது அவன் ப்புத் துணியை வீசி ரூப்மதிக்கு ரை அடையாளம் காட்ட வேண் . அவன் கால்கள் கனத்தன.

இன்னும் ஒரே ஒரு படகு.

சக்கரவர்த்தி நின்றார். சட் எனத் திரும்பினார், எதையோ முகர முயற்சிப்பதுபோல நாசியை உறிஞ்சினார். பின்னாலேயே நின்றிருந்த ஜெயைப் பார்த்தார். "வைத்தியரே, ஏதோ நாற்றமாகத் தெரியவில்லை?" என்றார்.

"எனக்கு எதுவும் தெரியவில்லையே..."

"எனக்குத் தெரிகிறது." மீண்டும் நாசியை உறிஞ்சினார் சக்கரவர்த்தி சட்டென அவர் முகம் மலர்ந்தது. "ஓ! இதுதான்! துவைத்து உலர்த்தி வெகு நாளாயிற்று போலிருக்கிறது! அதுதான் இவ்வளவு நாற்றம்!"

விசிறுவதற்குத் தயாராக ஜெய் கையில் வைத்திருந்த அந்தச் சிவப்புத் துணியை வெடுக்கெனப் பறித்தார். நதியில் எறிந்தார் சிரித்துக்கொண்டே அடுத்த படகுக்குச் சென்றார். பின்னர் அதற்கடுத்த படகு. அதற்கடுத்தது. அதற்கடுத்தது...

பத்திரமாக அக்கரையை அடைந்துவிட்டார் ஷா இன் ஷா.

(தொடரும்)

# மக்கள் மறந்து விடவில்லை

இந்திரா காந்தி அம்மையாரை முன்பு நாம் எப்படி காப்பாற்றினோமோ அதைவிட அதிக எச்சரிக்கையோடு இப்போது நாம் காப்பாற்றக் கடமைப் பட்டிருக்கிறோம்.

இந்திராகாந்தி யாருடன் கூட்டு சேர்ந்து இருக்கிறார்கள்? அவர்களைப்பற்றிச் சொல்ல சில மாதங்களுக்கு முன்னால் நடந்த நிகழ்ச்சிகளுக்குப் போக விரும்புகிறேன். இந்திராவைக் காப்பாற்ற இந்த அரசு, அ.தி.மு.க தொண்டர்கள் பாடுபட வேண்டியது இருந்தது என்பதை நினைவுபடுத்த விரும்புகிறேன்.

இந்திரா சென்னை வந்த போது அங்கிருந்து மதுரைக்குச் சென்றார். நாட்டு மக்கள் மறந்துவிடவில்லை. இது சம்பந்தமாக வழக்கு மன்றத்தில் வழக்கு இருக்கிறது. இதற்குமேல் நான் சொல்ல விரும்பவில்லை.

ஆனால் ஒன்றைச் சொல்ல வேண்டும். இந்திரா கோர்ட்டில் வாக்கு மூலம் கொடுத்து இருக்கிறார். இந்திரா எப்படித் திட்டமிட்டுத் தாக்கப்பட்டார் என்பது அந்த வாக்குமூலத்தில் சொல்லப்பட்டு இருக்கிறது.

தொலைபேசியில் பேசிய மாரிமுத்து என்ன பேசினார் என்பது அவருக்கு நினைவு இருக்கும். அதன் பிறகு பாதுகாப்பு கொடுக்கப்பட்டு 144 தடை உத்தரவு போடப்பட்டது. பல்லாயிரக் கணக்கான பேர் குடித்துப் போராட்டம் நடத்தினார்கள்.

இதனால் சுடப்பட்டு ஒருவர், இருவர் சாக வேண்டியதாயிற்று. இதை எண்ணிப் பார்க்க வேண்டும்.

அப்போது கருணாநிதி என்ன சொன்னார்? அநியாயமாக ஆட்சியைக் கவிழ்த்து அட்டகாசங்கள் செய்தால் இனி தமிழ்நாடு பக்கம் தலைவைத்துப் படுக்க முடியாது என்ற உணர்வைப் பெறும் விதத்தில் கறுப்புக் கொடி நிகழ்ச்சி அமையும் என்று சொன்னார்.

இந்திராகாந்தி தமிழ்நாட்டில் மதிக்கப்பட வேண்டிய தலைவரும் அல்ல, வரவேற்கப்பட வேண்டிய தலைவரும் அல்ல என்று கூறினார். சேலை கட்டிய ஹிட்லர் என்றார்.

அவர் இந்திராவை வரவேற்றுப் பாராட்டி மலர் மாலை அணிவித்து அவருடன் கைகோத்து வருகிறார்.

அன்று இந்தியாவை இந்திரா அடிமை படுத்தினார் என்று சொன்னார். இதைவிட அவர் சொன்னதை சொல்ல எனக்கு வேதனையாக இருக்கிறது. 'ரத்தக் காட்டேரி' என்ற பட்டப் பெயரும் விடுத்தார். இன்று அவர்கள் கூட்டு சேர்ந்து இருக்கிறார்கள்.—எம்.ஜி

முன்பக்க விடை

1. சட்டம், பட்டம், மட்டம்
2. வண்ணம், எண்ணம், திண்ணம்
3. குட்டை, மட்டை, சட்டை
4. கலர்ச்சி, உணர்ச்சி, முதிர்ச்சி.

கதைகளில் வரும் பெயர்கள், சம்பவங்கள் அனைத்தும் கற்பனையே. கதை, கட்டுரை முதலிய எதையும் தபால் மூலமே அனுப்ப வேண்டும். அவற்றைத் திருத்தி அமைக்கவும் கடிதங்களைச் சுருக்கவும் ஆசிரியருக்கு உரிமை உண்டு. குமுதம் பிரிண்டர்ஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிட்டவர்: ஏ. பி. ஏ. பெரியகருப்பன். குமுதம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர்: பி. வி. பார்த்தசாரதி. ஆசிரியர்: எஸ். ஏ. பி. அண்ணாமலை.

முகவரி: 151, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை– 600 010.

# மோகினி

## 27

காத்திருந்து காத்திருந்து ரூபமதியின் கால்கள் ...த்துப் போயின. பார்த்துப் பார்த்துக் ...கள் பூத்துபபோயின.

என்னதான் ஆயிற்று ஜெய்க்கு?

குன்றின் உச்சியில், பாறையின் ...றவில் நாணேற்றிய வில்லுடன் ...ள் உட்கார்ந்திருந்தாள். அக்பரின் ...பாரங்கள் வருவதை அவள் கண் ...ள். யானைகளும், ஒட்டகங்களும் ...ல்வதைக் கண்டாள். படகுப பாலத் ... வழியே பல பேர் கடந்து செல் ...தக் கண்டாள்.

ஆனல் ஜெய் சிவப்புத் துணி ...தயும் விசிறி அடையாளம் காட்ட ...லே. இங்கிருந்து பார்த்தபோது ...ம்பு எறும்பாகத்தான் மனிதர்கள் ...ன்றினர்களே தவிர, அக்பர் யார், ...திரிகள் யார், பெண்கள் யார் என்று ...வுமே கண்டுகொள்ள முடியவில்லே.

படகுப் பாலத்தில் ஈ காக்கை ...லே. அக்பரின் பரிவாரம் ஆற்றைக் ...ந்து ஒரு முழு நாளாகிவிட்டது.

சோர்ந்த உள்ளத்துடன் ...ள் குழம்பியிருந்தபோது—

வேகமாய் யாரோ மலேயேறி ...ம் காலடியோசை கேட்டது. தாடி ... மீசையுமான அந்த நபர்—

''நான்தான் ஜெய், ரூபா!''

...வள் திகைபபை அவன் நீக்கினன். ...து அக்பரின் குழுவில் சேர்த்துக் ...ள்வதற்காகப் போட்ட வைத்தியர் ...ம்!'' முகத்தில் வழிந்த வியர்வை ...த் துடைத்துக்கொண்டு அவளருகில் ...கார்ந்தான்.

''ஜெய்! என்ன ஆயிற்று ... திட்டம்? ரொம்ப சாவதானமாய் ...க்கிறீர்களே?'' அவள் பதைத்தாள்.

அவன் பெருமூச்சு விட் ...ன். ''அந்தத் துணியில் என்னவோ ...றம் வருகிறதென்று சொல்லிப் ...தெரிந்துவிட்டார் அக்பர்! உனக்கு ...யாளம் காட்ட முடியாமலே ...ப்விட்டது.''

''இனிமேல்?''

'என் உறவினர்கள் இந்தப் ...ந்திலிருப்பதாக அக்பரிடம் சொல்லி ... ஒரு நாள் அனுமதி பெற்றுக் ...ண்டு உன்னேப பார்க்க ஓடோடி ...தன்.'' இடுப்பிலிருந்து ஒரு துணிச் சுருளே எடுத்துத் தரையில் பாப்பினான் அவன்.

''என்ன இது?''

''உன் திட்டத்தை இனி ஆஜ்மீரில்தான் அமுல் செய்ய வேண்டும். அதுதான் பிரயாணத்தின் கடைசிப் படி.''

''இது என்ன என்று கேட்கிறேன்.''

''ஆஜ்மீரிலுள்ள தர்காவின் அமைப்பு முறையைக் காட்டுகிறது இது.'' ஒவ்வோரிடமாய் அவன் விளக்கினன்: ''இதோ இந்த நடு வட்டத்தில் குவாஜா மியூனுத்தீனின் சமாதி இருக்கிறது. வெளியிலுள்ள இந்த இரண்டு இடங்களும் குவாஜா சாகிப்பின் மனைவிகளுடைய கல்லறைகள். இதோ இந்த இடத்தில் மாண்டு சுல்தான்களின் கல்லறை...''

அவள் குறுக்கிட்டாள்.

''சரி, இதெல்லாம் தெரிந்து கொண்டு ..''

''மொத்தத் தர்காவும் திறந்தவெளி என்பதை மறக்காதே. இதோ வடகிழக்குப் பகுதியில் தரகார் குன்றுகள் இருக்கின்றன. குன்றின் அடிவாரத்தில் ஜல்ரா திருக்குளம் இருப்பதைப் பார். திருக்குளத்தை ஒட்டி தர்கா. நீ இங்கே இந்தக் குன்றில் இருபபதுபோலவே, தரகார் குன்றிலும் இருந்துகொள்



வாம். உயரமான, மறைவான இடம் கிடைக்கும்.''

''அங்கே இருந்துகொண்டு?''

''நான் அக்பரின் பின்னுலேயே வருகிறேன். வேறொரு சிவப்புத் துணி வாங்கி வைத்துக்கொண்டு, இதோ—கவனி! இந்த மாண்டு சுல்தான்களின் சமாதியருகே அக்பர் வரும்போது, அடையாளம் காட்டுகிறேன். நீ உடனே ஒரே அம்பினுல்—''

ரூப்மதி யோசனையில் ஆழ்ந்திருந்தாள்.

''என்ன ரூபா?''

''ஒன்றுமில்லை. சமாதி என்பது புனிதமான இடம். அதுவும் குவாஜா மியூனுத்தீன் சிஷ்டி ஒரு பெரிய மகான். அவருடைய தர்காவில் ஒரு கொலையைச் செய்து அசுத்தப் படுத்தக்கூடாது. அனுவசியமாய் மதக் கலவரங்களுக்கு வேறே இடமேற்படுத்தும்...''

''அப்படியானுல் ஒன்று செய். தர்காவின் வாசலில் அக்பர் யானை மேலிருந்து இறங்கும்போதே வேலையை முடித்துக்கொள். நான் அடையாளம் காட்டுகிறேன்.''

''ஜெய்!''

''என்ன ரூபா ''

''நான் பத்திரமான, மறைவான இடத்தில் இருப்பேன். எனக்கு ஆபத்து நேராது. ஆனுல் உங்கள் மீது



நாயனம் வாசிப்பது யார்?''

''திருநீலகண் நாயனர்!''

துளி சந்தேகம் ஏற்பட்டாலும். அவள் குரல் கம்மியது.

''சீ அசடு!'' அவள் கண்ளைத் துடைத்துவிட அவன் தான். லட்சியம் நிறைவேறும்வ[illegible] ஒருவரையொருவர் தொடுவ[illegible] என்ற வைராக்கியம் நினைவு வந்த[illegible]

''நான் ஜாக்கிரதை இருப்பேன். நீ ஆஜ்மீருக்கு இன்[illegible] புறப்பட்டுவிடு.'' வந்த வேகத்தி[illegible] அவன் திரும்பிவிட்டான்.

இன்றோ நாளையோ இன்ஷா விஜயம் செய்யப்போகி[illegible] ஆஜ்மீர் நகரம் திருவிழாக் கோல[illegible] துள்ளிக் கொண்டிருந்தது, ரூ[illegible] போய்ச் சேர்ந்தபோது. நோ[illegible] திசையெல்லாம் கொடிகள், தோர[illegible] கள், இன்னிசை முழக்கங்கள்!

தரகார் குன்றங்களிலி[illegible] பார்த்தபோது ஊரும் குளமும் [illegible] வும் அற்புதமாய்த் தெரிந்தன. குன்[illegible] உச்சியில் வசதியான இடத்தைத் [illegible] பிடித்துக் கொண்டாள். அரை [illegible] தான் அவள் காத்திருந்தாள். கு[illegible] அவள் அடைந்தது ஒரு மாலை வேளை

சக்கரவர்த்தியின் பரிவ[illegible] கள் வரத் தொடங்கியது மறு[illegible] காலையில்.

வில்லை நாணேற்றிக்கொ[illegible] கால் வலிக்க, கை விரல் வலிக்க, [illegible] கள் வலிக்க, தொண்டை வ[illegible] நெற்றி வலிக்க—

அதோ! அதோ! அதோ[illegible]

அக்பரின் பட்டத்து ய[illegible] சகல அலங்காரங்களுடன் வ[illegible] தெரிகிறது.

ஜே ஜே என்று ம[illegible] கூட்டம் ஓடிவந்து சூழ்வது தெரிகி[illegible] படை வீரர்கள் அவர்களை வி[illegible] விலக்கி, சக்கரவர்த்திக்கு வழி வி[illegible] தெரிகிறது. அந்த உடை, அந்த உய[illegible]

அதோ அவருக்குப் பக்[illegible] லேயே ஜெய்! சிவப்பான [illegible] பாகைத் துணியை உயர்த்தி [illegible] அடையாளம் காட்டுகிறுன்!

சர்ரென்று இழுத்துவிட்[illegible] ஓர் அம்பை. அது தன் இல[illegible] அடையுமுன்பே இன்னேர் அ[illegible] அவள் வில்லிலிருந்து புறப்ப[illegible] பறந்தது.

மறுகணம் அவர் விழுவ[illegible] குபீரெனக் கூட்டம் சேருவதும் [illegible] தது.



வில்லையும் அம்பையும் கீழே வைத்தாள் ரூப்மதி. தரையில் விழுந்து வணங்கினாள். இறைவனுக்கு நன்றி சொல்லிக்கொண்டாள். ஆறு மாத காலமாக எந்த லட்சியத்தை மனசில் தேக்கி வைத்திருந்தாளோ அது நிறைவேறிவிட்டது. சூரியபூரே! இனி உன் சுதந்திரத்துக்கு ஆபத்து இல்லை. ராஜபுதனத்து வீரப் புதல்வர்களே! இனி உங்கள் பூமியையும் பெண்டு பிள்ளைகளையும் அவமானப்படுத்த எந்த அன்னியனும் வரமாட்டான்! விடுதலைத் தேவதையே! உனக்கு வணக்கம். உரிமைத் தேவனே! உனக்கு வணக்கம். மானத்துக்கும் கௌரவத்துக்கும் அஞ்சாமைக்கும் என்னென்ன தெய்வங்கள் உண்டோ அவைகளுக்கெல்லாம் வணக்கம், வணக்கம், வணக்கம்.

அவனுக்கு இருப்புக்கொள்ளவில்லை அங்கே வில்லையும் அம்பையும் பாறை மறைவில் ஒளித்து வைத்தான். குன்றினின்றும் இறங்கினான் புயலாக. தர்காவை நோக்கி ஓடினான்.

அமளி துமளிப்பட்டுக் கொண்

டிருந்தது அங்கே.

அம்பு தாக்கிய உடல் தரையில் கிடந்தது. அதன்மீது துணி போர்த்தப்பட்டிருந்தது. ஒரு சிறு குட்டைபோல ரத்தம் பரவியிருந்தது.

''குழந்தாய்! குழந்தாய்!'' அக்பரின் தாய் ஹமீதா பானு பேகம் புரண்டு புரண்டு அழுது கொண்டிருந்தாள்.

அந்தத் திசையிலிருந்துதான் வந்தது அம்பு! இல்லே; இல்லே, இந்தத் திசையிலிருந்து! ஓடுங்கள்! போய்ப் பாருங்கள்! எங்கிருந்தாலும் கொலைகாரனைக் கண்டுபிடியுங்கள்! ஆணைகள் பறந்தன.

ரூப்மதிக்கு எவ்வித அச்சமும் ஏற்படவில்லை. சிறிது சிறிதாகக் கூட்டத்தினுள் புகுந்தாள். ஜெய், எதுவும் செய்ய முடியாத வைத்தியர் என்ற வகையில், தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு நின்றிருந்தான். அவன் கண்கள் அவள் கண்களைச் சந்தித்தன. மெல்ல மெல்ல அவனை நெருங்கினாள். கூட்டத்தில் யாரும் கவனிக்காமல் அவன் கையைப் பற்றி அழுத்தினாள். அவள் ஸ்பரிசத்தைக் கண்டு அவன் திடுக்கிடுவது தெரிந்தது. அவள் புன்னகை செய்தாள். 'நம் லட்சியம்தான் நிறைவேறிவிட்டதே! இனி என்ன!' என்று அந்தப் புன்னகை அவனுக்குச் சொல்லிற்று.

அவ்வளவு அமளிக்கிடையே தோடர்மாலுக்கு ஒன்று நினைவு வந்தது.

அந்தப் பிரகடனம்!

'எனக்கு எந்த நிமிடம் மரணம் நேருகிறதோ அந்த நிமிடமே, எந்த இடத்தில் மரணம் நேருகிறதோ அந்த இடத்திலேயே வாசிக்க வேண்டும்' என்ற கட்டளையுடன் சக்கரவர்த்தி அவரிடம் ஒப்படைத்த அந்தப் பிரகடனம்!

தரையில் ஆஜானுபாகுவாக விழுந்து கிடக்கும் உடலைக் கண்டார். கண்ணில் நீர் பெருகியது. 'சக்கரவர்த்தி! தங்கள் ஆணையை இதோ நிறைவேற்றுகிறேன்!'—அவர் உதடுகள் முணுமுணுத்தன. ஓடினார் தன் மாளிகைக்கு. பிரகடனத்தை எடுத்துக் கொண்டார் ஓட்டமாய்த் திரும்பினார்.

''பெரியோர்களே! நண்பர்களே! தயவு செய்து சற்று அமைதியாக இருங்கள்!''—தோடர்மாலின் வெண்கலக் குரல் கணீரென்று எழுந்ததும்—

புலம்புவோரும் கதறுவோரும் தலையில் அடித்துக் கொள்வோரும் மார்பில் அறைந்து கொள்வோரும் விழுந்து புரளுவோரும் விம்மித் துடிப்போரும் சட்டென அவரை நிமிர்ந்து நோக்கினார்கள்.

ரூப்மதியும் ஜெய்யும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். ரூப்மதியின் முகத்தில் அலட்சியச் சிரிப்புப் பரவியிருந்தது. எடுத்துக் கொண்ட நோக்கம் நிறைவேறியாகி விட்டது. என்ன பிரகடனம் வாசித்தால் யாருக்கென்ன?

''தலைநகரிலிருந்து புறப்படுமுன் ஷா இன் ஷா இந்தப் பிரகடனத்தை என்னிடம் தந்தார். தனக்குத் திடீரென்று மரணம் சம்பவித்தால் உடனே இதைப் படிக்குமாறு உத்தரவிட்டார்.'' முத்திரையை உடைக்க



மனோரமா சொன்னார்:

எனக்கு இரண்டு சகோதரர்கள். குடும்பம் நல்லமுறையில் தான் ஓடிக் கொண்டிருந்தது. இந்த நேரத்தில்தான் என் தந்தைக்கு வேறொரு பெண்ணின் மீது நாட்டம் வந்தது. அதாவது என் தாயாருக்கு ஒரு சக்களத்தி வந்தாள். அதைத் தொடர்ந்து சிறு குழந்தைகளான எங்களையும், என் தாயாரையும் தந்தை கவனிப்பதில்லை. அதனால் தாயார் அப்பாவிடம் கோபித்துக் கொண்டு வீட்டை விட்டு வெளியேறினார்

எங்கள் வயிற்றுப் பிழைப்புக்காக அம்மா பலகாரம், முறுக்கு சுட்டுக் கொடுப்பார் அவற்றைப் பல இடங்களுக்கு கூவிக்கொண்டே போய் நான் விற்பது வழக்கம்.

அப்பப்பா! நரக வாழ்க்கை!

— நா

ஒலுக்குள்ளிருந்து பட்டுச் சீலையை
வளியே எடுத்தார் தோடர்மால்.

ஊள் விழுந்தால் கேட்கும்
ப்தம்.

தோடர்மால் படித்தார்:

"இந்துஸ்தானத்தின் சக்கர
த்தியான அபுல் இ—ஃப்பதே ஜலாலு
ர் முகம்மது அக்பர் தமது இறுதிக்
லத்தில் சகலமான ஜனங்களுக்கும்
ரபதிகளுக்கும் பிறப்பிக்கும் ஆணை
வது: ராஜபுதனத்தில் இதுவரை
மால் ஜெயிக்கப்படாமலும், நமது
ட்சியில் சேர்க்கப்படாமலும் என்
ன்ன பகுதிகள் இருக்கின்றனவோ
வையனைத்தும் இனி பயமின்றி வாழ
ம் என்று இறைவன் பெயரால்
தி கொடுக்கிறேன். சூர்யபூர், நாகர்
ட், மாள்வா முதலிய ராஜ்யங்கள்
ஙிச்சைப்படி சுதந்திரமாக வாழ
ம். அக்பராகிய நானோ அல்லது
ன் வம்சத்தவரோ அவற்றின் சுதந்
த்தில் எக்காரணம் கொண்டும்
லயிடவும் மாட்டோம், அந்தப் பகுதி
ரின் மீது படையெடுக்கவும் மாட்டோம்
று மீண்டுமொரு முறை இறை
னின் பெயரால் சத்தியம் செய்து
ந்தரவாதம் தருகிறேன்..."

தோடர்மால் படித்து முடித்
ர்.

பயங்கரமான நிசப்தம்
ங்கே நிலவியது.

ஜெய்தான் அந்த நிசப்தத்தை
தல் முதல் கலைத்தான். அவன் குரல்
தழுத்திருந்தது. "சக்கரவர்த்தி!
ங்கள் இவ்வளவு பெருந்தன்மையான
என்பதை அறியாமல்...அந்தப்
தகத்தைச் செய்துவிட்டோமே..."

தோடர்மால் திகைத்தார்
வன் பேச்சைக் கேட்டு. "நீங்கள்...
.."

ஜெய் தன் தாடியையும்
சையையும் தலைப்பாகையையும் களைந்
றிந்தான். "நான் ஜெய்— சூர்ய
ன் இளவரசன். இவள் ரூப்மதி—"

முன்னே வந்து நின்றாள்
மதி. அவள் தலை குனிந்திருந்தது.
கள் கலங்கியிருந்தன. "அக்பர்—
னிக்க வேண்டும். சக்கரவர்த்தி— இப்
யொரு இறுதிப் பிரகடனம் செய்து
வத்திருப்பார் என்று நான் நினைக்
வயில்லை. இந்த ஆணையையும் உறுதி
மொழியையும் ஒரே ஒரு நாள் முன்ன

## செய்கை மூன்று-சேதி ஒன்று

(விடை)

பக்கம் 12—13:
ராமனுக்கு எப்போ மாரேஜ்?
பக்கம் 14—15:
கிளாஸைக் கட் பண்ணிட்டு மாட்டிக்
கிட்டேன்.

தாக அவர் வெளியிட்டிருந்தால்...நான்
...இவரை..."

தோடர்மால் திடுக்கிட்டார்:
"என்ன சொல்கிறாய் நீ?"

ரூப்மதியின் குரல் மேலும் கலங்கியது. இறந்தவரின் மார்பிலிருந்து பறித்து எறியப்பட்டிருந்த அம்பைக் காட்டினாள். "அந்த அம்பை எய்து ஷா இன் ஷாவின் உயிரைப் பறித்தவள் நான்தான்."

"என்ன!" சரேலென்று பத்துப் பதினைந்து போர் வீரர்கள் உருவிய வாளுடன் அவளைச் சூழ்ந்துகொண்டார்கள். ஜெய் பதறிப்போய் அவளை அணைத்தாற்போல் மறைத்துக் கொண்டான்.

தோடர்மால் ரூப்மதியை நெருங்கினார்: "பெண்ணே! உன் அறியாமையால் எப்படிப்பட்ட தவறைச் செய்துவிட்டாய் பார்த்தாயா? திருத்தி நேர் செய்ய முடியாத மாபெரும் பிழையைப் பண்ணிவிட்டாய் என்பது உனக்குத் தெரிகிறதா!"

"ஆம், பிரதம மந்திரி அவர்களே, ஆம். என் பிழை எனக்குத் தெரிகிறது." ஒப்புக்கொண்டாள் ரூப்மதி. "சூர்யபூரை அடிமையாகவே வைத்திருக்கப் போகிறவர் என்று சக்கரவர்த்தியைக் கட்டோடு வெறுத்தேன். ராஜபுதனத்தின் கௌரவத்தைக் குலைக்கப் போகிறவர் என்று அவரைக் கொலை செய்தேன். அவர் நெஞ்சுக்குள் இவ்வளவு உயர்ந்த எண்ணங்களும் பெருந்தன்மையான திட்டங்களும் இருப்பதை அறியாமல் போனேன்..."

உறுதியாகக் கூறினார் தோடர்மால். "நீ செய்திருப்பது மன்னிக்க முடியாத மாபெரும் குற்றம். அதை நீயே ஒப்புக்கொள்கிறாய். உன் குற்றத்தை விசாரிக்க நியாயாதிபதியோ நீதிமன்றமோ தேவையில்லை. இங்கேயே, இப்போதே உனக்கு மரண தண்டனை அளிக்கிறேன். தளபதி! இவளை—"

மின்வெட்டு நேரத்தில்—

குழந்தைகளுக்கு
இருப்பது இரண்டே
பிரச்னைகள்தான்—
1. அப்பா
2. அம்மா

—ஈவ்ஸ் வீக்லி

---

ரூப்மதியின் தலை மண்ணிலே புரண்டிருக்கும்—

அந்தக் கம்பீரமான குரல்!

''நில்!'' என்ற அந்தக் குரல் யாருடையது என்பது அத்தனை பேருக்கும் அந்தக் கணமே புரிந்தது.

கூட்டத்தை விலக்கிக்கொண்டு மர்மமான புன்சிரிப்புடன் வந்தார் ஷா இன்ஷா அக்பர்.

ஜெய்யும் ரூப்மதியும் இருந்த இடத்தைவிட்டு ஒரடிகூட நகரவில்லை. ஜெய்யின் கையை அவள் இறுகப் பிடித்திருந்தாள். அந்த இறுக்கத்தில் அவளுடைய பிரமிப்பும் குழப்பமும் தென்பட்டன.

''சௌக்கியமாய் இருக்கிறாயா குழந்தாய்?'' ரூப்மதியை நெருங்கியவர் அவள் தலையை அன்போடு வருடினார். ''சூரியபூர் இளவரசனுக்குத் தூது சொல்லி அனுப்பினேனே, உன் மூலம்? ஞாபகம் இருக்கிறதா? திரும்பி வந்து என்ன நடந்தது என்று ஒரு வார்த்தைகூட எனக்குச் சொல்லவில்லையே? மறந்தே போய்விட்டாய்! இல்லையா?''

அவர் பேசப் பேசத் தன் அகன்ற கண்களால் அவரையே இமைக்காமல் பார்த்தாள் ரூப்மதி. பல மாதங்களுக்கு முன்னால் ஆக்ரா அரண்மனையில் அவர் பேசிய இனிமையான பேச்சு அவளுக்கு ஞாபகம் வந்தது. பெற்ற தந்தையைப்போல அவர் காட்டிய பாசம் ஞாபகம் வந்தது.

அவள் கண்களில் நீர் தளும்பியது.

''ஓ! உன் லட்சியம் நிறைவேறிவிட்டது என்ற ஆனந்தக் கண்ணீரா?'' சிரித்தார் சக்கரவர்த்தி.

''என்ன... என்ன சொல்கிறீர்கள்?'' திகைத்தாள் ரூப்மதி.

''சூரியபூரைத் தாக்கி நாசம் செய்தவன், சூரியபூரை அவமானப்படுத்தியவன், சூரியபூரின் ரத்தினங்களான இளம் சிங்கங்களை வெட்டிச் சாய்த்தவன்—அவனை உன் கையாலேயே கொன்று பழி தீர்த்துக்கொள்ள வேண்டும் என்று நீ விரும்பினாயல்லவா? அது ஒன்றுதானே உன் லட்சியமாக இருந்தது?''

''ஆமாம்....''

''உன் எண்ணம் நிறைவேறிவிட்டதே! தெரியாது?''—மாமன்னர் குனிந்தார். கீழே கிடந்த உடலை போர்த்தியிருந்த துணியை இழுத்து விலக்கினார். அந்த முகத்தில் ஒட்டியிருந்த தாடியையும் மீசையையும் தலைப்பாகையையும் பறித்து எறிந்தார்.

''கான் சூர்!''—தோடர்மாலின் பிரமித்த குரல் ஓங்கி ஒலித்தது.

''கான் சூர்...கான் சூர்...'' பல குரல்கள் ஒலித்தன! பரபரப்பு! திகைப்பு! ஆச்சரியம்! அதிர்ச்சி!

ஜெய் அந்த முகத்தை பார்த்தான். ''இவன்...இவன்தான் சூரியபூரின் மீது படையெடுத்து வந்து...''

''என் உத்திரவில்லாமல் படையெடுத்து, என் உத்திரவில்லாமலே சூர்யபூர் வீரர்களின் தலைகளை வெட்டி வண்டி வண்டியாக ஆக்ராவுக்குக் கொண்டுவந்தான்! வெறுப்பும் சினமும் அக்பரின் குரலில் தொனித்தன. ''அன்றைக்கே இவனுக்கு மரணதண்டனை கொடுத்தாயிற்று. இவன் தாய் கெஞ்சியதால் சில நாட்களுக்கு உயிரோடு விட்டுவைத்திருந்தேன். ஆஜ்மீர் பயணத்தின்போது என் உயிருக்கு அபாயம் விளைவிக்க நீங்கள் இருவரும் திட்டமிட்டிருக்கிறீர்கள் என்று பிரதம மந்திரி தெரிவித்தார். உடனே நானும் திட்டமிட்டேன். இவனைக் காவு கொடுத்து இரண்டு பேர் விருப்பத்தையும் ஒரே சமயத்தில் நிறைவேற்றுவதென்று...''

''இந்தச் சடலத்தை அப்புறப்படுத்துங்கள்!'' காவலாட்களிடம் கட்டளையிட்டார் தோடர்மால். சக்கரவர்த்தியிடம் பணிவோடு வினவினார். ''உஸ்பெக்கிலிருந்து படையெடுப்பு நிகழக் கூடும் என்றும் அதைத் தடுப்பதற்காகக் காபூலுக்குக் கான்சூரை அனுப்பப் போவதாகவும் தாங்கள்...''

''சொன்னது உண்மைதான். கான்சூரைக் காணாமல் நீங்கள் தேடக் கூடாதே என்பதற்காகக் கற்பனையாக அந்தப் பதவியைக் கொடுத்தேன். அந்தப் பதவியை அவனுக்குக் கொடுத்திருப்பதாக நீங்கள் நம்ப வேண்டும் என்பதற்காகவே அவனுடன் நெருங்கி

...ருகிற மாதிரியும் நடித்தேன்: பாத ...த்திரையின்போது மாறுவேடத்தில் ...ன்னுடன் கூட வரவேண்டுமென்று ...சால்லிக் கான் சூரைக் கட்டாயப் ...டுத்தி அழைத்துவந்தேன். ஆனுல் எப் ...பாது எந்த இடத்தில் என் உயிருக்கு ...பத்து வரப்போகிறதென்பது எனக் ...த் தெரியாமலிருந்தது. அந்தக் குழப் ...த்தையும் சூர்யபூர் இளவரசர் தீர்த்து ...ட்டார்...''

''நானு!'' திகைத்தான் ஜெய்.

''ஆம்.'' பின் கை கட்டிய ...று குறுக்கும் நெடுக்கும் உலா ...ய வண்ணம் சக்கரவர்த்தி விளக்கி ...ர்: ''அன்று பஞ்சி ஆற்றங்கரையில் ...து கூடாரங்களின் வாசல் வழியே ...ன் நடந்து சென்றேனே, ஞாபகம் ...ருக்கிறதா? அரசாங்க சம்பிரதாயப் ...டி ஒவ்வொருவரும் ஒவ்வொரு தங்க ...ாணயத்தை என் காலடியில் வைத்து ...ணங்கி எழுந்தார்கள். நீ கையில் ...ாணயம் இல்லாமல் தடுமாறிப் ...பானுய். பிறகு சட்டென்று ரூப்மதி ...ன்னிடம் கொடுத்து வைத்திருந்த—'' ...ங்கியின் பையில் கையை விட்டு ...வளியே எடுத்தார் அக்பர்— ''இந்த ...ாணயத்தை— சூர்யபூரின் சுதந்திரத் ...க்குச் சின்னமாகத் திகழும் இந்த "வாளின் முத்தம்" நாணயத்தை— என் காலடியில் சமர்ப்பித்து வணங்கி எழுந் தாய். அந்த நிமிடமே நான் கண்டு கொண்டுவிட்டேன் நீ ஜெய் என்று. அப்போது நான் கான்சூரை மாற்ற ஏற்பாடு செய்திருக்கவில்லை. ஆகவே நீ என்னை யாருக்கோ அடையாளம் காட் டப் போகிருய் என்று ஊகித்தவுடன் அந்தச் சிவப்புத் துணியைத் தட்டிவிட் டேன். ஆனுல் வெகு விரைவில் அடுத்த ஆபத்து வரப்போகிறது என்பது புரிந்துவிட்டது. பஞ்சி ஆற்றைக் கடந்த வுடனேயே நீ மலையை நோக்கி நழுவினுய். உன் பின்னுலேயே ஆள் அனுப்பி விஷயத்தைத் தெரிந்து கொண்டேன். கான்சூரை என்போல் வேடம் போட ரகசியமாய், யாருக்குமே தெரியாமல் ஏற்பாடு செய்துவிட்டேன். அந்த வேடத்தினுல் தன் உயிரே போகப் போகிறது என்பதைத் தெரிந்துகொள் ளாத முட்டாள் ரொம்பச் சந்தோஷ மாய் ஒப்புக்கொண்டான். எப்படியும் நான் 'இறந்த'வுடனேயே தோடர்மால் பிரகடனத்தை வாசிப்பார், அதைக் கேட்டதும் நீ உன் அவசரத்துக்காக மனம் வருந்துவாய், வருந்தியதும் என்னை வெளிப்படுத்திக் கொள்ளலா மென்று திட்டமிட்டேன். அதன்படியே நடந்தது...''



நம்பிக்கையில்லாத் தீர்மானம் விவாதிக்கப்படு கிற நேரம், எதிர்க் கட்சிக் குப் போய் விட்டதாகச் சொல் லப்பட்ட பலபேர் திரும்பி வந்தார்கள். தீர்மானம் தோற்றது. அமைச்சரவை பிழைத்தது. பத்து நாளாக வில்லை. புதிதாக ஏழு மந்திரி கள் நியமனமாம். அர்ஸ் சுவாயா, இதற்கு ஏனு அர்த்தம் சுவாமி?

பங்களூரில் பச்சை இலையோடு இருக்கிற எந்த மரத்தையும் அதற்கென்று நியமனம் செய்யப்பட்ட மர அதிகாரிகள் அனுமதியின்றி வெட்டக் கூடாது. இதற்கென்று சட்டம் ஒன்றை நகராட்சி ஏற்படுத்தியிருக்கிறது

—கே. ஆர்.

''ஷா இன்ஷா! பனுசி ஆற்றைத் தாண்டிய நாள் முதல் நாங்கள் சலாமிட்டதும் வணக்கம் கூறியதும் உபசாரங்கள் செய்ததும் அந்தக் கேடு கெட்ட கான்சூருக்கா!''—தோடர் மாலின் குரலில் வருத்தம் தொனித்தது.

சக்கரவர்த்தி கடகடவென்று சிரித்தபடி அவர் தோள்மீது ஒரு கையும் ஜெய்யின் தோள்மீது மறு கையும் போட்டுக் கொண்டு நடந்தார்.

குவாஜா மியூனுத்தீன் சிஷ்டியின் தர்க்காவில் வணக்கங்களைச் செலுத்திவிட்டு வெளியே வந்தார் சக்கரவர்த்தி அக்பர். வாசலில் காத்திருந்த தோடர்மாலும் ரூப்மதியும் ஜெய்யும் அவருடன் சேர்ந்து கொண்டார்கள்.

ஆஜ்மீரின் அகலமான ராஜ வீதியில் அவர்கள் செல்கையில்—

உரத்த குரலில் பிரார்த்தனைகளும் வாழ்த்தொலிகளும் அவர்களைப் பின்தொடர்ந்து வந்து கொண்டிருந்தன.

'...இலட்சியத்துக்காக உயிர் கொடுப்பவர்களே! நற்பேறு பெற்றவர்களே! இறைவனால் தேர்ந்தெடுக்கப் பட்டவர்களே! உங்கள்மீது எங்களின் ஸலாம் உரியதாகுக! நீங்கள் பொறுமையுடன் இருந்ததற்காகவும் அதனால் தங்களுக்கு ஏற்பட்ட சிறப்பிற்காகவும் சாந்தியும் அல்லாஹ்வின் நல்லருளும் பாக்கியமும் உங்களுக்கு உரித்தாகட்டும்...'

சக்கரவர்த்தி மௌனமாகவே வந்துகொண்டிருந்தார். அவர் முகத்தில் சிந்தனைக் கோடுகள் நிரம்பியிருந்தன. பல்லக்கில் அவர் ஏறிக்கொள்ளாததால் வெறும் பல்லக்கைச் சுமந்தபடி ஆட்கள் அவர் பின்னாலேயே வந்தார்கள்.

''ரூப்மதி...'' மகள் போ[illegible] றிருந்த ரூப்மதியின் தோளில் [illegible] வைத்த வண்ணம் மெல்லிய குர[illegible] பேசினார். ''கொஞ்ச நேரமாக [illegible] மனத்தில் ஓர் எண்ணம் அலையோ[illegible] கொண்டிருக்கிறது. உன்னிடம் அ[illegible] பற்றிப் பேசினால் எனக்கே ஒரு தெ[illegible] பிறக்கும் என்று நினைக்கிறேன்...''

''சொல்லுங்கள் சக்[illegible] வர்த்தி.''

''நாடுகளை வெல்லுவது சாம்ராஜ்யத்தின் எல்லைகளை விஸ்த[illegible] பதும் ஓர் அரசனின் முக்கியம[illegible] கடமை. அதனால்தான் இந்துஸ்தா[illegible] தின் பல பாகங்களிலும் நான் போ[illegible] வேண்டியவனாயிருக்கிறேன். ஆ[illegible] வேறெந்த இடத்திலும் இல்லாத மூர்[illegible] மான மோதல் ராஜபுதனத்தில் [illegible] டுமே நடைபெறுவதைக் காணுகிறே[illegible] இன்று நேற்றல்ல, என் மூதாதை[illegible] கள் என்றைக்கு இந்துஸ்தானத்துக்[illegible] நுழைந்தார்களோ அன்று முதலே [illegible] படித்தான். ராஜபுதனத்தின் போர்[illegible] மட்டும் மூர்த்தண்ணியமாக, வாழ்[illegible] சாவா என்கிற மாதிரி நடக்கின்ற[illegible] இது ஏன் என்று உனக்குத் தெரியுமா[illegible]

''தெரியவில்லையே சக்[illegible] வர்த்தி.''

''மதம்தான் காரணம் என[illegible] மகான் மியூனுத்தீன் சிஷ்டியின் சம[illegible] யில் வணக்கம் செய்து கொண்டிருக்[illegible] யில் என் மனத்தில் பட்டது. ந[illegible] இந்து என்கிற வெறி ஒரு பக்கமு[illegible] நான் முஸ்லிம் என்கிற வெறி [illegible] பக்கமும் ராஜபுதனத்தில் தலைவி[illegible] தாடுகிறது. இந்த வெறியைத் தன[illegible] தாக வேண்டும். அதற்கு என்ன செ[illegible] லாம் என்று நினைக்கிறாய்?''

''தெரியவில்லையே சக்[illegible] வர்த்தி.''

''எல்லா மதங்களின் [illegible] மான அம்சங்களையும் இணைத்து, [illegible] புதிய மதத்தை ஏற்படுத்தினால் என[illegible] வென்று எனக்குத் தோன்றுகிறது. [illegible] என்ன நினைக்கிறாய்?''

''தெரியவில்லையே சக்[illegible] வர்த்தி.''

''மூன்று நூற்றாண்டுகளு[illegible] முன் பாதுஷா அலாவுதீன் கில்ஜி [illegible] போல் ஒரு புதிய மதத்தை ஏற்படு[illegible] நினைத்தார். ஆனால் அதைக் கத்தி மு[illegible] யிலே பரப்பலாமெனத் திட்டமிட்ட[illegible] அதனால் டெல்லி பட்டணத்தின் கொ[illegible] தவாலான அலாவுல் முல்க் அந்[illegible]

திட்டத்தை எதிர்த்தார்: மதம் என்பது தீர்க்கதரிசிகளின் வேலையே தவிர அர சர்கள் புகுந்து குழப்பக்கூடாது என்று எடுத்துரைத்தார், அலாவுதீன் கில்ஜி யின் திட்டம் தோல்வியடைந்தது. ஆகவே அதைப்போல் நான் செய்துவிடக் கூடாது. நீ என்ன நினைக்கிறாய்?''

''தெரியவில்லையே சக்கர வர்த்தி.''

''தலைநகரை அடைந்ததும் எல்லா அறிஞர்களையும் மதத் தலைவர் களையும் கூட்டி எனது புது மதம் பற்றி விவாதிக்கப் போகிறேன். இந்த என் புது மதத்துக்குத் தீன் இலாஹி— தெய் வீக மதம் என்று பெயர் சூட்டப் போகிறேன். இந்த மதத்தைச் சேர்ந்த வர்கள் சந்திக்கும்போது ஒருவர் 'அல் லாஹு அக்பர்' என்று கூற வேண்டும். மற்றவர் 'ஜல்லா ஜலலுஹு' என்று கூற வேண்டும். எவருக்கும் தீங்கு செய் யாத அனைவரையும் திருப்திப்படுத்தக் கூடிய கொள்கைகள் இந்த மதத்திலே இருக்கும். உலகத்திலே அழகானவை யெல்லாம், உலகத்திலே நல்லன எல் லாம், உலகத்திலே சத்தியமானவை எல்லாம், உலகத்திலே மகத்தானவை யெல்லாம் என்னுடைய தீன் இலாஹி மதத்திலே இருக்கும்...''

சக்கரவர்த்தி அக்பர் பேசிக் கொண்டே சென்றார். ரூப்மதி தலை யசைத்துக்கொண்டே சென்றாள்.

வெகு தொலைவில் பின்னால் வந்துகொண்டிருந்த ஜெய்க்கும் தோடர் மாலுக்கும் மான்சிங்குக்கும் மற்றவர் களுக்கும் ஒரே ஆச்சரியம். அவர் இந் துஸ்தானத்தின் மாபெரும் பாதுஷா. இவள் இடிந்த குடிசையில் வளர்ந்த பெண். அவர் தெற்கே அகமத் நகரிலி ருந்து வடக்கே காஷ்மீர் வரையிலும் மேற்கே காந்தாரிலிருந்து கிழக்கே கூச் வரையிலும் பரந்து விரிந்த சாம்ராஜ் யத்தின் தானைத் தலைவர். இவள் கையக லப் பூமிகூடச் சொந்தமாக இல்லாத வள். அவர் அறிவிலே வங்காளக் கடல்; இவள் ஆறு ஆவன்னா அறியாத இளம் பெண். அவர் நூறு யானைகளின் வலுப் படைத்த ஆண் சிங்கம்; இவள் ஊதி னால் பறந்துவிடக் கூடிய மாந்தளிர்.

இருவருக்கும் பொதுவாக என்னதான் இருக்கும், அவ்வளவு சுவா ரஸ்யமாகப் பேசுவதற்கு?

இவர்கள் ஆச்சரியப்பட்டுக் கொண்டேயிருந்தார்கள். அவர்கள் போய்க்கொண்டேயிருந்தார்கள்.

முற்றும்

---

# டாண் டாண்

'அவிட்டம்'

⚭ லட்ச ரூபாய் வைத்திருப்பவர் லட்சாதிபதி. கோடி ரூபாய் வைத்திருப்பவர் கோடீசுவரர். ஆயிரம் கோடி வைத்திருப்பவர்?

காந்தி தேசாய்.

— ராஜ்நாராயண்

⚭ குமரியின் லட்சணம் என்ன?

தனித்து நிற்பாள்.

— குமரி அனந்தன்

⚭ ஜெய்ப்பூருக்குஇன்னொரு பெயர் உண்டா?

உண்டு. கான்பூர்.

— காவஸ்கர்

⚭ பெட்ரோல் விலை உயர்வினால் பஸ் கட்டணம் உயருமா?

நிச்சயமாக உயராது. ஆனால் டிக்கெட் அச்சடிக்கும் காகிதத்தின் விலை உயர்வினால் பஸ் கட்டணம் உயரக் கூடும்.

— அமைச்சர் பொன்னையன்

⚭ சுதந்திரமாகத் தேர்தல் நடத் துவது எப்படி?

எதிர்க்கட்சிக்காரர்கள் தாரா ளமாய்ப் பேசுவதற்கு அனுமதிக்க வேண்டும்— சிறைக்குள்.

— ஜியா?

⚭ தற்குறிப்பேற்ற அணி, வஞ் சகப் புகழ்ச்சி அணி இந்த இரண்டினுள் சிறப்பானது எது?

மூன்றாவது அணி.

— கல்யாணசுந்தரம்?

⚭ படுத்தால் தூக்கம் வருவதில்லை. ஏகப்பட்ட மண்டைக் குடைச்சல். ஒரு வைத்தி யம் சொல்லுங்களேன்.

வேலையை ராஜினாமா செய்து விட்டுத் துண்டை விரித்துப் போட்டுக் கொண்டு படுங்கள். சுகமான நித்திரை கியாரண்டி.

— வாசுதேவன் நாயர்

—ஆத்மா



## 6 முதல் 60 வரை

'ரஜனியிலிருந்து ஸ்டைலை எடுத்துவிட்டால் என்ன மிஞ்சும்?' என்று டைரக்டரை யாரோ கேட்டிருக்க வேண்டும்.

ரஜனி: நிதானம், ஆழம், ஒன்றி நடிக்கிறார். பழைய சிவாஜியைப் பார்க்கிற மாதிரி திருப்தி ஏற்படுகிறது.

முதலிரவு அறையில் ஐயாயிரமே குறியாகக் காத்திருப்பதும், புது மனைவி பால் டம்ளருடன் வந்ததும், 'அப்பா கொடுத்தனுப்பிச்சாரா?' என்று சில நிமிடத் தயக்கத்துக்குப் பிறகு ஆர்வத்துடன் கேட்பதும், படாபட் கலங்கிப் போய் 'ஐயாயிரமா? அப்பா ஒண்ணும் சொல்லலையே? எதுவும் தரலையே?' என்றதும் ரஜனிக்கு ஏற்படுகிற ஏமாற்றம்; பொங்கி வருகிற ஆத்திரம்; பால் டம்ளர் பழம் எகிறும் எகிறல்; நண்பனால் சமாதானப் படுத்தப்பட்டுத் திரும்ப வந்து மனைவிக்கு ஆறுதல் சொல்லுதல்—போலித்தனமில்லை.

படாபட் முதல் சந்திப்பிலேயே மனசை அள்ளிக் கொண்டு விடுகிறார். 'எனக்கு ஒண்ணுமே தெரியாதுங்க,' என்று சொல்லும் பாவம், அவர் அடித்துச் சிதைத்து விட்டுப்போன சாமான்களை அடக்கமாய் எடுத்து வைப்பது—பளிச்சென்று விளக்குப் பாட்டாற் போன்ற நடிப்பு.

கதை இப்படித்தான் போகுமென்று தெரிவதால் அலுப்பு. 'று' கூடப் போடலாம்.

சங்கீதாவிடம் அவரது தகப்பனார் சொல்கிறாரே, 'ஓகோ, அவர் ரொம்ப நல்ல பையன்தான். எனக்கும் சந்தோஷம். ஆனா அவருக்கென்று சில பொறுப்புக்கள் இருக்கு. நான் பார்த்திருக்கும் மாப்பிள்ளை பாங்கிலே வேலை பார்க்கிறார். யோசிம்மா,' என்று. ரொம்ப நாசுக்கு.

பகவதியின் பக்கவாதக்கார நடிப்பு பக்கா.

'கேட்டதும் கொடுப்பவனே கண்ணா'வாக சோ. வித்தியாசமான சோ(கம்).

வசனம், நடிப்பு, எல்லாவற்றிலுமே ஓர் ஆழமான, அடக்கமான கம்பீரம் தெரிவது புதுமை.

முத்தான டைரக்ஷன்; பஞ்சான கதை.


ஒரு ட்யூன் - ஒரு ஸ்பூன் - ஒரு கொலை [18
கதை: கமலினி
சித்திரம்: ராஜ்
வாசலில் ஒரு வண்டி வந்து நின்றது.
இது தான் காமினி என்கிற பெண்ணின் வீடா? வாருங்கள்.
காமினி ஏதோ நினைவாக இருந்தாள்.
சுருதி சரியாக இல்லை.
போலீஸ் அதிகாரி பேசினார்.
ரமேஷ் சந்தர் கொலை சம்பந்தமாக உங்களிடம் பேச வேண்டியிருக்கிறது.
காமினி திடுக்கிட்டாள்.
தயவு செய்து ஸ்டேஷனுக்கு வருகிறீர்களா?

# யாரிடமும் சொல்லாதே— நான் ஒரு பெண்!

பட்டணத்து நாகரிகம் எவ்வளவு பரபரப்பாக வேண்டுமானாலும் ஆகட்டும்; ஜனநாயக வாதிகள் எவ்வளவுதான் கரடியாகக் கத்தட்டும்; இங்கே வாழுகிறவர்கள்தான் வாழுகிறார்கள், மற்றவர்கள் வறண்டுதான் கிடக்கிறார்கள். சுதந்திரம் வந்து முப்பத்திரண்டு ஆண்டுகளாகியும்கூடப் பொருளாதார ஏற்றத்தாழ்வு அப்படியேதான் இருக்கிறது. பேச்சுரிமை எழுத்துரிமை என்ற பேரில் வறட்டுத்தனமான பொழுதுபோக்கு மட்டும் தாராளமாக வழங்கப்பட்டிருக்கிறது.

இந்தியப் பொருளாதாரத்தின் சிருஷ்டிதான் டாக்ஸி டிரைவர் ராதா. தான் எங்கு பிறந்தவன் எப்படி வளர்ந்தவன் என்ற விவரங்களை அவன் யாருக்கும் சொன்னதில்லை. தான் ஒரு அனாதை என்று மட்டும் கூறிக்கொள்வான்.

சென்னையில் பிரபலமான ஒரு ஹோட்டலுக்கு எதிரில் இருக்கும் பத்துப் பதினைந்து டாக்ஸிகளில் அவனுடையதும் ஒன்று. மற்ற டாக்ஸி டிரைவர்கள் அரட்டை அடிக்கும்போது தன்னுடைய டாக்ஸியில் சாய்ந்தவாறு ராதா அதில் கலந்துகொள்வானே தவிர, மற்றவர்களைப்போல் தோளில் கை போட்டுக்கொண்டு குதிக்கமாட்டான். மற்றவர்களெல்லாம் ஒரே காக்கிச் சட்டையையும், பேண்டையும் இரண்டு மூன்று நாட்கள் போட்டிருந்தால்கூட, ராதா தினசரி சலவைச் சட்டையாகத்தான் போடுவான். அவன் ஓட்டியதும் அவனது சொந்த டாக்ஸிதான்.

கையில் இருந்த பணத்தையெல்லாம் போட்டுத் தன் தந்தை அதை வாங்கிக் கொடுத்ததாகவும், நாளொன்றுக்கு ஐம்பது ரூபாயாவது கொண்டு போய்ப் பெற்றோரிடம் கொடுத்துவிட வேண்டும் என்றும் ராதா சொல்வான். தன் வீட்டுக்கு யாரையும் விருந்துக்கு அழைக்கமாட்டான்; தன் வீடு எங்கிருக்கிறது என்பதைக்கூடச் சொல்ல மாட்டான். வயது இருபத்தைந்துக்கு மேல் இருக்காது. சிவப்பாக அழகாக இருப்பான். தலைமுடி கருகருவென்றிருக்கும்.

''உனக்கிருக்கும் அழகுக்கு இந்தப் பணத்தை டெபாசிட் கட்டி ஏதாவது ஒரு பாங்கில் நீ வேலைக்குச் சேர்ந்திருக்கலாமே? ஏன் இந்த வேலைக்கு வந்து சேர்ந்தாய்?'' என்று சில பேர் அவனைக் கேட்பார்கள்.

''எந்த மனிதனும் உத்தியோகத்தையே நம்பி வாழக்கூடாது. சொந்தமாகத் தொழில் கற்றுக்கொள்ள வேண்டும். தொழில் செய்கிற தற்குறி லட்சாதிபதியாகிறான்; உத்தியோகம் பார்க்கும் பட்டதாரி ஆயிரம் ரூபாயை ஆயிரத்தி இருநூறாக்கவே மன்றாடுகிறான். தெருவிலே ஐஸ் விற்பவனுக்கும், பாங்க் குமாஸ்தாவுக்கும் வருமானத்தில் என்ன வித்தியாசம்?'' என்று கேட்பான் ராதா.

இப்படி ஒரு விசித்திரமான இளைஞன் தங்களோடு இருப்பது பற்றி மற்ற டாக்ஸி டிரைவர்கள் அடிக்கடி பேசிக்கொள்வார்கள்.

ராதாவின் டாக்ஸியில் பெண்கள் தனியாக ஏறினாலும், அவன் அவர்களை நிமிர்ந்துகூடப் பார்ப்பதில்லை. அதனால் யோக்கியன் என்று சில பேர் அழைத்தார்கள். திமிர் பிடித்தவன் என்றும் சிலர் பட்டம் சூட்டினார்கள்.

ராதா டாக்ஸி ஓட்டும்வரைதான் 'ராதா' என்ற இளைஞனாக இருப்பான். இரவு வீட்டுக்கு வந்துவிட்டாலோ, அவன் இளைஞனல்ல; 'ராதா' என்ற குமரிப் பெண்ணாக மாறிவிடுவான்.

ஆம். ராதா ஒரு கன்னிப் பெண். மனித குலத்தின் பண்பாட்டுக்குப் பயந்துகொண்டு அவள் ஆண் வேடம் தரித்திருந்தாள்.

கண்ணதாசன்



அவள் தனது ஆணுடையைக் கழற்றும்போதும், சேலை கட்டும்போதும் அவளுடைய அன்னை கண்ணீர் வடிப்பாள்.

பெண், பெண்ணாகவே வாழ்வதற்கு இந்தப் பூமியில் இடமில்லையே? மேலை நாடுகளில் எல்லாத் தொழில்களிலும் பெண்கள் இருக்கிறார்கள். எங்கோ விரும்பினால் காதல் நிகழ்கிறதே தவிர, எக்கச்சக்கமாக இவள் மாட்டிக் கொள்ளமாட்டாளா என்று யாரும் எதிர்பார்ப்பதில்லை; இந்தியாவில் அது மிக அதிகம்.

ஒரு பெண் டாக்ஸி ஓட்ட வேண்டும் என்றால், அவளுக்கு ஆண்மை இருக்கவேண்டும்; இல்லை என்றால் ஆண் வேடம் தரிக்க வேண்டும். டாக்ஸிகளில் பெண்களை ஏற்றிக்கொண்டு வருகிறவர்கள் டிரைவரே பெண்ணாக இருந்தால் விடுவார்களா?

கெட்டிக்காரத் தனமாகத்தான் முடியை வெட்டிக்கொண்டு ஆண் வேடம் தரித்துக் கொண்டாள் ராதா.

அவள் இருந்த வீட்டுக்கு அக்கம்பக்கத்தில் இருந்தவர்கள்கூட, ராதாவின் வீட்டில் ஒரு பெண்ணும், அவளுடைய சகோதரனும் இருப்பதாகக் கருதினார்களே தவிர, ராதாவே இரட்டை வேடம் போடுவதாக நினைக்கவில்லை.

ராதா டாக்ஸி ஓட்டிக் கொண்டு செல்லும்போதெல்லாம் பாலாஜிநகரில் இருந்து ஒரு பெண் நடந்து வருவாள். அடிக்கடி ராதாவைப் பார்ப்பதும், சிரிப்பதும் அவள் பழக்கமாக இருந்தன. சமயங்களில் காரணம் இல்லாமலேயே அந்தப் பெண் டாக்ஸியில் ஏறிக்கொண்டு ராயப்பேட்டைக்கும், மயிலாப்பூருக்கும் போய்த் திரும்புவாள். அதற்குக்

காரணம், ராதாவோடு பழகிக்கொள்ள வேண்டும் என்பதே.

தான் ஒரு ஆடவன் என்று நினைத்து அந்தப் பெண் காதலிக்கிருள் என்பது ராதாவுக்கு நன்ருகப் புரிந்தது. ஆனல் அதை எப்படிச் சொல்வது? தான் ஒரு பெண் என்பதை எப்படி வெளியிடுவது? அவள் கண்ணுக்குப் படாமலே இருந்துவிடத்தான் ராதா விரும்பினள். ஆனல் வாடிக்கைக்காரர்கள், 'பாலாஜிநகருக்குப் போ' என்ருல் அவள் என்ன செய்வாள்?

ஒருநாள், சுமித்ரா என்ற அந்தப் பெண் மயிலாப்பூரில் சினிமா பார்த்துவிட்டு வரும்போது திடீரென்று ராதாவின் டாக்ஸி எதிரே வந்தது. டாக்ஸியை நிறுத்தினள்.

ஏறி உட்கார்ந்தவள் சும்மா இருந்தாளா? ''நல்ல வேளை. நான் உங்களோடு வெகுநேரம் பேச வேண்டும் என்று நினைத்தேன். நான் இங்கே ஒய். ஜி. ஏ.யில் ஒரு தனி அறையில் தான் இருக்கிறேன். அங்கே வாருங்கள் கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டுப் போகலாம்!'' என்று அழைத்தாள், அந்தப் பெண்.

சே! என்ன இப்படிக் கூச்சமில்லாமல் அழைக்கிருளே என்று, ராதாவுக்கே வெட்கமாகத்தான் இருந்தது.

''இல்லை. நானே வருகிறேன்,''



நண்பன்: இரண்டு நாட்களாகப் பரீட்சை எப்படி?

மற்றவன்: நேத்து கேள்விக்குப் பதில் தெரியலே. இன்னைக்குக் கேள்வியே புரியலே.

—சரஸ்வதி பஞ்சு.

என்று மறுத்துப் பார்த்தாள். சுமித்ர விடுவதாக இல்லை.

''நான் ஒன்றும் மோசம் பெண்ணல்ல, கௌரவமான உத்தி கம் பார்ப்பவள்தான். உங்களைக் கெ நோக்கத்தோடு அழைக்கவில்லை. தனி கவே கிடக்கும் ஒரு பெண்ணுக்கு, சுத் துணைக்கு ஒரு ஆண் வேண்டு அதுவும் உங்களைப்போலவே நல்ல களாக இருந்தால் நிம்மதி. அ காகவே அழைத்தேன்!'' என்ரு சுமித்ரா.

''நான் வருகிறேன். ஆ பத்தரை மணிக்குள் வீட்டுக்குப் போ விட வேண்டும்,'' என்ருள் ராதா.

''அதற்குமேல் பேசுவத என்ன இருக்கிறது? தாராளமா போய்விடலாம்!'' என்ருள், சுமித்ர

சுமித்ரா தங்கியிருந்த வேலை செய்யும் பெண்களுக்கான ஹாஸ்டல். அங்கே ஒரு தனியறை யில் சுமித்ரா இருந்தாள். அந்த அ வசதியானதுதான். ஒற்றைக் கட்டி காத்ரேஜ் பீரோ, ஏராளமான புத்த கள் ஆகியவை இருந்தன.

''இங்கே பத்தரை மணிக் மேல் சொந்தக்காரர்கள் கூடத் தங் முடியாது,'' என்று சொன்னபடி, க வைத் திறந்து ராதாவை உள்ளே அழைத்துச் சென்ருள் சுமித்ரா.

உள்ளே சென்றதும், ''ஐயே இந்த அறை ஒரே புழுக்கம். சட்டை யைக் கழற்றுங்கள்,'' என்ருள், அவ

ராதா பயந்து விட்டாள் ''நான் சித்திரை மாத வெயிலி கூட இந்தச் சட்டையோடுதான் அ வேன். சட்டையைக் கழற்ற வே டாம்!'' என்று கையை வைத்து மூடி கொண்டாள், ராதா.

''நன்ருய் இருக்கிறது. ச டையைக் கழற்றி விட்டுக் கொஞ்ச மின்சார விசிறிக்குக் கீழே உட்காருங்கள் காற்றுப் பட்டால் கொஞ்சம் களைப் நீங்கும்,'' என்று சொன்ன சுமித்ர தானே சட்டையைக் கழற்றப் போனுள்

''இல்லை. முடியாது,'' என் அறவே மறுத்து விட்டாள் ராதா.

''ரவிக்கையைக் கழற்ற சொன்னுல் பெண்கள் பயப்படலாம் சட்டையைக் கழற்றுவதற்கு ஆண்க பயப்படலாமா? இது என்ன பைத்திய

ரத்தனம்?'' என்று கேட்டாள்
மித்ரா.

''ஆடவர்களும் தங்கள்
டம்பைப் பெண்களுக்கு மறைக்க வேண்
யது அவசியம்தான். கணவனும் மனைவி
ம் தனி அறையில் தங்கள் மேலா
டையைக் கழற்றிக் கொள்ளலாம். மற்ற
டங்களில் மட்டு மரியாதை இல்
யா?'' என்று கேட்டாள் ராதா.

''சரி, பரவாயில்லே. நீங்கள்
ன் இன்னும் திருமணம் செய்து
காள்ளவில்லே?'' என்று கேட்டாள்
மித்ரா.

''நல்ல பெண்ணுக பெண் என்
பற்றோர்கள் தேடிக் கொண்டிருக்கிறார்
ள். கிடைத்தால் நடத்திவிட வேண்டி
து தான்!'' என்று சிரித்தான் ராதா.

''இதோ பாருங்கள்! ஆண்
ளுக்குப் பெண்களின் குரல் இருந்தால்
வ்வளவு அழகாக இருக்கிறது தெரி
மா? நீங்கள் சிரிக்கும்போது ஆண்
மையின் பெண்மை தோன்றுகிறது!''
ன்றாள் சுமித்ரா.

''சில பெண்கள் அப்படிப்
ட்ட ஆடவரைத்தானே விரும்புகிறார்
ள்?'' என்றாள் ராதா.

''எனக்கு அதுதான் ரொம்
ப் பிடிக்கும்!'' என்றாள் சுமித்ரா.

''நீங்கள் ரொம்ப நெருங்கி
ருகிறீர்கள்..!''

''கள்ளம் கபடம் இல்லாத
ர்கள் உடனே நெருங்கி விடுவார்
ள்!''

''சரி. நான் புறப்படுகி
றன்.....''

''நாளைக்கும் நான் உங்களைச
ந்திக்க வேண்டும்....''

''நாம்தான் தினமும் சந்
க்கிறோமே!'' என்று கூறிவிட்டு நடந்
ான், ராதா.

வீட்டுக்கு வந்த ராதா நடந்த
த்தையெல்லாம் தன் தாயிடம் விவரித்
ான்.

''இப்படி எத்தனை கூத்து
னிமேல் நடக்குமோ....'' என்று
யந்தாள் தாய்.

''பேசாமல் வேலைக்கு ஒரு
ள் வைத்து விட்டால், அவனே கார்
ட்டிக் கொள்வான். சம்பளம்தானே



''என் வீட்டுக்காரர் எந்தக் காரியம் செய்தாலும் 'எதுகை மோனை' யோடத்தான் செய்வார்!''

''எப்படி?''

''முத்தம் குடுக்கறதுன்னு முற்றத்துக்குக் கூப்பிடுவார். 'அறை'யறத்துக்கு 'அறைக்குள்ளே' கூப்பிடுவார்''

—அ. இராமதாஸ்

□ □ □

ஒரு பிரமுகர் மீன்சந்தையைப் பார்வையிட்டார். ''இங்குள்ள எல்லாவகை மீன்களிலும் ஒவ்வொன்று பாக்பண்ணி அனுப்ப முடியுமா?''

''பை ஆல் மீன்ஸ்.''

—''இருஷ்.''

□ □ □

ஒரு பைத்தியம்: ''இம்மாம் பெரிய ஏரோப்ளேனுக்கு எப்படிடா பெயிண்ட் அடிப்பாங்க?''

இன்னொரு பைத்தியம்: ''மேலே போகும்போது சின்னதா ஆயிடுது இல்லெ! அப்போ அடிச்சுடுவாங்க!''

—எஸ். டி. பெரோஸ்

□ □ □

''ஏங்க, மத்தத் தலையணைக்கெல்லாம் வராம இதுக்கு மட்டும் மூட்டைப்பூச்சி வந்திருக்கே?''

''சொன்னேனே கேட்டியா? அதுக்கு மட்டும் ஏன் 'வெல்கம்'னு எழுதியிருக்கிற உறை போட்டே?''

—எம். எஸ். ராமச்சந்திரன்

□ □ □

''தம்பியுடையான் படைக்கஞ்சான் என்கிற பழமொழி அதோ போறாரே அவருக்கு ரொம்பப் பொருத்தம்.''

''எப்படி?''

''அவர் தம்பி படைமருந்து வியாபாரி.''

—வி. வி. ஸ்ரீதர்

போகப் போகிறது: ராதாவுக்குக் கல்யாணத்தை முடித்து விடலாம்,'' என்றார் நோயுற்ற தந்தை.

''நீங்கள் பார்த்து எதைச் செய்தாலும் எனக்குச் சம்மதம்,'' என்று சொல்லிவிட்டு நிம்மதியாகத் தூங்கினாள் ராதா.

அன்று நல்ல மழை. ஹோட்டல் அருகில் டாக்ஸி நின்றபோது, குடையைப் பிடித்துக் கொண்டு அங்கே வந்து விட்டாள், சுமித்ரா.

''டிரைவர்! காரை எடு!'' என்று அறிமுகம் இல்லாதவள் போல் பேசிக் கொண்டு காருக்குள் ஏறி உட்கார்ந்தாள்.

அப்போது ராதாவின் சட்டை நனைந்திருந்தது. காரின் பின்னாலிருந்தபடியே சட்டையில் கை வைத்து ஈரமா என்று பார்த்தாள்.

அங்கே ஈரமும் தெரிந்தது. ராதா ஒரு பெண் என்ற ரகசியமும் தெரிந்தது.

வீட்டுக்கு வந்ததும் மடமடவென்று அவளைக் கேளாமலேயே சட்டையைக் கழற்றினாள் சுமித்ரா.

உடனே ராதா அவள் கையைப் பிடித்துக் கொண்டு, ''இதை யாரிடமும் சொல்லாதே. நான் ஒரு பெண்தான்!'' என்றாள்.

தெரியுமே எனக்கு என்றபடி அவளைக் கட்டிப் பிடித்துக் கன்னம், உதடு, மார்பு அனைத்திலுமே முத்தம் கொடுத்தாள் சுமித்ரா.

ராதாவைக் கட்டிலில் சாய்த்துக் காதல் லீலைகள் நடத்த ஆரம்பித்தாள்.

''சீச்சீ! என்ன இது! என்னை விடு! நான் வெளியே போகிறேன்,'' என்று அவள் கன்னத்தில் ஓங்கி அறைந்தாள் ராதா.

சுமித்ராவின் கண்களிலிருந்து பொலபொலவென்று கண்ணீர் வடிந்தது. ராதா திரும்பிப் படுத்தாள். கொஞ்ச நேரத்தில் அவளை மீண்டும் திரும்பச் சொன்னாள் சுமித்ரா. திரும்பிப் பார்த்த ராதா திடுக்கிட்டாள்.

சுமித்ரா ஓர் ஆண் மகனாக நின்றான்.

## ஜனாதிபதி ஜோக்



அமெரிக்க ஜனாதிபதியாக இருந்த டாஃப்ட் என்பவருக்கு நகைச்சுவை ரசனை உண்டு. அவர் சற்றுப் பருமனானவர்.

அவரது மெய்காப்பாளரான மேஜர் பட் என்பவர், பொன்னிற 'பைப்பிங்' வைத்த தடபுடலான சீருடை அணிந்திருந்தார். எல்லோர் கண்களும் அவர்மீதுதான் இருந்தது.

பதவி ஏற்ற புதிதில் அவர் ஒரு சீமாட்டி வீட்டுக் கல்யாணத்துக்குப் போயிருந்தார். அதுபற்றிச் சீமாட்டிக்கும், அவளது தோட்டக்காரனுக்கும் நடந்த உரையாடலை ஜனாதிபதி டாஃப்ட் அடிக்கடி சொல்லிக் காட்டுவது உண்டு.

''அம்மா! கண்ணாலம் படா ஜோராக நடந்தது அம்மா.''

''ஆமாம் அப்பா. ஜனாதிபதியே வந்திருந்து கௌரவப்படுத்தினார். எல்லோருக்கும் கிடைக்குமா?''

''ஜனாதிபதி படா ஜோரா கீறார் அம்மா. தங்க யூனிபாரம் போட்டுகினு ஜிலுஜிலுன்னு இன்னாசோக்கா இருந்தார்! ஆமா, அவர் பின்னாடியே சுத்திகினுருந்தாரே, தொந்தியும் தொப்பையுமா ஒரு கிழவன், அது யாரும்மா?''

—ரிச்சர்ட் மாரீஸ். ('ஜனாதிபதிகளின் நகைச்சுவை')

# லம்

ராஜ்யஸ்ரீ





புருவத்தில் கை வைத்துப் பார்த்தான் புண்ய
கோடி:

ஆள் காட்டி விரலில் பிசு
பிசுத்தது மை. கறுப்பாக ஒட்டிக் கொண்
டது விரலில்.

மை இட்டுக் கொண்டது
போதாதோ...அதுதான் தாரா இன்
னும் வரவில்லையோ?

பாண்ட் பாக்கெட்டில்
பிளாஸ்டிக் கவரில் போட்டு வைத்
திருந்த சின்னச் சிமிழை எடுத்தான்
புண்ணியகோடி. ரொம்பச் சின்ன
தாயிருந்தது அது. நாலணா சைஸ்.
அதை இடது உள்ளங்கையில் வைத்துக்
கையைச் செப்பு மாதிரி வைத்துக்
கொண்டான்.

வலது கைக் கட்டை
விரல் நகத்தால் சிமிழின் மூடியை
மெதுவாகத் திறந்தான். அழுத்தித்
திறக்கப் பயம், அளவுக்கு மீறிப்

பலத்தைப் பிரயோகம் செய்து சிமிழ் வெளியே எகிறிப் போய் விழுந்து விட்டால்?

மெதுவாகத் திறந்தான் சிமிழை. உள்ளே இருளாகக் கப்பிக் கொண்டிருந்தது மை. மந்திரவாதி கொடுத்த மை.

அதைச் சிறிது அதிகமாகவே எடுத்து இரண்டு கண்களுக்கும் மேலேயுள்ள புருவங்களின் மீது தீற்றிக் கொண்டான்.

அந்த வீட்டுக் கதவு மூடியிருந்தது. மூடியபடியே இருந்தது. அவ்வப்போது அது திறந்து கொள்ளும் பொழுது யார் யாரோ வெளியில் வந்தார்கள். அவ்வப்போது அது மூடிக் கொள்ளும் பொழுது யார் யாரோ உள்ளே போனார்கள்.

தாரா மட்டும் வெளியில் வரவில்லே.

ஆச்சரியமாக இருந்தது புண்யகோடிக்கு. தாராவுக்கு வீட்டுக்குள் ஒரு நிமிஷம் கூட இருப்புக் கொள்ளாது என்பது தெரியும் அவனுக்கு. வாசலில் எந்தச் சின்ன சப்தம் கேட்டாலும் குழந்தை மாதிரி ஓடி வந்து விடுவாள் வெளியே.

பாண்டும் மேளமுமாய் சினிமா வண்டி போயிற்று. 'கோவிந்தா, கோவிந்தா' என்று கத்திக் கொண்டு ஒரு மஞ்சள் கோஷ்டி போயிற்று. 'ஊய்' என்று கத்திக் கொண்டு ஒரு தயிர்க்காரன், 'டிங்–டிங்' என்று மணியை அடித்துக் கொண்டு ஒரு ஸோன் பப்டிக்காரன், ஐஸ் வண்டியின் மூடியை 'பட்பட்'டென்று அடித்துக் கொண்டு ஒரு ஐஸ் வண்டிக்காரன்....

ஊஹூம். தாரா வரவில்லே வெளியே. வரவேயில்லே.

ஏன் வரவில்லே தாரா?

வந்து விடுவாள் மை இப்



இக் கொண்டதும் என்றானே மந்திர வாதி?

அவன் சொன்னதெல்லாம் ஞாபகம் வந்தது.

''உனக்கு அந்தத் தாரா என்கிற பெண் வேணும்?''

''ஆமாம்!'' என்றான் புண்ய கோடி.

''நீ அதை ஆசைப்படறே?''

''கொள்ளையா ஆசைப்பட றேன்!''

''அது உன்னை ஆசைப் படலே?''

''படுது! ரொம்பப் படுது! ஆனால் அதுக்கு பயம் ஜாஸ்தி! என்னை பார்த்துச் சிரிப்பா. கண்ணாலே பேசுவா. கைசாடை காட்டுவா...ஆனா... ஆனா...''

''சொல்லு!'' என்றான் மந் திரவாதி.

''படி இறங்கி வரப் பயப் படறாள்.''

''சரி, என்னுடைய மை வர வழைக்கும்.''

''மையா?''

''எப்போ மை கிடைக்கும்?'' என்றான் புண்ணியகோடி.

''தலைப்பிள்ளை மண்டை ஓடு வேணும்!''

''ஐயோ!'' என்றான் புண்ய கோடி. ''என்னாலே பணம்தான் தரமுடியும்!''

''அது போதும்! பாக்கியை எல்லாம் நான் பாத்துக்கறேன்!''

நோட்டு நோட்டாகப் புண்ணியகோடி கொண்டு வந்து கொடுத்தான் மந்திரவாதியிடம்.

''என்னிக்கு அமாவாசை?''

''நாளன்னைக்கு,'' என்றான்.

''அன்னைக்கு பன்னிரண்டு மணிக்கு வா!''

''எங்கே வரணும்?''

''சுடுகாட்டுக்கு!''

''சுடுகாட்டுக்கா?''

''ஆமாம்!''

''எந்த சுடுகாட்டுக்கு?''

''குரோம்பேட்டை தாண்டி னதும் ஸானடோரியம் போற வழி யிலே ரயில் லைனை ஒட்டியிருக்கே, அங்கே.''

உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு அங்கே போனான் புண்ணியகோடி. டிரங்க் ரோடு விளக்கு கள் வேறு சதி செய்திருந்தன ரோடில். கார் இருட்டு. மையிருட்டு. கும்மிருட்டு.

'மினுக், மினுக்' என்று எரிந்து கொண்டிருந்தது ஒரு அகல் விளக்கு. கொஞ்சம் பலமாகக் காற் றடித்தாலும் போதும். பிராணனை விட்டுவிடும் அது. அதன் மங்கிய ஒளி யில் மந்திரவாதி பூசை போட்டிருந் தது தெரிந்தது.

திடீரென்று அகல் விளக்கு அணைய, இருள் 'சுப்'பென்று வியாபிக்க, சில் வண்டுகள் 'ஙொய்' என்று கத்த, நரி ஒன்று ஊளை யிட, எதன் மீதோ தடுக்கி விழுந்த புண்யகோடி சுதாரித்துக் கொண்டு ஓடி, மேல் மூச்சு கீழ்மூச்சு வாங்க தன் அறையை அடையும் பொழுது, காலைநேரம் கொஞ்சம் கொஞ்சமாக விடிய, வைகறைப் பொழுது பிரச விக்கத் தொடங்கிற்று ஒளியை.

காலையில் வாசல் தெளிக்க

## மழையின் வயது ஐந்து

பாரதி விழா. விழாத் தலைவர் ம. பொ. சி. ஒலி பெருக்கி முன்பு வந்து, ''இந்த ஆண்டு குழந்தைகள் ஆண்டு ஆதலால், ஒரு சிறுவன் இப்போது பேசு வான்,'' என்று அறிவிப்புச் செய்தார். ஐந்து வயதுப் பொடியனொருவன் முன்னால் வந்து நின்றான். சபையில் பிரமிப்பு. ம. பொ. சி. சிறுவனைப் பார்த்து, பெயர் என்ன என்று வினவ, அவன் பளிரென்று ''பாரிவேந்தன்'' என்று பதில் அளித்தான். ம. பொ. சி. ''பலே பாண்டியா, பேசு'' என்றார். பையன் பத்து நிமிஷம் பாரதியின் ''பாஞ்சாலி சபதம்''வரிகளை பாவத்தோடு வெளுத்துக் கட்டினான். எல். கே. ஜி. வகுப்பில் படிக்கும் பாரிவேந்தனின் தந்தை நணபால், எஸ். வி. சகஸ்ரநாமம் குழுவில் ஒரு நடிகர். பாஞ்சாலி சபதத்தில் துச்சாதனனாக நடிப்பவர்.

—பெ. சு. சங்கரன்



யார்?

88'ம் பக்கம்

பெருக்க கோலம்போட்டப் புடவையைத் தூக்கி இடுப்பில் செருகிக் கொண்டு வருவாளே தாரா? ஏன் காணோம்!

'கிர்கிர்'ரென்று வெயில் ஏற ஏற, மந்திரவாதி வெறும் வண்டி மையைக் கொடுத்து ஏமாற்றியிருப்பானோ? கோடி மை இட்டுக் கொண்ட பிறகும் தாரா வராதது அவனது சந்தேகத்தை அதிகரித்தது

மந்திரவாதியைத் தேடிக் கொண்டு சுடுகாட்டுக்கு ஓடினான்.

அங்கேதானிருந்தான் மந்திரவாதி.

''தாரா வரலே! தாரா வரலே!'' என்று அவன் முன்னேபோய் நின்று கையையும் காலையும் ஆட்டியபடி ஏமாற்றத்திலும், ஆத்திரத்திலும், காபத்திலும் கத்தினான் புண்ணியகோடி.

தான் அரும்பாடு பட்டுத் தயாரித்த மை வேலை செய்யாதது ஆச்சரியத்தையும் அதிர்ச்சியையும் அளித்தது மந்திரவாதிக்கு

''நீ எங்கே இருக்கே?''

தெருப் பெயரைச் சொன்னான்.

சிறிது யோசித்தான் மந்திரவாதி பிறகு, ''அந்தத் தெருவிலே எத்தனை வருஷமாயிருக்கே?'' என்று கேட்டான்.

''பல வருஷங்கள்!''

''எந்தெந்த வீட்டில், யார் யார் இருக்கிறார்கள் என்பது தெரியுமா?''

''தெரியும்!''

''அவங்க உறவு முறை?''

''அதுவும்!''

''வா, என் கூட!'' என்ற மந்திரவாதி புண்ணியகோடியின் கையை இரும்புப் பிடியாகப் பற்றி அவனை 'தர தர'வென இழுத்துக் கொண்டு சுடுகாட்டின் ஒரு கோடிக்குச் சென்றான்.

''பாரு இந்தப் பெண்ணை! இது உங்கள் தெரு பெண்தான்! இவள் தலையோட்டை வைத்துத்தான் வசிய மை தயாரிச்சேன்! இவள் யார் வீட்டுப் பெண், அந்த வீட்டு தலைக் குழந்தைதானா என்று பார்! ஒருவேளை அது தலைப் பிள்ளையாக இல்லையென்றால் மை பலிக்காமல் இருக்கக் கூடும்...''

பார்த்தான் புண்ணியகோடி

அடுத்த கணம் அந்த இடமே கிடுகிடுக்கும்படி அடி வயிற்றிலிருந்து ''தாரா!'' என்று கத்தினான்.

ளவு சரியாக இல்லை—விலை ...
தாவது ஒரு கம்ப்ளெயிண்டு...''

''பால் பணத்தை வசூலிக்க முடியாமல நடையாக நடக்கிறார் என்று சொல்லு—''

''அந்தக் கஷ்டம் இல்லை அப்பா! வாடிக்கையாளர்கள் அத்தனை பேரும் எங்க பாங்கு குமாஸ்தாக்கள்தான். சம்பளத் தேதியன்று சாமர்த்தியமாகப் பேசி பணத்தை வசூல் செய்து விடுகிறார் உங்கள் மாப்பிள்ளை.''



ராமலிங்கத்திற்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது.

''ஒரு பெரிய பாங்கில் மானேஜர் வேலை—அதோடு கை நிறைய சம்பளம் வாங்குகிறார்—இவர் இப்படி பால் வியாபாரம் செய்து சம்பாதிக்க வேண்டுமா? கேட்கவே வெட்கமாக இருக்கிறது—இவர் கண்டிப்பாக பாங்கு வேலையைப் போக்கிக் கொள்ளத்தான் போகிறார்!'' என்றார் மிகுந்த கோபமான குரலில்.

''இந்த பாங்கு வேலை நிலைத்திருக்கத்தாம்பா உங்க மாப்பிள்ளை பால் வியாபாரம் செய்கிறார்!'' என்றாள்

# வேண்டாம் பாங்க் மாப்பிள்ளை



ஆர்.எஸ். மணி

பானு அழுத்தம் திருத்தமாக. ராமலிங்கத்திற்கு ஒன்றும் புரியவில்லை.

''இந்த பால் வியாபாரத்திற்கும் மாப்பிள்ளையினுடைய பாங்கு வேலைக்கும் என்னமா சம்பந்தம்?'' கவலையோடு கேட்டார் அவர்.

''அதைத்தான் சொல்ல வருகிறேன். உங்க மாப்பிள்ளை இங்கே மானேஜராக வந்தவுடனேயே 'மாட்டுக்குக் கடன் கொடு, ஆட்டுக்குக் கடன் கொடு, கோழிக்குக் கடன் கொடு,' என்று ஹெட் ஆபீசிலிருந்து லெட்டர் எழுதிக் கொண்டேயிருந்தார்கள். அவர்களைத் திருப்தி படுத்த, நாலு பேருக்குக் கறவை மாடு வாங்கக் கடன் கொடுத்தார் உங்கள் மாப்பிள்ளை. அந்த நாலு பேரும் மாடுகளை வாங்கிப் பாலைக் கறந்து விற்று நிம்மதியாகச் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். பாங்கில் கடன் வாங்கியதே அவர்களுக்கு மறந்து போய் விட்டது.''

''அவர்களின் மீது நடவடிக்கை எடுக்க வேண்டியதுதானே!''

''அப்படித்தான் செய்ய நினைத்தார். ஆனால் கடன் வாங்கியவர்கள் ஒரு நாள் ஒரு எம்.எல்.ஏ யை அழைத்துக் கொண்டு வந்து விட்டார்கள். 'நாங்கள் கேட்கும் போது கடன் கொடுக்க வேண்டும்—இது பாங்கின் கடமை—கொடுத்த கடனைத் திருப்பிக் கேட்கக் கூடாது—இது சர்க்கார் கடன் வாங்கியவர்களுக்கு அளித்துள்ள சலுகை—நடவடிக்கை எடுப்பேன் என்று பயமுறுத்துகிறீர்களாமே? கடன் வாங்கியவர்களுக்கு அதை எப்பொழுது திருப்பிக் கொடுக்க வேண்டும் என்று தெரியாதா? நம்மை யாரும் எதுவும் செய்துவிட முடியாது 'என்று கடன் வாங்கியவர்கள் தலை நிமிர்ந்து நடமாடுமளவிற்கு வேறு எந்த நாட்டிலாவது சட்டம் போட்டிருக்கிறார்களா? அத்துடன் உங்களிடம் கடன் வாங்கி இருக்கிறார்களே—இந்த நாலு பேரும் எவ்வளவு பெரிய மனிதர்கள் தெரியுமா? இவர்கள் கையில் ஆளுக்கு நானூறு ஓட்டுகள் இருக்கின்றன. நடவடிக்கை அது இது என்று மிரட்டினால் இந்த விஷயத்தை சட்ட சபை வரையில் கொண்டு போய்விடுவேன், ஏன்? பார்லிமெண்டில் கூடப் பேச வைத்துவிடுவேன். அதோடு உங்கள் வேலைக்கும் சீட்டுக் கிழிந்துவிடும் ஜாக்கிரதை,' என்று மிரட்டிவிட்டுக் கறைவ மாட்டுக் கடன் வாங்கியவர்களுக்கு பாங்கியிலிருந்து அனுப்பிய நோட்டீஸை உங்கள் மாப்பிள்ளையின் முகத்திலேயே வீசி எறிந்து விட்டுப் போய்விட்டார்.''

''இந்த விஷயத்தை மேலதிகாரிகளுக்குத் தெரியப் படுத்துவதுதானே?''

''விவரமாக எழுதினார்—'சாமர்த்தியமாக நடந்து கொண்டு கடனை வசூல் செய்,' என்று அவர்கள் ஒரே வரியில் பதில் எழுதிவிட்டார்கள். அவர்களுக்கு என்ன? ஏர் கண்டிஷன் ரூமில் உட்கார்ந்து கொண்டு எழுதி விடுகிறார்கள். கடன் கொடுத்துவிட்டு உங்கள் மாப்பிள்ளை படும் பாடு நேரில் பார்த்துக் கொண்டிருக்கும் எனக்கல்லவா தெரியும்?''

மாப்பிள்ளையின் அவல நிலை அப்பொழுதுதான் மாமனாருக்குப் புரிந்தது.

''சாமர்த்தியமாகப் பேசி கடனை வசூல் செய்து பார்ப்பதுதானே?''

நம்பாதே!



பெரிதாக விளம்பரப்படுத்தப்படும் ஒரு குறிப்பிட்ட பிராண்ட் தட்டை சூட்கேஸ்கள் அனைத்திற்கும் பூட்டு அமைப்பு ஒன்றேதான். அதாவது நீங்கள் ஒரு பெட்டி வாங்கிவிட்டீர்கள் என்றால் இந்தியாவில் உள்ள அத்தனை பெட்டிகளையும் சுலபமாகத் திறக்கலாம். சமீபத்தில் பெங்களூர் சென்றிருந்த நான் என் பெட்டிச் சாவியைத் தொலைத்துவிட்டபோது கண்டுபிடித்த உண்மை இது. இதுபற்றிக் கம்பெனி விற்பனை நிர்வாகி ஒருவரை அணுகிக் கேட்டபொழுது (தன் பெயரை வெளியிட விரும்பவில்லை அவர்) இது உண்மைதான் என்று ஒப்புக்கொண்டார். அமெரிக்காவில் ஒரு லட்சம் பெட்டி விற்பனை முடிந்ததும் பூட்டு அமைப்பை மாற்றுகிறார்களாம். இங்கு பத்து லட்சம் பெட்டிகள் விற்றதும் பூட்டு அமைப்பை மாற்ற யோசனைகள் உள்ளதாம். 'எங்கள் விளம்பரங்களை உற்றுக் கவனியுங்கள். நாங்கள் பூட்டு பாதுகாப்பானது என்று எங்கும் குறிப்பிடுவதில்லை,' என்றார் அவர்.

—ஆர். சுவாமிநாதன்

''அப்படியும் செய்து பார்த்தார். கடன் வாங்கியவர்களை வரவழைத்தார். பிரமாதமாக உபசரித்தார். விருந்து வைத்தார். கடனைத் திருப்பிக் கொடுத்துவிடுமாறு கெஞ்சினார்—கதறினார்—காலில் விழுந்து மன்றாடினார்—அவர்கள் சற்றும் அசைந்து கொடுக்கவில்லை. 'நீங்கள் இப்படி இருந்தால் கடைசியில் நானே பால் வியாபாரம் செய்து கடனை வசூல் செய்து கொள்ள வேண்டியதுதான்,' என்று சாமர்த்தியமாகப் பேசுவதாக எண்ணிக்கொண்டு பேசி வைத்தார். அவ்வளவுதான், கடன் வாங்கியவர்கள் என்ன செய்தார்கள் தெரியுமா? 'மானேஜர் ஸார், உங்கள் யோசனை அருமையான யோசனை. அப்படியே செய்யுங்கள்,' என்று சொல்லிவிட்டு மாடுகளை ஓட்டிக்கொண்டு வந்து பாங்கு வாசலில் கட்டிவிட்டுப் போய் விட்டார்கள்.''

''அப்புறம்?''

''அப்புறம் என்ன, வேறு ஒரு பாங்கிற்குப் போய் இதே போல் கறவை மாட்டுக்கு கடன் வாங்கி பாலைக் கறந்து விற்று சம்பாதித்துச் சாப்பிட்டுக் கொண்டு இருக்கிறார்கள்.''

''ஐய்யய்யோ! நான் மாப்பிள்ளையைப் பற்றிக் கேட்கிறேன்.''

''கறவை மாடுகள் பாங்கு வாசலில் வந்து நின்ற அன்றைக்கு அணைக் கயிறையும், பால் குவளையும் கையில் எடுத்ததுதான், இன்னும் உங்கள் மாப்பிள்ளை அவைகளைக் கீழே வைக்கவே முடியவில்லை - ஹூம்... கோழிப் பண்ணைக்குக் கொடுத்திருக்கிறார். அதுவும் சரியாக வசூலாகவில்லை. பால் வியாபாரம் முடிந்தவுடன் கோழி முட்டை விற்க வேண்டி வந்துவிடும் போலிருக்கிறது—'' கவலையுடன் சொன்னாள் பானு.

''மாப்பிள்ளைக்கு நேரம் சரியாக இல்லை என்று எண்ணுகிறேன், நிச்சயமில் சாதாரண ஆபீசராக இருந்ததே தேவலை போல் தோன்றுகிறது.''

''அங்கு மட்டும் என்ன வாழ்ந்தது? ஒரு கறிகாய்க் கடைக்காரன் பாங்கு மூலம் கடன் வாங்கிக் கொடுக்கும்படி உங்கள் மாப்பிள்ளையை நச்சரித்துக் கொண்டே இருந்தான். கஷ்டப்படுகிறானே என்று சிபாரிசு செய்து கடன் வாங்கிக் கொடுத்தார். அந்தக் கடனை வசூலிக்க அவனிடம் காய்கறி வாங்கியே கழிக்க வேண்டியிருந்தது.

# காரவல்லியும் வஜ்ரவல்லியும்

வசிஷ்ட மகரிஷி ஒரு சமயம் அவருடைய தந்தையின் சிரார்த்தம் செய்ய வேண்டியிருந்தது. சாப்பிடுவதற்குப் பிராமணர் ஒருவரும் கிடைக்கவில்லை. அவர் மனைவியான அருந்ததி, விசுவாமித்திர முனிவரைக் கூப்பிடலாமே என்று யோசனை கூறினாள்.

விசுவாமித்திரர் மகிழ்ச்சியுடன் ஒப்புக்கொண்டார். ஆனால் ஒரு நிபந்தனை: ஆயிரத்தெட்டுக் காய்கறிகளை இலையில் பரிமாற வேண்டும்.

உலகத்திலேயே அவ்வளவு கறிகாய்கள் இருக்காதே என்று சஞ்சலப்பட்டார் வசிஷ்டர். ''நீங்கள் கவலைப்பட வேண்டாம்!'' என்றாள் அருந்ததி.

விசுவாமித்திரர் இலையில் உட்கார்ந்தார். அருந்ததி இலையில் வாழைக்காய், சேம்பு, வாழைத்தண்டு, கொத்தவரை, அவரை, கீரைத்தண்டு, புடல், அகத்திக்கீரை, பிரண்டைத் துவையல், பாகற்காய், பலாக்காய் இவற்றைப் போட்டாள்.

''இவ்வளவுதானா? ஆயிரத்தெட்டுக் கறிகாய்கள் எங்கே?'' என்று உறுமினார் விசுவாமித்திரர்.

அருந்ததி கூறினாள். ''சுவாமி! நாம் அனைவரும் சாஸ்திரத்திற்குக் கட்டுப்பட்டவர்கள். தர்ம சாஸ்திரத்திலிருந்து சான்று கூறுகிறேன்..

'காரவல்லி சதம் ப்ரோக்தம்,
வஜ்ரவல்லி சதத்ரயம்;
பநஸ: ஷட்ஸதம் ப்ரோக்தம்
ஸ்ரார்த்தகாலே விதியதே.'

பாகற்காய் நூறு கறிகாய்களுக்கும் பிரண்டை முன்னூறு கறிகாய்களுக்கும் பலாக்காய் அறுநூறு கறிகாய்களுக்கும் சமம். மற்றக் கறிகாய்கள் எட்டு. ஆக ஆயிரத்தெட்டு ஆகவில்லையா?''

ராஜரிஷி இதைக் கேட்டதும் சற்றுக் கோபமடைந்தாலும் அருந்ததியின் புத்திக் கூர்மையை மெச்சி, அவர்களை ஆசீர்வதித்துவிட்டுப் போனார்.

—எம். கே. நாராயணன்





அவன்: ''அபிராமி தியேட்டரில் படம் பார்த்துக்கிட்டிருந்தபோது என் மனைவிக்கு டெலிவரி ஆயிடிச்சு!''

இவன்: ''அப்புறம்..?''

அவன்: ''பிறந்த பெண்ணுக்கு 'பால அபிராமி'ன்னு பெயர் வைச்சுட்டேன்!''

—உ. ராஜாஜி

கத்தரிக்காய்—போதும் போதுமென்று ஆகிவிட்டது. வேறு கறிகாய் ஏதாவது கொடு என்று கேட்டால், 'அதை ரொக்கத்திற்கு விற்கிறேன்—உங்களுக்குக் கொடுக்க முடியாது,' என்று சொல்லி விடுவான். அந்தக் கறிகாய் கடன் அடைவதற்கும் இங்கே எங்களுக்கு மாற்றலாகி வருவதற்கும் சரியாக இருந்தது.''

''அங்கே கறிகாய்க் கடன், இங்கே கறவை மாட்டுக் கடன்—எல்லாம் தலை எழுத்து!''—என்று அலுத்துக் கொண்டார் ராமலிங்கம். அப்பொழுது வாசலில் மாடுகள் கத்தும் சப்தம் கேட்டது.

''அப்பா! மாப்பிள்ளை வந்துவிட்டார்!'' என்றாள் பானு உற்சாகத்துடன்.

ராமலிங்கம் வாசல் பக்கம் வந்தார்.

தலையில் முண்டாசு, தோளில் அணைக் கயிறு, கட்கத்தில் ஒரு குவளை, முட்டிக்கு மேல் வரிந்து கட்டின வேஷ்டி—இவைகள் சகிதம் நான்கு கறவை மாடுகளுக்கு மத்தியில் நின்று கொண்டிருந்தான் பாங்கு மாப்பிள்ளை சங்கர்.

'என் மாப்பிள்ளை ஒரு பாங்கு மானேஜர்—என் மாப்பிள்ளை ஒரு பாங்கு மானேஜர்' என்று எல்லோரிடமும் மார்தட்டிப் பேசிக் கொண்டிருந்த ராமலிங்கம், ஹாட்டு, ஸூட்டு, பூட்ஸ் முதலியவைகளுடன் மானேஜர் மாப்பிள்ளை டிப்டாப்பாக இருப்பான் என்று எண்ணிக் கொண்டிருந்தார்- ஆனால் அவனோ?

''என்ன மாப்பிள்ளை இது? ஏன் இந்தக் கோலம்? கொஞ்சம் ஜாக்கிரதையாக இருந்திருக்க கூடாதோ?'' என்றார் ராமலிங்கம் அனுதாபத்தோடு,

''இதுதான் பாங்கு மானேஜர் வேலை,'' என்று ஆரம்பித்து.

''மேலே படி; பிரமோஷன் வாங்கு; மானேஜராகப் போ என்றெல்லாம் சொல்லி கொண்டிருந்தீர்கள்—அதன் பலன், பா வியாபாரம்!'' என்று முடித்தான்.

பிறகு மாடுகளை ஓட்டி கொண்டு பின்புறம் சென்றான் அவனுடைய உடம்பு துரும்பா ிளைத்திருந்தது. 'முன்னுக்கு வா ுன்னுக்கு வா' என்று ஏன் அவனை ிரட்டிக் கொண்டிருந்தோம் என்று இருந்தது அவருக்கு.

ஒரு கையில் சோப்பு, மற்றொ கையில் டவல் முதலியவைகளுடன் குளிப்பதற்காகப் பின்புறமிருந் கிணற்றங்கரையின் பக்கம் வந்தா ராமலிங்கம். சங்கர் வாளியில் தண்ணீ இழுத்துக் கறவை மாடுகளின் மீது விட் அவைகளை நன்றாகத் தேய்த்துத் தேய்த்து குளிப்பாட்டிக் கொண்டிருந்தான் அவனைப் பார்க்க ராமலிங்கத்திற் மிகவும் பரிதாபமாக இருந்தது. பாங் வேலையில் இப்படியெல்லாம் கஷ்டப்பட வேண்டுமா?

ராமலிங்கத்தின் பார்வை தற்செயலாகப் பின்புறமிருந்த மதி சுவரின் மீது சென்றது. சுவர் முழுவது வட்டம் வட்டமாக வரட்டிகள் தட்டப்பட்டு இருந்தன.

''மாப்பிள்ளே, என் இதெல்லாம்? கிரஸினுயில் பஞ்சமா அடுப்புக்கரி கிடைக்கவில்லையா?''

''அந்த வரட்டியெல்லாம் வீட் உபயோகத்திற்கு அல்ல, விற்பனை செய்வதற்கு.''

வரட்டி விற்பனையா?''—மீண்டு ஒரு அதிர்ச்சி.

கையில் ஒரு பெரிய கூடையுட உள்ளேயிருந்து கிணற்றங்கரைக்கு வந் பானு, ''ஆமாம் அப்பா. கறவை மாட்டு கடனைச் சீக்கிரம் வசூல் செய் என் ஹெட் ஆபிஸிலிருந்து மாப்பிள்ளை விரட்டிக் கொண்டிருந்தார்கள். இங்

டிராமா, சினிமா என்று எதுவும் இல்லை. எனக்குப் பொழுது போகவில்லை. ஆகவே வரட்டி தட்டி விற்றால் சீக்கிரம் கடன் அடையாதா என்று தோன்றிற்று. உடனே வரட்டி வியாபாரத்தை ஆரம்பித்து விட்டேன். மாலை வேளைகளில் வரட்டிகளைக் கூடையில் நிரப்பிக் கொண்டு இரண்டு தெருவிற்குப் போகிறேன். மளமளவென்று விற்று விடுகிறது."

காலையில் மாப்பிள்ளை பால் விற்கிறார். மாலையில் பெண் வரட்டி விற்கிறாள். மாப்பிள்ளை பாங்கு மானேஜரானதின் பலன் இதுதானா?

"மாப்பிள்ளை! இதையெல்லாம் பார்ப்பதற்கு கண்றாவியாக இருக்கிறது. ஏதாவது ஒரு பிராஞ்சுக்கு மாற்றல் வாங்கிக் கொண்டு விடுங்கள். யாரையாவது பார்க்க வேண்டுமென்றால் சொல்லுங்கள். போய்ப் பார்க்கிறேன்," என்றார் ராமலிங்கம் மிகுந்த ஆதங்கத்தோடு.

"அது எப்படி முடியும்? இன்னும் மூன்று வருஷங்களுக்கு இங்கேயிருந்து நகர முடியாதே! ஏதாவது தப்புத் தண்டா செய்தால்தான் மாற்றலாகும்."

"ஐயோ! அப்படி ஏதாவது செய்து வேலையைப் போக்கிக் கொண்டு விடப்போகிறீர்கள்!"

பானு கணவனிடம் சொன்னாள்:

"மதுரையில் ஒரு பையன் இருக்கிறானாம். நீலாவிற்குப் பார்த்திருக்கிறாராம்."

"என்ன செய்கிறான்?"

"ஒரு பாங்கில் ஆபீசராக இருக்கிறானாம். சீக்கிரம் முன்னுக்கு வந்துவிடுவான் என்று சொல்கிறார்களாம்."

"நீலாவிற்கும் பாங்கு மாப்பிள்ளையாகவா பார்ப்பது? இனிமேல் அந்த மோகம் இல்லையம்மா!" என்றார் ராமலிங்கம்.

"ஃபஸ்ட் க்ளாஸ் இடம் என்று இருக்கிறது. முடித்து விடுங்கள்," என்றான் சங்கர் மாட்டின் முதுகை நன்றாகத் தேய்த்துக் கொண்டே.

"பையன் எங்கு இருக்கிறான்? என்ன செய்கிறான்?". ஆவலோடு கேட்டார் ராமலிங்கம்.

"பரமக்குடியில் இருக்கிறான். பெரிய பெட்டிக் கடை வைத்திருக்கிறான். பீடி, சிகரெட்டு, சோடா, கலர்,




56'ம் பக்க விடை:

அமோல் பலேகர் ஆங்கிலோ இந்தியராக நடிக்கும் 'பாதோன் பாதோன் மே' படத்தில் கதாநாயகி டினா.

இந்தப் படத்தின் டைரக்டர் பாசு சட்டர்ஜி.

---

ஜூஸ்....இத்யாதி விற்பனை. ஏக்கச்சக்கமான வியாபாரம். அதோடு பெட்டிக் கடையின்மீது பாங்கிலிருந்து நிறையக் கடன் வாங்கியிருக்கிறான்."

"என்ன மாப்பிள்ளை இது? ஒரு கடன்காரனுக்கு என் பெண்ணைக் கொடுக்கச் சொல்கிறீர்களே!"

"இப்பொழுது கடன் வாங்கியவர்கள் கைதானே ஓங்கி இருக்கிறது! பெட்டிக் கடை மாப்பிள்ளை, பாங்கில் கடன் வாங்கியிருக்கிறானே என்று நீங்கள் கவலைப்பட வேண்டாம். நிம்மதியாகக் காலம் தள்ளிக் கொண்டிருக்கலாம். அப்படிப் பாங்கில் ஏதாவது கெடுபிடி செய்தால் பெட்டிக் கடைச் சாவியைப் பாங்கு மானேஜரிடம் வீசிப் போட்டு விட்டு வந்துடலாம்..."

"அப்புறம் பிழைப்பிற்கு என்ன செய்வது?"

"வேறு ஒரு ஊருக்குப் போவது! அங்கு இருக்கும் பாங்கில் கடன் வாங்குவது; மறுபடியும் பெட்டிக் கடை வைப்பது; பிழைப்பை நடத்துவது. கடனைத் திருப்பிக் கேட்டால், மறுபடியும்..."

"சரி. அந்தப் பெட்டிக் கடை இடத்தையே நீலாவிற்கு முடித்து விடலாம். எனக்குப் பாங்கு மாப்பிள்ளை வேண்டாம்," என்று திட்டவட்டமாகக் கூறிவிட்டு, வாளியில் இழுத்து வைத்திருந்த தண்ணீரை எடுத்து மளமளவென்று தலையில் விட்டுக் கொண்டார் ராமலிங்கம்.


அனைவருக்கும் தீபாவளி நல்வாழ்த்துக்கள்!
உங்கள் அழகு எழில்மிகு
தோற்றத்துடன் திகழ,
ஸ்ரீ ராஜேஸ்வரியின் பட்டுப் புடவை
அணிந்து மகிழுங்கள்' அழகும் மென்மையும்
இணைந்த அருமையான வண்ணங்களில் துள்ளி
விளையாடும், புதுமையான டிசைன்கள் -
கட்டங்கள் - கோடுகள
காஞ்சீபுரம், தர்மாவரம், பனாரஸ்
பட்டுப்புடவைகள் - பாவாடைகள்
மற்றும் எல்லாவிதமான மில்
ஜவுளி ரகங்களும் ஆடவர்கேற்ற
சர்ட்டிங், சூட்டிங் ரகங்களும் உண்டு
நாணயமான குறைந்த ஒரே விலை
தரமான ஜவுளிகள்
கைராசியான ஜவுளிக்கடை
கல்யாண பட்டு புடவைகளுக்கு கைராசியான இடம்!
ஸ்ரீ ராஜேஸ்வரி ஹால்
121, ராஜ வீதி
கோயமுத்தூர்-1
போன்: 25859
நவநாகரீக ஜவுளிகளுக்கு
உஷா
சாரி பாரடைஸ்
333, ராஜ வீதி
கோயமுத்தூர்-1
போன்: 33369

# ஜாதசெக்
# ஜதாயமல்ஜ

**மா**மாவின் காரைத் துடைத்துக் கொண்டிருந்தேன். சௌதாமினியின் வாசனை மூச்சு தோள் பக்கம் விழுந்தது. ''அப்பா பூஜையிலிருக்கார்...'' என்று இசுகிசுத்தாள். மாடியிலிருந்து வந்த ஊதுவத்தியின் மணம் அவள் சொன்னதை ஊர்ஜிதப்படுத்தியது.

"மோட்டார் போடறிங்களா? தண்ணி ஏறலே. நான் இன்னும் குளிக்கலே.''

நான் தலையை ஆட்டினேன். மோட்டார் போடுகிறதென்றால் எனக்குப் பயம். அதே சமயம் சந்தோஷம்.

போன வாரம் வரைக்கும் மோட்டார் போடுவது மிகவும் இன்பமாக இருந்தது. நாலைந்து நாளாகத்தான் வருத்தம்.

மாமா பெண் சௌதாமினிக்கு என்மேல் கொள்ளை ஆசை. எனக்கு அவள்மேல் கொள்ளையோ கொள்ளை ஆசை.

ஒழுங்காக பி. யூ.வைத் தாண்டியிருந்தால் மாமா எங்காவது தள்ளிவிட்டிருப்பார். நான் டிரான்ஸ்போர்ட்டிலே டிரைவராக முயன்று கிடைக்கவில்லை. மாமாவே பெரிய மனசுடன் தனக்கு டிரைவராக வேலைக்கு வைத்துக்கொண்டுவிட்டார். அந்தவரையில் அவருக்குத் தாங்க்ஸ்.

சௌதாமினி மாமாவுக்கு ஒரே பெண். தன்னுடைய வக்கில் அந்தஸ்துக்குத் தகுந்த மாதிரி அவர் பெரிய இடங்களில் பையனைத் தேடிக் கொண்டிருந்தபோது பத்து நாளைக்கு முன் ஓர் இடம் கிடைத்தது. பத்திரிகையில் வந்த விளம்பரம். கரெஸ்பாண்ட் பண்ணினார்.

ஜாதகம் பிரமாதப் பொருத்தம். பையனுடைய அப்பா திருச்சி அருகில் ஒரு கிராமத்தில் பண்ணையார். மாமாவை ஒரு நல்ல நாளில் புறப்பட்டு வரச்சொல்லிக் காரியஸ்தர் பண்ணையார் சார்பாக எழுதியிருந்தார்.

ஜாதகம் பொருந்திவிட்டதாம். மாமா சந்தோஷப்படுகிறார் என்று போன வாரம் சௌதாமினி என்னிடம் மோட்டார் ரூமில் சொல்லி வருந்தினாள்.

என் கிராப்பைப் பிடித்து

எஸ். விஜயலட்சுமி

அழுத்தி, ''ஏன் நீங்கள் ப சுத் தொலைக்காமல்விட்டிங்க?'' என் கேவலுடன்.

''ஏறலே. படிச்சிருந்தா டும் என்ன? உங்கப்பா எதிர் பார்க் அந்தஸ்தா எனக்குக் கிடைத்திருக் போகிறது? ஒரு குமாஸ்தா வேலை ணிட்டிருபபேன்.,....விட்டுத்தள்ளு என்றேன்.

மோட்டார் ரூம்தான் கள் ரகசிய சந்திப்பு அறை.

குழாயில் தண்ணீர் நில் என்றால் மோட்டார் ரூமுக்கு என்று அர்த்தம்.

நான் வாசல்பக்கம் மே டார் ஷெட் அருகிலுள்ள குழா திறந்து பார்த்துத் தெரிந்து வேன்.

சௌதாமினி அவள் படு அறையிலுள்ள வாஷ் பேஸினைத் தி தெரிந்து கொள்வாள்.

''நான் வேணும்னு மே டாரைப் போட்டுட்டு வரேன்,'' அம்மாவிடமோ அப்பாவிடமோ செ விட்டு அவள் வருவாள். நான் மே டார் அறைக்குள்ளேயே போய் குள் காத்திருபபது வழக்கம்.

எப்போதாவது மாமா வந்தால்கூட, தண்ணீர் நின் அறிந்து நான் மோட்டார் போட தது போலவும், சௌதாமினியும் காரணத்துக்காக தற்செயலாக தாகவும் எண்ணிக்கொள்ளலாமல்

போன வாரம் வரை இப்போது அவளுக்கு மாமா மிராசுதாரின் பையனைப்பார்த்துவிட

தரிந்த பிறகு சந்திப்பது அவ்வளவு
ரியா? ஒரு பெரிய துன்பத்துக்கு இப்
பாது பிடித்தே மனத்தைப் பக்குவப்
டுத்திக் கொள்வதுதானே நல்லது.

சௌதாமினி என் கண்ணைத்
டைத்துவிட்டுச் சிரித்தாள்.

''ஏன் சன்னியாசியாயிட்
ங்க?'' என் மோவாயை நிமிர்த்தி
ள். ''அழுகை வருதா?''

''பின்னே?'' என்று சிரிக்க
யன்றேன்.



''இங்கே பாருங்க. நீங்கதான் என்னைக் கல்யாணம் பண்ணிக் கொண்டாகணும். இது என் கட்டளை.''

அவள் கன்னத்தைத் தொட்டு அவளுக்கு ஆறுதல் சொல்லணும் போலிருந்தது. நெருங்கி நின்ற அவளுடைய ஸ்பரிசத்தில் இந்தப் பாவி மனம் சந்தோஷப்படுவதற்குப் பதில், 'ஐயோ கொஞ்ச நேரத்திலே இந்த ஐஸ்க்ரீம் கரைந்துடுமே' என்று குழந்தை அழுதாற்போல அழுது கொண்டிருந்தது.

சௌதாமினியின் சிவந்த உதடுகளின் இடைவெளியில் பளிச்சிட்ட பற்கள் முத்துச்சரமாக மூடி மூடித் திறந்தன. ஒருதடவைகூடத் தப்பித் தவறி அவை அழகு குறைந்து காணப்படவில்லை. எத்தனை தரம்தான் ரசித்தாலும் மதிப்பில் குறையாத அந்தச் சிரிப்பை இனி நான் தியாகம் செய்ய வேண்டுமென்றபோது இதயம்கனத்தது. மறுபடியும் சௌதாமினி என் மோவாயைநிமிர்த்தினாள்.

''எங்கே இருந்தாலும் நீ நல்லா இருக்கணும். உன் மனசுக்கு ஒரு

குறைவும் ..டவுள் வைக்கமாட்டான். நீ பொருத்தமான இடத்துக்குத்தான் போய்ச் சேருவாய்... நான்...நான் பொருத்தமில்லாதவன்னு கடவுளே நினைச்சு என் தலையிலே எழுதிட்டான்'' இந்த மாதிரி தினுசில் இன்னும் ஏதேதோ புலம்பினேன்.

''ஆர் யூ நாட் அஷேம்ட்? உங்களுக்கு வெட்கமாயில்லே? சமயத்திலே மூளை வேலை செய்யணும். வில்லேக் கீழே போட்டுட்டு ஓடறது என்ன ஆண்மைத்தனம்?''

''என்னாலே என்ன பண்ண முடியும் சௌதாமினி? பிச்சைக்காரன்...''

''ஸ்டுப்பிட்! மறுபடி அந்த வார்த்தையைச் சொல்லக்கூடாது. நான் உங்களை லேக் பண்றேன். நீங்க என்னை லேக் பண்றீங்க. மனப்பூர்வமாக இரண்டு பேரும் ஒருத்தரையொருத்தர் விரும்பறோம். என்னைத்தான் நீங்க செய்துக்கணும் என்கிற உறுதி உங்களுக்கு இருந்தால் தன்னைப்போல் ஏதாவது வழிபிறக்கும். இப்போ என்ன நிச்சயதார்த்தமா ஆகிவிட்டது. மூளையைப் போட்டுக் கசக்கிக்கொள்ளுங்கள்..தன்னால் வழி தோன்றும்.''

மாடியிலிருந்த பூஜை மணி நெருப்பணைக்க வருகிற வண்டியின் ஓசை மாதிரி கேட்டது.



வேலைக்காரன். 'குடும்பக் கட்டுப்பாடு அதிகாரி வீட்டில் வேலைக்குச் சேர்ந்தது தப்பாப் போச்சு!''

மனைவி: ''ஏங்க. ?''

வேலைக்காரன்: 'ஒவ்வொரு வருடமும் இரண்டு ரூபாய்தான் திபாவளி இனும் தர்ராரு... இரண்டைத் தாண்ட லே மாட்டே ங்கிறாரு!''

உ ரா

''அப்பா பூஜை முடி[ச்]... போறார்! மீதியை நாளை பேசலாம்... நீங்க ராத்திரி யோசியுங்க...''

அவள் அவசரமாகப் ...தாள்.

ராத்திரி என் அறை... தூக்கம் பிடிக்காமல் பனை நார்க் க... லில் 'கிர்ரிச் கிர்ரிச்' ஓசை எழுப்... வாறு புரண்டு கொண்டிருந்தேன்... தோல்விகரமான ஏழாவது நாள்.

கொசுக்கடி போதாதெ... மூட்டைப்பூச்சிப் பட்டாளம். ஜ... வில்லாததால் காற்று ஒரு இ... ஆறேழு ரூபாய்.

அத்தனை புழுக்கத்தைக் க... டிலும் சௌதாமினி ஏற்படுத்... புழுக்கம் அதிகமானது.

எனக்கு ஆர்வமில்ல... அதிருஷ்டமில்லையா? மூளை இல்லை...

எப்படி மாமாவைக் கூவ... 'செல்லா, உனக்குத்தான் என் ம... வா, வந்து உட்கார் மணவறைய... என்று சொல்லவைப்பது?

பணக்கார மிராசுதார... பார்க்க மாமா விடிகாலையில் புறப்... கிறார். காரை நான்தான் ஓட்டிச் செ... வேண்டும்.

என் வரட்டு மூளையில் ... யற்காலையில் பளீர் என்று ஒரு மின்... அடித்தது.

புன்னகைத்துக் கொண்டே...

வழியில் மாமா தனக்கு வ... போகிற சம்பந்தியின் கித்தாய்ப்புக... பற்றிப் பேசிக் கொண்டு வந்தார்.

பிரம்மாண்டமான பண்... வீட்டில் மாமாவுக்கு ஏக உபசா... மிராசுதார் வீடு. ராஜ தர்ப... நான் ஹாலுக்கு வெளியே கைகட்... டிக்கொண்டு நின்றுவிட்டேன். 'உள்... நான் வரக்கூடாது' என்று மாமா... நிபந்தனை.

விருந்து முடிந்த... தன் பிரதாபத்தை அளந்து முடித்த... பிற்பகல் மூன்று மணி. புறப்ப... கொஞ்ச நேரமிருந்தபோது பண்... யார் வீட்டுச் சமையலாள், ''டிரை... எங்கே? அவரைச் சாப்பிட வரச் செ... லணுமே? மறந்தேபோச்சு,'' எ... என்னைத் தேடிக்கொண்டு வந்தார்.

''பரவாயில்லீங்க,'' எ... பிகு . செய்துகொண்டேன்.

வற்புறுத்திக் கூட்டிக்கொ...

ஆகாகான் அரண்மனையில் காந்தி அடிகளுக்கென ஒதுக்கப்பட்ட அறையின் தரையில் சுமார் 80 ஆயிரம் ரூபாய மதிப்புள்ள அயல் நாட்டு இரத்தினக் கம்பளம் விரிக்கபபட்டு இருந்ததாம்

இரத்தினக் கம்பளத்தைக் கண்டு திடுக்கிட்டு அதை அகற்றினாலொழிய, தாம் அறைக்குள்ளே செல்ல இயலாதென்று அடிகள் பிடிவாதமாகக் கூறினாராம் அதன் பின்னர் கம்பளம் அகற்றபபட்டு சாரவாடா சிறையில் 'சி' வகுபபுக் கைதிகள் பயன்படுத்தும் கோணிப பாய அலுமினியத் தட்டு, குவளை, மண்பானை முதலியவை தருவிக்கபபட்டுத் தரபபட்டனவாம்!

அண்மையில் வெளியிடபபட்ட ... பொ சி எழுதிய காந்தியடிகளைச் சந்தித்தேன்' என்ற நூலிலிருந்து



போனார். சாப்பிட உட்கார்ந்திருப்பேன்.

''கொஞ்சம் இருங்கள். என்னவோ பண்ணுகிறது உடம்பை... என்றேன்.

சமையற்காரர் பரிதாபத்துடன், ''என்ன பண்றது? பசி முற்றியிருக்கும். வருகிறவர்கள் டிரைவர் சாப்பிட்டானா என்று கவனிக்க வேண்டும். இந்தப் பணக்காரங்களே இப்படித்தான். மனுஷத்தனம் இல்லாமல்...'' என்றார்.

அடுத்த வினாடி பளாரென்று சமையல்காரர் கன்னத்தில் ஓர் அறை விட்டேன்.

அவர் கதிகலங்கிப் போய் விட்டார். திருப்பி என்னை ஓர் அறை விட்டார். ''உனக்குப் பைத்தியமா?''

நான் மறுபடி அவரை அறைந்தேன். நாலைந்து வேலையாட்கள் ஓடிவந்து என்னைப் பிடித்துக்கொள்ள, நான் கூச்சல் போட்டுத் திமிர, எல்லாரும் சமையல்கட்டில் கூடிவிட்டனர்.

நான் வேலைக்காரர்களிடமிருந்து திமிறிக் கொண்டிருந்த காட்சியைப் பார்த்து அதிர்ச்சியடைந்தார் மாமா, ''செல்லா... என்னடா இது ரகளை... ராஸ்கல்!'' என்று உறுமினார்.

நான் ஓடிச் சென்று அவர் காலில் விழுந்தேன்.

''மன்னித்துக் கொள்ளுங்க மாமா... இந்தச் சமையல்காரக் கழுதை உங்களைத் தப்பாப் பேசினதும் எனக்குப் பொறுக்கவில்லை. நீங்கள் மனுஷத்தனம் இல்லாதவராம். தங்கையின் பிள்ளையை அனாதையாக விட்டுவிடக்கூடாது என்று நீங்கள் என்னை வளர்த்து ஆளாக்கி ஒரு வேலையும் போட்டுத் தந்திருக்கீங்களே. என் தெய்வம் நீங்க. உங்களைப்போய் இப்படிச் சொன்னதும் பொறுக்க முடியவில்லை.''

மிராசுதார் தலையைச் சொறிந்து கொண்டார். ''இவன் உங்க மருமானா? நீங்க சொல்லவே இல்லையே. டிரைவர்னு அல்லவா சொன்னீங்க?''

மாமா தடுமாறியவராக, ''ஆமாம்...ஆமாம்... மருமான்தான். தத்தாரிப் பயல். வேலை வெட்டி இல்லை. டிரைவராப் போட்டு வெச்சிட்டிருக்கேன்,'' என்றார்.

மிராசுதாரின் முகம் கணகணவென்று சிவந்தது.

''ரொம்ப லட்சணம்தான்! சொந்த மருமானை—கூடப் பிறந்த சகோதரியின் பிள்ளையை—நடத்தற லட்சணமா இது? நாளைக்கு உம்ம மாப்பிள்ளைகிட்டேகூட இப்படித்தான் நடந்து கொள்வீர்... இவன் போட்டிட்டிருக்கிற சட்டையைப் பாருங்க. இருபது கிழிசல்... முப்பத்தெட்டு ஒட்டுத் தையல். ...நீரெல்லாம் மனித ஜாதியைச் சேர்ந்தவரே இல்லை. உங்க சம்பந்தமே வேண்டாம்.''

திரும்பும்போது வழி நெடுக மாமா என்னைத் திட்டிக்கொண்டே வந்தார்.

''கழுதை! அங்கே வந்து நீ என் மருமான் என்கிறதைக் காட்டிக் கொண்டு காரியத்தையே கெடுத்துட்டாயே.''

குமராட்சியில நடந்த ஒரு விழாவில் முதல்வர் எம். ஜி. ஆர் கூறியதாவது:

ஒரு முறை தந்தை பெரியாரும், திருக்குறள் முனுசாமியும் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தனர் அப்போது பெரியார், ''என்னய்யா உங்க சடங்கும் சம்பிரதாயமும்? பெண்களுக்குத் தாலி கட்டுவது போல் ஆண்களுக்கும் ஏன் கட்டக் கூடாது?'' என்றார்

உடனே திருக்குறள் முனுசாமி அதனாலென்ன? கட்டலாம். தவறில்லை ஆனால் ஆண்கள் அடிக்கடி வெளியே செல்பவர்கள். கைச் செலவுக்குப் பணம் இல்லையென்றால் உடனே தாலியை விற்றுப் பணத்தைச் செலவு செய்துவிட்டு வீட்டுக்கு வந்து, 'எனக்கு இன்னொரு தாலி கட்டு,' என்பார்கள். ஆனால் பெண்கள் தாலியைப் புனிதமாகக் கருதுபவர்கள் அதனால்தான் அவர்களுக்கு மட்டும் கட்டச் சொல்கிறோம்,' என்றாராம்.

சி பி ஸ்ரீதர்

o0o

## அனுபவ அரசியல்

முல்லா நஸ்ருதீனின் மகன் தன் தந்தையைப் பார்த்து, ''அப்பா நீங்கள் எப்பொழுதும் அரசியலில் விருப்பம் உள்ளவராக இருக்கிறீர்கள். தயவு செய்து அரசியல் என்றால் என்ன என்று எனக்குக் கூற முடியுமா?'' என்று ஒரு நாள் கேட்டான்.

அதற்கு முல்லா, ''அதைப் பற்றி வார்த்தைகளால் தெரிவிக்க இயலாது அது ஒரு ரகசியமான சமாசாரம். நான் உன்னை அதைப் பற்றி அனுபவிக்கச் செய்கிறேன்,'' என்றார்.

பிறகு முல்லா சுவரில் சாய்ந்து வைக்கப்பட்டிருந்த ஓர் ஏணியின் மேல் தன் மகனை ஏறச் சொல்லிவிட்டு, அங்கிருந்து குதிக்கச் சொன்னார். அவன் தயங்கினான். தான் அவனை விழாமல் பாதுகாப்பதாகக் கூறினார். அவன் மறுத்தான்

ஆனால் முல்லா விடாமல் அவனிடம், 'பயமில்லாமல் குதி, நான் உன்னைப் பிடித்துக் கொள்கிறேன்,' என்று மீண்டும் மீண்டும் தைரியம் கூறினார்

அவருடைய வற்புறுத்தலினால் அவனும் குதித்தான். முல்லா நகர்ந்து கொண்டார். கீழே விழுந்த அவன் தன் கை கால் எல்லாம் ரத்தம் வழியத் தன் தந்தையைப் பார்த்து, 'இதற்கு அர்த்தம் என்ன?' 'என்று பாய்ந்தான்

அதற்கு முல்லா, ''இதுதான் அரசியல் மகனே! நீ உன் சொந்தத் தந்தையைக் கூட நம்பக் கூடாது. இதுதான் உனக்கு முதல் பாடம்,'' என்று பதிலளித்தார்

['சண்டே' இதழில் ஆச்சார்யா ரஜனீஷ் எழுதியிருக்கும் அரசியல் என்ற கட்டுரையில் உள்ள விளக்கம்.]

—வை. லெச்சுமணசாமி




தலைமுடி
எவ்வளவு
நீளம்
உனக்கு!
நிஜம்
வைத்து...
நீ என்னைக்
கட்டிப் பிடிச்சிட்
டிருக்கிறது
எவ்வளவு இதமா
இருக்கு!



## எதிரி நம்பர்—1.

"ஓரேய் குர்ரம்மா, மருவாதியா வந்துடு. இல்லே, உன்னே இங்கேயே வேய்ச்சிப் போட்டுட்டு நானும் குத்திக்கினு செத்துப் பூடுவேன்."



அரை போதையில் தன் அப்பளார் மீசையை உருட்டிக் கொண்டு கத்தினான் அந்தக் கர்லா உடம்பு ஆசாமி.

அரை மணியாய் அந்த வீட்டு வாசலில் அவன் கத்திக் கொண்டிருந்தான். ஊரே தெருவில் கூடியிருந்தது.

குர்ரம்மா அவன் இரும்புப் பிடியிலிருந்து முண்டாவை உதறிக் கொண்டாள்.

''சீ, போடா கயிதை. நீ ஒரு ஆம்பிளையாட்டம். என்னை வச்சிப் பொயப்பு. கட்டிக்கினவனா நீ? உனக்கு எதுக்குடா மீசை, சோமாறி. நான் சம்பாரிச்சிக் கொடுப்பேன். நீ அடிப்பே. என்னை அடிப்பே. எனக்குத் தலையெழுத்து!''

''ஆமாண்டி. தாலி கட்டினவன் நான். மருவாதையா வந்துடு.''

அவள் தன் கழுத்திலிருந்த தாலியைக் கழற்றி அவன் மூஞ்சியில் விட்டெறிந்தாள். ''எடுத்துனு போ நீ கட்டின தாலியை. பொம்பளை கையிலே வாங்கித் திங்கற நாயி ஒரு புருஷன். உன்னைமாதிரி புருஷனுக்குப் பொண்டாட்டின்னு இருக்கிறதுக்கு நான் ஊருக்கு மடி விரிச்சு சந்தோசமா இருக்கலாம். போடா போ.''

அந்தப் பேச்சிலே நியாயம் இருந்ததோ இல்லையோ, குர்ரம்மாவை இழக்கத் தயாராய் இல்லாத மைனர் செயின் கும்பல் ஒன்று அவளுக்காகப் பரிந்து கொண்டு வந்தது.

அவளுக்குத் தாலி கட்டிய கொண்டையா, ''பார்க்கிறண்டி உன் சப்போர்ட்டை. ஒரு நா இல்லாட்டா ஒரு நா உன்னை நடு ரோட்டிலே போட்டு நார் நாரா கிழிக்கலே, என் பேரு கொண்டையா இல்லே,'' என்று ஆங்காரமாய்க் கறுவிக் கொண்டு போனான்.

## எதிரி நம்பர்—2

ஊருக்கு ஒரே ரைஸ் மில். அங்கு மூட்டை தூக்குகிற வேடிக்கு குர்ரம்மாவிடம் போக வேண்டும் என்று ரொம்ப நாளாய் ஆசை.

இரண்டு வாரத்துக் கூலியில் மிச்சம் பிடித்தது. ரொக்கம் ஐம்பது ரூபாய். அவள் ரேட் அது என்று தெரிந்து வைத்திருந்தான்.

பெட்டி தேய்த்து வைத்திருந்த சொக்காய், புளிய மரத்தடி முடி திருத்தக் கலைஞனின் கை வண்ணம்—ராஜ களைதான்.

''அட்டே, வேடி மச்சானா? வா வா.'' அவனை மேலும் கீழும் பார்த்தவள், ''என்ன ஒரு மீரான் கடை பிரியாணி, கதம்பச் சரத்தைக் கூடக் காணம்?'' என்று அவள் உதட்டைப் பிதுக்கியபோதே அவனுக்கு வெட்கமாய்ப் போய்விட்டது.

''இந்தா வாரேன்,'' என்று அப்படியே நழுவினான்.

''கொஞ்சம் இரு மச்சான். அதுக்குள்ளே என்ன அவசரம்?''

அவள் அவன் இடுப்பையும் சட்டைப் பையையும் தடவிப் பணத்தை உருவிக் கொண்டது கூட அவன் சுரணையில் எட்டவில்லை. காற்றில் அலைப் புண்ட இலைச் சருகு போல் கடை வீதிக்குப் போனான்.

முடிச்சுப் போட்டு வைத்திருந்த சில்லறை, பிரியாணியாகவும் கதம்பச் சரமாகவும் சிதைந்தது. அவற்றுடன் குர்ரம்மா வீட்டுக் க்தவைத் தட்டியபோது உள்ளேயிருந்து ஜோடிப் புறா குடுகரவதைப் போல சிரிப்பொலி கேட்டது.

கதவைத் தட்டினான். மைனர் செயின் ஒன்று வெளிப்பட்டது. ''ஏண்டா கூலிக்கார நாயே, உனக்கென்னடா இங்கே வேலை?'' என்ற குரைப்பும் கேடடது.

மில் முதலாளியின் பிள்ளை!

மரியாதையில் தலை சாயத் திரும்பிய வேடி மறுநாள் போனான்.

கதவிடுக்கிலேயே குர்ரம்மா முகம் தெரிந்தது. நேற்றைய சம்பவத்தை நினைவூட்டினான்.

அவள் ஓர் அற்ப ஜீவியைப் பார்த்துக் கை கொட்டிச் சிரித்தாள். ''ஐயோ ஐயோ. நீ என்ன வேடி, குழந்தையா இருக்கிறே? நேத்திய கதை நேத்தோட போச்சு. தெரியாது உனக்கு?'' படக்கென்று கதவைச் சாத்திக் கொண்டாள்.

அப்புறம் ஒரு நாள் நடு ரோடில் அவளை மடக்கி வேடி கத்தினான். ''குர்ரம்மா, என்னை ஏமாத்திட்டே. பார்த்துடறேண்டி. ஒரு நாள் இல்லாட்டா ஒரு நாள் நடு ரோட்டிலே உன் மாரைக் கிழிச்சுப் பார்த்துடறேண்டி.''

## எதிரி நம்பர்—3.

கூத்துக்கார ரங்கையனின்

பெண்டாட்டிக்கு அன்றைக்கு ஒரு
நெருக்கடி. அவள் மூன்று வயசுக் குழந்
தைக்கு டிப்தீரியா. டவுனில் பெரிய
ஆஸ்பத்திரிக்குக் கொண்டு செல்ல
வேண்டும். கையில் ஐம்பது ரூபாயா
வது வேண்டும்.

புருஷன் ஊரில் இல்லை.
கை கொடுத்து உதவ யாரும் இல்லை.
தெருக் கோடியில் குர்ரம்மா வீடு.
அவள் கையில்தான் கொஞ்சம் காசு
புரளும்.

ரங்கையன் சம்சாரத்தின்
நிலையை அனுதாபமாய்க் கேட்டுவிட்டு
குர்ரம்மா சொன்னாள். "மாரி, உன்
கஷ்டம் எனக்குப் புரியுது. ஆஸ்பத்தி
ரிக்குப் போறே. பொண்ணு கழுத்திலே
நகை இருக்கக் கூடாதுன்னு அங்கயே
சொல்லுவாங்க. ஒண்ணு செய். அது
என்கிட்டதான் இருக்கட்டுமே. பணத்
தைக் குடுத்ததும் மீட்டுக்க. என்ன?"

மாரி பணம் வாங்கிப்
போனாள். குழந்தை சுகமானது. கூத்
தாடி வந்தான்.

விவரம் கேட்டதும் பணத்
தைக் கொடுத்தனுப்பி நகையை மீட்டு
வரச் சொன்னான். போன சுருக்கில்
திரும்பி வந்தாள் அவன் மனைவி.

"என்னங்க.. 'கஞ . கண்
டியா? என் கிட்ட எப்ப பணம் வாங்
கினே? என்கிட்டே எப்ப நகை கொடுத்
தே'ன்னு கேக்கறாளே பாவி! அவ நல்லா
இருப்பாளா?" என்று மண்ணை வாரித்
தூற்றி விட்டுத் தலைத் தலையாய்
அடித்துக் கொண்டு புலம்பினாள்.

ஊர் கூட்டி நியாயம் கேட்ட
போது மாராக்கை நடுவில் நூலாட்டம்
இழுத்து விட்டுக் கொண்டு அந்தக் கண்
வெட்டில் சுருண்டு விழுந்து விட்டார்
ஊரார்; நியாயம் எழுந்திருக்கவில்லை.

அடுத்த கூத்தின்போதே
அர்ஜுன வேஷத்தில் ரங்கையன் குர்ரம்
மாவைப் பார்த்து ஜாடைப் பேச்சாய்ப்
பேசினனும். "நம்பிக்கைத் துரோகம்
பண்ணினவர் யாராயிருந்தாலும் அவங்
களை நாலு பேருக்கு முன்னாலே கிழிச்
சுப் போட்டாத்தான் என் மனசு
ஆறும்!"

□ □ □

என்னுடைய விசாரணையில்
மேற்படி மூன்று விவரங்களும் எனக்குக்
கிடைத்தன.

என்னை மலையனூர் சரகத்
துக்கு எஸ். ஐ. யாகத் தூக்கிப் போட்ட
போது, இந்தப் பட்டிக்காட்டில் எப்
படித்தான் பொழுது போகப் போகி
றதோ என்று அலுப்பாகத்தான் இருந்
தது.

எனக்கு அங்கு சுவாரஸ்யம்
கொடுத்ததெல்லாம் குர்ரம்மாதான்.

மியூஸியத்தில் மார்புப் பகுதி
யில் மட்டும் பாலிஷ் ஏறி நிற்குமே சில
கல் சிலைகள் அதுவேதான். நான்
ப்ளேபாயில்கூட இந்த மாதிரி ஒரு
கட்டைப் பார்த்ததில்லை.

உண்மையில் இந்த அதிகாரம்
அந்தஸ்து— இவை நானே மாட்டிக்
கொண்ட கௌரவப் போர்வைகள்—
இல்லாமல் இருந்திருந்தால் நான் அவ
ளுக்காக என்னத்தையும் இழக்கத்
தயாராய் இருந்தேன்.

அதற்குள் இப்படியொரு விப
ரீதம்— எதிர்பாராத வீபரீதம்—அதிர்ச்சி
தரக்கூடிய விபரீதம் சம்பவிக்கும்
என்று நான் நினைக்கவில்லை.

ஊருக்குள் மாவிளக்கெடுத்
துப் படையலிடும் மாரியம்மன் திரு
விழா ரொம்பக் கோலாகலமாய் வருடா
வருடம் நடக்குமாம். எனக்கு அந்த
வருடம் புதிது.

இந்த அளவுக்கு முக்கிய
மானது, கூட்டம் சேரும் என்று தெரிந்
திருந்தால் நான் போதுமான காபந்து
போட்டிருப்பேன். அவர்களிலும் யாரும்
பந்தோபஸ்துக்குக் கேட்கவில்லை. பழ
ைய ஜவான்களில் இருவர் சும்மா
வேடிக்கை பார்க்கும் சாக்கில் கேட்டுக்
கொண்டு போயிருந்தார்கள். அவ்வளவு
தான். அவர்கள் ரிப்போர்ட்:

அலெக்ஸாந்தர் பிறந்தவுடன், அவர்
தை பிலிப். அரிஸ்டாடிலுக்கு கீழ்க்
ண்டவாறு ஒரு கடிதம் எழுதினர்.
"எனக்கு மகன் பிறந்திருக்கின்றன்
என்ற மகிழ்ச்சியைக் காட்டிலும், அவன்
தங்களைப் போன்ற அறிஞர்கள் வாழும்
காலத்தில் பிறந்திருக்கின்றன் என்பதே
எனக்கு அதிக மகிழ்ச்சியைத் தருகிறது.'
-பி. நாராயணன்

புலியாட்டம் ரொம்ப ரோஷ
் நடந்தது. உள்ளூர் ஆட்டக்காரரர்
ல. பாலக்கோடு பஷீர் என்றால்
ம்பப் பிரபலம். அவனைத்தான்
வழைத்திருந்தார்கள்.

அவன் ஊரிலிருந்தே வேஷம்
டிக் கொண்டு வந்திருந்தான்.
பிலே எஃகு நக உறை. கண்ணிலே
ப்புக் கண்ணாடியில் வெள்ளை ஓட்டை.
க்கவே பயங்கரம்.

அவன் எட்டு வீடு கட்டி
யது, மான் கொம்புப் பிடி வைத்
சிலம்பம் காட்டியது படு ஜோர்.

குறிப்பாய்க் கோயில் தெரு
க்கு வந்தபோது ஒரு குறும்பாட்டை
ரில் கொண்டு வந்து நிறுத்தினார்கள்.

புலி வேஷக்காரன் இரண்டு
யையும் பின்னுக்குக் கட்டிக் கொண்
ன். அப்படியே குனிந்து ஆட்டின்
குப் புறத்தில் வாயைப் பதித்தான்.
க்காக கௌவி தூக்கித் தலையை
டுக்கென்று பின்னுக்குச் சாய்த்தான்.
த வேகத்தில் அந்தக் குறும்பாட்
குட்டி அவன் தலைக்கு மேல்
ண்டு முதுகுப் பக்கம் விழுந்தது. இந்த
தை பற்றிப் பேசாதவர்கள் இல்லை.

அப்புறம்?....

பெண்கள் கூடி நின்று
டிக்கை பார்த்துக் கொண்டிருந்
ர்கள். முன் வரிசையில் குர்ரம்மா
ம்ப எடுப்பாய் இருந்தாள். அவளைப்
ர்த்த குஷியா? சும்மா பிய்த்து உத
து புலி. திடுதிப்பென்று அந்த விபரீ
நேர்ந்து விட்டது.

திடீரென்று புலி பாய்ந்தது.
த எஃகு நகங்கள் குர்ரம்மாவின்
ர்பில் அழுத்தமாய்ப் பதிந்து ரூத
து. அவள் முரண்டி திமிறத்
மிற உடம்பெல்லாம் புகுந்து
ளயாடி விட்டது.

''எங்கே! எங்கே?''

பிரமிப்பிலிருந்து விடுபடுவதற்
ர், 'புலி' காட்டுக்குள் பாய்ந்து
ட்டது.

இருட்டு மூடிக் கொண்டது.

குர்ரம்மாவின் பக்கம் கவ
திரும்பியபோது அவள் மூச்சின்
ழை அறுந்து போயிற்று.

என்னுடைய விசாரணை
ரம்பமாயிற்று.

முதலில் அந்தப் புலி வேஷக்
ரன். பாலக்கோடு பஷீர்.



'மூன்று முடிச்சு' படத்தில் கமலஹாசனும் ஸ்ரீதேவியும் சம்பந்தப்பட்ட ஒரு லவ் சீன். குற்றால நீர்வீழ்ச்சியருகே எடுத்தார்கள். டயலாக் கிடையாது எக்ஸ்பிரஷனில் காதலை வெளிப்படுத்த வேண்டும். இரண்டு மூன்று டேக்காகி விட்டது. எக்ஸ்பிரஷன் வரவில்லை. டைரக்டருக்குக் கோபம் வந்து திட்டி விட்டார். அப்போது கமலஹாசன் ஸ்ரீதேவியின் காதோடு ஒரு யோசனை சொன்னார். ஸ்ரீதேவி அதன்படி செய்தார் அடுத்த டேக் ஓ.கே., கமல் சொன்ன யோசனை என்ன? 'அழுகிற மாதிரி முகத்தை வைத்துக் கொள்!'

—பானு

பஷீர் ஊரில் இருந்தான்.
அவனுடைய அசல் தொழில் சைக்கிள் ஷாப். மலையனூருக்கு அவன் வந்திருந்தது பற்றிப் பேச்செடுத்ததும்—

''எவன் சார் சொன்னான் நான் மலையனூர் மேலே வந்தேன்னு? ஊர்க்காரங்க அட்வான்ஸ் கொண்டு வந்து கொடுத்தாங்க. பின்னாலே அவங்களே வந்து அன்னிக்குத் திருவிழா இல்லே. அட்வான்ஸ் போனாப் போவுதுன்னு சொல்லிட்டுப் போனாங்க. உண்டா இல்லையான்னு இந்தா டீ கடை நாயரைக் கேளு சார்,'' என்றான் அவன் ரோஷமாக.

சூர்ரம்மா கொலை நிகழ்ச்சி காலக்கோடுக்கு எட்டுவதற்கு முன்னாலேயே இங்கு வந்து விட்டேன் என்பதை உறுதிப் படுத்திக் கொண்டேன்.

''உன்னண்டை திருவிழா கிடையாதுன்னு சொன்னது ஒருத்தரா, ரெண்டு மூணு பேரா?''

அவன் கொஞ்சம் நினைவைக் கிள்ளிப் பார்த்துக் கொண்டான். ''என்னண்டை வந்து சொன்ன ஆள் ஒண்டிதான். கூட வேறே யாரும் வந்திருந்தாங்களா, சிக்கலே.''

''அந்த ஆளைப் பார்த்தா அடையாளம் காட்டுவியா?''

''தாடி வச்சிருந்தான். காமராஜ் சொக்கா போட்டிருந்தான்.'' தன்னைத்தானே ஒருமுறை பார்த்துக் கொண்டான். ''என்னை மாதிரிதான் உசரம் பருமன் எல்லாம். ஏன் சார், நீங்க விசாரிக்கிறதைப் பார்த்தா....''

அதற்கு மேல் அவனிடம் மறைத்தாலும் விசாரித்துத் தெரிந்து கொண்டு விடுவான். விவரம் சொல்லி விட்டுத் திரும்பினேன்.

காட்டுக்குள் 'புலி' சென்ற திசையில் ஆராய்ந்தோம். ஒரு மொட்டையான குட்டைக்கு நடுவில் டால் அடித்தது. இறங்கி எடுத்து வரச் செய்தேன். ரத்தக் கறை படிந்த எஃகு நக உறைகள். உள்ளுக்குள் ஃபிங்கர் பிரிண்ட் இருக்கலாம். பத்திரப் படுத்திக் கொண்டேன்.

சூர்ரம்மா விவகாரத்தில் இல்லாத அவலா? ஊரெல்லாம்தான் மென்று கொண்டிருக்கிறதே!

அவளுடன் நேருக்கு நேர் மோதிய—ஆரம்பத்தில் குறிப்பிட்ட அந்த மூன்று எதிரிகளைப் பற்றித் தெரிந்து கொள்வதில் நான் தேடிப் போனது குறைச்சல். நாடி வந்தது அதிகம்.

புலி வேஷம் என்பது மேக்கப் சமாசாரம் என்பதால் என்னுடைய முதல் சந்தேகம் கூத்துக்கார ரங்கையனிடம்தான். கொலை செய்வதற்கான 'மோடிவ்' என்று பார்த்தால் மற்ற இருவருக்கும் பொருத்தமான காரணம் நியாயமான வெறி இருக்கிறது. எனவே, மூவரையும் வரவழைக்க நடவடிக்கை மேற்கொண்டேன்.

மூவரும் எதிரில் நின்றார்கள். வேடிக்கை! மூவருக்கும் ஏறக் குறைய ஒரே மாதிரியான உடற்கட்டு – அதா



'கதாசிரியர்களைத் திணற அடிப்பவர்கள்' என்ற தொடருக்குக் கருத்துக் கொடுத்தவர்களின் பெயர்கள் 14-12-78 குமுதம் இதழில் வெளிவந்தது. அதன்படி ஒரே ஒருவரின் வர்ணனைக்கான கதையைத் தவிர மற்றக் கதைகள் எல்லாம் வெளிவந்தன.

அப்படி விடப்பட்ட கதைக் கருத்துச் சொன்னவர்:

கு.மா. சுப்பாராஜ், குமாரபுரம்.

தன் கருத்துக்குக் கதை எழுதப்படாமல் விட்டுப் போனது குறித்துத் தொடர்ந்து நினைவூட்டிய அவரது விடா முயற்சியைப் பாராட்டி இந்த இதழில் அவரது புகைப்படம், படக் கருத்து ஆகியவற்றைப் பிரசுரித்திருக்கிறோம்.

படக்கருத்து: விழா ஊர்வலத்தில் தாரை தப்பட்டைகளுடன் புலி வேடமும் வருகிறது. ஓரிடத்திற்கு வந்ததும் புலி வேடதாரி, கூட்டத்தில் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த ஒரு நபரின் மேல் திடீரென்று பாய்ந்தான்...

கதை: சூர்ரம்மா.

வது பாலக்கோடு பஷீரின் உடற்கட்டு.

பஷீரை வரவழைத்தேன். ஒவ்வொருவருக்காய்த் தாடி வைத்துக் காட்டினேன். பஷீர் என்ன, நானே தடுமாற வேண்டியிருந்தது. மூவரும் ஒரே மாதிரி இருந்தார்கள்.

மூவரையும் சற்று நேரம் வெறித்தும் பார்த்தேன்.

திடீரென்று ஒரு பொறி தட்டியது.

கொலை பற்றி எனக்கு ரிப்போர்ட் தந்த கான்ஸ்டபிளிடம் கேட்டேன். ''புலி வேஷக்காரன் ஒரு ஆட்டைக் கடித்துத் தூக்கிப் போட்டான் என்றாயே, அந்த ஆட்டைப் பிடித்துக் கொண்டு வரமுடியுமா?''

''யெஸ் ஸார்!'' விறைப்பாக சல்யூட் அடித்துவிட்டுக் கிளம்பிச் சென்றான் அவன்.

அடுத்த அரை மணியில் ஒரு குறும்பாட்டுக் குட்டி என்முன் கொண்டு வந்து நிறுத்தப்பட்டது

''இத்தனை பெரிய ஆட்டைக் கடித்து வாயாலேயே தூக்கிப் போட முடியுமா?''

பஷீர் முன் வந்தான்.



அவர் பகலெல்லாம பார்க் பீச்னு சுத்திட்டு நள்ளிரவில்தான் வீட்டுக்குப் போவேன்''

இவா எங்க

அவ திபாவளி இனும் கேட்டு யாராவது வீட்டுககு வந்துக்கிட்டே இருக்காங்க.

ஆர்ஜி

''பார்க்கத்தான் பெரிசு. அத்தனையு[ம்] கம்பிளி. கனம் இருக்காது. இதோ பா[ருங்க] சார்!'' அனாயாசமாய் அதை வாயி[ல்] கௌவி முதுகுக்குப் பின்னால் தூக்[கி] யெறிந்தான்.

அந்த ஆட்டின் முதுகு[ப்] புறத்தை அப்படியே பிடித்து[த்] தூக்கிப் பார்த்தேன். சொன்ன மாதி[ரி] அத்தனை கன—என்ன இது, ஏதே[ா] நெருடுகிறது! முடி அடர்வுக்கு[ள்] விரலுக்குள் கோதிப் பார்த்தேன். ஒ[ரு] சின்ன பொருள் கிடைத்தது! என[க்]குத் தேவையான பொருள்!

''எங்கே நீங்க ஒவ்வொரு[த்]தரா பஷீர் செய்தா மாதிரி ஆட்டை[த்] தூக்கிப் போடுங்க, பார்ப்போம்!

எதிரிலிருந்த மூவரும் ஒ[ரு]வரை ஒருவர் பார்த்துக் கொண்டா[ர்]கள் ''நான் மூட்டை தூக்குவே[ன்] ஆட்டைத் தூக்கிப் போட்டுப் பழக்[க]மில்லே சார்,'' என்றான் மில் கூ[லி] வேடி ரோஷமாக

''அப்படியா?'' அவ[னை] வெறித்தேன். ''போனால் போகுது முன் பல் ஒன்று விழுந்திருக்கே என்னிக்குன்னு தெரியுமா?''

அவன் பேயறைந்தாற்போ[ல] ஆனான்.

''ரொம்ப நாளா ஆடி[க்கிட்]டிருந்தது. நேத்துதான் விழுந் போச்சு.''

''அது எங்கே விழுந்த[து]ன்னு தெரியுமா?''

''எனக்குத் தெரியாது.''

''எனக்குத் தெரியும் வேடி இதோ பார்த்தியா?'' கைக்கு[ள்] மறைத்து வைத்திருந்த பல்லைக் காட்டினேன். ''இதை எங்கேருந்து எடு[த்]தேன்னு கேட்கலையே?''

''இது என் பல்லுதானா?''

''அதெல்லாம் ஒட்ட வச்சு பார்த்துக்குவோம். நீ கேட்காட்ட[ா]லும் நான் சொல்றேன். இந்த ஆட்[டு] முடிக்குள்ளேயிருந்து இதை எடுத்தே[ன்] இதுக்கு மேலேயும் கொலைகார[ன்] யாருன்னு சொல்லணுமா?''

வேடியின் முகம் சுறுத்த[து] தலை குனிந்து கொண்டான்.

அனைவருக்கும் எங்களது தீபாவளி நல்வாழ்த்துக்கள்

# கோபால் பல்பொடி




பாக்கெட் விலை: 35 காசு

# ஜெட் பல்பொடி




பாக்கெட் விலை: 15 காசு

—மினர்வா.

# அதன் பேர் ஸ..ரீ..க..ம..

"ஸ்ரீகமா என்று கேள்விப்பட்டிருக்கிறீர்களா?" என்று திடுதிப்பென்று கேட்டார் சக பிரயாணி.

"என்ன அப்படிக் கேட்கிறீர்கள்? அது குழந்தைகளுக்குத் தரும் பிரபல பால் உணவாச்சே! சிலோன் ரேடியோவை முடுக்கும் போதெல்லாம் ஸ்ரீகமாவின் பெயர் தானே காதைத் துளைக்கிறது?'

"அந்த உணவுப் பொருளைக் கண்டுபிடித்துத் தயாரிப்பவன் நான்தான்."

"ஆமாம், ஸ்ரீகமா என்று இந்தப் 'பிராடக்டி'ற்கு ஏன் பெயர் தந்தீர்கள்? உங்களுக்குக் கர்நாடக சங்கீதம் என்றால் உயிரோ?"

'அதெல்லாம் ஒன்றுமில்லை.'

"பின்னே?"

'இதே கேள்வியை என்னைப் பல பேர் கேட்கிறார்கள் எனக்கும் கதை சொல்லி அலுத்து விட்டது. எனவே இந்தப் பெயருக்குப் பின்னால் ஒளிந்து கொண்டிருக்கும் சுவையான வரலாற்றை இதோ, ஒரு சிறு 'புக்லெட்'டாக வெளியிட்டிருக்கிறேன். என்னிடம் கேள்வி கேட்பவர்களுக்கெல்லாம் ஒரு பிரதி தந்து படிக்கச் சொல்வது வழக்கம்.. பிடியுங்கள் உங்கள் பிரதியை'

o0o

மகாலிங்கம பரமபரைப பணக்காரர் அபபாவிடமிருந்து அவருக்கு வந்த சொத்துக்கள் நாலு ரைஸ் மில்கள ஒரு தோல் மண்டி, ஒரு பிளாஸ்டி தொழிற்சாலை முதலியன. அவர் திருமண செய்து கொண்ட கங்கை அம்மாளும் பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்தவள்.

இவ்வளவு சொத்து சுகங்கள் இருந்தும் தம்பதிகளுக்குக் குழந்தை ஏது இருக்கவில்லை. பெரிய பெரிய டாக்டர்கள் எல்லாம் கை விரிக்கப் போய் தெய்வ சகாயத்தை நாடினார்கள் தம்பதிகள்

எத்தனையோ கோயில்களுக்கு போனார்கள். ஓர் ஆலமரம், அரச மர விடாது சுற்றினார்கள். காசியிலிருந்து வந் ஊமை ஜோசியன் சொன்னானெ தங்கத்தில் நாகம் செய்து அதற்கு பாலாபிஷேகம் செய்தார்கள். இந்து கடவுள்களுடன் மற்ற மதங்களைச் சேர்ந் சாமிகளையும் வழிபட்டுப் பார்த்தார்கள் ஊஹூம்! எதுவும் எதிர்பார்த்த பலன் தரவில்லை.

"எப்படி குழந்தை பிறக்கும்னு கேட்கிறேன்? மாலியோடே கொள்ளு பாட்டியொருத்தி அரக்கி வேலை செஞ்சு கொண்டிருந்தாள்? எத்தனை குழந்தைகளைப் பிறக்காமல் அடிச்சாள் பாவி! அந்தப் பாவமெல்லாம் இவ தலையிலே விடிஞ்சிருக்கு. பிராரப் கர்மாவை அனுபவிக்கிறாள். வேறென்ன இந்தப் பரம்பரைச் சொத்தெல்லாம் எங்கிருந்து வந்தது? எல்லாம் அந் ராட்சஸி அநியாயமாகச் சமபாதிச் வட்டிக்கு விட்ட பணமதானே? சாமி இந்





மட்டேடு விட்டாரே, மேலும் துன்புறுத்தாமல்,'' என்று தம்பதியர் காது கேட்க அடிக்கடி அங்கலாய்ப்பாள் எண்பது வயதுக்கு மேலாகிவிட்ட சேஷிபபாடடி

மகாலிங்கத்தை மேலும மேலும துன்புறுத்துவது என்று விதி முடிவு கட்டியிருந்தது போலும்! இல்லாவிட்டால் அவருக்கு அந்த விசித்திரமான வியாதி ஏன் வர வேண்டும்? எத்தனையோ டாக்டர்கள் என்னென்னமோ செய்து பார்த்தார்கள். அந்த வியாதி இன்னதென்று அவர்களால் கண்டுபிடிக்கவே முடியவில்லை. மேல் நாடுகளிலும் ட்ரீட்மெண்ட் நடந்தது. அங்கே ஒரு டாக்டர் பெரிய குண்டைத் தூக்கிப் போட்டார்! மகாலிங்கம் இனி மேல் வாழப் போவதெல்லாம் ஆறே ஆறு மாதங்கள் தானென்று!

ஊருக்குத் திரும்பி வந்தவர் இங்கிலீஷ் வைத்தியத்திற்குத் தலை மூழ்கி ஆயுர்வேதம், யுனானி என்று மாதம் ஒரு நிபுணரைத் தேடி அலைந்தார். கடைசியில் ஓர் இமாலய யோகியைச் சந்தித்தார். அவர் டாக்டராக இருந்து யோகியாக மாறினவர். அவர் மகாலிங்கத்திற்குக் கொஞ்சம் நம்பிக்கை தந்தார். தொடர்ந்து சில வாரங்கள் மகாலிங்கம் முப்பது அவுன்ஸ் இளம் தாய்ப்பாலை மட்டும் அதிகாலையிலும், மாலையிலும் சில பச்சிலைகளுடன் சாப்பிட்டு வந்தால் அவரை வாட்டி வந்த பிணி சொல்லிக் கொள்ளாமல் ஓடிவிடும் என்று உறுதியாகக் கூறினார். மகாலிங்கம் இந்த வைத்தியத்தைப் பரீட்சை பண்ணிப் பார்ப்பது என்று தீர்மானித்தார்.

தாய்ப்பால் தேடி அலைந்தபோதுதான், அது கிடைப்பது எவ்வளவு கஷ்டம் என்று தெரிந்தது.

முக்கால்வாசி வீடுகளிலும் குழந்தைக்குத் தாய்ப்பால் தருவதா? அந்த வழக்கம் இங்கில்லை என்று முகத்திலடித்தாற்போல் சொல்லி விட்டார்கள். 'பிகர்' (Figure) கெட்டுப் போய்விடும் என்று எண்ணி அவர்களெல்லாம் குழந்தைக்குப் புட்டிப் பால் புகட்டுகிறார்களாம்!

ஜி.எஸ். பாலகிருஷ்ணன்

சமூகத்தின் உயர் மட்டத்தில் வாழுகிறவர்களை அணுகிப் பலனில்லை என்று தீர்மானித்து, மேலாடடாவுடன் கும்மிருள் குடிசைகளை நாடினான் மகாலிங்கத்தின் மனைவி. அங்கே பால் தந்து உதவ வேண்டும் என்ற நல்லெண்ணம் நிறைய இருந்தது. ஆனால் பால்தான் இல்லை. அநேகம் குழந்தைகள் அம்மையின் வற்றிய மார்பிலிருந்து இரத்தத்தைத்தான் உறிஞ்சிக் குடித்துக் கொண்டிருந்தன

கடைசியில் நாலு பெண்கள் பால் தர முன் வந்தார்கள். ஒரு தடவை ஒருவரால் அதிகம் போனால் மூன்று அவுன்ஸ்தான் தர முடியும். ஒரு நாளைக்கு எப்படியாவது ஆறு அவுன்ஸ் தர ஒப்புக் கொண்டார்கள். தங்கள் குழந்தைகளைக் கொஞ்சம் பட்டினி போட்டாவது ஓர் உயிரைக் காப்பாற்ற வேண்டும் என்ற நல்லெண்ணம்தான் அவர்கள் உதவி செய்ய முன் வந்ததற்குக் காரணம். மகாலிங்கம் பணம் தருவதாகச் சொன்னவுடன் மறுத்ததுடன், மிகவும் கோபித்துக் கொண்டார்கள்!

இமாலய யோகியின் மருந்து பலன் தந்தது. நான்கே வாரங்களில் அவர் பழைய மகாலிங்கமாக மாறினார்.

உடம்பில் தெம்பு வந்தவுடன் அவர் செய்த முதல் காரியம் எல்லோரையும் வியப்பில் ஆழ்த்தியது. ஆம்! செயற்கை முறையில் தாய்ப் பால் தயாரிக்க முயற்சிகள் எடுத்துக் கொண்டார். இதற்காகவே ஒரு சிறு ஆராய்ச்சி சாலையைச் சொந்தச் செலவில் நிறுவினார். பெரிய பெரிய விஞ்ஞானிகளை யெல்லாம் வரவழைத்துப் பணத்தைத் தண்ணீராட்டம் வாரி இறைத்தார். தனக்கு வந்த வியாதி வேறு யாருக்காவது வந்து அவர்கள் தாய்ப் பாலின்றிக் கஷ்டப்படக் கூடாதல்லவா? தவிர, செயற்கைத் தாய்ப் பால் தயாரிப்பதில் வெற்றி பெற்றால் ஏழைக் குழந்தைகளுக்கு வேறு உதவலாமே!

ஒரு வருடத்திற்குப்பின் விஞ்ஞானிகள் கை விரித்தார்கள். இயற்கையுடன் போட்டியிட்டு அவர்கள் ஜெயிக்க முடியாதாம்! செயற்கை இரத்தம், செயற்கைத் தாய்ப்பால் எல்லாம் வீண் கனவு என்று ஐயத்திற்கு இடமின்றிச் சொல்லி விட்டார்கள்.

இது மகாலிங்கத்தை மிகவும் வருத்தியது. ஆனால் விஞ்ஞானிகள் சொன்ன இன்னொரு செய்தி அவருக்கு மகிழ்ச்சி அளித்தது. செயற்கைத் தாய்ப் பால் தயாரிப்பதற்காக அவர் செலவழித்த பணம் வீண் இல்லையாம். தாய்ப்பாலுக்குப் பதிலாக மிகச் சிறந்த சத்துள்ள பால் உணவு ஒன்றை உருவாக்கும் முறையை அவர்கள் அதிசயமாய் எதேச்சையாகக் கண்டுபிடித்திருந்தார்களாம். தாய்ப்பால் இல்லாத குழந்தைகளுக்கு அந்த உணவு ஒரு வரப் பிரசாதமாம்!

ooo

''ஸரீகம வியாபார ரீதியில் பணம் சம்பாதிப்பதற்காகத் தயாரிக்கப்படும் பால் உணவு அல்ல. நம் நாட்டுக் குழந்தைகள் மிகவும் நல்ல ஆரோக்கியத்துடன் வளர்ந்து சிறந்த பிரஜைகளாக வேண்டும் என்பதுதான் அதன் ஆதார சுருதி.'

''ஆமாம், ஸரீகம என்று ஏன் பெயர் வைத்தீர்கள்?''

''பார்த்தீர்களா, 'புக்லெட்'டில் குறிப்பிட்டிருக்கும் முக்கியமான அந்த விஷயத்தைப் படிக்க மறந்து விட்டுவிட்டீர்களே! நான் வியாதியாகப் படுத்திருக்கையில் எனக்குப் பால் தந்து உதவிய நாலு தியாகினிகளின் பெயர்களின் முதல் எழுத்துக்கள்தான் ஸ ரீ க ம...ஸரஸ்வதி, ரீடா, கல்யாணி, மல்லிகா. அவர்கள் 'பப்ளிஸிடி'யை விரும்பாதவர்கள். நாலு பேருக்குத் தெரியாமல் எனக்கு உதவி செய்தவர்கள். என் தாய்க்கு ஈடாக நான் அவர்களை மதிக்கிறேன்,'' என்று கதையை முடித்தார் மகாலிங்கம்.



''முன்னேயெல்லாம் நம்ம பாலுவோட அப்பா வீட்டிலே இருக்கிற போதெல்லாம் படிபடின்னு சொல்லிட்டே இருப்பாரே, தெரியுமா உனக்கு?'

''இப்போ எப்படி?'

''மெட்ரிக் அளவுகள் வந்தப்புறம் அதை நிறுத்திக்கிட்டார்.''

—என் கே. எஸ்


மங்கையர்
குதூகலித்தால்
மாநிலமே
குதூகலிக்குமே!
மங்கையர்
குதூகலிக்க
சாரதாஸின்
புதிய டிசைன்கள்
இந்திரஜோதி
சுந்தரலேகா!
சாரதா'ஸ்
(முகூர்த்தப் பட்டு புடவைகளுக்கு அதிர்ஷ்டமான இடம்)
தன் பில்டிங்
மவுண்ட் ரோடு
சென்னை-600 002
போன் : 87177
N.S.B. ரோடு
திருச்சி-620 002
போன் : 27077

# கண்ணதாசன்

"வாழ்க்கை என்பது இது மட்டுமல்ல. இதற்கப்பாலும் சில பந்தம், பாசம், கடமைகள் இருக்கின்றன. அது கூடவா உங்களுக்கு நினைவில்லாமல் போய்விட்டது? அப்பப்பா! இது என்ன உடம்போ தெரியவில்லை. என்னால் முடியாது. இரண்டு நாட்களாக இடுப்பு வலி உயிர் போகிறது. குழந்தைக்கு வேறு உடம்பு சுகமில்லை. கிளினிக்கிலிருந்து வரும்போதே இந்த ஞாபகத்தோடுதான் வருவீர்கள் போலிருக்கிறது? தயவு செய்து பேசாமல் தூங்குங்கள்,'' என்றபடி, தரையில் பர்மா பாயைப் போட்டு, ஆறு மாதமே ஆன இரண்டாவது குழந்தையை அணைத்தபடி திரும்பிப் படுத்துவிட்டாள் பிரேமா.

''இதோ பார், என்ன இப்போது? மனிதனுக்கு வேறு என்ன சந்தோஷம் இருக்கிறது? கிளினிக்கில் நோயாளிகள் பன்னிரண்டு மணி நேரம் உயிரை வாங்கிவிடுகிறார்கள்! மாதம் ஒரு ஆங்கிலப் படம்கூடப் பார்க்க முடிவதில்லை. இதிலேயாவது நீ கொஞ்சம் இரக்கம் காட்டக்கூடாதா?'' என்றபடி, கட்டிலின் மேற்பகுதியில் சாய்ந்து, அவளைக் கெஞ்சினான் நடனசுந்தரம்.

அவனை சுருக்கமாக 'நடனம்' என்று அழைப்பார்கள்.

''இதிலே இரக்கமென்ன இரக்கம்? இதுவென்ன புண்ணியமா, புருஷார்த்தமா? என்னால் முடியவில்லை. இல்லையென்றால் இப்படிச் சொல்வேனா? என் ராஜா அல்லவா...! இன்றைக்கு மட்டும் தூங்குங்கள். நாளை மாலை நன்றாக வெந்நீர் வைத்துக் குளித்தால் உடம்பு வலி தீர்ந்துவிடும். நான் உங்களோடு இருப்பவள்தானே, ஓடியா போகப்போகிறேன்...?'' என்று சுதி இறங்கிப் பேசினாள் பிரேமா.

நடனம், ''சரி,'' என்று சொல்லிவிட்டுத் திரும்பிப் படுத்தானே தவிர, அவனுக்குத் தூக்கம் வரவில்லை.

இரவு இரண்டு மணிக்கெல்லாம், ''பிரேமா, பிரேமா!'' என்றான் அவள் ஒரு 'ம்'கூடச் சொல்லாம தூங்கிவிட்டாள். நடனமும் ஒரு பெருமூச்சோடு தூங்கிவிட்டான்.

காதல் என்பது உலகம் தோன்றியபோதே தோன்றிவிட்டதாம் ஆனால், நவீன உலகத்தில் அது விசுவரூபமெடுத்து நிற்கிறது. பதினா வயதைத் தாண்டுவதற்கு முன்பே ஆணுக்கும் பெண்ணுக்கும் பாலுணர்ச் தோன்ற ஆரம்பித்துவிடுகிறது.

சுமார் நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு வரையில் பெண்க பதினெட்டு வயதுக்கு மேலேதான் ரு வானார்கள். அந்நாளில் கல்யாண வய என்பது, சராசரியாக இருபத்து மூன் வயதாகத்தான் இருந்தது. 'பழ காலம், பழங்காலம்' என்கிறோமே அக்காலத்தில், எல்லாமே ஒரு கட்டு கோப்புக்குள் அடங்கி இருந்தன கணவனும் மனைவியும் ஒரே படுக்கையில் படுத்துத் தூங்குவதை உற்று உறவினர்கள் கூடப் பார்த்திருக்க மாட்டார்கள். ஆனால் அந்தக் காலத்து பிரதிநிதிகளல்லவே நடனமும், பிரேமாவும்.

இருவருமே மருத்துவக் கல்லூரியில் படித்தவர்கள். நடனம் ஒ ஜாதி, பிரேமா ஒரு ஜாதிதான். ஏதே கல்லூரிப் படிப்பில் மூழ்கிவிட்டாலே சீர்திருத்தவாதிகளுக்கு இல்லாத வேக

# இனி நான்

# மனைவி மட்டு

ாணவ மாணவிகளுக்கு வந்துவிடுகிறது:
வர்களும் உயர்நிலைப்பள்ளி இறுதி
ாண்டு வரையில் தலைவன் தலைவி
லக்கியங்களைப் படித்தவர்கள்தானே?
திலும் ஓர் இளைஞனும் இளம் பெண்
ணும் மருத்துவக் கல்லூரிக்குள் நுழைந்து
விட்டால் ஒரு சுயேச்சையான எண்ணம்



தயமாகிவிடுகிறது.

கட்டுப்பாடான சமூக
மைப்பை ஓரளவுக்குக் கல்லூரி
ாழ்க்கை தகர்த்து விடுகிறது. எல்
லாருமே அப்படியல்ல: சிலரைப்
பாறுத்தவரை இதுதான் உண்மை.

பிரேமாவும், நடனமும்
ருத்துவக் கல்லூரியில் ஒரு மாணவனும்
ாணவியும் போலத்தான் ஆரம்ப
லங்களில் நடந்து கொண்டார்கள்.

அங்கே மூன்றாவது ஆண்டு படிக்கும்போது, படிப்புக்குத் தேவையான சில பொருட்களை அவர்கள் பரிமாறிக்கொள்ள நேர்ந்தது. அப்படியே அந்தப் பொருட்களுக்குள் காதல் கடிதங்களும் பரிமாறப் பட்டன.

திருத்தணியைச் சேர்ந்த நடனசுந்தரம், கிருஷ்ணகிரியைச் சேர்ந்த பிரேமாவிடம் உயிரையே

வைத்திருந்தான்: ஒரு சில மாணவர்களைப்போல அவன் போதைப் பொருள்கள் எதற்கும் அடிமையானதில்லை. அவனுக்குப் போதையேற்றியது பிரேமாவின் குறுகுறுத்த பார்வையே.

அப்பா சிங்கப்பூரில் வாங்கி வந்த பறவைகள் படம் போட்ட நான்கு வர்ணப் புடவையும், சிவப்பு ஜாக்கெட்டும், உள்ளே பிராவும் அணிந்துகொண்டு, கழுத்தில் ஒற்றை வடச் சங்கிலி போட்டபடி பிரேமா நடந்து வருவதில் மற்றும் சில மாணவர்களுக்குக்கூட மயக்கம் இருந்தது. அவள் கழுத்துக்கு மட்டும் ஸ்டெதாஸ்கோப் ஏனோ அவ்வளவு அழகாக இருந்தது. இடது கையில் ஒரு சிறு ரிஸ்ட் வாட்ச். அதையும் வெள்ளிச் சங்கிலியில் கட்டியிருப்பாள். நாகரிகப் பெண்களுக்கு இல்லாத பழக்கமாகக் காலில் கொலுசு போட்டிருப்பாள். அவள் நடனத்தை உண்மையாகவே காதலித்தாள். நடனத்தின் நடத்தையே அவளைப் பெரிதும் கவர்ந்தது. நடனத்துக்குச் சிகரெட் பிடிக்கும் பழக்கம் கூடக் கிடையாது.

வகை வகையான இருநூற்றைம்பது பெண்கள் உள்ள இடத்தில் அவன் தன்னைக் காதலிக்கிறான் என்பதே அவளுக்குப் பெருமையாக இருந்தது.

விடுமுறையில் ஊருக்குப் போகும்போதுகூட நடனமே கொண்டு போய் அவளைக் கிருஷ்ணகிரியில் விட்டு விட்டுப் போவான். அப்போதெல்லாம் ஒரு குறும்புத்தனம், சேட்டைகூட இருக்காது.

பிரேமாவின் பெற்றோருக்கும் அவனை மிகவும் பிடித்திருந்தது. நடனம் தன் அண்ணனின் ஆதரவில் படித்தவன். அவனுக்குப் பெற்றோர் கிடையாது.

கல்லூரிப் படிப்பு முடியும் வரை அவர்கள் நண்பர்கள் போலவே தான் பழகினார்கள். வேறு வகையான உறவுகள் அவர்களுக்குள் தோன்றவே இல்லை. தொட்டான், துவண்டாள், கட்டிப் பிடித்தான், முத்தமிட்டான் என்ற கதையெல்லாம் கிடையாது.

ஆனால் இந்தக் கட்டுப்பாட்டைத் திருமணம் தகர்த்தெறிந்தது.

நடனம் எந்தப் பெண்ணையும் தொட்டறியாதவன். ஆகையால் உடல் உறவில் அவனுக்கு ஆசையும் சபலமும் அதிகமாக இருந்தன.

அவர்களுடைய திருமணத்திற்கு யாரும் குறுக்கே நிற்கவில்லை. இரண்டு டாக்டர்கள் திருமணம் செய்து கொள்கிறார்கள் என்றால் ஜாதி மதத்தை யார் பார்க்கிறார்கள்? அங்கே ஜாதகப் பொருத்தம்கூடப் பார்க்கப்படவில்லை.

பழங்காலங்களில் உடற் பொருத்தம் பார்ப்பார்கள். அதுவும் பார்க்கப்படவில்லை. மனது பொருந்தி விட்டது என்ற எண்ணமே மேலோங்கி நின்றது.

ஆனால் பிரேமா மானசீகமான நட்பையும், காதலுறவையுமே பெரிதாக மதிப்பவளாக இருந்தாள். உடலுறவில் அவளுக்குக் குறைந்தபட்ச ஆசையே இருந்தது. மருத்துவத்தில் பல துறையிலும் முன்னேற வேண்டுமென்ற அக்கறை இருந்தது.

இரண்டு பேரும் ஹவுஸ் சர்ஜன்களாகப் பணிபுரிய ஆரம்பித்த போதே திருமணத்தை முடித்துக் கொண்டார்கள். அந்தப் பணி முடியும் போதே ஒரு குழந்தையும் பிறந்து விட்டது. பிறகு அவர்கள் அரசாங்க வேலையைத் தேடவில்லை. நியாயமான

நடிகை சுபாஷிணி தன் பேட்டியில் அவர் பயின்ற பள்ளியாகிய குண்டு சுப்பையாப்பிள்ளை மகளிர் மேல்நிலைப் பள்ளியைப் பற்றிக் குறிப்பிட்டசெய்திகள் (4—10—7 தேதியிட்ட குமுதம் இதழுடன் வெளிவந்த இலவச இணைப்பு) உண்மைக்குப் புறம்பானவை.

சுபாஷிணி தேர்வின் போது ஆசிரியர்கள் சொல்லிக் கொடுப்பார்கள் என்று குறிப்பிட்டிருக்கிறார். எங்கள் பள்ளியில் தேர்வுகளில் கடுமையான கண்காணிப்பு உண்டு. அந்நிலையில் காப்பியடிப்பது அவ்வளவு சுலபமான காரியமல்ல. மேலும் எங்கள் பள்ளியில் மாணவியர் ஷூ போடுவது கிடையாது. விளையாட்டுப் போட்டிகளிலும், பொது விழாக்களிலும் கலந்து கொள்ளும் போது மட்டுமே ஷூ அணிவார்கள். மற்றப் பள்ளி நாட்களில் ஷூ போடுவது இடையாது. அப்படியிருக்க ஷூவில் 'பிட்' வைத்துக் காப்

# சுபாஷிணியின் வே

அளவில் ஒரு கிளினிக் ஆரம்பித்தார்கள். நல்ல வருமானம் வர ஆரம்பித்தது.

'டாக்டர் என்றால் இரவு பன்னிரண்டு மணிக்கு எழுப்பினாலும் போயாக வேண்டும்,' என்பது பிரேமாவின் கொள்கை.

பத்து மணிக்குக் கிளினிக்கை மூடிவிட்டால், இரவு இரண்டு மணி வரையிலும் காதல் விளையாட்டு விளையாட வேண்டும் என்பது நடனத்தின் கொள்கை.

ஆரம்ப காலங்களில் அதில் அவள் வெறுப்புக் காட்டவில்லை. காரணம் அவனுக்கு வேறு பொழுதுபோக்கு இல்லை என்பதுதான். அப்படியே நான்கு வருடங்கள் நடந்தன. நல்ல இடைவெளியில் ஓர் ஆண் குழந்தையும் ஒரு பெண் குழந்தையும் பிறந்தன.

குழந்தை பிறந்த மறு மாதமே பச்சை உடம்பு என்றுகூடப் பாராமல் நடனம் தொல்லை செய்ததை அவளால் தாங்கிக்கொள்ளத்தான் முடியவில்லை.

உலகத்திலுள்ள மருத்துவப் பட்டங்களையெல்லாம் வாங்கிவிட வேண்டும் என்று துடியாய்த் துடித்த பிரேமா, ஒரே ஒரு பட்டத்தைத்தான் ஆராய்ச்சியில் பெற முடிந்தது.

ஆகவே உடல் உறவில் அவளுக்கு ஒரு அவர்ஷன் ஏற்பட்டுவிட்டது. 'இதைவிடத் தன் கணவன் வேறு எவளிடமாவது போய் வந்தால் தேவலை,' என்றுகூட எண்ணத் தலைப்பட்டாள்.

அவனோ ஒருத்தியிடமே மகிழ்ந்து பழக்கப்பட்டதால்,அவளையே சுற்றிக் கொண்டிருந்தான்.

இரவு நேரங்கள், பிரேமாவுக்கு எரிச்சலூட்டும் நேரங்களாக மாறி விட்டன.

ஏதாவது டெலிபோன் வந்து பிரசவக் கேஸ் என்றால், அவள் நிம்மதியாகச் சென்று காலையில் திரும்ப ஆரம்பித்தாள்.

ஆனால் பெரும்பாலும் மறுத்துப் பேசாமலேயே காலம் கடத்திவந்த பிரேமா, அன்றுதான் மனம் திறந்து பேசிவிட்டாள்.

---

யடிப்பது என்பது அப்பட்டமான பொய். மேலும் ஆசிரியை பற்றிக் குறைத்து எழுதியிருப்பது மற்றொரு பொய். ஏழாம் வகுப்பிலேயே இரண்டு வருடங்கள் படித்திருக்கிறார். படிப்பில் படுமட்டம். இரண்டாவது வருடத்தோடு படிப்பை நிறுத்திக் கொண்டார். எட்டாம் வகுப்பிற்குத் தேர்ச்சி பெறவில்லை.

பள்ளியில் சேர்க்கும் சமயத்தில் நடிகையின் தங்கை என்பதற்காக நாங்கள் பள்ளியில் சேர்க்கவில்லை. அதேபோல் ஆசிரியைகளும் அவருக்குத் தனிப்பட்ட எந்தவித சலுகையும் கொடுத்ததில்லை. எல்லா மாணவியரையும் போல்தான் அவரையும் நடத்துவோம். மற்ற மாணவியரைக் காட்டிலும் மிதமிஞ்சிய தண்டனைகள் பெற்றிருக்கிறார்.

எனவே அவர் பள்ளியில் நடந்ததாகக் கூறியவை யாவும் பொய்.

திருமதி. இரா. துரைசாமி,
தலைமையாசிரியை.



# ...ரு குற்றச்சாட்டு...

அவன் ஒரு திடமான முடிவுக்கு வந்தான். 'யஸ்லம், கணவனுக்குக் கட்டுப்பட்டவனே தவிர, இதிலென்ன சமரசம், சமாதானம்?' என்று அவன் நினைத்தான்.

''இதோ பார். என்னுடைய உடம்பு நன்றாக இருக்கிறது. நீ ஒரு நோயாளி என்பதற்காக நான் என் வாழ்க்கையைத் தியாகம் செய்ய முடியாது. ஆமாம். உன்னால் என்னை மகிழ்விக்க முடியவில்லை என்றால் நீ ஒரு நோயாளிதானே...? நாம் பிரிந்தே வாழ்ந்துவிடுவோம்,'' என்று சொன்ன நடனம், நேரே கிளினிக்குக்குச் சென்று தன் சாமான்களையெல்லாம் எடுத்துக் கொண்டு தன் நண்பன் ஒருவனுடைய கிளினிக்குக்குப் போய்விட்டான்.

அங்கே போய் உட்கார்ந்ததிலிருந்து அவன் அழுதுகொண்டே தான் இருந்தான்.

நண்பன் வீட்டு மாடியைக் காலி செய்யச் சொல்லி அங்கேயே தன் கிளினிக்கை வைத்துக் கொண்டான்.

தன்னிடம் வருகிற குடும்பப் பெண்களையெல்லாம் சக்தியுள்ள பெண்களாக மாற்றி, தங்கள் கணவனையே திருப்தி செய்யும் பெண்களாக ஆக்கிக் கொண்டிருந்தான். ஆனால் தனக்கு மட்டும் அப்படி ஒருத்தி வாய்க்கவில்லையே என்ற ஆதங்கம், அவனை வாட்டி எடுத்தது.

பிரேமா கணவனுக்காக வருந்தினாள் என்றாலும், மேலும் மேலும் பட்டங்கள் பெறுவதிலேயே கருத்தாக இருந்தாள்.

அடிக்கடி மூத்த குழந்தை, ''அப்பா எங்கே? அப்பா எங்கே?'' என்று கேட்கும். அவள் கொஞ்ச நேரம் அழுதுவிட்டு நோயாளிகளைக் கவனிக்கச் சென்றுவிடுவாள்.

ஒரு நாள். அவன் கிளினிக்குக்கே ஒரு நோயாளி வந்தாள். அவள் அறையின் பாதிக் கதவைத் திறந்து கொண்டு அந்த நோயாளி உள்ளே நுழைந்தபோதுதான் அவள் யார் என்பது பிரேமாவுக்குத் தெரிந்தது. அவள் அதிர்ச்சியுற்றாள்.

எந்தக் கெட்ட பழக்கமும் இல்லாத நடனம் அங்கே கண்கள் சிவக்க நின்றிருந்தான். பளிச்சென்று அவளைக் கட்டிப்பிடித்தான். ''பிரேமா!'' என்று கத்தினான்.

தலை முடியைப் பிடித்து இழுத்துக்கொண்டு பள்ளியறைக்கு ஓடினான். அவளை அந்தக் கட்டிலில் தள்ளினான். யாரோ ஒரு காமுகன் கன்னிப் பெண்ணிடம் நடந்துகொள்வது போல அவளிடம் நடந்து கொண்டான்.

''அப்பாடா, ஆண்டவனே இது போதுமடா எனக்கு,'' என்று சொல்லிவிட்டு அழுதாள்.

கட்டிலில் ஒரு சலனமும் இல்லாமல் படுத்திருந்த பிரேமா, தன் உடல் வலியையும் மறந்து எழுந்து நின்றாள். தன் முந்தானையால் அவன் வியர்வையைத் துடைத்துவிட்டாள். அவனை உட்காரச் சொன்னாள். உள்ளே போய்ப் பலகாரம் கொண்டுவந்து கொடுத்தாள். குழந்தைகள் இரண்டையும் கொண்டுவந்து அவன் மடியில் ஒன்றையும், அருகில் ஒன்றையும் அமர்த்தினாள். அவன் அவற்றைக் கட்டிப் பிடித்துக்கொண்டு அழுதான்.

''வெந்நீர் போடட்டுமா?'' என்று கேட்டாள். அவன் தலையை ஆட்டினான்.

அவள் வெளியே போய் விறகு எடுத்து வந்தாள்.

''இதோ பாருங்க விறகு!'' என்று கணவனுக்குக் காட்டினாள்.

அது ஒரு போர்டு. அதில் 'டாக்டர் பிரேமா எம்.பி.பி.எஸ்' என்று எழுதியிருந்தது.

## இது செய்தி:

### மனைவியைக் கற்பழித்தவருக்கு ஜெயில்

சலேம், அமெரிக்கா செப். 26: கிரீசியனுக்கும் கார்மெலினாவுக்கும் விவாகரத்து வழக்கு நடந்து வந்தது. இதற்கிடையில் ஒரு நாள் இரவு மனைவி இருக்கும் இடத்துக்குச் சென்று அவளுடன் 2 முறை உடலுறவு கொண்டு விட்டார். அவளது விருப்பத்துக்கு மாறாக இது நடந்தது. இதனால் கோர்ட்டில் கார்மெலினா வழக்குத் தொடர்ந்தாள். கிரீசியனுக்கு 5 ஆண்டு ஜெயில் தண்டனை விதிக்கப்பட்டது.

—நன்றி: தினகரன்

இந்தக் கதை என்னவென்றால்—

தன்னை அவமானப் படுத்திய பெண்ணை மருமகளாக்கிக் கொண்டு, அவளைத் தள்ளி வைக்கிறார் மாமியார். மருமகள் மாமூலான சவால்விட்டு, மாமியாரைத் தோற்கடிக்கிறாள். சவாலும் பழசு, நிறைவேற்றுகிற தினுசும் நமத்துப் போனது.

காந்திமதிதான் கதாநாயகி.

வண்டி ஓட்டிக் கொண்டு வரும் கமலை வழிப்பறி கும்பல் மறித்து, 'வெறும் பய' என்று விமரிசித்ததும் என்னமாய் ரோஷம் பொத்துக் கொண்டு வந்து விடுகிறது அவருக்கு. 'நானா வெறும்பய? வெறும் பய கிட்டதான் அஞ்சு பவுன் சங்கிலி இருக்குமா?' (இந்த வார்த்தைகளை அவர் பேசிய தெற்று மொழியில் எழுதினால் இந்தப் பக்கம் பூரா சரியாகி விடும்!) என்று கேட்டுத் தன் கழுத்துச் சங்கிலியை ஒருத்தனிடம், வைரத் தோட்டை ஒருத்தனிடம், தண்டல் பணம் இரண்டாயிரத்தை ஒருத்தனிடம் தூக்கித் தூக்கிப் போடும் வேகம் என்ன? (கல்யாணராமன் வாசனை.)

கடைசியில் மிஞ்சிய சில்லறையை அவரையே வைத்துக் கொள்ளச் சொல்லிவிட்டு அகப்பட்டதைச் சுருட்டிக்கொண்டு அவர்கள் கம்பி நீட்டும் போது ஒவ்வொருத்தனையும் மறித்து, தான் கொடுத்ததைத் திருப்பிக் கேட்க, ஒவ்வொருத்தரும், 'இந்தா வாங்கிக்க,' என்று அவருக்கு ஓங்கி ஓங்கிக் கொடுப்பதை வாங்கிக் கட்டிக் கொண்டு விழுந்து விழுந்து எழுந்து, 'என்னடா இது, கொடுத்ததைக் கேட்டா இப்படி அடிக்கிறானுவ? வம்புக்காரங்களா இருப்பாக போலிருக்கே?' என்று தாடையைத் தடவிக் கொண்டு அவர் யோசிப்பது என்ன?

அப்புறம் ஒவ்வொருத்தனையும் செமப்பிடி பிடித்துத் தண்டல் பண்ணும் சுறுசுறுப்பு என்ன? போதாதா?

திக்குவாய்க்காரர்கள் சிகிச்சைக்காகக் கண்ட கண்ட டாக்டர்களிடம் போகத் தேவையில்லை. டாக்டர் நம்பியாரிடம் போனால் போதும். ஒரு அடி— ஒரே ஒரு அடி— போடுகிறார். டக்குனு போய் விடுகிறது கமலின் திக்கு.

கராத்தே வீராங்கனையாகக் கையால் கொடுக்கிற அடியைக் காட்டிலும், காஞ்சிபுரத்துக் காவேரியாக நாக்



கால் கொடுக்கிற அடியில் ஸ்ரீப்ரியாவின் வேகம் அதிகம். மாமியார்— ஸ்ரீகாந்த் சதியைத் தெரிந்து வைத்துக் கொண்டு, மாமியாரே அசந்து போகிற வகையில் ஜமாய்த்துக் கட்டுகிறார் ஜமாய்த்து. ஆனால் எல்லாப் பாத்திரங்களிலுமே ஆழம் பூஜ்யம். ஸ்ரீப்ரியாவும் விதி விலக்கல்ல.

கவர்ச்சிச் சுவரொட்டிகளைக் கிழித்து உள்ளே ஏதாவது தெரிகிறதா என்று பார்க்கும் சபலக்கார 'வாத்ஸாயனா' பிராண்ட் வி. கே. ராமசாமி, காந்திமதிக்குக் குடை பிடிக்கிற நாகேஷ் (சே! பாவம் நாகேஷ்!), மசால் தோசை தின்று விட்டு, நடிக்க வேண்டிய சமயம் பாத் ரூமுக்கு ஓடி விடும் பரிதாப மகேந்திரா . . .

பட்டியல் பெரிதானாலும் பளிச்சிடவில்லை—நம் பற்கள்.

முற்பகுதியிலுள்ள கட்டுக் கோப்பு, பின்னால் கலைந்து, 'சே!' என்று ஆகிவிடுகிறது.


தரத்தில், உயர் ரகத்தில்,
எம்ப்ராய்டரியில் மிகச் சிறந்தது
வீணை
எம்ப்ராய்டரீஸ்
உங்கள் எழிலழகு உயிர் பெற்று வருவதற் கெனவே — வீணை எம்ப்ராய்டரி துணிகள். துடிப்புமிக்க டிசைன் களிலே, கண்கவர் வண்ணங் களிலே அவை மறக்கமுடி யாத எழிலோவியங்கள். திருமணங்கள், பண்டிகை கள், பிறந்தநாள் விழாக்கள் மற்றும் எல்லா சந்தர்ப் பங்களிலும் பரிசளிக் கத தகுந்தவை.
தயாரிப்பாளர்கள்:
S.S.M. பிரதர்ஸ்
த. பெ. எண். 134,
11/D, காந்திபுரம்
மெயின் சாலை,
கொமாரபாளையம்-638183
தமிழ்நாடு
MAC/SSM/101/77

திரும்ப வீடு வந்தபோது நள்ளிரவு. காரின் ஹெட்லைட் வெளிச்சம் ரோட்டைப் பெருக்கிக் கொண்டுவர பங்களாவுக்குள் நுழையும்போது அதை அணைத்து விட்டேன். ஹரிஹரனை எழுப்பாமல் இருக்க அணைத்திருக்க வேண்டாம். ஹரியின் அறை விளக்கு இன்னும் எரிந்து கொண்டிருந்தது. விழிததுக் கொண்டிருக்கிறான் போல. இல்லை, விளக்கை அணைக்காமல் தூங்கிப் போயிருக்க வேண்டும்.

காரை ஷெட்டில் நிறுத்திவிட்டு மெதுவாக நடந்தேன். இதோ வானத்தில் கை நீட்டி மையை ஈஷிக் கொள்ளலாம்போல இருட்டு. இருட்டில் 'மனக்கணக்'காக அஞ்சு படி ஏறி பால்கனிக்கு வந்தேன், பால்கனியைக் கடந்து கதவைத் திறந்தேன். நுழைந்தேன். ஹால் விளக்கைப் போட்டேன். மெள்ள ஹரியின் அறைக்குச் சென்றேன். திறந்தேன். பார்த்தேன்..

படுக்கையில் படுத்திருந்தான். விழித்துக் கொண்டிருந்தான். ஆனால்

கவர்ந்த ஆங்கில
சிறுகதை வரிசையில்
இது முதலாவது
Roald Dahl
எழுதிய
Some one like you



# சுஜாதா தரும் ரோல்டாலின் சிறு கதை

நகரவில்லை. என் பக்கம் தலையைக் கூடத் திருப்பவில்லை. ஆனால் அவன் கூப்பிட்டது கேட்டது. ''சம்பத்! சம்பத்! இங்கே வா.''

மெதுவாகப் பேசினான். ஒவ்வொரு வார்த்தையையும் அளந்து உதட்டில் தனித்தனியே உச்சரித்தாற் போல மிக மெல்லிசாக, பேசுவதற்கே பயப்பட்டாற் போல. கதவை நன்றாகத் திறந்து அவன் அருகில் செல்லப் புறப்பட்டேன்.

''நில்லு! இரு! சம்பத்...'' அவன் பேசுவது மிக மெல்லிசாக இருந்தது. ஒவ்வொரு வார்த்தைக்கும் கோடிப் பிரயத்தனம் செய்வது போலிருந்தது.

''ஹரி, என்னடா?''

''ஷ் ஷி ஷ்...'' மறுபடி முணுமுணுப்பு. ''ஷ்ஷ்ஷ், சத்தம் போடாதே சனியனே! செருப்பைக் கழட்டிவிட்டு கிட்ட வா. ப்ளீஸ் சம்பத், சொன்னபடி செய்.''

அவன் பேசும் விதம் வினோதமாக இருந்தது. தமிழ் சினிமாவில்



கடைசி சீனில் இரண்டாவது கதாநாயகன் குண்டடிபட்ட பிற்பாடு வயிற்றைப் பிடித்துக்கொண்டு முக்கி முக்கிக் கரகரத்த குரலில், 'எப்படியாவது என் தங்கைக்கு மறுவாழ்வு...தா...' என்று பேசுவானே அதுபோல! ஏன்?

''சீக்கிரம் சம்பத்! வா! செருப்பைக் கழட்டி வெச்சுட்டு வாயேன்!''

செருப்பை எதற்குக் கழற்ற வேண்டும்? புரியவில்லை. என்னம்மோ அவனுக்கு உடம்பு சரியில்லை. பேச்சிலேயே தெரிகிறது... இந்தச் சமயத்தில் வெறுப்பேற்ற வேண்டாம்! செருப்பைக் கழற்றி விட்டுவிட்டு அவன் படுக்கைக்குச் சென்றேன்.

''படுக்கையைத் தொட்டுடாதே! ப்ளீஸ் படுக்கையைத் தொட்டுடாதே!'' இன்னும் அந்த 'குண்டடிபட்ட தமிழ்ச் சினிமா' குரல்தான்! மல்லாக்கப் படுத்திருந்தான். மார்பு வரை போர்த்தியிருந்தான். வரிவரியாகச் சட்டை தெரிந்தது. அப்பா! எத்தனை வியர்வை! ராத்திரி உஷ்ணமாகத்தான் இருந்தது. எனக்குக் கொஞ்சம் வியர்த்துத்தான் இருந்தது. ஆனா ஹரிக்கு முகம் முழுக்க வியர்த்து, தலையணையெல்லாம் நனைந்து, திட்டுத்திட்டாக ஈரம்! மலேரியாவா என்ன?

''என்னடா ஹரி?''

''பாம்பு!'' என்றான்.

''பாம்பா? மை காட்! எங்கடா கடிச்சது? எப்படா?''

''ஷட் அப்!'' என்றான். முணமுணப்புத்தான்.

''ஹரி, கேள்டா!'' அவன் அருகே சென்று அவன் தோளை தொட்டுச் சொன்னேன். ''பாம்பு கடின்னா உடனே ஏதாவது செய்யணு[ம்] எங்கடா கடிச்சது சொல்லுடா...'' அப்படியே அசையாமல் கிடந்தான், வ[லி] தாங்காமல் அமுக்கிப் பிடித்து[க்] கொண்டிருக்கிறவன் மாதிரி!

''இன்னும் கடிக்கலேடா'' என்றான் மெதுவாக. ''இன்னும் இல்[லை] என் வயத்துமேல் படுத்துக்கிட்டிருக்[கு] தூங்கறது.''

சட்டென்று நான் பி[ன்] வாங்கினேன். ''என்னது!''

''ஆமாம். கட்டு விரியன்!''

''அய்யோ!'' நான் அவ[ன்] வயிற்றை வயிற்றின் மேலிரு[ந்த] போர்வையைப் பார்த்தேன். உள்[ளே] என்ன இருக்கிறது என்று சொல்[ல] முடியாதபடி கசங்கி இருந்தது. எனக்[கு] திக்திக்கென்று மார்பில் இதயம் கு[திக்க] ஆரம்பித்து விட்டது.

''என்னடா சொல்[றே] வயத்திலே ஒரு கட்டு விரியன் பாம்[பு] கிடக்குதா!''

''ஆமாண்டா, சத்தியம்!''

''எப்படிடா அங்க வந்[து] படுத்துக்கிச்சு?'' கேட்டிருக்க[க்] கூடாதுதான்.

அந்த வியர்வை! அவ[ன்] கண்களில் அந்த பயம்! அவனைப் பேசாம[ல்] இரு என்று சொல்லியிருக்க வேண்டும்.

''படிச்சுக்கிட்டிருந்தேன்.'' மெதுவாகப் பேசினான். மிகம் மெதுவாக. ஒவ்வொரு வார்த்தையைய[ும்] யோசித்து, கவனமாக வெளிப்படுத்தி வயிற்றில் ஒரு தசையும் அசையாதபடி மெல்ல... மெல்ல... ''மல்லாக்க




''ரமேஷும் சுரேஷும் என்னைக் காதலிக்கிறார்கள். அதிர்ஷ்டக்காரன் யாரோ?''

''ரமேஷ் உன்னைக் கல்யா[ணம்] செய்து கொள்வான். சுரேஷ்[தா]ன் அதிர்ஷ்டக்காரனாயிருப்பான்!''

–கே. கோபாலகிருஷ்[ண]

த்துட்டுப் படிச்சுக்கிட்டிருந்தேன். ர்ல, புஸ்தகத்துக்குப் பின்னால் ஏதோ குறுன்னது. என்னடான்னு பார்த்தா, தப் பாம்பு மெதுவா பைஜாமா மேலே ந்துட்டு இருக்கு! சின்னது. பத்து ந்தான் இருக்கும். எனக்குச் சகலமும் னு போச்சு! அப்படியே றஞ்சுட்டேன். அது மேல ஏறிப் யிடும்னு நினைச்சுட்டு...'' ஹரி ஞ்ச நேரம் மௌனமாக இருந்தான். ன் கண்கள் அந்த இடத்தில் க்கின... பேசும்போது வயிற்றுப் த்தில் சலனம் ஏற்படக் கூடாதே று அவன் கவலை தெரிந்தது.

''போர்வையில் ஒரு மடிப்பு ந்தது. அதுக்குள்ள... அதுக்குள்ள னு பூந்துடுச்சு!'' அவன் சொல்வது ாகக் கேட்காமல் அருகில் குனிந்து க வேண்டியிருந்தது. ''உள்ள க்குடா! இன்னும் இருக்குடா! ஜாமா வழியா என் வயிற்றுப் பக்கம் து அதுக்கப்புறம் அது நகரலே. ற்றில்... காட்டிய இடத்தில் படியே இருக்கு! தூங்கிப் யிட்டதோ என்னவோ! அப்பா! க்காகக் காத்துக் காத்து...'' மெல்ல களை மட்டும் உயர்த்தி என்னைப் த்தான்.

''எப்படா இது?''

''மணிக்கணக்கில் ஆச்சு!'' ன் மெல்லிசாக. ''எத்தனை நேரமா படியே கிடந்துட்டிருக்கேன்ியுமா? முடியலேடா! இருமல் துடுப் போல இருக்குடா. சம்பத் வது செய்டா.''

திகிலில் யோசித்தேன். அவன் சொன்னது நிச்சயம் சாத்தியமே! எஸ்டேட் காடு! தனியான வீடு! கட்டு விரியன் பாம்பு இந்தப் பிரதேசத்தில் அதிகம் என்று சொல்லியிருக்கிறார்கள். ஓ மை காட்! என்ன செய்வது? ஹரி இதுவரை தப்பித்திருக்கிறான். இதுவரை கடிக்கவில்லை கட்டு விரியன்! கடித்த மாத்திரத்தில் ஆள் க்ளோஸ்! இந்த வங்காளப் பகுதியில் உலாவும் பாம்புகளுக்கு அவ்வளவு விஷம்.

''ஆல் ரைட் ஹரி!'' நானும் முணுமுணுக்கத் துவங்கி விட்டேன். ''நகராதே! இனிமே பேசாதே! அவசியமில்லாம பேச வேண்டாம்... அது பயப்பட்டாத்தான் கடிக்கும். ஏதாவது செய்யறேன். இரு!''

மெதுவாக நடந்து வந்து அறையைவிட்டு வெளியே வந்து சமையல் அறைக்குப் போய் ஒரு சின்ன கூர்மையான கத்தி கொண்டு வந்தேன். அதை மடக்கி பாண்ட் பைக்குள் போட்டுக் கொண்டேன். நான் என்ன செய்யலாம் என்று யோசித்துக் கொண்டிருக்கையில் அவன் ஏதாவது இருமி அல்லது நகர்ந்து அது எழுந்து கடித்துவிட்டால் உடனே கடித்த இடத்தில் கத்தியால் வெட்டி விஷத்தை உறிஞ்சித் துப்புவதற்குத் தயாராக இருக்க வேண்டும்!

மறுபடி பெட் ரூமுக்கு வந்தேன். ஹரி அப்படியே கிடந்தான். அசைவில்லாமல் மூஞ்சி எல்லாம் வியர்வை. நான் அறைக்குள் நடக்கையில் அவன் கண்கள் என்னுடன் வந்தன.

## பாப் ஆஃப் குட் ஹோப்

நகைச்சுவை நடிகர் பாப் ஹோப் எழுதுகிறார்:

விளக்குகள் அணைந்தன. படம் ஆரம்பமாயிற்று. திரையில் நான் தோன்றியவுடன், பாராட்டுக்களும், எனக்கு ஆதரவான சீழ்க்கை ஒலிகளும் கேட்க ஆரம்பித்து, கடைசிக் காட்சிவரை நீடித்தன—அதாவது என்னிடமிருந்து.



என்ன செய்யப் போகிறான் என்கிற பயம் அவன் கண்களில் தெரிந்தது. நான் அவன் அருகில் நின்றேன். என்ன செய்வது! எனக்குத் தோன்றவேயில்லை. என் கைகள் நடுங்கின.

அவன் காதருகில் சென்று கிசுகிசுத்தேன். ''ஹரி, போர்வையை மெள்ள பூ மாதிரி எடுத்துடறேன். முதல்ல அதைப் பார்க்கலாம். என்ன செய்யறதுன்னு பார்க்கலாம். கொஞ்சம் கூட டிஸ்டர்ப் பண்ணாமப் பார்க்கிறேன்!''

''முட்டாள்!'' அவன் உச்சரிப்பில் கோபமில்லை. ஒவ்வொரு வார்த்தையையும் ரொம்பக் கவனமாக, மெதுவாக, மெலிதாகத்தான் பேசினான். அவன் கோபம் கண்களின் ஓரத்தில் மட்டும் தெரிந்தது. ''லைட்டைப் பார்த்து அது பயந்துடும். போர்வைக்குள்ள இருட்டா இருக்கு!''

''இல்லைன்னா சட்டுனு போர்வையை விலக்கிட்டு அது கடிக்கிறதுக்குள்ள சட்டுனு அதைத் தள்ளி விட்டுர்றேண்டா!'' என் குரலிலேயே அதைச் செய்கிற நம்பிக்கை இல்லை.

''ஏய்! ஒரு டாக்டரைக் கூப்பிடேண்டா!'' என்றான், என்னை முறைத்துப் பார்த்துக் கொண்டே.

''டாக்டர்! ஆமாண்டா! அதான்! நான் உடனே டாக்டர் சின்ஹாவைக் கூப்பிடறேன்!''

நான் மெதுவாக ஹாலுக்கு அடிமேல் அடி வைத்து வந்து அந்தப் பழைய டெலிபோனை அடைந்து அழுக்[…] டைரக்டரியைப் பார்த்து டாக்ட[…] சின்ஹாவின் நம்பரைத் தே[…] டெலிபோனை எடுத்து அதன் தலையி[…] தட்டுத் தட்டுத் தட்டி, ''ஆப்பரேட்ட[…] ஆப்பரேட்டர்!'' என்றே[…] பொறுமையற்று.

''நம்பர் ப்ளீஸ்!''

டாக்டர் சின்ஹாவின் நம்பரை சொல்லி, ''அவசரம் சீக்கிரம்,'' என்றேன்.

''டாக்டர் சின்ஹா! நா[…] சம்பத் குமார் பேசறேன்!''

''ஹலோ ஷோம்போதி! இந்[…] நேரத்திலே! தூங்கலையா நீங்க?''

''டாக்டர், நீங்க உடனே வரணும். கட்டு விரியன் கடிச்சதுக் ஸீரம் கொண்டு வாங்க!''

''யாரைக் கடிச்சுது?'' அந்த[…] கேள்வி என் காதில் வெடித்தது.

''இல்லை. இன்னும் ஒருத்த[…] யும் கடிக்கலை. ஹரிஹரன்... அவ[…] படுத்துக்கிட்டிருக்கான். ஒரு பாம்பு அவ[…] போர்வைக்குள்ள புகுந்து வயிற்றின்மே[…] படுத்துத் தூங்கிக்கிட்டு இருக்கு!''

மூணு செகண்டுக்கு மௌன[…] அதன்பின் டாக்டர் சின்ஹா மெதுவா[…] பதட்டமின்றி, ''அவனை அப்படியே அசையாமல் இருக்கச் சொல். பேசவே கூடாது. தெரிகிறதா?'' என்றார்.

''தெரிகிறது!''

''உடனே வரேன்!''

டெலிபோனை வைத்துவிட்[…]

ரிஹரனிடம் சென்றேன். அவன் கண்கள் நான் நவதைத் தொடர்ந்தன.

"டாக்டர் சின்ஹா வரார். அசங்காம ப்படியே படுத்திருக்கச் சொன்னுர்!''

''வேற என்ன செஞ்சுட்டிருக்கேனும்! என்ன நுசண்டா!''

''இத பாரு ஹரி! பேசக் கூடாது. ரெண்டு ரும் பேசவே கூடாது!''

''நீதான் வாயை மூடிக்கயேன் முதல்ல!'' ன்ருன் எரிச்சலுடன். அவன் வாயோரம் சற்றுத் டிக்க ஆரம்பித்து விட்டது. பேச்சை நிறுத்தின ற்பாடும் அந்தத் துடிப்பு நிற்கவில்லை. நான் என் கக்குட்டையை எடுத்து மெதுவாக அவன் முகத்தில், ழுத்தின் வியர்வையைத் துடைத்து விட்டேன். டைக்கும்போது அவன் வாய்ப் பக்கம் இன்னும் டிப்பதை உணர்ந்தேன். பாவம்! எத்தனை நேரம் ப்படியே இருப்பான்! சித்திரவதை! இருமக் கூடாது. ம்மக் கூடாது. நகரக் கூடக் கூடாது...

சமையல் அறைக்குச் சென்று ஐஸ் பட்டியைத் திறந்து ஐஸ் கட்டியை உடைத்து ஒரு ண்டில் சுற்றிக் கொண்டு வந்தேன். அதை அவன் நற்றிமேல் வைத்தேன்.

''கொஞ்சம் உன்னை நிதானப் டுத்தும்,'' என்றேன்.

''வேண்டாம், எடுத்துடு. இருமல் ரும்போல இருக்கு,'' என்ருன் நெற்றியைச் சுருக்கிக் காண்டு.

மறுபடி வாய்ப் பக்கம் துடிக்க ஆரம்பித்து ட்டது. அதிக நேரம் இவனுல் ஸ்திரமாக இருக்க முடியாது. எங்கே இந்த டாக்டர் கிழம்!

ஜன்னலின் வழியாக டாக்டரின் கார் வெளிச்சம் தெரிய, நான் அவரைச் சந்திக்க வாசற் பக்கம் போனேன்.

''எப்படி இருக்கு?'' என்ருர் டாக்டர் உள்ளே நடந்து கொண்டே. ''எங்கே அவன்? எந்த ரூம்?''

ஹாலில் தன் பையை வைத்துவிட்டு என் பின்னே ஹரியின் அறைக்கு வந்தார். பயசானவர்தான். பிசிறு பிசிருக நரைத்த தலை. நீர்க்கமான மூக்கு. முன் ஜாக்கிரதையாக பாத்ரூம் ஸ்லிப்பர் போட்டுக்கொண்டு வந்திருந்தார். படிய, பைய, கவனமான பூனைபோல நடந்தார். ஹரி அவரைக் கண் ஓரத்தில் பார்த்தான். அவர் ஹரியின் அருகே வந்து புன்னகை செய்தார். ''இத பார் ஹொரிஹரன், நான் வந்து விட்டேன். கவலையே படாதே! கொஞ்சம் பொறு. டாக்டர் சின்ஹாவிடம் எல்லாப் பொறுப்பையும் விட்டுவிடு!'' என்று சொல்லிவிட்டு, ''சம்பத் கொஞ்சம் வரீங்களா?'' என்று ஹாலுக்கு நடந்தார். நான் அவர் பின் சென்றேன்.

''முதல்ல அவனுக்குக் கொஞ்சம் ஸீரம் இன்ஜெக்ஷ்ன் கொடுத்துடணும். அசங்காம...

## ஆத்திரக்காரனுக்கு அடித்த அதிர்ஷ்டம்

விதியின் விளையாட்டு, சில சமயம் வேடிக்கையானது.

ஜேஸன் பெரியஸ் என்பவருக்கு நெஞ்சில் கட்டி. மருத்துவர்களால் அதைக் குணப்படுத்த முடியவில்லை. அவர்கள் கையை விரித்துவிட்ட நிலையில், நோயின் வேதனையைப் பொறுக்க முடியாதவராய், செத்துத் தொலைக்கலாம் என்ற எண்ணத்துடன் போர்க்களத்தில் புகுந்து அவர் எதிரிகள் மீது பாய, தாக்குண்டார். சரியாக அந்தக் கட்டியின்மீது காயம் பட்டது. அது உடைந்து, உடம்பு குணமாகிவிட்டது.

புரோடோஜினீஸ் என்ற ஓவியர், வேட்டையில் சோர்ந்து போய் விழுந்துவிட்ட வேட்டை நாயின் ஓவியம் வரைந்தார். திருப்தி உண்டாகவில்லை. குறிப்பாக, நாயின் வாயில் பொங்கியிருக்கக் கூடிய நுரையைச் சரியாகத் தீட்ட முடியவில்லை. எரிச்சல் அடைந்து, (அழிரப்பராக உபயோகித்துவந்த) கடல் பஞ்சை வண்ணக் கலவையில் தோய்த்து ஓவியத்தின் மீது எறிந்தார். சரியாக நாயின் வாயில் அது பதிந்து விழுந்தது. நுரை அற்புதமாக வந்துவிட்டது. அவரது திறமை சாதிக்கத் தவறியதைக் கோபம் சாதித்துவிட்டது.

மான்டேய்ன் கட்டுரைகள்.

இன்ட்ராவீனஸ்ஸா குடுத்தாகணும். ஆனா அதை நான் ரொம்பக் கவனமா குடுத்தாகணும். அவன் சிணுங்கக்கூடக் கூடாது!'' அவர் தன் பையைத் திறந்து இன்ஜெக்ஷன் சாதனங்களை எடுத்தார்.

சமையல் அறைக்குச் சென்று ஊசியை ஸ்டெரிலைஸ் செய்தோம். ஸிரிஞ்சில் ஊசியைப் பொருத்தி ஒரு சின்ன பாட்டிலின் ரப்பர் மூடிக்குள் குத்தி அதனுள் இருந்த மஞ்சள் திரவத்தை ஜிவ் என்று உறிஞ்சிக் கொண்டார். ஊசியை என்னிடம் கொடுத்தார்.

''வெச்சுக்க. நான் கேட்கிற வரைக்கும்.'' பையை எடுத்துக் கொண்டார்.

இருவரும் ரூமுக்குத் திரும்பி வந்தோம். ஹரி கண்களைப் பெரிசாக விழித்துக் கொண்டிருந்தான். டாக்டர் அவன் அருகில் சென்று அவன் கையை ஏதோ ஓர் அபூர்வமான பதினாறும் நூற்றாண்டு வஸ்துவைப் போல் எடுத்து சட்டையை மடக்கிக் கட்டில்மேல் படாமல்...

மெல்லச் சொன்னார். ''ஹரிஹரன், உங்களுக்கு ஒரு இன்ஜெக்ஷன் குடுக்கப் போறேன். ஸீரம்... சின்ன குத்துதான். அசக்காம இருங்க! அசையாம இருங்க. வயிற்றில் தசைகளை குறுக்கிக்கிடாதீங்க! அப்படியே தொள தொளன்னு இருக்கட்டும், என்ன?''

ஹரி என் கையில் ஸிரிஞ்சைப் பார்த்தான். டாக்டர் சின்ஹா சிவப்பாக ஒரு ரப்பர் குழாயை எடுத்தவர் எழுற் அவன் புஜத்தில் சுற்றி இறுக்கினா முடிச்சுப் போட்டுக் கட்டினார். மு கையில் ஒரு இடத்தில் பஞ்சால் ஸ்பிரி தடவினார். என் கையிலிருந்த ஊசியை வாங்கிக் கொண்டார். அதன் ஸிரிஞ்சி கோடுகளை ஒரு கண்ணைக் குறுக்கி கொண்டு பார்த்து பளிச்சென் கொஞ்சம் மஞ்சள் மருந்தை ஊசிமு ஏழியாகப் பீச்சிப் பார்த்தார். நா சலனமற்றுப் பார்த்துக் கொண் நின்றேன். ஹரியும் பார்த்து கொண்டுதான் இருந்தான். முகமெல்லா வியர்வை. ஏதோ வெண்ணெயா பளபளவென்று மேக்கப் போட்ட போலத் தெரிந்தது. தலையணையெல்லா வழிந்திருந்தது.

ஹரியின் கையில் ரத்தக் குழா புடைத்து நீலமாகத் தெரிந்தது. ஊசியை தோலுக்குள் நுழைத்து ரத்தக் குழாயை நெருடினார். ஹரி மேலே பார்த்து கண்ணை மூடிக் கொண்டான். நகரவில் எனக்கு உடம்பை பயம் ஒரு உருவு உரு விட்டது.

இன்ஜெக்ஷன் முடிந்தது டாக்டர் சின்ஹா ஹரியின் காதருகே வந்து, ''இப்ப அது கடித்தாலும் ஒன் ஆகாது. அதுக்காக நகர்ந்துராதே. இதோ வர்றேன்! வந்துர்றேன்.''

அவர் பையை எடுத்து கொண்டு அறைக்கு வெளியே வர, நா அவர் பின்தொடர்ந்தேன்.

''இப்ப பயமில்லை டாக்டர்?'' என்றேன்.



''ஏற்கனவே டைப் அடித்தவர், அடிக்கடி சண்டை போடுகிறார், தப்பாக டைப் அடிக்கிறார் என்பதற்காக அவரை நீக்கிவிட்டு புதுசா இரண்டு லேடி டைப்பிஸ்ட்களை அப்பாயிண்ட் செய்தேன்!''

''நன்றாக அடிக்கிறார்களா?''

''ஓ! நன்றாக அடித்துக் கொள்கிறார்கள்!''

—சுதர்ஸன்

''சொல்ல முடியாது!''

''மருந்து கொடுத்திட்டீங்களே!''

டாக்டர் குள்ளமாக இருந்தார். ன் தாடையை வருடிக் கொண்டார். இந்த ஸீரம் அவனைக் காப்பாற்றும்னு ச்சயமாச் சொல்ல முடியாது. ாப்பாற்றலாம். காப்பாற்றும்னும் ருக்கலாம். வேறே என்னமும் செய்ய ம் மாலே முடியுமான்னு ாசிச்சுக்கிட்டிருக்கேன்...'' மெதுவாக ராண்டாப் பக்கம் நடந்தார். கதவு ாத்தியிருந்தது. ஜன்னல் வழியாக வளியே கரிய மேகத்தைப் பார்த்தார்.

''சட்டுனு போர்வையை க்கிட்டுப் பாம்பு கடிக்கிறதுக்குள்ள ள்ளிறலாமா?''

''கூடவே கூடாது. அந்த ரிஸ்க் ரம எடுக்கக் கூடாது.'' அவர் பேச்சில் ர்ணயம் இருந்தது. சற்றுக் கீச்சுக் குரல் கட்டது.

''அவனை இப்படியே ட்டுர்றதா! ஏற்கனவே கொஞ்சம் நர்வஸாயிட்டான்!''

''ப்ளீஸ்! மிஸ்டர் ஷொம்போத்! ளீஸ்! என்னை அவசரப்படுத்தாதீங்க! காஞ்சம் யோசிக்க விடுங்க!'' அவர் தன் நற்றியைக் கைக்குட்டையால் டைத்துக் கொண்டார். நெற்றி ருங்கியிருந்தது. உதட்டைக் கடித்துக் காண்டிருந்தார்.

''பாருங்க, ஒரே ஒரு வழிதான் இருக்கு. பாம்புக்கு அது படுத்துக்கிட்டு இருக்கிறவாகிலேயே மயக்க மருந்து காடுக்கணும்.''

''நல்ல ஐடியாதான்.''

''அவ்வளவு பத்திரமானதில்லே. பாம்புக்கு ரத்தச் சூடு கிடையாது. மயக்க மருந்து அவ்வளவு வேகமா வேலே செய்யாது. சரியாவும் வேலே செய்யாது. ஆனு தற்சமயம் இது ஒண்ணுதான் செய்ய முடியும். வேற எதுவும் இல்லேயே! ஈத்தர் உபயோகிக்கலாம்... இல்லே க்ளோரோஃபார்ம்?...'' யோசித்துக் கொண்டே பேசினுர்.

''எது?'' என்றேன்.

''க்ளோரோஃபார்ம். சாதாரண க்ளோரோஃபார்ம்! அதுதான் உத்தமமானது! இத பாருங்க...'' என்னை பால்கனிக்கு இழுத்துச் சென்ருர். ''என் வீட்டுக்குக் கார் எடுத்துட்டு போங்க. நான் அதுக்குள்ள பையனுக்கு டெலிபோன் பண்ணி அலமாரியைக் காட்டச் சொல்றேன். இதுதாங்க அலமாரிச் சாவி. ஒரு பாட்டில் க்ளோரோஃபார்ம் எடுத்துக்கங்க. பாட்டில் மேல் சிவப்பா லேபில் இருக்கும். க்ளோரோஃபார்ம்னு எழுதியிருக்கும். நான் இங்கேயே இருக்கேன். அவரைப் பார்த்துக்கறேன். நீங்க சீக்கிரம் போய் எடுத்திட்டு வந்துருங்க!''

மிக வேகமாக ஓட்டினேன்! பதினைந்து நிமிஷத்தில் ஒரு க்ளோரோஃபாரம் சீசாவுடன் திரும்பி வந்தேன். டாக்டர் அவசரமாக வந்து என்னைச் சந்தித்து, ''கொண்டு வந்திட்டீங்களா? குட், குட்! இப்ப தான் ஹரிஹரன்கிட்டே நான் சொல்லிக்கிட்டிருந்தேன். சீக்கிரம்! அவராலே அதிக நேரம் அப்படிப் படுத்திருக்க முடியாது. நகந்துருவார்னு பயமா இருக்கு,'' என்ருர்.

இரண்டு கைகளாலும்

## முதல் உணர்ச்சி

புகழ் பெற்ற டென்னிஸ் ஆட்டக்காரர் ஆர்தர் ஆஷை இருதய நோய் தாக்கிற்று. மருத்துவ நிலேயத்தில் சேர்க்கப்பட்டார். மாரடைப்பு என்றதும் அவரது முதல் உணர்ச்சி என்ன?

''திகைத்துப் போனேன். எனக்கு 35 வயது. ஒல்லியாக இருக்கிறேன். அளவோடு சாப்பிடுகிறேன். நேற்றுக்கூட 'ஜிம்'முக்குப் போய் உடற்பயிற்சி எடுத்துக் கொண்டேன். எனக்கு எப்படி இருதய நோய் வந்தது?''

நன்றி: ஸ்போர்ட்ஸ்டார்



பாட்டிலைப் பிடித்துக் கொண்டு அவர் பின் சென்றேன். ஹரி அப்படியேதான் கிடந்தான். முகம் வெளிறிப் போயிருந்தது. கண்கள் என்னை ஓரம் பார்த்தன. நான் அவனைப் பார்த்துப் புன்னகைத்து, கட்டை விரலை உயர்த்திக் காட்டினேன். அவன் கண்ணை மூடிக் கொண்டான். டாக்டர் சின்ஹா தரையில் அருகில் உட்கார்ந்தார். இன்ஜெக்ஷன் குத்தும்போது உபயோகித்த ரப்பர் குழாயை எடுத்துக் கொண்டார். காகிதத்தால் ஒரு புனல் செய்து கொண்டார். அதை ரப்பர் குழாயின் ஒரு முனையில் பொருத்தினர்.

மெதுவாக ஹரியின் வயிற்றுப் புறத்தில் போர்வையின் முனையைச் சன்னமாக சாமர்த்திய விரல்களால் தொட்டு இழுத்தார். மிக சன்னம்! அவர் விரல்களோ, போர்வையோ நகர்வது தெரியவில்லை... வெற்றி! போர்வைக்கு அடியில் ஒரு சின்ன இடைவெளி செய்து கொண்டு விட்டார். ரப்பர் குழாயை எடுத்து அதன் மறு முனையை அதனுள் சொருகி படுக்கையோடு படுக்கையாக அதை செலுத்தினர். ஒரு சில இன்ச்சுகள் நகர்த்துவதற்கு எத்தனை நேரம்! குழாய் நகர்வதாகவே தெரியவில்லை. அத்தனை மெள்ள இருபது நிமிஷமா நாற்பது நிமிஷமா? குழாய் உள்ளே செல்வது என்னவோ தெரிந்தது. போர்வைக்கு வெளியே இருந்த பாகம் மெல்லக் குறைந்து கொண்டிருந்தது. ஆனல் பாம்பு எந்தவித சலனமும் உணர்ந்திருக்க முடியாது. டாக்டர் சின்ஹாவுக்கே வேர்த்துவிட்டிருந்தது. நெற்றியில், மேல் உதட்டில் எல்லாம் வியர்வை முத்துக்கள். அவர் கைகள் மட்டும் நடுங்காமல் இருந்தன. கண்கள் எப்போதும் ஹரியின் வயிற்றுப் பகுதிப் போர்வையையே கவனித்துக் கொண்டிருந்தன.

நிமிராமல் கை நீட்டி என்னி க்ளோரோபார்ம் கேட்டார். நா கண்ணாடி மூடியைத் திருகித் திற சீசாவை அவர் கையில் பதிய வைத் கொடுத்தேன். என்னைக் கிட்ட வரும் சொன்னர். ''படுக்கை பூ க்ளோரோஃபார்ம் வைத்து நனைக் போகிறேன். ரொம்பச் சில்லெல் இருக்கும். அதற்குத் தயாரா இருக்கணு உடம்பை நடுங்கக் கூடாது நகர்த் கூடாது. அவன் கிட்டே சொல்லிடு என்றார்.

நான் ஹரிஹரனிடம் குனி சொன்னேன்.

''ஆரம்பிக்கச் செ லேண்டா!'' என்றன்.

''ஆரம்பிக்கப் போற ரொம்பச் சில்லுனு இருக்கும்!''

''மை காட்! ஏதா ப்ணுங்க! சீக்கிரம்! கெ தொலேங்க.'' முதல் தடவையாக அ குரல் சற்று உயர்ந்தது. சின் சட்டென்று நிமிர்ந்து முறைத்த இரண்டு மூன்று செகண்ட்... மறுபடி வேலையைத் துவக்கினர். சின்ஹா பே புனலில் ஒன்றிரண்டு சொட க்ளோரோஃபார்ம் ஊற்றினர் மெ அது ரப்பர் குழாய் வழியாக உள் வடியும்வரை காத்திருந்து இன் கொஞ்சம் ஊற்றினர். காத்திருந்தார். பூரா க்ளோரோஃபார்ம் வாச கும்மென்று பரவ எனக்குச் சின்ன வய டான்சில்ஸ் ஆப்பரேஷன் ஞாப வந்தது. வெண்மை உடை நர்ஸு டாக்டர்கள், நீளமான வெள் மேஜை... 'ஒண்ணு ரெண் எண்ணப்பா!' என்று யாரோ சொன் மெலிதான வாந்தி உணர்ச்சி...



சின்ஹா இப்போது சீராகப் புனலில் ஊற்றிக் கொண்டிருக்கப் பேப்பர் புனலின்மேல் க்ளோரோஃபார்ம் ஆவி மெலிதாக நடனமாடியது. நினைத்து பாட்டிலில் மிச்ச அளவைப் பார்த்து இன்னும் கொஞ்சம் புனலில் ஊற்றிவிட்டு என்னிடம் பாட்டிலைத் திரும்பக் கொடுத்து விட்டார். மெதுவாக மெதுவாக ரப்பர் குழாயைப் போர்வைக்கு அடியிலிருந்து உருவி வெளியே எடுத்து விட்டார். நிமிர்ந்தார். நின்றார்.

அந்தச் செயலின் ஆயாசம் டாக்டரின் குரலில் தெரிந்தது. களைத்திருந்தார். ''பதினைஞ்சு நிமிஷம் பார்க்கலாம். ஒருவித ஜாக்கிரதைக்குத்தான்!''

நான் ஹரியின் அருகில் சென்று, ''15 நிமிஷம் காத்திருக்கப் போறம்டா. எதுக்கும் ஒரு பத்திரத்துக்குத்தான்! இப்பவே கூட அது மயங்கிப் போயிருக்கும்,'' என்றேன்.

''திறந்து பாரேன்! கடவுளே!'' என்று மறுபடி இரைச்சலாகப் பேசினான்.

சின்ஹா அவனை மிகக் கடுமையான கோபத்துடன் முறைத்தார். ஹரியின் வாய் ஓரம் மறுபடி துடிக்க ஆரம்பித்தது. நான் கைக் குட்டை எடுத்து அவன் ஈர முகத்தைத் துடைத்து விட்டேன். நெற்றியைத் தடவிக் கொடுத்தேன். ''பொறுடா. இன்னும் கொஞ்சம் பொறு,'' என்றேன்.

காத்திருந்தோம். டாக்டரும் நானும் படுக்கையருகில் நின்றுகொண்டு. சின்ஹா வெளியில் மேகத்தையே கூர்ந்து பார்த்துக் கொண்டிருக்க அந்தப் பார்வையிலேயே சும்மா இரு என்று அதட்டல் இருந்தது. 'சும்மா இரு! இவ்வளவு தூரம் உயிர் விட்டோம்! இன்னும் கொஞ்சம்தான்... இந்தச் சமயத்தில் ஏதாவது செய்து எல்லாவற்றையும் கெடுத்து வைக்காதே!' என்ற அதட்டல். ஹரியின் வாயோரம் இன்னும் துடித்துக் கொண்டிருந்தது. வியர்வை. கண்ணை மூடுகிறான். திறக்கிறான். என்னைப் பார்க்கிறான். போர்வையைப் பார்க்கிறான். மேலே உத்திரத்தைப் பார்க்கிறான். மறுபடி என்னைப் பார்க்கிறான். சின்ஹாவை மட்டும் பார்க்கவே இல்லை. இருந்தும் சின்ஹா எப்படியோ அவனைக் கட்டிப் பிடித்து வைத்திருந்தவர் போலத் தோன்றியது. க்ளோரோஃபார்ம் வாசனை மூக்கைத் துளைத்தது. ஆனால் என்னால் அறையை விட்டு விலக முடியவில்லை. யாரோ ஒரு பெரிய பலூனை ஊதிக் கொண்டே இருப்பது போல் உணர்ந்தேன். பெரிசாகிப் பெரிசாகி... வெடிக்கப் போகிறது... விட்டுச் செல்ல மனம் வரவில்லை.

கடைசியில் சின்ஹா திரும்பினார். தலையாட்டினார்... அவர் ரெடி!

''நீ படுக்கைக்கு அந்தப் பக்கம் போய் நில்லு. போர்வையின் ஒரு பக்கத்தைப் பிடிச்சுக்க. மெள்ள ரெண்டு பேரும் சேர்ந்து போர்வையை விலக்கலாம். ஆனா மெதுவா! மெல்ல ரொம்ப மெல்ல! அசங்காம! என்ன?''

''ஹரி, கொஞ்சம் அசையாம

## கருணையின் விலை:  ஒரு கொலை

அமெரிக்காவில், நியூஜெர்சி மாநிலத்தில் லெஸ்டர் ஜிக்மான்யாக் என்பவனின் தம்பி, கோரமான மோட்டார் விபத்தில் படுகாயமடைந்து ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டிருந்தான். கழுத்திற்குக் கீழே பலத்த காயங்களுடன் அவதிப்படும் தன் தம்பியைப் பார்த்து கண் கலங்கினான். 'உனக்கு வலியே தெரியாமல் செய்ய வேண்டும். அவ்வளவு தானே தம்பி?' என்று கேட்டான் அண்ணன் குரல் தழுதழுக்க.

'ஆமாம்' என்பது போல் சைகை காட்டினான் தம்பி.

அவ்வளவுதான். தன் பாக்கெட்டிலிருந்த துப்பாக்கியை எடுத்து 'டுமீல்' என்று சுட்டு தம்பியைச் சாகடித்தான் அண்ணன்.

தம்பியைக் கொலை செய்ததாகக் குற்றம் சாட்டி அண்ணனை போலீசார் கோர்ட்டில் நிறுத்தினார்கள்.

வழக்கை விசாரித்த நீதிபதி, அண்ணனை நிரபராதி எனக் கூறி விடுதலை செய்தார். தம்பி படும் அவஸ்தையை காணச் சகியாத ஒரு அண்ணன் செய்த 'கருணைக் கொலை' இது. இதற்குத் தண்டனை ஏதும் கிடையாது என்று தீர்ப்பளித்தார் நீதிபதி.

—டைம் இதழிலிருந்து ஹெச். நாகராஜன்.

இரு,'' என்று சொல்லிவிட்டுப் படுக்கையின் அந்தப் பக்கம் சென்றேன். சின்ஹா எனக்கு எதிரில் நிற்க இருவரும் போர்வையை மெதுவாக நீக்க ஆரம்பித்தோம் ஹரியின் மேல் படாமல், படுக்கையிலிருந்து சற்றுத் தள்ளி நின்று சற்று முன் பக்கம் குனிந்து உள்ளே ஏதாவது தெரிகிறதா என்று பார்க்க முயற்சி பண்ணி... க்ளோரோஃபார்ம் நெடி குமட்டியது. மூச்சை அடக்கிப் பார்த்தேன். அதிகம் அடக்க முடியாமல் போனபோது லேசாக மூச்சு விட்டேன். நெடி!

இப்போது ஹரியின் மார்பு தெரிந்தது. அவன் அணிந்திருந்த பட்டை போட்ட சட்டையின் பட்டன்கள் ஒவ்வொன்றுகத் தெரிந்தன. பட்டன் பளபளவென்று இருந்தது... அப்புறம் அவன் சட்டை மேல் முடிச்சுப் போட்டு இறுக்கியிருந்த பைஜாமாவின் நாடா தெரிந்தது. அதிலும் பட்டன். பளபள பட்டன்! சீ, பட்டனைப் பற்றி யோசிக்க வேண்டிய சமயமா இது!

ஆனல் அவன் வயிற்றின் மேல்!

பாம்பு எங்கே?

அவன் வயிற்றின் மேல் அந்தப் பைஜாமா பட்டனைத் தவிர வேறு எதுவும் இல்லை.

போர்வையைக் கொஞ்சம் வேகமாகவே விலக்கினேம்.

அவன் கால் தெரிந்தது. பாதங்கள் தெரிந்தன. போர்வை முழுவதும் விலகித் தரையில் விழுந்தது.

''நகராதே!'' என்றூர் டாக்டர். ''நகராதே ஹரி!'' என்று சொல்லி ஹரியின் பக்கவாட்டில், கால்களுக்குக் கீழே எல்லாம் எட்டிப் பார்த்தார்.

''ஜாக்கிரதை! எங்கேயாவது ஒளிந்து கொண்டு இருக்கும். பைஜாமாவுக்குள் புகுந்து கொண்டிருக்கலாம். ஜாக்கிரதை!'' என்றூர் டாக்டர்.

இதைக் கேட்டதும் ஹரி சட்டென்று தலையைத் தூக்கித் தன் காலைப் பார்த்தான். முதல் தடவை நகர்ந்திருக்கிறுன். திடீர் என்று எழுந்தான். படுக்கை மேல் நின்றுன். இரண்டு கால்களையும் உதறி உதறிப் பார்த்தான்.

பைஜாமாவுக்குள்ளிருந்து பாம்பு அவனைக் கடித்திருக்க வேண்டும் என்றுதான் நினைத்தோம். டாக்டர் தன் பெட்டியிலிருந்து கத்தியை எடுத்து விட்டார்.

ஹரி உதறுவதை நிறுத்தி விட்டான். படுக்கையைப் பார்த்தான். ''இல்லை!'' என்று கத்தினுன்.

சின்ஹா நிமிர்ந்தார். அலறிப் படுக்கையைப் பார்த்தார். அப்புறம் ஹரியைப் பார்த்தார். ஹரிக்கு ஒன்றும் இல்லை. எதுவும் கடிக்கவில்லை. அவனை, எதுவும் கடிக்கப் போவதில்லை. அவனை, அவன் இறந்து போக மாட்டான்! எல்லாம் சரியாகி விட்டது... எல்லாம்... இருந்தும் மூவரும் பேஸ்த் அடித்தாற்போல் நின்றேம்.

''மிஸ்டர் ஹரி! நிஜமாவே அதை முதல்ல பார்த்தீங்களா?'' என்றூர் டாக்டர். அவர் குரலில் சற்றுக் கேலி இருந்தது. ''இல்லை, கனவு ஏதாவது கண்டீங்களா?'' டாக்டரின் நெற்றியில் இன்னும் வியர்வை! கண்களில் அடிபட்ட தன்மை.

ஹரி படுக்கை மேல் நின்றுகொண்டு டாக்டர் சின்ஹாவை முறைத்தான்.

''நான் என்ன பொய் சொன்னேன்னு சொன்னீங்களா?'' என்று இரைந்தான்.

''ஆமாம்.''

''மை காட்! நான் பொய்யா சொல்றேன்! அடேய் டாக்டர் கிழவா கேளு! நான் சொன்னது பொய்யில்லை. பாம்பு வந்தது! என் மேலே ஊர்ந்தது நான் பார்த்தேண்டா! பின்ன எதுக்கு ஊசி குத்திக்கறேன்! எதுக்கு இத்தனை நேரம் அப்படியே அசங்காம கிடந்தேன். எனக்கு என்ன பைத்தியமா? பைத்தியம்னு சொல்றே? பெங்காலிக் கிழவா, ஏய்!''

''ஷட் அப் ஹரி!'' என்று இரைந்தேன். கெட்ட வார்த்தைகள் உபயோகிக்க ஆரம்பித்து விட்டான்.

டாக்டர் சின்ஹா அந்த அறையில் ஒருவரும் இல்லாத மாதிரி வெளியே வந்தார்..

டாக்டர்! ரொம்பப் பிரமாதமா செயல்பட்டீங்க! நீங்க வந்ததுக்கு ரொம்ப ரொம்பத் தாங்க்ஸ்!'' என்றேன்.

''உங்க ஃப்ரெண்டுக்கு.. ரெஸ்ட் தேவை! அவர் பார்க்க வேண்டியது வேறே ஒரு டாக்டரை,'' என்று என்னைப் பார்க்காமல் காரில் ஏறி அதன் இன்ஜினைக் கிளப்பிப் புறப்பட்டு இருட்டில் மறைந்தார்.

## உண்மை புரியும் அளவுக்கு அவள் வயதானவள்...
## ஒரு அன்னையின் அன்பே அதைச் சொல்லமுடியும்.




வளர்ந்து வருவதைப்பற்றிய
உடலோடு ஒட்டிய உண்மையைச்
சொல்லுங்கள். மாதந்தோறும் உங்கள்
சங்கடமான நாட்களைப்பற்றிய
உண்மையைச் சொல்லுங்கள்.
சானிடரி நாப்கின்கள் பற்றி
உண்மையைக் கூறுங்கள். ஏதோ தானோ என்று ஏதாவது
நாப்கினைச் சொல்லிவிட வேண்டாம். காம்ஃபிட்
என்று சொல்லுங்கள்.
காம்ஃபிட்... அதிகப்படியாக உறிஞ்சும் சக்தி கொண்டது.
அதிகமாக மேலானது, கூடுதலான மென்மை கொண்டது.
தளர்ச்சி தரும் புடைப்பை உண்டாக்காது. அத்துடன்

காம்ஃபிட் இந்தியாவின் மிகவும்
நவீனமான ஆட்டோமாடிக் தொழிற்
சாலையில் மருத்துவ முறையில்
நோய்நுண்மங்கள் ஒழிக்கப்பெற்ற
நிலைகளில் தயாரிக்கப்படுகிறது.
அதனால் இதர பாக்டீரியாவினால்
பாதிக்கப்பட்ட சானிடரி நாப்கின்ஸ் தராத பாதுகாப்
பைத் தருகிறது. முழுவதும் அதை ஃப்ளஷ் செய்துவிடலாம்.
ஸ்வீடனின் கிரிஸ்டின் ஹோல்மின் சர்வதேசப் புகழ்
வாய்ந்த ப்ராண்ட் காம்ஃபிட்டை உபயோகியுங்கள். காம்ஃபிட்
உபயோகித்து, நீங்கள் உபயோகித்திருக்கிறோம் என்ற
உணர்வே இல்லாத முழுப்பாதுகாப்பைப் பெறுங்கள்.

## *யவ்வனத்தின் முதல் அறிகுறி காஃம்பிட்*

கீர்த்தி காப்பியைக் குடித்து விட்டு டபராவில் டம்ளரால் கிணு கிணுவென்று தாளம் போட்டுக்கொண்டே, ''என் கல்யாண விஷயத்தில் உன்னைத்தான் ரொம்ப நம்பிட்டிருக்கிறேன், வேலு,'' என்றான் தலையைக் குனிந்து வெட்கத்துடன்.

''என்னையா? எனக்கு ஒரு பெண் இருக்கிறது உண்மை. ஆனால் அதற்குக் கல்யாண வயசு வர இன்னும் பதினாறு பதினேழு வருஷம் ஆகுமே?''

''விளையாடாதே, வேலு. நான் பம்பாயிலிருந்து வந்ததும் உன் கிட்டே வந்து சொல்லப் போகிறேன். நீதான் முடிச்சு வைக்கணும்.''

''கொஞ்சம் இரு, கொஞ்சம் இரு. இவ்வளவு ஸ்பீடாய்ப் போனால் எப்படி?'' என்று தடுத்தான் வேலுமணி. ''நீ சொல்வதைப் பார்த்தால் எனக்கு ஏதோ சம்பந்தம் உண்டு போலிருக்கிறதே? உறவா?''

ஊகூம் என்கிற மாதிரி தலையைத்தான் அசைத்தான் கீர்த்தி.

''தெரிஞ்சவங்களா?''

ஆமாம் என்கிற மாதிரி தலையசைத்தான்.

''இந்த ஊரா? வெளியூரா?''

இந்த ஊர்தான் என்கிற மாதிரி தலையசைத்தான் அவன்.

'என்னடாது புதிர்!' என்று மோவாயைத் தேய்த்து விட்டுக் கொண்டு யோசித்தான் வேலுமணி. ''இன்னொரு கேள்வி. என் பத்திரிகை மூலம் தெரிஞ்சவங்களா, இல்லை, என் சினேகிதங்க உறவு காரங்க மூலம் தெரிஞ்சவங்களா?''

மேஜை மீதிருந்த வேலுமணியின் பத்திரிகைப் பிரதியைச் சுட்டிக் காட்டினான் கீர்த்தி.

''அடப் பாவி! ரொம்ப நெருங்கி வந்துட்டியே? கதை கிதை எழுதறவங்களா?''

மறுபடியும் ஊகூம் என்று தலையசைத்தான்.

''படம் போடறவங்களா?''

கீர்த்தியின் தலை நாணத்துடன் தாழ்ந்தது.

''படம் போடற பெண்.. ஓ! ரோஜாவா?''

கீர்த்தியின் முகத்தில் அப்போது பரவிய சிரிப்பைப் பார்த்திருந்தால் நாலு எக்ஸ்பிரஸ் ரயில்கள் நின்றிருக்கும்.

''இரண்டு மாசம் முன்பு, ஒருநாள் அவள்கிட்டே உனக்காகப் படம் வாங்கிட்டு வரப் போய். . . ஞாபகம் இல்லை?'' என்றான் கீர்த்தி, குரலில் வெட்கம் அதிகரித்தவனாக.

□ □ □

அன்று அவன் வேலுமணியைப் பார்த்து ரொம்ப நாளாச்சே என்று போன் செய்தான். வேலுமணியின் அலுவலகம் மவுண்ட் ரோடில்

# அந்தக் காலண்டரில் அப்படி என்ன இருக்கிறது?

## I

'முரளி'

இருந்தது. கீர்த்தியின் ஆபீஸ் மயிலாப்பூர். வேலுமணி போனை எடுத்தான்.

''அங்கேயே இருக்கிறாயா? இன்னும் அரை மணியில் வருகிறேன்,'' என்றான் கீர்த்தி.

''நல்ல சமயத்துக்குப் போன் செய்தாய். கொஞ்சம் இரு,'' என்ற வேலுமணி பக்கத்திலிருந்த ஒருவரிடம், ''என்ன அது அட்ரஸ்?'' என்று ஏதோ கேட்டுக் கொண்டான். பிறகு கீர்த்தியிடம், ''நீ ஸ்கூட்டரில்தானே வருகிறாய்? வருகிற வழியில், ராயப்பேட்டை மார்க்கெட்டுக்குப் பக்கத்தில் 14,

லப்பை தெரு என்ற விலாசத்துக்குப் போ. ஒரு படம் கொடுப்பார்கள். வாங்கி வந்து விடு. இங்கே பையன் யாரையும் காணோம். பாரம் காத்துக் கொண்டிருக்கிறது,'' என்றான்.

ரொம்ப அவசரமாயிருந்தாலொழிய அவன் இந்த மாதிரி வேலைகளைச் சொல்லமாட்டான் என்று கீர்த்திக்குத் தெரியும். 'ஓகே' என்றான்.

குறிப்பிட்ட விலாசத்துக்குப் போய்க் கதவைத் தட்டியபோது ஒரு பெண் தலையை வாரிக் கொண்டே வந்து கதவைத் திறந்தாள். பதினெட்டு வயது இருக்கும். கீர்த்திக்கு முதன் முதல் கண்ணில் பட்டது அவளுடைய நல்ல வகிடுதான். நேர்வகிடாக இருந்த போதிலும் நடுவில் கொஞ்சம் பிசிறு இருப்பது தெரிந்தது அவனுக்கு. அவள் அனுமதி கொடுத்தால், நேர் செய்து விடலாமே என்று ஆசையாயிருந்தது.

''வேலுமணி அனுப்பினார். உங்கள அப்பா ஏதோ படம் தருவார் என்றார்,'' என்றான் தயகத்துடன்.

''இருங்கள்,'' என்று சீப்பை அலமாரியில் வைத்துவிட்டு, துண்டில் கையைத் துடைத்துக் கொண்டு அவள் உள்ளே சென்றாள். முன்னறை கச்சிதமாக, இரண்டொரு பெயிண்டிங்குகளுடன் இருப்பதை அவன் ரசித்துக் கொண்டிருந்தபோது அவள் திரும்பி வந்தாள். காகித உறையில் ஒரு படத்தை வைத்து, ''என் அப்பா தரவில்லை. நான்தான் தருகிறேன். அப்பாவுக்கு ஸென்ட்ரல் ஸ்டேஷனில் டிக்கெட்டுகளைப் பரிசோதனை செய்ய மட்டும்தான் தெரியும். படம் போடத் தெரியாது,'' என்றாள்.

அவள் முகத்தைப் பார்த்தான். சற்று நீளவாட்டான முகத்தில் குறும்புச் சிரிப்புத் தவழ்ந்து கொண்டிருந்தது. 'உங்கள் வகிடு கொஞ்சம் பிசிறாயிருக்கிறது,' என்று இப்போதாவது சொல்லலாமா என்று நினைத்தான். உறையிலிருந்து படத்தை எடுத்துப் பார்த்தான். ஒரு பெண் ஓர் இளைஞனின் போட்டோவை—காதலனோ கணவனோ—பார்த்து ரசித்துக் கொண்டே குப்புறப் படுத்திருந்தாள்.

அவள் அவன் அபிப்பிராயத்தை அறிவதற்காக அவன் முகத்தையே பார்த்துக் கொண்டிருப்பதைப் பிறகுதான் கவனித்தான். ''ரொம்ப நன்றாய்ப் போட்டிருக்கிறீர்கள்,'' என்று பாராட்டினான்.

''தாங்ஸ்,'' என்றாள்.

அவன் சொப்பனத்தில் மிதக்கிற மாதிரி ஸ்கூட்டரைச் செலுத்திக் கொண்டு வேலுமணியின் ஆபீசை அடைந்தான். வாசலிலேயே காத்திருந்த வேலுமணி, ''எங்கே படம்?'' என்று கை நீட்ட, ''இதோ,'' என்று ஸ்கூட்டரிலிருந்த பெட்டியைப் பார்த்தான்.

காலியாக இருந்தது.

---

# எகிப்திய தொழில் ரகசியம்

எகிப்து நாட்டில் இறந்த உடல் பல நூற்றாண்டுகளாக எவ்வாறு காப்பாற்றப்படுகின்றது என்பதைப்பற்றி ஹிராடடஸ் (கி. மு. 484-425) மிக விரிவாகக் கூறுகின்றார்:

சடலப் பாதுகாப்பு ஒரு தனிக் கலை. இவற்றுள் மூன்று வகைகள் உள்ளன. 1. மிகவும் உயர்ந்தது. 2. செலவு அதிகமில்லாதது. 3. செலவு குறைவானது.

முதல் தரம்: மூக்கின் வழியாக மூளையின் எல்லாப் பகுதிகளும் கொக்கி போட்டு எடுத்துவிடப்படுகின்றன. அவ்வாறு முடியாமல் மிஞ்சியிருப்பவை மருந்து செலுத்தி வெளிக்கொணரப்படுகின்றன. பிறகு வயிற்றைக் கிழித்துக் குடல் வகைகளைக் களைந்து குடல் இருந்த பாழ் இடம் மருந்துகள் போட்டு நன்கு கழுவப்படுகின்றது. அதற்கு தென்னை, பனை ஆகியவற்றிலிருந்து இறக்கிய சாராயத்தைப் பயன்படுத்துவர். அதன்பின் அதில் பலவகை வாசனைப் பொருட்கள் இட்டு நிரப்புவார்கள். பிறகு அறுத்த பகுதியை— வயிற்றை— மீண்டும் தைத்து அவ்வுடலின் மீது வெள்ளைப் போளம் முதலிய மருந்துகள் தடவி, எழுபது நாட்களுக்கு எண்ணெய்க் கொப்பரையில் வைத்துவிடுகின்றனர். எழுபது நாட்கள் ஆனவுடன் இதை எடுத்துக்கழுவி, துணிகளால் அலங்காரம் செய்து,

''ஐயையோ! வழியில் எங்கோ பறந்து விழுந்து விட்டது போலிருக்கிறதே?'' என்று கையைப் பிசைந்தான்.

''உன்கிட்டே போய் ஒரு வேலையை ஒப்படைத்தேன் பார்!'' என்று வேலுமணி திட்டிவிட்டு, ''எந்த வழியில் வந்தாயோ அந்த வழியிலேயே போய்ப் பார். எந்தப் பையனாவது காற்றூடி விடுவதற்குப் பசை தடவிக் கொண்டிருப்பான். பறித்துக் கொண்டு வா. அதற்குள் நான் இங்கே வேறே ஏதாவது பண்ணிச் சமாளிக்கிறேன்,'' என்று உள்ளே திரும்பினான்.

''மறுபடியும் வேறொரு படம் போட்டுத் தரச் சொல்லிக் கேட்கட்டுமா?'' என்றான் கீர்த்தி தீனமாக.

''கேட்டுப் பார். உன்னை நார் நாராய்க் கிழித்துப் போட்டுவிடுவாள். ரொம்பக் கோபக்காரப் பெண்,'' என்றான் வேலுமணி.

ஸ்கூட்டரை மெதுவாய்ச் செலுத்தி வழி பூரா படத்தைத் தேடியபடியே மீண்டும் அவள் வீட்டை அடைந்து விட்டான்.

அவன் வருவதை அவள் ஜன்னல் வழியே கவனித்து விட்டாள் போலிருக்கிறது. உடனேயே கதவைத் திறந்து, ''ஏன்? என்ன ஆச்சு?'' என்றாள். இப்போது அவள் தலையை வெகு அழகாக வாரிப் பின்னி விட்டிருந்தாள்.

''நீங்கள் கொடுத்த.... படம்...எங்கேயோ விழுந்திட்டுது...''

''என்னது! விழுந்திட்டுதா? நல்லாயிருக்கே! நீங்க என்ன பச்சைக் குழந்தையா, வழியிலே ஒரு பொருளைப் போடறதுக்கு!'' என்றாள் அவள். 'கடாமாடு மாதிரி வயசாகிறதே!' என்பதைச் சொல்லாமல் சொல்லியது அவள் குரல்.

''ரொம்ப மன்னிக்கணும். என்னவோ அஜாக்கிரதையாயிருந்து விட்டேன். நீங்க தயவு பண்ணி வேறொரு படம் போட்டுத் தந்தால்... அங்கே வேலுமணி என்னை ரொம்பக் கோபிக்கிறான்...''

''வேறே படமா! நல்லாயிருக்கிறதே கதை! வெண்டைக்காய் பறிக்கிற மாதிரி பறிக்கலாம்னு நினைச்சீங்களா? இது படம் சார், படம்! உயிரை விட்டு செய்கிற கலை!''

''தெரிகிறது, புரிகிறது. தயவு பண்ணி ப்ளீஸ். எத்தனை நேரமானாலும் நான் இங்கேயே காத்திருக்கத் தயார்.'' நாற்காலியில் உட்கார்ந்து விட்டான் கீர்த்தி.

''ராத்திரி பன்னிரண்டு மணி ஆகும். சொல்லிவிட்டேன்!'' என்று பயமுறுத்திவிட்டு உள்ளே சென்றவள், இரண்டு நிமிடத்துக்கெல்லாம் கையில் படத்துடன் திரும்பி வந்தாள். ''இந்தாருங்கள்! உங்களுக்காக அவசர அவசரமாக வரைந்தேன்!'' என்றாள்.

அதற்காகத் தனியாகச் செய்த பெட்டியில் அச்சடலத்தை வைத்து அடியில் கோந்து போன்ற பிசினால் தடவி, கீழே நழுவி விழாத வண்ணம் செய்துவிடுகின்றனர். பின் அப் பெட்டியை மூடி சீல் வைத்து அதற்குரியவர்களிடம் கொடுத்துவிடுகின்றனர்.

இரண்டாம் தரம்: இம்முறையில் மூக்கின் வழியாக மூளையை எடுப்பதில்லை. வயிற்றில் உள்ள குடலையும் எடுப்பது கிடையாது. ஆசன வாய் வழியாக மருந்து ஒன்றை உடலில் ஏற்றி, அத் துவாரத்தை மூடி எண்ணெய்க் கொப்பரையில் இட்டுவிடுவர். அதற்குரிய நாட்களுக்குப் பிறகு அவ்வுடலை எடுத்து ஏற்றப்பட்ட மருந்தை வெளியே விட்டுவிடுவார்கள். இப்போது மூளை, குடல், சதை யாவும் குழம்புபோல் வந்து வெற்று எலும்பு மட்டும்தான் இருக்கும். பிறகு அவ்வுடலை துணியால் அலங்கரித்து உடையவரிடம் சேர்த்துவிடுகின்றனர்.

மூன்றும் தரம்: இது ஏழை மக்களுக்காக ஏற்படுத்தப்பட்ட முறை. குடலில் உள்ள பொருட்கள் மருந்தினால் வெளியேற்றப்பட்டு அதற்குரிய நாட்கள் வரை கொப்பரையில் இட்டு, பிறகு உரியவர்களிடம் கொடுத்து விடுகின்றனர். இது பல ஆண்டுகள் இருப்பதில்லை.



—பி. நாராயணன்

# இவரே சிறந்த டைரக்டர்

— விடை

1 ஹோட்டல்களில் தொங்கும் அலங்கார விளக்குகளில் கதாநாயகன் தொங்கிக் கொண்டே சண்டை போடுவான் எதிரிகளுடன்.

2. கிளப்பில் துப்பறியச் செல்லும் கதாநாயகனுக்கு மது அளிக்கப்படும். தமிழ்ப் படக் கதாநாயகன் நல்லவன். குடிக்க மாட்டான். யாருக்கும் தெரியாமல் அதை அங்குள்ள பூந்தொட்டியில் ஊற்றிவிடுவான். பின்னர் குடித்தவன் போல் மயங்கி இருந்து உண்மைகளைக் கண்டுபிடிப்பான்.

3. முதல் வசனம்: ''நான் எங்கிருக்கிறேன்?''

4. கையிலுள்ள கண்ணாடி டம்ளரைத் தண்ணீருடன் பட்டென்று கீழே போட்டுவிட்டு, ''அப்பா!'' என்று அலறிக் கொண்டு அவர் மேல் விழுவாள்.

5. வில்லன் கதாநாயகியைக் கடத்திக் கொண்டு காரில் வளைந்து வளைந்து செல்லும் ஊட்டி மலைப் பாதையில் விரைவாகச் செல்வான். பின்னாலேயே கதாநாயகன் ஒரு மாட்டு வண்டியில் அவனைக் குறுக்கு வழியில் சென்று துரத்திப் பிடித்து அவனுடன் சண்டை போட்டுக் காதலியை மீட்பான்.

6. சென்ட்ரல் ஸ்டேஷனையும், எல். ஐ. சி. யையும் காட்டுவார்கள்.

ஆர். மாதவன்



வாங்கிப் பார்த்தான். நம்பவே முடியவில்லை. சற்று முன் கொடுத்த அதே படம் மாதிரி, அதே கோடுகள், அதே போஸ்...நிமிர்ந்து பார்த்தான் அவளை. அவள் வாயைப் பொத்திக் கொண்டு சிரித்துக் கொண்டிருப்பது தெரிந்தது.

''இது...'' என்றான்.

''நீங்கள் ஸ்கூட்டரைக் கிளப்பும் போதே கீழே விழுந்து விட்டது. நான் கூப்பிடக் கூப்பிடக் காதில் விழாமல் போய் விட்டீர்கள். எப்படியும் மறுபடி வருவீர்கள் என்று எனக்குத் தெரியும்.''

கீர்த்தியும் சமாளித்தான். ''நான் தவறிப் போய்க் கீழே போடவில்லை.. உங்களை இரண்டாம் முறை சந்திக்க ஒரு சந்தர்ப்பம் இருக்க வேண்டுமென்றுதான் வேண்டுமென்றே போட்டேன்.''

''ஐய!'' என்று அவள் சிரித்தாள். படம் கிடைத்துவிட்டது என்று வேலுமணிக்குப் போன் பண்ணி விட்டு அவன் அவள் வீட்டில் காப்பி சாப்பிட உட்கார்ந்தபோது காதல் ஆரம்பித்தது.

''இதெல்லாம் நடந்து இரண்டு மாசம் இருக்குமே?'' என்றான் வேலுமணி, எல்லாவற்றையும் கேட்ட பின்.

''சரியாய் மூன்று மாசம் பதினெட்டு நாள் பதினாலு மணி நேரம் ஆகிறது,'' என்றான் கீர்த்தி. ''அது ஒரு பன்னிரண்டாம் தேதி. எங்கள் சேல்ஸ் மானேஜருக்குக் கல்யாணம் என்று எல்லாரும் திருச்சி போயிருந்ததால் ஆபீஸ் லீவு. அதனால்தான் நான் உன்னைப் பார்க்க வர முடிந்தது. சாயந்தரம் லேசாய் இரண்டு தூறல் கூடப் போட்டது...''

''அந்த அபூர்வ சந்திப்புத் தினத்தை இத்தனை விளக்கமாய் ஞாபகம் வைத்துக் கொண்டிருக்கிற முட்டாளுக்கு, அந்தக் காதலைச் சட்டுப் புட்டென்று நிறைவேற்றிக் கொள்ள வேண்டுமென்று தோணலையே!'' என்று கோபித்தான் வேலுமணி.

''என்னவோ வெட்கப்பட்டுக் கிட்டே இருந்து விட்டேன்,'' என்று கீர்த்தி ஒப்புக் கொண்டான்.

''பேசாமல் இந்தக் காதலுக்குத் தலை முழுகி விட்டு, வேறே



ஒரு கொடி 'இரு' மலர்கள்
டிரிக் படம்: மோனலிசா

படியாய் நடக்கிற காரியத்தில் புத்தியைச் செலுத்து!'' என்று கண்டிப்புடன் சொன்னன் வேலுமணி. ''ஏனென்றல் இப்ப அனேகமாய்க் காரியம் மிஞ்சி விட்டது.''

''ஐயையோ! ஏன் அப்படிச் சொல்றே?'

''ரோஜாவுக்கு அவள் அப்பா தீவிரமாய் வரன் தேடிக் கொண்டிருப்பதாகக் கேள்வி. இன்னேரம் யாராவது ஃபிக்ஸ் பண்ணியிருந்தாலும் பண்ணியிருப்பார்,''

கீர்த்தி பதைத்தான். ''இப்ப என்ன பண்ணலாம் என்கிறய்?''

''முதலில் பம்பாய்க்கு ஒரு தந்தி கொடு. பாட்டி சீட்டி செத்து விட்டாள், இப்போ வர முடியாது என்று சொல்லிவிடு. பிறகு நேரே ரோஜாவின் வீட்டுக்குப் போ. அவள் அப்பாவிடம் உன் குவாலிபிகேஷன்களைச் சொல்லி, ரோஜாவைக் கல்யாணம் பண்ணித் தரும்படி ஒபஞகவே கேள். அதுதான் ஒரே வழி!''

**''வா**ருங்கள், வாருங்கள்,'' என்று வரவேற்றர் ரோஜாவின் அப்பா சங்கரலிங்கம்.

தொண்டையைச் செருமிக் கொண்டு கைகளைப் பிசைந்து கொண்டு உட்கார்ந்தான் கீர்த்தி. சுற்று வட்டாரத்தில் ரோஜாவைக் காணேம். இதற்கு முன் இரண்டொரு தடவை படம் அது இது என்று சாக்குச் சொல்லிக் கொண்டு அங்கே வந்தான். இப்போது ரோஜாவின் அப்பாவிடம் எப்படிப் பேச்சை ஆரம்பிப்பதென்று தெரியவில்லை. சட்டென்று அவர் சென்ட்ரல் ஸ்டேஷனில் பணியாற்றுகிறவர் என்பது ஞாபகம் வந்தது. ''என் சினேகிதன் ஒருத்தன் அடுத்த வாரம் அவசரமாய் டெல்லி போக வேண்டியிருக்கிறது. இருபது நாளைக்கு ரிசர்வேஷன் கிடையாது என்கிறர்கள்,'' என்று ஆரம்பித்தான்.

''வெயிட்டிங்கில் இருக்கிறதாக்கும்? என்ன நம்பர்?'' என்றர் சங்கரலிங்கம்.

''அவனைக் கேட்டு வந்து சொல்கிறேன்,'' என்று சமாளித்தான்.

''டெல்லின்னதும் ஞாபகம் வருகிறது. ரோஜாவுக்கு அங்கே ஒரு பையன் பார்த்திருக்கிறேன். அடுத்த வாரம் பெண் பார்க்க வருகிறன்.''

கேட்டுக் கொண்டிருந்த கீர்த்திக்குத் தொண்டையில் எதுவோ அடைத்தது. ''நான் உங்கள் பெண்ணைக் காதலிக்கிறேன். எனக்குக் கல்யாணம் பண்ணிக் கொடுங்கள்,'' என்று கதற வேண்டும் போலிருந்தது. எப்படிச் சொல்வது என்று தைரியம் வராமல் காத்திருந்தான்.

அவர் எழுந்து உள்ளே போனர்.

மனம் கலங்கியவனக அவன் உட்கார்ந்திருந்தான். அலமாரியில் ரோஜா படங்கள் வரையும் காகிதம் அடுக்கி வைக்கப்பட்டிருந்தது. சும்மா அவைகளை ஒவ்வொன்றய் எடுத்துப் பார்த்துக் கொண்டிருந்தான்.

என்ன இது? வெள்ளைக் காகிதங்களின் அடியில் ரொம்பப் பத்திரமாக—

ஒரு மாதக் காலண்டர் தாள். மாதம் வருடம் இருக்கும் மேல் பகுதி கிழிந்து போயிருந்தது. ஆனல் கீழே தேதிகள் போட்ட கட்டங்கள் சுத்தமாக இருந்தன.

அதிலே, பன்னிரண்டாம் தேதி மட்டும் வெகு அழகாக, பென்ஸிலால் வட்டம் போடப்பட்டிருந்தது.

பன்னிரண்டாம் தேதி? அவனுக்கு நெஞ்சு சிலிர்த்தது. அவனும்



''ஏம்பா, ஏகாம்பரத்திடம் ரொம்ப தரக்குறைவா நடந்துட்டியாமே?''

''அவர் மட்டும் தர்ரது குறைவா இருக்கலாமா?''

—தியாகன்

---

அவளும் சந்தித்த அந்த மறக்க முடியாத பன்னிரண்டாம் தேதி!

காப்பி எடுத்துக் கொண்டு வந்தார் சங்கரலிங்கம், ''சார், உங்கள் பெண் ரோஜாவைக் கல்யாணம் செய்து கொள்ள நான் விரும்புகிறேன். நான் ஒரு இன்ஜினியர். எண் ஹூற்றைம்பது ரூபாய் சம்பளம் வருகிறது. நான் ரோஜாவைக் கண்ணுக்குக் கண்ணாய் வைத்துக் கொள்வேன். டெல்லி கில்லியெல்லாம் நீங்கள் தேடிப் போக வேண்டாம்,'' என்றான் கட கடவென்று. எப்படித்தான் அவ்வளவு தூரம் பேசுகிறோமோ என்று அவனுக்கே ஆச்சரியமாயிருந்தது.

சங்கரலிங்கம் பிரமித்தே போனார், அந்தத் திடீர் விண்ணப்பத் தைக் கேட்டு, ஜன்னலருகே ரோஜா வின் முகம் பிரசன்னமாகத் தெரிந் தது.

''ரைட்,'' என்றார் மகிழ்ச்சி யுடன்.

அந்தக் காலண்டர் தாளை நன்றியுடன் ஒரு பார்வை பார்த்து விட்டுக் கழுத்தில் பெருகும் வியர் வையைத் துடைத்துக் கொண்டான் கீர்த்தி.

திருமணம் சீரும் சிறப்பு மாக நடந்து, முதலிரவும் வந்தது.

''ரோஜா, அந்தப் பன்னி ரண்டாம் தேதி சுழியிட்டு வைத்தி ருக்கிறாயே, அந்தக் காலண்டர் தாளை அருமையாய்க் கண்ணாடி பிரேம் போட்டு மாட்டப் போகிறேன், என்றான் கீர்த்தி புது மனைவியை அணை துக் கொண்டே.

ரோஜாவின் பெரிய கண் கள் ஆச்சரியத்துடன் மலர்ந்தன. ''அ நீங்கள் பார்த்து விட்டீர்களா என்ன?''

''பார்க்காமல்?'' என்று கீர்த்தி, மேலும் இறுக்கமாக அவ அணைத்துக் கொண்டு. மல்லி யில் முகத்தைப் புதைத்துக் கொண் பேசியதால் அவன் பேச்சு திக்கித் தி வந்தது. ''நானும் நீயும் முத தடவை சந்தித்த அந்தப் பன்னிர டாம் தேதியை என்ன அழகாய் வட்ட போட்டுக் குறித்து வைத்திருக்கிற அதைப் பார்த்தபோதுதான் உன் கா லின் ஆழம் எனக்குப் புரிந்தது. உ அப்பாவிடம் கேட்பதற்குத் தைரியமு வந்தது . . . . .''

''வந்து . . .'' அவள் ஏதே சொல்ல வாயெடுத்தாள். சொல்லவில்லை.

மூன்று வருடத்துக்கு மு னால் ஒருநாள் அவள் அப்பாவின் சிநே கிதரொருவர் வந்திருந்தார். கல்க தாவில் ஓர் இங்கிலீஷ் தினசரியில் கார் டூனிஸ்டாக இருப்பவர் அவர். அந் மாதம் பன்னிரண்டாம் தேதி ஒரு க யாணத்துக்கு வாழ்த்துச் செய்தி அனுப் வேண்டுமென்றும் அதை ஞாபக படுத்தும்படியும் அவர் சொல்ல, அத காக அந்தத் தேதி மீது ஒரு வட்ட போட்டாள் ரோஜா. அந்தக் கார் டூனிஸ்ட் அதைப் பார்த்ததுமே, 'உன் டம் பிரமாதமான சித்திரத் திறன இருக்கிறதம்மா! இரண்டு முனையு இவ்வளவு பர்ஃபெக்டாய்ச் சேரும்ப வட்டம் போட முடிந்தால் வெகு ந றாய்ப் படம் போட வரும்,' என்றார் அவர் சொன்னதன் பேரில் அவள் பட கள் வரையத் தொடங்கினாள்—வின விலேயே பிரபலமான சித்திரகாரியா வந்து விட்டாள்.

தனக்குக் குரு மாதிரி விளா கும் அந்தக் காலண்டர் தாளை, அ தப் பன்னிரண்டாம் தேதி வட்டத்தை அவள் பத்திரப்படுத்தி வைத்திருந்தது வியப்பில்லை.

ஆனால் அதையெல்லாம் அவள் அவனிடம் சொல்லவில்லை. அற வுள்ள பெண்.


கேம்லின்
கேண்டி
பால் பேனாக்கள்
இன்று ஒரு கேண்டியை உபயோகி யுங்கள். நாளை பெட்டி பூராவும் வாங்கி விடுவீர்கள்.
கேம்லின் கேண்டி பால் பேனாக்கள் ஒரே துண்டு பிளாஸ்டிக் உடற்பாகத்தில் கிடைக்கிறது. உபயோகத்தால் வீணாகாத உந்தும் ஸ்டிரிப் டிசைன் கொண்டுள்ளது. உபயோகித்துப் பாருங்கள்! அதை எளிதில் புறக்கணித்துவிட முடியாது.
☐ மூக்கு நுனியில் வெடிப்பு ஏற்படுவதைத் தடுக்கும் உடையாத பிளாஸ்டிக் உடற்பாகம்.
☐ கூடுதலான நீளமுள்ள ரீஃபில் பொருத்தப்பட்டுள்ளது.
☐ சாதாரண பால் பேனாக்களை விட அதிகமாக இங்க் கொள்ளும் திறன்—இருந்தும் நியாயமான விலையுள்ளது.
☐ கண்கவரும், அழகான வடிவம்.
☐ கவர்ச்சிமிக்க வண்ணக் கோடுகளில் கிடைக்கிறது.
கேம்லின் பிரை. லிட்
ஸ்டேஷனரி டிவிஷன்,
பம்பாய்-400 059
SI797 Tam



# அந்தக் காலண்டரில் அப்படி என்ன இருக்கிறது?

III

சீதாப் பாட்டிக்குக் கனவா நினைவா என்
தெரியவில்லை. காஸ்ட்ரிக் ட்ரபிளினால் சி
சமயம் இப்படி இல்யூஷன் ஏற்படுவதுண்டே.. அந்த ரகப
யிருக்குமோ என்று எண்ணி மூக்குக் கண்ணாடியைத் துடைத்
விட்டுக்கொண்டு காலண்டரைப் பார்த்தாள்.

சூபர்மான் அப்புசாமி அதில் நின்று கொண்டிரு
தார்.

கட்டுக் கட்டா
உருண்டு திரண்ட மார்புகளும் தோள்களும்—இடுப்ப
பெல்ட். தலை மட்டும்தான் பழைய அப்புசாமி தலையா
இருந்தது. தாராசிங் மாதிரி ஜம்மென்ற கண்கவர் கட்டு
லோடு அந்த முஷ்டியை அவர் வளைத்து உயர்த்திக் காட்டு
கையின் திரட்சி,

''மை குட்னஸ்! உங்கள் மாதிரியே அச்சா
இருக்கிறது! வாட் இஸ் திஸ்? ஐ காண்ட் பிலீவ்!'' என்று
சீதாப்பாட்டி, ''ஃபர்ஸ்ட் கிளாஸ் ஹி மேனாக இருக்கி
கள்.''

அப்புசாமி, ''ஹி ஹீ,'' என்றார். ''எல்லாம் வ
வேலு வைத்தியர் ஏற்பாடு,..வடிவேலன் மனசு வெச்சா
வலரவெச்சான்,..காண்டாமிருக லேகியம் ஒரு மண்ட
சாப்பிட்டால் இந்த மாதிரி வந்துவிட முடியும் என்
என்னைப் படம் பிடித்துக் காட்டியிருக்கிறார். ஆயிரத்
தொளாயிரத்து எண்பதாம் வருஷத்துக்கு இப்ப
காலண்டர் ரெடி! நான் ஷோக்கா இல்லே?''

சுவரில் மாட்டியிருந்த காலண்டரைக் கைய
எடுத்து மனைவியிடம் கொடுத்தார். ஒரு பாதியில் பலசா
யான வாலிப அப்புசாமி படம். இன்னொரு பாதிய
மெலிந்த கிழ அப்புசாமி. வாலிபப் படத்தைக் காட்
''ராஜாமாதிரி இருக்கிறேனில்லே, சீய்தே! சத்தியமாக
சொல்லு.. இந்தக் காலண்டரில் இதோ இந்த என்னை
பார்த்ததும் உனக்கு என்மேல் ஆசை வருதா இல்லைய
காதல்...வந்து டிச்சி!''

''யு ஆர் த ஸேம் ஆஸ் எவர். .பழைய ப்ரும்ஸ்
காகத்தான் நீங்க சகிக்க முடியாமல் இருக்கீங்க. .ட்ரூப்
ஷோல்டர்ஸ். . .நேரோ நெக். . தொள தொளக் வை
போனி செஸ்ட். ட்ரிக் போட்டோகிராபி?''

''கரீட்!'' என்று மகிழ்ந்தார் அப்புசாமி. ''
பாதியிலே யிருக்கிறது காண்டா மிருக லேகியம் சாப்பிட
துக்கு முன். அது என் அசல் படம், அடுத்த பாதியிலே இ
கிற இந்த பலசாலியான உருவம் லேகியம் சாப்பிட்ட பிற
ட்ரிக் பண்ணி எடுத்ததும் என்ன அழகாக இருக்கே
பார்!''

சீதாப்பாட்டி பல்லைக் கடித்தாள். ''துரை போ
கொடுத்தீங்களாக்கும்? பர்ஸிஸ் கம்பாட்டான்னு நினைப்
லம்?''

''என்னது, பர்ஸ் பாட்டனுதான்னு கேட்டே

''இந்த மாதிரியெல்லாம் போலி விளம்பரத்து
நீங்க போஸ் கொடுக்கறது அவமானம். . . என் ப்ரெ
ஜூம் இதில் இன்வால்வ் ஆகிறது.'' காலண்டரைச் ச
சரக்கென்று சுக்கல் நூறாகக் கிழித்து வீசி எறிந்தாள் சீத
பாட்டி.

**பாக்கியம் ராமசாமி**

அப்புசாமிக்கு மிகவும் ஆத்திர மாக வந்தது. தன்னுடைய ஆணழகப் படத்தை இன்னும் ஆசையாக அவரே பார்க்கவில்லை. அதற்குள் கிழவி கிழித் தெறிவதாவது.

''சீதேய்!'' உறுமினார்.

சீதாப்பாட்டி நகர்ந்தாள்.

''நில்லுடி.'' கர்ஜித்தார் அப்புசாமி. ''என் கேள்விக்குப் பதில் சொல்லிவிட்டு அந்தண்டை நகர். . . இல்லாட்டிக் கொலை விழும். . .''

''நான்ஸென்ஸ். உங்க ஆண ழகன் ஃபிராட் போஸ்களை எல்லாம் ஏதாவது சலூனில் மாட்டி வையுங்கள். திஸ் இஸ் நாட் த ப்ளேஸ். அடுத்த வாரம் நம்ம வீட்டிலேதான் பா. மு. கழகத்தின் 'கெட் டு கெதர்' கூட்டம் நடக்கப் போகிறது. நீங்கள் போஸ் கொடுத்த காலண்டர் யார் கண்ணி லாவது பட்டால் அதுதான் பெஸ்ட் ஜோக் அஃப் த ஸீஸனாக இருக்கும். . . யூ காச் மீ?''

அப்புசாமி லபக்கென்று பாட்டியைப் பிடித்தார்.

''சீ! விடுங்கள்! இடியாடிக் காக நடந்துக்காதீங்க. . .''

''சீதேய்! டியேய் கியவி! நீ காலண்டரைக் கிழிக்கலாம். ஆனால் நான் முழுஅண்டராக வளருவேண்டி. இதே சுவரில் நூறு ஆணியில் நான் தொங்குவேன். ஜெய் காண்டா மிருக லேகியம்! ஜெய் காலண்டரா மிருக லேகியம்!'' உணர்ச்சி வசத்தில் உளறினார்.

காலையில் சீதாப் பாட்டி கண விழித்தபோது அப்புசாமி தன் சவாலை நிறை வேற்றியிருந்தார்.

சமையலறையில் எட்டு ஆணழக அப்புசாமிகள். ஹாலில் ஒரு டஜன். வராந்தா வில் பத்து. வாசலில் ஆறு. கதவில் எட்டு. கக்கூஸில் கூட நாலு. அப்புசாமியின் வஸ்தாத் உருவம். புலித்தோல் கட்டிய கரடு முரடு சதைத் திரள்கள்.

சீதாப்பாட்டி ஒரு கணம் அசந்துவிட்டாள்.



**சோ**மா ஓட்டலில் ஏர்கண்டிஷன் அறை வடிவேலு வைத்தியருக்குப் புழுங்கியது. காரணம் பக்கத்தில் கிடந்த பத்திரிகையில் வெளியாகியிருந்த அரைப் பக்க விளம்பரம்தான்.

''ஏய்யா அப்புசாமி, உனக்கு அறிவு வோணும்?''

''நீ ஏய்யா அங்கே மோதறே?''

''தண்டக் கருமய்யா.''

''சவாலே உங்க பாட்டனுய்யா நடத்துவான்?''

''கம்பெனியையே திவால் பண்ணிடுவே போலிருக்கே.''

''எனக்குத் தெரியாது. உடம்பை நீ எப்படித் தேத்துவியோ!''

''கோழி அடிப்பியோ..' ஆட்டைப் பிடிச்சுத் தின்பியோ..' முதலையை முழுங்குவியோ..''

வடிவேலு வைத்தியரின் கருகருப் பட்டாக் கத்தி மீசையும் சிவ சிவ சிவந்த கண்ணும்—ட்ரிங்க் வேறு—பர்மிட் ஹோல்டர்தான்— அப்புசாமியை அடிக்கடி பார்த்த விதம் அவ்வளவு ஆரோக்கியமாக இல்லை.

''ஏய்யா நிற்குறே! தடி முண்டம்.''



ஒருவர்: ஒவ்வொரு மாதமும் 25 தேதிக்கு மேலே முதல் தேதி முடிய 'கால்நடை' வாரமுன்னு சொல்றீங்களே, அதெப்படி?

மற்றவர்: மாதக் கடைசியிலே 'கால் நடை'யாத்தானே ஆபீஸ் போறோம்? அது கால் நடை வாரம்தானே?

—சிற்பி சோமு

அப்புசாமியின் பார்வை டீப்பாயின் மீதிருந்த பத்திரிகை விளம்பரத்தை நடு நடுவே சென்று பார்த்துத் திரும்பி வந்தன.

''மாபெரும் சவால்! காண்டா மிருக லேகியம் சாப்பிட்ட பலவான் அப்புசாமி அசல் பயில்வான் டில்லி பாபா சிங்கைச் சந்தித்துக் காட்டுகிறார்.

அனுமதி இலவசம். செயின்ட் மாரீஸ் கலை அரங்கு.''

நேரம், காலம், எல்லாம் கொட்டை எழுத்தில் குறிப்பிடப்பட்டிருந்தது.

அப்புசாமி மென்று விழுங்கினர்.

''நிச்சயம் அந்தக் கிழவி வேலைதாங்க. அவளுக்கு எப்பவுமே என்னைக் கண்டா இளக்காரம்...''

''சீ! நாக்கை அறுப்பேன். ராஸ்கல்!'' வடிவேலு வைத்தியர் அப்புசாமியின் மேல் அருகிலிருந்த ஆப்பிளை எடுத்து வீசி அடித்தார்.

அப்புசாமி அவமானத்தைப் பொறுத்துக் கொண்டார்.

வைத்தியர் சீறினர். ''சம்சாரத்துக்கிட்டே போய் சவால் விடலாமா? அறிவு கெட்ட முண்டம்! அவள் யாரு? இல்லத்து அரசி! அவள் இல்லத்துலே காலண்டரை மாட்ட வேண்டாம்னு சொல்லிட்டாள்ன நீ உடனே அதைக் கழற்றிட்டு வந்துட வேண்டியதுதானே?''

''கொஞ்சம் மரியாதையாப் பேசுங்க வைத்தியரே!''

''சீ! மரியாதையா! என் முப்பது வருஷ வைத்தியத் தொழிலும் உன்னாலே அம்பேலாகிடும் போல ஆடுது. உனக்கு மரியாதியா?''

டீப்பாயை வைத்தியரின் எஃகு பஸ்ம உடம்பு எட்டி உதைக்க, அது அப்புசாமியின் மேல் வந்து அடித்து அவரை ஓர் இடி இடித்தது.

அப்புசாமி மோவாயைத் துடைத்துக் கொண்டு, ''வைத்தியரய்யா! ஒரு சின்ன யோசனை நான் சொல்லலாமா?'' என்றார்.

பிறகு கடகடவென்று தன் யோசனையைச் சொன்னர். சுருக்கமான திட்டம்.

1. பயில்வான் டில்லி பாபா

சிங்குக்கு பத்தாயிரமோ இருபதாயிரமோ லஞ்சம் கொடுத்து அவனை அன்று வரமுடியாமல் இருக்கப் பண்ணுவது.

2. அந்த இடத்தில் அதே நேரம் மேடையிலிருந்து வேறு யாராவது பயில்வான் வந்து சவாலை ஏற்றாலும் சந்திக்கத் தயார் என்று முழங்குவது.

3. 'நான் ஏற்கிறேன்' என்று அப்புசாமியின் பரம சீடனான 'அப்பு சாமி அடிப்பொடி பீமாராவ்' மேடை ஏறுவது. முன்னேற்பாட்டின்படி அப்புசாமி பீமாவை வீழ்த்திக் காட்டுவது.

செயிண்ட் மேரீஸ் ஹாலில் எள் போட ஆள் இல்லை.

(நல்லெண்ணெய் கிலோ பத்து ரூபாய் விற்கும் போது எந்த மடையன் எள்ளைக் கொண்டு வந்து கூட்டத்தில் போட்டு வேஸ்ட் பண்ணுவான்?) மொத்தத்தில் ஏராளமான கூட்டம்.

சீதாப்பாட்டி மந்தகாச வதனியாகக் கால் மேல் கால் போட்டபடி அரங்கத்தில் முன் வரிசை நாற்காலியில் அமர்ந்திருந்தாள்.

பிரம்மாண்டமான ஆப்பிரிக்கக் காண்டா மிருகப் படம் வரைந்திருந்த பெரிய படுதா எப்போது விலகும் என்று சபையினர் ஆவலோடு காத்திருந்தனர்.

வடிவேலு வைத்தியர், மேடையில் தோன்றினார். சிற்றுரையாற்றினார்.

"என் வயோதிகக் கண்மணிகாள்! வாலிப விருத்தாப்பிய சிகாமணிகாள்! நமது காண்டா மிருக லேகியத்துக்குக் கொடுத்த விளம்பரத்தைத் தவறுதலாகப் புரிந்து கொண்ட நமது எதிரிகள் யாரோ நம்மை மாட்டவிடுவதாக நினைத்து ஒரு இழி செயலை—எமது தகுதியை—எமது கியாரண்டியை—சந்தேகிப்பது போல் ஒரு சவால் விளம்பரம் பத்திரிகையில் கொடுத்திருக்கின்றனர். யாம் பரம்பரை பரம்பரையாக நூற்றாண்டுகளாகக் காண்டாமிருகக் கொழுப்பிலிருந்து லேகியம் தயாரிக்கிறோம். எதிரிகளின் கொழுப்பு எம்மிடம் வேகாது. (கைத்தட்டல்)

"எமது வாடிக்கையாளர் அப்புசாமி ஒரு அழுகின வாழைப்பழம் போன்ற கிழவராக இருந்தார். அவர் எமது காண்டா மிருக லேகியத்தை

(தொடர்ச்சி 42'ம் பக்கம்)



இந்த முன்னாள் கல்வி அமைச்சரின் பிறந்தநாளின்போது ஓர் அதிகாரி மாலை அணிவித்த பின் காலைத் தொட்டு அவரை வணங்கினாராம். "அடுத்த ஆண்டுக்குள் எப்படியும் நீங்கள் மறுபடி அமைச்சராகி விடப் போகிறீர்கள். என் வாழ்த்துக்கள்," என்று மனம் திறந்து பாராட்டி விட்டுச் சென்றாராம். முன்னாள் அமைச்சர் அவர் சென்ற பின், அருகிலிருந்தவரிடம், "இவரைப் பற்றி எனக்குத் தெரியாதென்று நினைத்துக்கொண்டிருக்கிறார். எமர்ஜென்சியின்போது என் ஆட்சியை இருண்டகாலம் என்று குறிப்பிட்டு எழுதியவர் இவர்தான். இப்போது பாருங்கள் நடிப்பை!" என்று சொன்னார்



மாயத்தேவரின் ராஜினாமா பற்றி டெலிபோனில் அவரோடு பேச முற்பட்ட போது அவர் அதிகாலையிலேயே டெல்லி சென்று விட்டார் என்று தெரிந்தது. அவர் மனைவி சொன்னார்:

"இவர் என்ன படிப்பிலே குறைச்சலா? அந்தஸ்திலே குறைவா? ஊர்ப் பக்கம் போனால் நம்ப ஜனங்கள் கேட்கிற கேள்விக்குப் பதில் சொல்ல முடியல்லே. திண்டுக்கல் தேர்தலில் எப்படி ஜெயிச்சார்? பதவியைப் பயன்படுத்தி காசு சம்பாதிக்க ஒவ்வொருத்தரைப் போல ஆசைப் பட்டதுண்டா? இவருக்கு மந்திரி பதவி கொடுத்தா என்ன குறைந்தா போயிடும்?"

அன்று மாலையே சரண்சிங் மந்திரிசபை ராஜினாமா செய்து விட்டது.

—பால்யூ




நடிப்பு: உசிலைமணி,
மீனாட்சி உசிலைமணி

தொகுப்பு: டி. எஸ்.
சுப்பிரமணியன்

புகைப் படம்: உத்ரா

(39'ம் பக்கத் தொடர்ச்சி)

ஒன்றரை மண்டலம் சாப்பிட்டதன் விளைவாகக் கலியுக பீமனாக மாறிவிட்டார். உடல் மெலியாகத் தோன்றினாலும் உள்ளே ஆயிரம் யானை பலம் அவருக்கு ஊறியிருக்கிறது.

''அப்புசாமி டில்லி பாபா சிங் என்ற பயில்வானை இந்த மேடையில் சந்தித்துப் போர் புரிகிறார். . .கண்டு களியுங்கள். ஹாலுக்கு வெளியே எமது காண்டா மிருக லேகியம் பெரிய சைஸ் டப்பா 24 நாட்களுக்குச் சாப்பிட ஐம்பது ரூபாய். .48 நாட்களுக்கு எழுபது ரூபாய். . .வாங்கிப் பயனடையுங்கள். .''

திரை விலகியது. கோதா மேடையில் அப்புசாமி, நறுக்கித் தந்த புடலங்காய் மாதிரி நடுவே நின்று அனைவரையும் கும்பிட்டார்

சீ தா ப் பா ட் டி சிரித்துக் கொண்டாள். அதே சமயம் பொறுப்பு மிகுந்த கவலையும் அவளை ஆட்கொண்டிருந்தது. அடிப்பட்டு மூக்கு, வாய் உடைந்து கீழே தன் கணவர் விழுந்ததும் அவரை அட்டெண்ட் செய்து கவனிக்கத் தயாராக டாக்டர் ஒருத்தரை ஏற்பாடு செய்து அவர் அவளுக்கு இரண்டு ஸீட் தள்ளி அமர்ந்திருந்தார்.

மணி கணகணவென்று அடித்தது.

அப்புசாமி 'கர் ர் ர் ர்க்கும்' என்று ஒரு விநோத கர்ஜனை செய்துவிட்டு அரங்கத்தில் குதித்தார்.

வைத்தியர் வ டி வே லு மைக்கில் கூவினர். ''எங்கள் காண்டாமிருகம் கர்ஜிக்கத் தொடங்கிவிட்டது எங்கே தன் எதிரி என்று. டில்லி பாபாசிங் அவர்களே! உடனே வாருங்கள், வந்து எங்கள் காண்டா மிருகத்தைச் சந்தியுங்கள்!''

ஒருவரும் வரவில்லை. சீதாப் பாட்டி முகத்தில் பரவிய ஏம தோல்வியுடன் சுற்று முற்றும் தாள்.

அப்புசாமி மேடையி அதைக் கவனித்துவிட்டார்.

மீண்டும் ஒரு கர்ஜனை விட்டு மைக் அருகே வந்தார். '' என் எதிரி, டில்லி பாபாசிங்! நான் நார் நாராகக் கிழிக்கத் சிக்கினு இருக்கேன். அவர் பயர் ஓடிவிட்டாரா? நான் கேட்க ஆ றேன். அவர் ஓடி ஒளிஞ்சி வேறு எந்தப் பயில்வான் வே னாலும் வரட்டும்! ஜெய் கா மிருக லேகியம்!''

அப்புசாமி குதித் மேடையைச் சுற்றிச் சுற்றி வந் மூச்சு இரைத்தாலும் காட்டிக் ளாமல். ''சவாலா வுடறே சவாலங்கிடி கிரிகிரி! சைதாப்பே வடைகறிடி நான்!''

சீதாப்பாட்டிக்கு அ மாயிருந்தது.

சபையில் நிசப்தம். நிமிடத்துக்கு ஒருத்தரும் வர

திடீரென்று சபையி பரபரப்பு. ''நானு ப ர்த்தனே!

எல்லோரது கண்களு லுடன் திரும்பின.

பீமாராவ் மேலே திருந்த துண்டை உதறி எறிந்துவி தன் வஸ்தாத் பாடியை அனைவ காட்டிக் கொண்டு மேடை ஏறி

அப்புசாமி அவனைப் துக் கண்ணடித்தார் ரகசியமாக

சபையினர் பீமாவின் பையும் அப்புசாமியின் உடம் பார்த்துவிட்டு விசில் அடித்துத் னர்.




—முத்து தங்க ஐ

சீதாப் பாட்டிக்கு நெகிழ்ந்துவிட்டது. என்ன இருந் ம் பீமா இஸ் பீமா.. அவளுடைய காலத்திய மதர்லி அஃபெக்ஷனை r மறக்கவேயில்லை போலிருக்கு. நக்கு ஒரு அவமானம் என்றதும் நாவைத் தண்டிக்க மேடை ஏறி டானே. .பீமா. .ரியலி யு ஆர் ட்!

மணி அடித்தது.

முதல் ரவுண்ட்.

அப்புசாமி எகிறிப் பாய்ந்து வை ஓர் உதை உதைத்தார்.

அடுத்த கணம் பீமா, சத்தெனே. .''என்று சுருண்டு ந்தான்.

அப்புசாமி ஜிங் ஜிங்கென்று றிக் குதி குதித்தார்.

வடிவேலு வைத்தியர் மைக் கெக்கலித்தார்.

''மகா ஜனங்களே. .எமது டா மிருக உதையை ஒரு பயில் றல் கூடத் தாங்க முடியவில்லை. . ந்த ரவுண்டில் இன்னும் நீங்கள் நு களிக்கப் போகிறீர்கள். பெரிய ல் டப்பா விசேஷ சக்தி வாய்ந்தது. பது நாள் சாப்பிடுவது. அறுபது ய். மறவாதீர். .குறைந்த ஸ்டாக்கு உள. . .''

அடுத்த ரவுண்ட் அப்புசாமி வைக் கீழே தள்ளி மேலே உட் ந்து அவன் வாயைக் கிழிக்கப் த்து நடுவர் வந்து விலக்கிவிட்டார்.

பீமாராவ் வாயால் மூச்சு டுக் கொண்டு மூலையில் ஸ்டூலில் கிடந் ர.

சீதாப்பாட்டி கைப் பையி ந்த ஒரு சின்னத் துவாலையை எடுத் கொண்டு நடுவரிடம் கேட்டாள். ன் ஐ அட்டெண்ட் டு தட் புவர் ! அவன் வியர்வையைத் துடைத்து லாமா?''

நடுவர் அனுமதி வழங்கினர்.

''அவ்வா. . .'' சீதாப்பாட்டி ப் பார்த்ததும் பீமாவுக்கு நாத் தழுத்தது.

''டோன்ட் வொர்ரீ ஸன்,'' ற சீதாப்பாட்டி அவன் வியர்வை த் துடைத்துவிட்டாள். ஒரு டம்ளர் ணீர் கொடுத்தாள்.

பீமாராவ் தண்ணீரைக் குடிக்கப் பார்த்தான்.

சீதாப்பாட்டி, ''நோ. . . நாட் ஃபர் ட்ரிங்கிங். .அந்த வாட்டரை நல்லாப் பார். .அதற்குள் இருக்கிறது — நீ ஜெயித்தால் உனக்கு! மை டைமண்ட் ரிங்! தட்ஸ் ஆல் ஐ கான் டெல் யூ நௌ...''

பீமாராவ் தண்ணீர் குடிப் பவன் போல் டம்ளருக்குள் பார்த்தான். பளபளவென்று ஜாஜ்வல்யமாக வைரக் கல் பதித்த மோதிரம். . .

மூன்றுவது ரவுண்டுக்கான மணி அடித்தது.

மணி அடித்ததோ இல்லையோ, அப்புசாமி, ''ஜெய் காண்டாமிருகம்!'' என்று பாய்ந்தார்.

பீமாராவ், ''ஜெய் அவ்வா!' என்று அவர் மீது பாய்ந்து வினடி நேரத்தில் அவரை ஒரு ஏரோப்ளேன் சுழற்றுச் சுழற்றி மேடைக்கு வெளியே வீசி எறிந்தான்.

நேரே அப்புசாமி சீதாப்பாட் டியின் காலடியில் வந்து விழுந்தார்.

வடிவேலு வைத்தியருக்குத் திக்கென்றுகிவிட்டது.

விழுந்தடித்துக் கொண்டு பீமாராவிடம் ஓடினர்— ''அடப் பாவி! நூறு ரூபாய் வாங்கிட்டு துரோகம் பண் ணிட்டியே நைனு? அவர் மேலே நீ கை வைக்கலாமா? மடையா!''

''ஏனு ஹேளுதே? நானு மடையன்! இ ஹூடுவா சாமர்த்தியா நினகெ கொத்தில்ல. . .''

அடுத்த கணம் காண்டா மிருக லேகியத் தயாரிப்பாளர் வடிவேலு வைத்தியரும் அப்புசாமி ஏறிய அதே ஏரோப்ளேனில் ஏறிச் சீதாப்பாட்டியின் காலடியில் போய் விழுந்தார்.

சீதாப்பாட்டி அமைதியாகச் சொன்னுள். ''நோ மோர் காலண்டர்ஸ், மைண்ட் யூ! அச்சடித்தது அத்தனையை யும் கொண்டு வந்து என் எதிரே கிழிந் துப் போடணும். . .இல்லாவிட்டால் உங்களுடைய போலி கேஸ் போலீஸ் கேஸாகும். .அன்டர்ஸ்டாண்ட்?''

அரை மயக்கத்திலிருந்த அப் புசாமியின் காதில் கடைசி வார்த்தை யின் கடைசி பகுதி விழுந்தது.

''இதோ! ஸ்டாண்டிட்டேன் சீதேய்!'' என்று விருட்டென்று எழுந்து மரியாதையுடன் நின்றுர்.

# விருந்தினரை 'வாருங்கள்' என்றழைக்கும் வகையில் உங்க[ள்] வாயிற்கதவுகளை அலங்கரிக்க டூலக்ஸ் உங்களுக்கு வழிகாட்டுகிற[து]



டூலக்ஸ் சிவப்பும், கறுப்பும் பூசப்பட்ட மின்னும் முன்கதவு வீட்டிற்கோர் அழகு. அததுடன் சின்னச் சின்ன பித்தளை மணிவரிசைகளையும் சேருங்கள். வாயிற்படியே ''வா'' என்றழைக்கும்.



இருவித பச்சை வண்ண டூலக்ஸ் ஸின்தெடிக் எனமல் பெயிண்டை டிசைன போட்டுப் பூசினால் நீடித்து நிற்கும். எழில் கூட்டும்.

வார்த்தைகளின்றி சுமுக வரவேற்பளிப்பது டூலக்ஸ் ஸின்தெடிக் எனமல் ஒன்றே. அதன் ஜ்வலிக்கும் வண்ணங்கள் அழகாக பாதுகாப்பளிப்பதோடு, மங்கிய எந்த இடத்தையும் உருமாற்றி உயிர்த்தெழச் செய்கிறது.

பலதுக்கும் பயன்படும் டூலக்ஸ் ஸின்தெடிக் எனமல் உங்கள் வீட்டின் - உள்ளும் புறமும் - ஒவ்வொரு மூலைக்கும் உகந்த பெயிண்ட். தேர்ந்தெடுத்த வண்ணங்கள். நீரினால் பாதிக்கப்

படாத எழில்மிகு தோற்றம். சுத்தம் செய்வது மிகச் சுலபம்.

வீட்டிலுள்ள மங்கிய மர, உலோக சாமான் களுக்கு டூலக்ஸ் ஸின்தெடிக் எனமல் அடித்து ஜ்வலிக்கச் செய்யுங்கள். சுவர்களுக்கு டூலக்ஸ் அக்ரிலிக் எமல்ஷன் பெயிண்ட் அடித்து சிங்காரம் செய்யுங்கள், நீடித்து மங்காமல் இருக்கும் மிகவும் அழகிய பல வண்ணங்கள் உண்டு. இன்றும், என்றென்றும்.



ாணிய கலை வேலைப்பாடு அமைந்த கதவுக்கு சுலபமாய் அலம்பக் ூய கடுஞ்சிவப்பும் மஞ்சள் நிறமும் ருகூட்டும்.



கதவின் மேலுள்ள மரச் சட்டங் களுக்கு பொன் மஞ்சள் மற்றும் ஊதா மற்றும் ஜ்வலிக்கும வெள்ளை வண்ணங்கள் வருடக் கணக்கில் பாதுகாப்பளிக்கின்றன.




# டூலக்ஸ் பெயிண்டுகள்
## இன்றும், என்றென்றும்

க்ஸ்— இந்தியாவில் தி ஆல்கலி & கெமிகல் பொரேஷன் ஆப் இந்தியா லிமிடெடடாரால் ரிக்கப்பட்டு விற்பனை செய்யப்படுகிறது.

வளையமும் 'DULUX'ம் லண்டன் இம்பீரியல் மிகல் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்டாரின பதிவு ற டிரேட் மார்க்குகள்.

சன்ஸ் பெற்று உபயோகிப்போர்: ஆல்கலி & கெமிகல் கார்பொரேஷன் ஆப் திியா லிமிடெட்.

OBM 4843TM

# நீதி மன்றம் மாறி விட்டது!

கண்ணதாசன்

மனைவி அமைவதெல்லாம் இறைவன் கொடுத்த வரம்தான். ஜோடிகளைச் சேர்ப்பது இறைவனது வேலை. அதே நேரத்தில் பொருத்தமில்லாமல் சேர்ப்பது அவனது லீலை.

நூற்றுக்கு நாற்பது குடும்பங்கள் உடற்பொருத்தமோ, மனப்பொருத்தமோ இல்லாமலேயே ஊருக்காகத்தான் வாழ்ந்து கொண்டிருக்கின்றன.

நோயாளிக் கணவனைத் தலை மீது தூக்கிச் சென்ற பத்தினி; தாசி வீடு சென்ற கணவனுக்காகத் தவம் கிடந்த குலமகள்; இவர்களெல்லாம் புராணத்திலும், இலக்கியத்திலும் இந்தியப் பெண்மையைக் காட்டுகிறார்கள்.

ஆனால் நான்கு சுவர்களுக்கு நடுவே நடந்து பார்த்தால் பல வீடுகளில் நடைபெறும் ரணகளம், ஓலம், ஒப்பாரி. 'எத்தனை மலர்ப் படுக்கைகள் இருந்தாலும் நீ முள்ளின் மீதுதான் படுத்தாக வேண்டும்,' என்று இறைவன் எழுதிவிட்டால், யார் அதை மாற்ற முடியும்?

அனுராதா ஒரு கலெக்டரின் மகள்தான். அவளது அப்பா வேதநாயகம் வெள்ளைக்காரன் ஆட்சியில் இருந்த கலெக்டர்களில் ஒருவர். நாணயமானவர் என்று பெயர் பெற்றவர்.

தாயார் ஜானகி அம்மாளோ கோவிலைக் கண்டாலே குடும்பத்தை மறந்துவிடக் கூடியவர்.

சொத்து சுகம் தேவையான அளவிற்கு இருந்தது. பாரம்பரியம் பெரியதுதான். என்றாலும் என்ன?

குணம் கெட்டவள் எ தாயாராலேயே பட்டம் சூட் பெற்ற அனுராதா அல்லவா, களுக்குத் தலைச்சன் மகளாகப் பிற விட்டாள்?



அவளோடு கூடப் பிறந்தவர்கள் இரண்டு பெண்கள், விஜயா, சுதா. கடைக் குட்டிப் பையன் கங்காதரன்.

சாதாரணமாக மூத்த மகளுக்குத்தான் அடக்கமிருக்கும். ம வர்கள் துடிதுடிப்புள்ளவர்களாக இ பார்கள். வேதநாயகம் வீட்டில் நிலை வேறாக இருந்தது. அதுவும் இறை கொடுத்த வரம்தான!

எல்லோரையும் அனுரா அதிகாரம் பண்ணுகிறாளே என் வேதநாயகத்தைக் கேட்டால், ''நா கடுமையாக அதிகாரம் பண்ணி காலத்தில் பிறந்தவள்,'' என்று சொல்லுவார்.

தமிழ்க் குழந்தைகளில் ஆ ரத்தில் ஒருவரே கான்வெண்டுக்கு சென்ற காலத்தில், கான்வெண்டி படித்தவள் அனுராதா.

அவள் ஏ. பி. சி. டி. எழு வதைப் பக்கத்து வீட்டுக் குழந்தை களெல்லாம் வந்து வேடிக்கை பார் கும்.

அப்போது மதுரையில் இரு தலை நான்கே கான்வெண்டுகள்தான் கலெக்டரின் மகள் என்பதால் போட்ட போட்டுக் கொண்டு அவை இட கொடுத்தன.



1939'ல் பிறந்த அனுராதா
லேயே கான்வெண்டில் சேர்க்கப்
டாள். சுதந்திரம் வந்த பிறகுதான்
ள் பி.ஏ. படித்துப் பாஸ் செய்தாள்.

தன்னைவிட உயர்ந்தவர்
க யாரும் இருக்கக் கூடாது;
ர வைத்திருப்டதை விட நல்ல
ருளாக யாரும் வைத்திருக்கக்
ாது என்பது அவளது லட்சியம்.

பெண் பி. ஏ. ப்டித்திருக்
ள், முன்னாள் கலெக்டரின் மகள்
பதாலே மாப்பிள்ளை ஜாதகங்கள்
றய வரத்தான் செய்தன.

வேதநாயகம் ஒன்றும் சீர்
ந்தக்காரரல்ல. ஜாதி பார்த்துத்
ர அவரும் மாப்பிள்ளை படுக்க
ம்பினர். அவருடைய ஜாதியி
ய போடிநாயக்கனூரில் ஒரு
காய் எஸ்டேட் முதலாளியின்
ன பிரபு என்ற இளைஞன் இருந்
ா.

மதுரையில் அனுராதா பாத்
கல்லூரியில் படித்தபோது,
ன் அமெரிக்கன் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தான். இரண்டொரு தடவை பொதுவிழாவில் அனுராதா, பிரபுவைச் சந்தித்திருக்கிறாள்.

பையனைப் பற்றி அவளுக்கும் உயர்ந்த அபிப்பிராயமே இருந்ததால், திருமணத்திற்குச் சம்மதித்து விட்டாள்.

நல்ல வைதிகரான வேதநாயகம், நல்ல நாளில் திருமணத்தை முடித்துவிட்டார்.

ஆரம்ப காலங்களில் மிகவும் மகிழ்ச்சிகரமாகத்தான் இருந்தாள் அனுராதா.

ஏப்ரல் வந்தால் கொடைக்கானல் போவார்கள்; ஜூலை மத்தியில் குற்றாலம் போவார்கள். இரண்டாண்டுகள் அவள் மிகவும் உற்சாகமாக இருந்தாள்.

திருமணமான கொஞ்ச நாளிலேயே விஷயங்களைப் பிரபு ஊகித்திருந்தான்.

ஒன்று, அனுராதாவுக்குக் காதல் உணர்வு அதிகம் என்பது;

இரண்டு, பொருமை உணர்ச்சி மிகுதி என்பது.

யார் எந்த நகை போட்டிருந்தாலும், அதே நகை தனக்கும் வேண்டும் என்று அவள் ஆசைப்படுவதையும் பிரபு நன்ருகக் கவனித்திருக்கிருன்.

புது மோகம், புது வேகம்; அவளது செயற்கை உணர்வுகளைத் திருப்தி செய்தால்தான் தனது இயற்கை உணர்வுக்கு அவள் சுகமாக இருப்பாள் என்பதால், எல்லாவற்றையுமே அவன் வாங்கிக் கொடுத்தான்.

அழகான ஆண் குழந்தை ஒன்றை அனுராதா பெற்றெடுத்தாள். அந்தக் குழந்தையிடம் உயிரையே வைத்திருந்தான் பிரபு.

பிடிப்பு அதிகமாகிவிட்ட காரணத்தால் அவளது கோபதாபங்களையெல்லாம் கூட அவன் சகித்துக் கொள்ள வேண்டியவனுஞன். அவள் போட்ட சண்டையிலும் சப்தத்திலும் சமையற்காரன் முன்னுல் ஓடிவிட்டான். கார் டிரைவர் பின்னுல் ஓடிவிட்டான்; சாப்பாடு கூடப் பிரபுவுக்குப் பிரசினை யாகிவிட்டது.

காலையில்,'இட்லி இல்லையா' என்று கேட்டால், 'இன்றைக்கு உப்புமாதான்', என்று பதில் சொல்லுவாள் அனுராதா.

அவனுக்கென்ன யாருக்குமே பிடிக்காத விஷயங்களைச் சமை வைத்துவிட்டு, உத்தரகாண்டத்துச் தேவி போல் ஊஞ்சலில் சா கொண்டு ரேடியோ கேட்பாள்.

சாதாரணமாகவே மரு வந்த பிறகு மகன் இளைத்து வி தாகக் கருதும் தாயார், அவன் மையிலேயே இளைப்பதைக் கவ தாள். ஒவ்வொரு வேளையும் த சமைத்து டிபன் காரியரில் கெ தனுப்பினுள்.

''உங்கள் அம்மா யலென்ன அப்படி. . . .?'' என பல நேரங்களில் காரியரைத் து வீசுவாள் அனுராதா.

சண்டை வரும்போது ய வது ஒருவர் பேசாமல் இருந் தான் குடும்பம் நிலைக்கும் பேசாமல் இருப்பான் பிரபு.

இவை எல்லாவற்றை அவன் சகித்துக் கொண்டான்.

'வாழ்க்கையில் ஏற்ப எந்த வரட்சியையும் விட, குடு தில் ஏற்படும் நிம்மதியற்ற நி ஒரு மனிதனைச் சீக்கிரம் தற்கொ குத் தூண்டுவது,' என்று அவன் ச டேகர் புத்தகத்தில் படித்திருக்கி

வயது வந்த பெரிய களைப் போல் கோபதாபங்கள் இ கத்தான் செய்யும், அனுசரித்துத் போக வேண்டும் என்று தன தானே சமாதானம் சொல்லிக் வான்.

அவளுக்கு எப்படி எப்பே கோபம் வரும், ஆசை வரும் எ தெல்லாம் அவனுக்குப் பள்ளிப் மாகவே பதிந்துவிட்டது.

மாலையில் நன்ருகக் கு துக் கொண்டையிட்டு, புதுச்சேலை க இருக்கிருள் என்ருல், அன்றை அவளுக்கு ஏதோ காதல் கிள ஏற்பட்டிருக்கிறது என்று அர்த் அலங்கோலமாக இருக்கிருள் என் ஆத்திரமாக இருக்கிருள் என்று தம். குழந்தையைத் தூக்கி வந்து வனிடம் கொஞ்சுகிருள் என் இரவுக்கு அஸ்திவாரம் என்று பொ

அவள் எதை எதை வி புகிருளோ, அதை அதைச் செ கொண்டு, பொழுதைத் தள்ளிக் கொ டிருந்தான் பிரபு.




—இனியராஜா

அந்த நேரத்தில்தான் அவள்
க விஜயாவின் திருமணம் முடி
ற்று.

மாப்பிள்ளை ரவிகுமார், இந்
ரில் விரல்விட்டு எண்ணக்கூடிய
ன இளைஞர்களில் ஒருவன். முன்
போலீஸ் அதிகாரி ஒருவரின்
முறையான தேகப் பயிற்சியால்
ான உடம்பு அவனுக்கு வாய்த்
ந்து. அவன் சிரித்தால் ஆணுக்கு
ஆசை வரும்.

அவனுடைய அழகோடு ஒப்
ால் விஜயா சுமாராகத்தான்
பாள்.

வேனிற்காலத்துச் சந்திரனை
கக் கார்மேகம் மூடியது போல
றமாக இருந்த விஜயாவுக்கு,
ச் செவேலென்று தக்காளிப் பழம்
ிருந்த ரவிகுமார் கிடைத்து
ான்.

திருமண வீட்டில் எல்லோ
மாப்பிள்ளையின் அழகைப் புகழ்ந்
ள். அதையெல்லாம் கேட்கக்
ஏதோ காரணமில்லாமல் கண
மீது கோபப்படத் தொடங்
அனுராதா.

கல்யாண வீட்டிலேயே பிள்
க் கொண்டு போய் அவனிடம்
ப் போட்டாள். ''இந்தச் சனி
வைத்துக் கொள்ளுங்கள்; உயிரை
தகிறது,'' என்றாள்.

''ஏம்மா இப்படிக் கோபித்
கொள்கிறாய்...?'' என்று மெது
ந்தான் கேட்டான் பிரபு.

''போதும் போதும், உங்
கொஞ்சல்,'' என்று, பத்துப்
க்கு முன்னால் முகத்திலடித்தாற்
பதில் சொன்னாள்.

மாப்பிள்ளைக்குப் பரிசுகள்,
ப்படங்கள், பக்கத்து வீட்டுப்
ரகளின் வளவளப்பு—எல்லாமே
க்கு எரிச்சலாக இருந்தது.

அவர்கள் வழக்கப்படி தன்
த்தினர் அனைவரையும் வேதநாய
தன் மருமகனுக்கு அறிமுகப்படுத்
.

மூத்த மகளைக் கூப்பிட்டுக்
, ''இவள் என் முதல் மகள்.
ாதா. பிரபுவின் மனைவி,'' என்றார்.

அப்போதுதான் நேருக்கு



மறுபடியும் தேர்தலில் நிற்பதாக இல்லாவிட்டால், ஜிம்மி இந்த நெருக்கடியான தருணத்தில் புதியதாக நான்கு சூட்டுகள் வாங்கியிருக்கமாட்டார்.

—பில்லி கார்ட்டர்.
(ஜிம்மி கார்ட்டரின் சகோதரர்)

—ஜனனி

நேராகத் தங்கையின் கணவனைக் கவனித்தாள் அனுராதா.

சோழ பாண்டிய ராஜாக்களைப் போல் எடுப்பாக நின்ற அவனைப் பார்த்ததும், அவள் நெஞ்சம் இன்னும் கொதித்தது.

அன்று மாலை வரவேற்பின் போது தானும் அழகிதான் என்பதைக் காட்டவோ என்னவோ, கடல் நீலத்தில சிவப்பு பார்டர் போட்ட ஜரிகைச் சேலை கட்டி மினுமினுவென்று மின்னினாள்.

அவள் புதுச் சேலை கட்டிப் பூவை வைத்துக் கொண்டால் விஷயம் என்ன என்பது பிரபுவுக்குத் தெரியுமே!

''இன்று நாம் வேண்டுமானால் ஊருக்குப் போய் வரலாமா?'' என்று மெதுவாகக் கேட்டான் அவன்.

''போதும் போதும் ஊரில் நான் தங்கியதும், நீங்கள் தாங்கியதும்,'' என்று முகத்திலடித்தாள் அவள்.

அவள் நெஞ்சுக்குள்ளே தான் தோற்றுவிட்டது போலவும், தன் தங்கையே தன்னைத் தோற்கடித்தது போலவும் ஓர் உணர்வு தோன்றி கொண்டே இருந்தது.

பெண் வீட்டுக்காரி, அதிலும் பெண்ணுக்கு அக்கா சீக்கிரம் விடை பெற்றுப் போக முடியுமா?

பத்து நாள் இருக்கத்தான் வேண்டும் என்று அப்பா வேறு கண்டிப்பாகச் சொல்லிவிட்டார்.

மாப்பிள்ளையும் பெண்ணும் ஒருநாள் ஊருக்குப் போய்த் திரும்பி விட்டார்கள்.

அந்தப் பத்து நாட்களுக்குள் விஜயாவை அதிகாரம் பண்ணத்

தொடங்கினுள், அனுராதா. இந்த வீட்டில் நான்தான் ராணி என்பதைக் காட்டிக் கொள்ள விரும்பினுள்.

கணவனுக்கு விஜயா சாப் பாடு போடப் போனல், ''இலேயை அப்படிப் போடாதே இப்படிப் போடு,'' என்று மேஜை அருகில் வந்து நிற்கவாரம்பித்தாள்.

குழந்தையைக் கையில் வைத் துக் கொண்டு அப்பாவி போல் ஒரு மூலையில் உட்கார்ந்திருந்தான் பிரபு.

வழக்கத்துக்கு விரோதமாகச் சேலையை ஒருபுறம் ஒதுக்கி விட்டுக் கொண்டும், எடுப்பான 'ப்ரா' அணிந்து கொண்டும் பரிமாறத் தொடங்கினுள் அனுராதா.

ஒரு நாளைக்கு மூன்று சேலே மாற்ற ஆரம்பித்தாள்.

கள்ளம் கபடமற்ற விஜயா அக்காள் தன் கணவனே நன்ருகவே கவனிப்பதாகக் கருதினுள். ''உன் அக்கா மிகவும் நல்லவர்கள்,'' என்று, ரவிகுமார் வேறு சொல்லிவிட்டான்.

பரிமாறத் தொடங்கிய அனு ராதா இரண்டொரு நாட்களில், கை கழுவத் தண்ணீர் ஊற்றும் வேலே யையும் தானே செய்தாள். சமயங்களில், ''கையெல்லாம் நல்ல கொழுப்பு. நன்ருகக் கழுவுங்கள்!,'' என்று தானே கையைப் பிடித்துக் கழுவிவிடவும் செய் தாள். ஒரு தடவை கையைக் கழுவும் போது, ''கை பூப்போலிருக்கிறது,'' என்ருள்.

சாகஸக்காரி மனம் வைத்து விட்டால், பிரம்மதேவனே சிருஷ் டித் தொழிலே மறந்துவிடுவார். ரவிகுமார் எம்மாத்திரம்?

விஜயாவின் அப்பாவித்தனத் தைவிட, அனுராதாவின் ஆதிக்கப் போக்கே அவனுக்கு ரசிக்கும்படியாக இருந்தது.

ஒன்றும் தெரியாத விஜயா, எல்லாம் தெரிந்த அனுராதா!

பத்து நாட்கள் தங்குவதாக இருந்த அவர்கள் பல நாட்கள் தங்க ஆரம்பித்தார்கள்.

அதிகாலையிலேயே குளித்து விட்டு, அன்றைய பொழுதிற்குத் தயா ராவது அனுராதாவுக்குப் பழக்கமாகி விட்டது. அவள் நெஞ்சில் எழுந்த

அவி

டெல்லி ராஷ்டிரபதி ப
எத்தனை வாசல்கள் இருக்கி

எத்தனை இருந்
ஒட்டம் பிடிப்பதற்கு வச
ஒன்றுகூட இல்லை.
—சஞ்சீவ

ஓசிச் சாப்பாடு போடுகி
உளமாரப் போற்ற வேண்டுமல்லவா

வெறும் ஓசிச் சா
இருக்கட்டும். அவ்வப்போது அ
விடுவதற்கு ஓசி கவர் கார்டும்
வர்களைக் கோவில் கட்டிக் கும்பி
— கிரு

நான் எங்கள் பேட்
இருபது வருஷமாய் வசித்து வரு
ஓர் ஈ காக்கை என்னை மதிக்கக் க
இதற்கு என்ன செய்வது?

மாடி மேல் நின்று செ
பேட்டையைக் காலி செய்து வே
துக்குப் போகிறேன் என்று கத்திப்
கள். சில பேர் திரும்பிப் பார்ப்பா
— வீரேந்திர

வாழ்வே மாயம், மன்
திண்ணம். அதற்கு முள் என்ன
வேண்டும்?

ஏதோ நம்மாலானது
ணெண்ணெய் விலேயை ஏற்றி
விட்டுப் போக வேண்டு
— ப

'ஒவ்வொருவ
கையிலும் மறக்க முடியாத
ஒன்ருவது இருக்கும்' என்
அறிஞர் கூறியிருக்கிறார்.
பற்றி உங்கள் கருத்து என



உண்மைதான். ஆனல்
றக்க முடியாத நாள்கள்
ால் நன்ருயிருக்கும்.

—சத்தியவாணி முத்து

காக்கை உட்கார்ந்தால்
ழம் விழுவதுண்டா?

சில சமயம் பலாப்
கூட விழுவதுண்டு
எனக்கு இப்போது
தெரிகிறது.

—அளகேசன்

உங்கள் கண் டாக்டர்

ரொம்ப மோசமான
அவர் கொடுத்த கண்
ய மாட்டிக் கொண்ட
இருபத்து நாலு நாட்க
முன் ஒருவர் ஜனநாயக
மாதிரி தோன்றினர்.
ாது என்னடாவென்ருல்
திகசரி என்று தெரிகிறது.

—சரண்சிங்

சுகமான பருவ நில
ஊர் எது? பம்பாயா?
ா?

என்ன இழவைச்
ல! இரண்டு ஊரிலுமே
கீழே வைத்தால்
கிறது.

—சவாண்

திரிசங்குவைத் தெரி

தெரியுமாவா? என்
ன் ஓய்!

—சி. சுப்பிரமணியம்

பொருமை, காதலாகிக் காமமாகத் திரண்டது.

இரவெல்லாம் அவனைப் பற்றியே கனவு கண்டாள்; கணவனையும் குழந்தையையும் மறந்தாள்.

ஒருநாள், அக்கம் பக்கம் பார்த்துவிட்டு, தங்கை இல்லாத நேரமாகப் பார்த்து அவனது அறைக்குள்ளேயே நுழைந்துவிட்டாள்.

பனியனேடு கட்டிலில் சாய்ந்து கிடந்த ரவிகுமார் இதை எதிர்பார்க்கவில்லை.

சுற்றுமுற்றும் பார்த்தபடி அவனை ஆசை தீர முத்தமிட்டாள், அனுராதா.

அது ஒரு வெறி பிடித்தவளின் செயலாகத்தான் இருந்தது. ஆனல் இவ்வளவு உற்சாகத்தை அவன் விஜயாவிடம் காணவில்லையே? அவனும் துணிந்தவனுகிவிட்டான்.

துணிச்சல் முட்டாள் தனமானதோ, நியாயமானதோ ஏதோ ஒரு முடிவைக் கொண்டு வந்து விடுகிறது. சட்டம், தர்மம், வரையறை எதையும் அவர்கள் மதிக்கவில்லை. அவர்களது நல்லகாலம் பகல் மூன்று மணி. எல்லோரும் வேறு வேறு பக்கம் தூங்கிக் கொண்டிருந்தார்கள்.

''உன்னைக் கண்டால், கண்ணகியே கூடக் கெட்டுத்தான் போவாள்,'' என்ற வாக்கியத்தோடு, அக்கம் பக்கம் பார்த்தபடி ஆனந்த வயத்தில் வெளியேறினள், அனுராதா.

பிரபுவுக்கு, ஒருநாள் இரவு எல்லாம் புரிந்துவிட்டது.

அவர்கள் பங்களா பெரிய பங்களா. இரவிலே கீழ்க்கட்டிலே படுத்திருந்தாள், அனுராதா. நள்ளிரவிலே குழந்தை அழுதது.

''எங்கே அவள்? என்ன செய்கிருள்?'' என்றபடி விளக்கைப் போட்டான், பிரபு.

அவளைக் காணவில்லை.

அவனுக்குச் சந்தேகம் வந்து அங்கும் இங்கும் தேடினன். தோட்டத்துப் பக்கம் போனன். கதவு திறந்து கிடந்தது. பாத் ரூமிற்குள் ஏதோ சப்தம் கேட்பது போலிருந்தது. பளிச் சென்று உள்ளே நுழைந்தான்.

பத்திரிகை பாஷையில் சொன்னல், அலங்கோலமான நிலையில் அவர்கள் இருந்தார்கள்.

இனி பேசுவதற்கு என்ன இருக்கிறது? மனிதனின் கடைசி உணர்ச்சி பறிக்கப்பட்டுவிட்டது.

அவன் வேறொன்றும் செய்யவில்லை. நேராக மாடிக்குச் சென்று, விஜயாவை எழுப்பி விஷயத்தைச் சொன்னான். முட்டி மோதிக் கொண்டு அழுதான்.

இவர்கள் இருவரும் கீழே இறங்கி வந்தபோது, அவர்களிருவரும் அங்கே நின்றார்கள். அவர்கள் பயந்ததாகவும் தெரியவில்லை.

''விஜயா, நீ போ உள்ளே,'' என்று பிடித்துத் தள்ளினான் ரவிகுமார்.

''மானம் வெளியே போய்விட்டது; நான் உள்ளே போகிறேன்,'' என்று போனாள் விஜயா.

''நான் உங்கள் மீது வழக்குத் தொடரவில்லை. ஆனால் உங்களோடு வாழப் போவதில்லை,'' என்று கணவனிடம் சொல்லிவிட்டாள் அவள்.

விவாக ரத்து வழக்கைத் தொடுத்த பிரபு, தன் எஸ்டேட்டை விற்றுவிட்டு பம்பாயிலே, ஒரு வீடு வாங்குவதற்காகப் பம்பாய்க்குப் பறந்தான்.

என்றுமில்லாத துணிச்சலோடு அவனை வழியனுப்பியவள் விஜயா.

விஜயா பிரபுவிடம் கொடுத்த பெட்டியில் தான் எழுதிய கடிதம் மட்டும் இருப்பதாகக் கருதினானே தவிர, ஒரு ரகசியமும் இருந்தது அவனுக்குத் தெரியாது.

விமானம் பம்பாயை மிதித்தபோது பயங்கர விபத்துக்குள்ளாயிற்று.

''ஆயிரம்தான் சொல்லுங்கள், ஆண்டவன் பல நேரங்களில் அயோக்கியர்களுக்குத்தான் உதவுகிறான்,'' என்றபடி சடலங்களைப் பெற்றுக் கொண்ட உறவினர்கள் வந்திருந்தார்கள்.

அடுத்த விமானத்திலேயே விஜயாவும் வந்திருந்தாள். பிரபுவின் மனைவி என்று கையெழுத்திட்டு அவனது சடலத்தைப் பெற்றுக் கொண்டாள்.

இந்தச் செய்தியைப் பத்திரிகையில் பார்த்த ரவிகுமார் அனுராதாவிடம் ஆத்திரத்தோடு ஓடிவந்தான். ''பார்த்தாயா உன் தங்கை கதையை?'' என்று இரைந்தான்.

திறந்துவிட்ட காஸ் சிலிண்டரை மூடாமல் ஓடிவந்தாள், அனுராதா.

தீ பரவுவது போல் தோன்றிற்று. அவள் மீதும் தீ பரவிற்று.

சப்தம் போட்ட ரவிகுமார் வெளியே ஓடினான். அவளைக் காப்பாற்ற முடியவில்லை.

இப்போது ஊரார், ''கடவுள் இருக்கிறார்!'' என்று பேசிக் கொண்டார்கள்.

---

## இது செய்தி

விவாகரத்து கோரியவர் விபத்தில் பலி

பம்பாய்: ஆக: 9

கடந்த சனிக்கிழமை பம்பாய் அருகில் நடந்த விமான விபத்தில் பலியான 46 பேர்களில் எஸ். அந்துர்கரும் ஒருவர்.

அவர் தன் மனைவியிடமிருந்து விவாகரத்து வேண்டும் என்று கோரி பூனா கோர்ட்டில் மனு தாக்கல் செய்திருந்தார். கோர்ட்டு அவர்களைப் பிரிப்பதற்கு முன்பு அவர் உலகை விட்டே பிரிந்து விட்டார்.

Interpub/S/4/79 TM




101 வெவ்வேறு தினுசு டிசைன்களிலிருந்து தேர்ந்தெடுக்கலாம். உன்னதமான காட்டன் மற்றும் கலப்பிழை டிரெஸ் துணிகள், சூட்டிங்குகள், ஷர்ட்டிங்குகள் மறறும புடவைகள்.

# அந்தக் காலண்டரில் அப்படி என்ன இருக்கிறது?

## III







கோபு அந்தக் காலண்டரையே பார்த்துக் கொண்டிருந்தான்.

வெகு நேரமாக.

அவனுக்கு அதுவே ஒரு பழக்கமாகி இருந்தது.

''கோபு...''— அம்மாவின் குரல்.

''..........''

''கோபு!''—மீண்டும் அந்தக் குரல் அழுத்தமாக ஒலிக்கிறது.

மெதுவாக அறையை விட்டு ஹாலுக்கு வந்தான்.

ஒரு சோபா கம் பெட்டில் அம்மா அகலமாகச் சாய்ந்திருந்தாள்.

''நீ இன்னும் சாப்பிடலையாமே?''

''..........''

''போய்ச் சாப்பிடு.''— குரலில் கனிவை விடக் கட்டளைதான் அதிகமாகத் தெரிந்தது. அவன் கீழ்ப் படிந்தான்.

வாசலில் கார் ஹார்ன் ஒலி.

அப்பா.

மெயின் ஹால் வரை பூட்ஸ் ஒலி தொடர்ந்து வந்தது.

''விமலி.... விமல்''—அம்மாவைத் தேடுகிறார்.

''மாடியிலிருக்காங்க.''—தாயம்மாள் பதில் சொன்னாள்.

''சாப்பிட்டு விட்டாளா?''

கமலா நடராஜன்

''யாரோ சிநேகிதியோடு சினிமாவுக்குப் போனாங்களாம். ஓட்டல்லேயே சாப்பாடு ஆயிட்டுதாம். கோபு உள்ளே சாப்பிடுது. நீங்க?''

''நான் கல்யாண வீட்டிலேயே சாப்பிட்டாச்சு.''

பூட்ஸ் ஒலியைக் கொண்டு அவரும் மாடிப் படி ஏறிச் செல்வது தெரிகிறது. அவனைப்பற்றி அவர் ஒரு வார்த்தை கேட்கவில்லை.

ஒரே சப்பாதியுடன் அவன் எழுந்து கொண்டான்.

''ஏன் கோபு?'' தாயம்மா.

''போதும்.''

''பாலையாவது சாப்பிட்டுட்டுப் போயேன்.''

''வேண்டாம்.''

அவன் சமையலறையை விட்டு வெளியே வந்தான். ஹாலை ஒரு முறை நோட்டமிட்டான். கோரையாக நெற்றியில் புரண்ட கேசத்தைத் தலையை ஒரு முறை வலப்புறமாக அசைத்துப் பின் தள்ளிக் கொண்டான்.

மாடி வராந்தாவைக் கடந்து அறையின் அருகில் அவன் சென்ற போது—



''விமலி டியர், லேடி டீச்சர் என்ன சொன்னாள்?''—அப்பாவின் குரல்.

''பத்துப் பதினைந்து நாட்கள் அதிகமாயிடுச்சாம். கொஞ்சம் முன் எச்சரிக்கையா இருந்தால் என்ன என்று கோபித்தாள்.''

''இந்த முறை இருந்து விட்டுப் போகட்டுமே?''

''நோ நோ. கோபுவை வளர்க்கறதே கஷ்டமா இருக்கு. இன்னம் வேறயா. நம்மைப் போல இரண்டு பேரும் வேலை பார்க்கும் ஃபேமலிக்குக் குழந்தைகள் ஒரு பிரசினை.''

''கோபுவுக்கு ஒரு தம்பி அல்லது தங்கையாக இன்னும் ஏதேனும் ஒன்று...''

''இம்பாஸிபில். என்னுடைய ஹெல்த்தைப் பற்றிக் கொஞ்சமாவது யோசித்தீர்களா. இன்றைக்குக் கூட விமன்ஸ் கிளப்பில் சுஜாதா கேட்டாள். ஆர் யூ நியரிங் தர்ட்டின்னு? எனக்கு என்னமாய் இருந்தது தெரியுமா? இன்னமும் இருபத்து ஏழு ஆகலை.''



''டோண்ட் ஒர்ரி. நாளைக்கே ஏற்பாடு பண்ணிடலாம். கோபு படுத்திருப்பானா?''

''படுத்திருக்கலாம். தாயம்மாள் மட்டும் இல்லாவிட்டால் அவனைக் கவனிப்பதுகூட எனக்குப் பெரிய கஷ்டம்தான்.''

மறுநாள்.

அவன் பள்ளிக்குப் புறப்பட்டபோது, அப்பாவும் அம்மாவும் யாரோ ஒருவருடன் பேசிக் கொண்டிருந்தார்கள். பேசிக் கொண்டிருந்தவர் நாகரிகமான பெரிய மனிதர் போல் தோற்றமளித்தார்.

அவர் சொல்லிக் கொண்டிருந்தார்.

''இந்த வரவேற்பறை கச்சிதமாகவும் மிக மிக அழகாகவும் இருக்கிறது. இப்படித்தான் இருக்க வேண்டும். ஐ லைக் இட் வெரி மச்.''

''எல்லாம் விமலியின் கைவண்ணம். அவளுக்கு எதிலும் ஓர் அழகு, ஒரு கலையுணர்வு இருக்க வேண்டும். இத்தனையும் அவளது டெகரேஷன்தான்.''—அப்பா பெருமையோடு சொல்லிவிட்டு அம்மாவைப் பார்த்துப் புன்னகைக்கிறார்.

''ஓ, ஃபைன்''—சொல்லிவிட்டுப் புறப்பட்டவர் அந்தக் காலண்டர் அருகில் சென்று உற்றுக் கவனிக்கிறார்.

அம்மா சொன்னாள். ''என் சிநேகிதி ஒருத்தி கல்கத்தாவிலிருந்து எனக்கு அனுப்பினாள்.''

''உங்கள் இருவரது கலையுணர்வையும் என்னால் பாராட்டாமலிருக்க முடியவில்லை. பை த பை நான் சண்டே வந்து உங்களை மீட் பண்றேன்.''

அந்த மனிதர் புறப்பட்டுச் சென்றார்.

அம்மா அப்போதுதான் அவ னைப் பார்த்தாள்.

''கோபு! இது என்னடா டிரெஸ். சீ! போய்க் கழற்றிப் போட்டுட்டு வேறே பண்ணிக்கோ.''

''தாயம்மா!''—அப்பா சப்த மிடுகிறார்.

அடுக்களையிலிருந்து அவள் ஓடி வருகிறாள்.

''நீதான் இவனுக்கு டிரெஸ்' பண்ணி விட்டியா? இது என்ன, காலர் கிழிந்து ஒரு பட்டன் இல்லாமல்... உன்னை எதுக்குச் சம்பளம் கொடுத்து வச்சிருக்கோம் தெரியுமா?''

அவள் நடுங்கிக் கொண்டு நின்றாள்.

''போடா, போய் வேறே டிரெஸ் பண்ணிட்டுப் பள்ளிக்கூடம் போகணும்.''

காரில் அம்மாவை அழைத் துக் கொண்டு அப்பா போய் விட்டார்.

''உன்னால் நான் பாட்டு வாங்க வேண்டியிருக்கிறது பாத்தியா



நர்ஸ்: ''நீங்க நிறையக் காப்பி குடிப்பவராக இருக்கலாம், அதுக்காக ரத் தத்துக்குப் பதிலா காப்பி இரண்டு பாட் டில் உடம்பிலே ஏத்தச் சொல்றது நல்லா இல்லே!''

—'நிவேதா'

கோபு? அப்பவே சொன்னேனில்லே? நீதானே இந்த டிரெஸ் போதும்னே?''

அவன் அவளைச் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் கண்களில் துளித்த கண்ணீர் திரை யாக அவள் உருவத்தை மறைத்தது.

அவள் அழைப்பதையும் லட்சி யம் செய்யாமல் அவன் படிகளில் இறங்கிப் போய்க் கொண்டிருந்தான்.

**அ**ன்று ஞாயிற்றுக் கிழமை.

அம்மா இரண்டு நாள் ஆஸ் பத்திரியில் இருக்க வேண்டுமாம். தாயம்மாள் சொன்னாள்.

அவளுக்கு என்ன உடம்பு என்று அவனுக்குத் தெரியவில்லை.

நேற்று வரை நன்றாகத் தானிருந்தாள். இன்று ஆஸ்பத்திரியில் இருக்கிறாளாம்.

அப்பாவும் ஆஸ்பத்திரிக்குத் தான் போயிருந்தார்.

மேஜைமீது அப்பா உப யோகிக்கும் சிகரெட் லைட்டர் ஒன்று கிடப்பது தெரிகிறது.

இனம் புரியாத வெறி ஒன்று அவனுள் கிளர்ந்தெழுகிறது.

சுற்றுமுற்றும் பார்த்தான்.

மூலையில் கிடந்த ஸ்டூல் கண்ணில் படுகிறது.

தூக்கி வந்து அந்தக் காலண் டர் மாட்டப் பெற்றிருக்கும் சுவ ரோரம் போட்டு மேலே ஏறினான்.

இப்பொழுது அது எளி தாக அவனது கைக்கு எட்டுகிறது. கழற்ற முடிகிறது.

கழற்றிய பிறகுதான் தெரி கிறது. ஏறக் குறைய அது அவனது உயரத்திற்கே இருப்பது.

வைத்த கண் வாங்காமல் சிறிது நேரம் அதையே பார்த்துக் கொண்டிருந்தவன், அதைப் பெரிதாகச் சுருட்டி நடு அறைக்கு எடுத்து வந் தான்.

லைட்டரைப் பொருத்தி னான். காலண்டரின் இரண்டு மூன்று பகுதிகளில் அதைப் பற்ற வைத்தான்.

முதலில் கொஞ்சமாக பிறகு அதிகமாக, அதன்பின் மிக அதி

மாக வர்ண வர்ண ஜுவாலைகளுடன் அது பற்றிக் கொண்டு எரியத் தொடங்குவதை அவன் பார்த்துக் கொண்டு நின்றான்.

வாசலில் கார் வந்து நின்றதோ அதிலிருந்து அப்பாவும் அன்று வந்த மனிதரும் இறங்கி வந்ததோ அவனுக்குத் தெரியாது.

''கோபு!''—இடி முழக்கம் போன்று அப்பாவின் குரல்.

அவன் திரும்புகிறான்.

அவன் கன்னத்தில் பளீர், பளீர் என்று பலமுறை அறைந்தார்.

''யூ ராஸ்கல், உனக்கென்ன பைத்தியமா! ஏண்டா அதைக் கொளுத்தினே? ஏன் கொளுத்தினே?''

அவர் அவன் தலையைப் பிடித்து பலமாக உலுக்குகிறார்.

அவன் கல்லுளிமங்கனாக நின்றான்.

அத்தனை அறைகளுக்கும் ஒரு சொட்டுக் கண்ணீர் கூட அவன் கண்களில் கசியவில்லை.

''பாருங்கள் சார், இப்படிப் பிள்ளைகள் வளர்ந்தால் பெற்றவர்களுக்கு எப்படி நிம்மதி இருக்க முடியும். எனக்கும் அவளுக்கும் அதுதான் பெரிய குறை. ஏண்டா நிக்கறே? போ வெளியே.''

மீண்டும் ஓர் அறை.

அவன் எந்த உணர்வுமின்றி ஜடமாக அந்த அறையை விட்டு வெளியேறுகிறான்.

வந்தவருக்கு ஒன்றும் புரியவில்லை. அந்தச் சிறுவன் ஏன் அதைக் கொளுத்தினான்?

நினைத்துப் பார்க்கிறார். அந்தக் காலண்டரில்—

ஒரு பௌர்ணமி நிலவில், தங்கள் குடிசை வாசலில் அமர்ந்து, ஓர் ஏழைக் குடியானவனும் அவன் மனைவியும் தங்களது இரண்டு குழந்தைகளுக்கும் உணவு பறிமாறிவிட்டு, அவர்கள் மகிழ்ச்சியோடு சாப்பிட்டுக் கொண்டிருப்பதைப் பார்த்தபடி இருந்தனர்.



## மணிக்கு 25 மைல் வேகம்

சக்கரம் பொருத்திய ஸ்கேட்டிங் பலகையை மோட்டார் இயக்குகிறது: ஏர் மாதிரி தெரிகிறதே அதன் ஒரு முனையில் உள்ள ஸ்விட்சைக் கையினால் அழுத்தி (ஆக்ஸிலேட்டர் போல) இதை ஓட்டிச் செல்லலாம். சமதளத்தில் மணிக்கு 25 மைல் வேகத்திலும் சரிவில் இன்னும் அதிகமாகவும் செல்லக் கூடியது. ஒரு லிட்டர் பெட்ரோலுக்கு 30 மைல் தூரம் செல்லும். இதனால் டிராபிக் ஜாம், பார்க்கிங் ட்ரபிள் சங்கடங்கள் கிடையாது.

—ரோமியோ

(நன்றி: மோட்டார் மாகஸின், இங்கிலாந்து)

# ஒரு பெண் வைராக்கியம்

## I

ஷியாமின் மாமாவுக்கு ஒரே ஒரு பெண். சுபாஷிணி. ரொம்ப லேட்டாகப் பிறந்து இப்போதுதான் பதினேழைத் தொட்டுக் கொண்டிருந்தாள். படிப்பில் துறுதுறு. கல்லூரி ஸ்போர்ட்ஸ்களில் கெட்டிக்காரி—முக்கியமாக கிரிக்கெட்.

முறைப்பையன்—டாக்டர்—என்ற முறையில் அவளுக்கு ஷியாமிடமிருந்த ஈடுபாட்டைவிட ஷியாமும் ஒரு கிரிக்கெட் வீரன் என்பதாலேயே அவளுக்கு அவன் மீது மிகுந்த ஈடுபாடு.

டாக்டருக்குச் சேர்ந்து இறுதியாண்டு வரைகூட ஷியாமைக் கிரிக்கெட் மட்டையுடன்தான் விடுமுறை நாட்களில் பார்க்கலாம்.

சேப்பாக்கம் டெஸ்ட் கிரிக்கெட்டுகளுக்கு நானும் போவதுண்டு. அப்போதெல்லாம் ஷியாமையும் சுபாஷிணியையும் மிக நெருக்கமான நிலையில் நான் பார்த்திருக்கிறேன். ஆண்மைத்தனமான பெரிய மோட்டார் சைக்கிளில் ஷியாம் ஆரோகணிக்க அவன் பின்னால் அவள் இறுகக் கட்டிக் கொண்டு உற்சாகம் பீறிடப் பெருஞ் சத்தத்துடன் அவனது மோட்டார் சைக்கிள் என்னைக் கடந்திருக்கிறது — அவர்கள் கையசைப்புடன்.

முறைப்பையனுக்கும் முறைப் பெண்ணுக்கும் ஏற்படும் காதலைக் காணும்போது ஒரு திருப்தி ஏற்படத்தான் செய்கிறது. நான் மானசீகமாக என் வாழ்த்துக்களை அவர்களுக்கு அப்பொழுதெல்லாம் அனுப்பி வைப்பது வழக்கம்.





ஒரு மாதத்திற்கு முன் இதே மருத்துவமனையில் கலகலவென்ற சுறுசுறுப்போடு காணப்பட்ட இளம் டாக்டர் ஷியாம், இப்போது தனது முகத்திலிருந்த மகிழ்ச்சியையெல்லாம் பேரக்கடித்துக் கொண்டவனைக் அல்லது விரட்டியடித்துக் கொண்டவனைப் போன்ற கடுமையுடன் காணப்படுவதுபோல எனக்குத் தோன்றியது.

இதயப் பரிசோதனைக்காகப் பல நோயாளிகள் வெளியே கசகசவென்று காத்திருந்த போதிலும் டாக்டர் ஷியாம் எனக்குத் தெரிந்தவனென்ற காரணத்தால், தலையை உள்ளே நீட்டி நான் வந்திருப்பதைத் தெரிவித்தவுடன் இரண்டு நிமிடங்களில் உள்ளே வரச் சொல்லிவிட்டான்.

அது மாரடைப்புப் பிரிவு.

மாரடைப்புக் கேஸ்களெல்லாம் வெளியில் காத்திருக்க, மூக்குக் கோளாறு—சைனஸ்—கேஸான நான் போய் ஷியாமைத் தொந்தரவு செய்கிறேனே என மனச்சாட்சி குறுகுறுத்தாலும் பொது மருத்துவமனையின் இலவச வசதி—தெரிந்த டாக்டர் இருந்துவிட்டால்— அலாதிதான்.

என் சைனஸ் கோளாறுக்காக மார்பு எக்ஸ்ரே, ஈ.ஸி.ஜி, தொண்டை எக்ஸ்ரே, ரத்தப் பரிசோதனை ஆகிய யாவும் கொஞ்ச நேரத்தில் பல் வேறு இலாகாக்களுக்கு என்னுடன் ஷியாமே கூட வந்து முடித்துக் கொடுத்துவிட்டான்.

அவன் எனது நண்பரின் மகன் என்ற முறையில் நான் அடிக்கடி இப்படிப்பட்ட உரிமை எடுத்துக்கொள்வது உண்டு.

அப்போதெல்லாம்—ஏன் சென்ற மாதம்கூட—ஷியாம் எவ்வளவு கலகலப்பான முகத்துடனும், வேடிக்கையான பேச்சுகளுடனும் இருந்தான்.

'யோகேஷ்'



இப்போது அவன் மறக்க முயன்றாலும் கடுகடுப்பும் கடுமையும் அவன் முகத்தில் பரவியிருந்தன. அவனது சிவப்பான நிறம் கூடச் சற்றே கறுத்திருந்தது. செழுமையான கன்னங்கள் சற்று வற்றியிருந்தன.

உடைகள் கூட அவன் 'ட்ரிம்'மாக அணிந்திருந்ததாகக் கூற இயலாது. கிராப்பில் அந்தந்த முடி அந்தந்த இடத்தில் சொல்லி வைத்தாற்போல் அமர்ந்திருக்கும். இப்போது கலைந்து ஒழுங்கின்றிக் காணப்பட்டது. நெற்றியில் ஒரு சுருக்கம்.

''நீங்கள் ஏதாவது கூல் ட்ரிங்க் சாப்பிடுகிறீர்களா? ஸம் ஜூஸ்?'' ஷியாம் என்னைக் கேட்டான்.

''என்ன டாக்டர்... நான் கூல் ட்ரிங்க் சாப்பிடலாமோ? நீ பக்கத்திலே இருக்கிற தைரியத்திலே வேண்டுமானால் சாப்பிடுகிறேன்,'' என்றேன்.

''ஓ! ஸாரி சார். எனக்கு உங்கள் சைனஸ் ட்ரபிள் மறந்தேவிட்டது. நீங்கள் ஹாட்டாக ஏதாவது சாப்பிடுங்கள்.''

காப்பியை உறிஞ்சியவாறு கேட்டேன். ''நான் கேட்டதற்குப் பதிலைக் காணோம். சுபா எப்படியிருக்கிறாள்? உன் மாமா பழைய பிடிவாதத்தோடேயே இருக்கிறாரா.. ஏதாவது சரிப்பட்டு வர்றாரா?''

சட்டென்று முகத்திலடித்தாற்போல் ஷியாம் ஒரு வார்த்தை சொல்லி விட்டான். ''லெட் அஸ் நாட் டாக் அபவுட் இட் சார்.. வேறு ஏதாவது பேசுவோம்.''

என் நெஞ்சில் அறைந்த மாதிரி இருந்தது. 'ஏன், என்ன ஆயிற்று?' என்று எழுந்த கேள்விகளைக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டேன்.

தேவராஜ் முதலித் தெருவில் ஷியாமின் மாமா கௌரிசங்கரைப் பார்க்க ஒரு சாக்கு வேண்டியிருந்தது. எனது காண்ட்ராக்ட் வேலை ஒன்றுக்கு இன்டீரியர் டெகோரேஷனுக்காகச் சில லாமினேட் பிளாஸ்டிக் தகடுகள் வாங்கும் நோக்கத்தையும் இணைத்துக் கொண்டு கௌரிசங்கரின் கடைக்குச் சென்றேன்

அவர் இல்லை. அந்தத் திண்டுத் தலையணையில் சுபர்ஷிணிதான் அமர்ந்து கடையைப பார்த்துக் கொண்டிருந்தாள்

மிக மாடர்னான உடை துணிச்சலானது என்று சொல்லுமளவுக்கு ஆனால் அவளது அழகிலிருந்த தூய்மை

உடைகளுககுக கௌரவததைத் தந்தது

'ஹாய அன்க்கிள்!''

'கௌரி எங்கே?' என்று விசாரித்தேன்.

'அபபா கூட நான் டூ. என்கிட்டே விசாரிக்காதீங்க அவரைப் பற்றி. வேணுமானல் அந்தக் குமாஸ்தாகிட்டே கேளுங்க. ஸீரியஸா அன்க்கிள் நானும் அப்பாவும் பேசிக்கிறதில்லே. ஹி இஸ் டூ ஹார்ஷ்.''

நான் சங்கடபபட டேன். அவள் படபடப்பு அடங்கச் சிறிது நேரம் தந்தேன். ''அப்பா வர டைம ஆகுமா? கொஞ்சம் பர்ச்சேஸ் இருககு.''

மானேஜா இருககார் அன்கிள ' மணியைக் கணகணவென்று தட்டினள

''எனக்கு அவசரம் ஒண்ணுமில்லே ''

கூல் ட்ரிங்க் வந்தது.

''கூல் ட்ரிங்க்கா? எனக்கு சைனஸ் டிரபிள். போன வாரம்தான் ஷியாம ரிப்பேர் செய்து அனுப்பினன்.'' 'ஷியாம்' என்ற வார்த்தையைக் கேட்டதும் அவள் கண்களில் ஒரு கணம் ஒரு பிரகாசம் தோன்றி உடன் மறைந்ததை நான் கவனிக்கத் தவறவில்லே.

''போன வாரம் ஜி ஹெச்சில் ஷியாமைப் பார்த்தேன். அவனுக்கென்ன, உடம்பு சரியில்லேயா என்ன?'', என்றேன்.

அவள் கண்களில் ஒரு திகைப்பும், தொடர்ந்து கவலேயும் தெரிந்தன.

கனவுகளிலிருந்து கேடபது போல் அவள் உதடுகள வினவின. ''எப்படியிருக்கார்? ஒரு மாசமாச்சு இந்தப் பக்கம் வந்து.''

சட்டென்று கைக்குட்டையை எடுத்து வாயைப் பொத்திக் கொண்டு குனிந்து கொண்டாள்.

அப்புறம் சில விநாடிகளில் அவளால் தாங்க முடியாத உணர்ச்சிகள் அவளேக் குலுங்க வைத்தன.

''சுபா! டேக் இட் ஈஸி! நான் கௌரிகிட்டே சொல்கிறேன். என்ன டிரபிள்னே எனக்குத் தெரியாதும்மா. ஷியாமும் சொல்லவில்லே. நீயும் சொல்லவில்லே. ஆக்சுவலா வாட் ஹாப்பண்ட்? உங்க அப்பா முரண்டு பண்ணுரா?''

சுபாஷிணி பல்லேக் கடித்தவாறு தலேயில் கை வைத்துக் கொண்டாள். அந்தச் சிறு பெண் பட்ட வேதனேயைப் பார்க்கச் சிரிப்பாகத் தான் இருந்தது.

'அன்க்கிள்! என் ஃபாதரைவிட ஷியாம்தான் ரொம்ப ஸில்லியாக நடந்து கொண்டு விட்டார். நானும் ஒரு ஸில்லின்னு வைத்துக் கொள்ளுங்களேன். நான் அப்பாவுடன் ஷியாமுக்காக எத்தனே மோதல் பண்ணியிருக்கிறேன். அதையெல்லாமாவது ஷியாம் நினேத்துப் பார்க்கக் கூடாதா அன்க்கிள்?''

விவரங்களேக் கேட்டேன்.

அவள் கூறியதைப் போல அப்பாவுடன் பெரிய மோதல்தான் நடத்தியிருக்கிருள். ஷியாமை அடைய வேண்டுமென்பதற்காக அவள் துணிச்சலுடன் செய்த காரியங்கள் நிச்சயம் என்னேத் திகைக்க வைத்தன.

கௌரிசங்கருக்குத் தன் மகளே, முறைப்பையன் ஷியாமுக்குக் கொடுப்பதில் கொஞ்சமும் இஷ்டமில்லே.

''மாசம் லட்சம் சம்பாதிச்சுடுவாளு உன் ஷியாம்? ராத்திரியில்லே, பகலில்லே ... எவனெவனுடைய வியாதியையெல்லாம் தொட்டுகிட்டு? அது ஒரு பிழைப்பா? பிஸினஸ்கார பிள்ளேயாகப் பார்த்து பண்ணி வைக்கிறேன். அவசரப்படாதே.''

''அப்பா! நான் ஷியாமைத்தான் கட்டிப்பேன். ஐ லவ் ஹிம் அப்பா.''

''சீ கழுதை! லவ்வு கிவ்வுன்னு பிடாரித்தனம் பண்ணினே (சில கெட்ட வார்த்தைகள்) குடலேப் பிடுங்கிடுவேன்.''



சென்னை மயிலாப்பூர் அட்வகேட் வட்டாரங்களின் சூழ்நிலேயைப் பின்னணியாகக் கொண்டு 'வக்கீல் சுமித்ரா' என்கிற பெயரில் தெலுங்கு நாவல் ஒன்றை எழுதி முடித்திருக்கிருர் மாலதி சந்தூர். தெலுங்கில் பல நாவல்கள், சிறு கதைகள் எழுதியுள்ளார். அவரது கதா பாத்திரங்கள் தமிழர்களே. —ம. ஆத்ரேயி

"நான் ஒண்ணும் நீங்க சொல்ற ஆளைக் கட்டிக்கணும்னு தலையெழுத் இல்லே."

அன்க்கிள்!'' அவள் சிரித்தாள். கண்களில் நீர் நனைந்திருக்க. ''டாடி என்னை நல்லா அடிச்சிட்டார் அன்க்கிள். டிரிங்க் வேறயா! அப்புறம் தெளிஞ்சபிறகு கூட அதே முரட்டுத்தனம். ரொம்ப ஹார்ஷ். நான் ஒண்ணும் பயப்படலே. ஓய் ஃபூட் ஐ அன்க்கிள். ஒரே வார்த்தை தான் சொன்னேன். எனக்குப் பிடிச்சவரை தானுப் பண்ணிக்கிறேன். நீங்க என்ன பண்ண முடியும்னு. டாடி காட் வய்ல்ட் அன்க்கிள். சொல்லத் தகாத வார்த்தை ஒண்ணைச் சொல்லிட்டார் அன்க்கிள்.''

''அப்படியா?''

' நீ இன்னும் மேஜராகலே. என் கண்ட்ரோல்லேதான் இருக்கறே. அதைப் புரிஞ்சுக்கோன்னார் அன்க்கிள்.''

''ஆமாம். உனக்குப் பதினேழு வயசுதான் ஆகிறது.''

''அன்க்கிள்.'' அவள் குரல் தழுதழுத்தது. ''என்னை அவர் அப்படியா வளர்த்தார் அன்க்கிள்? தன் உசிரையே என்கிட்டே வச்சுத்தான் வளர்த்தார். இல்லாட்டா, அம்மா செத்தப்புறம் அவர் கல்யாணமே பண்ணிக்காமே இருக்காரே. அதுவும் என் ஏழெட்டு வயசுலேயே அம்மா போயிட்டாள் அவர் ஏன் மறு கல்யாணம் கட்டிக்கலே... எனக்காகத்தான் அன்க்கிள். பார்க்கறதுக்கும் பேசறதுக்கும் முரட்டுக் காட்டாள் மாதிரி இருக்கிறாரே தவிர என் மேலே அவருக்கு — என்னை அவர் அறைஞ்சிட்டாக்கூட உசிர்தான். அவர் என்கிட்டே அன்றைக்கு அப்படி ஒரு வார்த்தை சொன்னதும் எனக்கு என்னவோ மாதிரி ஆகிவிடடது. மேஜர்னு என்னன்னே எனக்கும் புரியலே. அப்படிப்பட்ட என்கிட்டே வந்து நீ இன்னும் மேஜராகலே... புரிஞ்சுக்கோன்னு சொன்னாரா, நான் மறு நாள் ஷியாம் கிட்டே கேட்டேன் 'ஷியாம், அப்பா சொல்றார். நான் இன்னும் மேஜராகலையாம். அதனாலே அவர் இஷ்டப்படிதான் நான் நடந்துக்கணுமாம்.''

ஷியாம் அவளுக்கு 'மேஜராவது என்றால் என்ன? சட்டப்படி அதன் விளைவுகள் என்ன?' என்பதைப் பற்றி விரிவாகச் சொல்லியிருக்கிறான்.

''அன்க்கிள்!'' அவளுடைய குரல் கரகரத்தது. '' நான் வழியைச் சொல்லியும்கூட அவர் பிடித்துக்கொள்ள மாட்டேன்னு சொல்லிட்டார்.''

''அப்படியா?''

''ஆமாம் அன்க்கிள் நான் 1962'ல் பிறந்தேன். அதை 1960'ன்னு திருத்திடலாம்னு நான் சொன்னேன். அது எப்படி முடியும்னார் முடிஞ்சால் என்றேன். அவர் மாட்டேன்னுட்டார். ஓடறதுக்கெல்லாம் மூட்டையைக் கட்டி வச்சிட்டு, திருத்தறதா, வேண்டாமா என்கிறதைப் பற்றியே விடிய விடிய விவாதம் பண்ணிட்டு, சண்டையடிச்சிட்டுப் புறப்படாமயே இருந்திட்டோம்.''

''அப்படியா?'

''ஆமாம் அன்க்கிள். இவ்வளவு நாளைக்கு நாங்கள் ஹைதராபாத்தில் இருந்திருக்க வேண்டியவர்கள்.''

''திருத்தறது ஒரு தப்புக் காரியம் என்று ஷியாம் நினைத்தது சரிதானே?''

''அப்படியெல்லாம் அவர் சொல்லவில்லே. அவ்வளவு யோக்கியதை பார்த்தால், ஒரு பெண்ணைக் கூட்டிட்டு

## பால் கறப்பது எப்படி ?



முன்னங்கால்கள் தொட்டு பின்னங்கால்கள் வரை நிறைய முலைக்காம்புகள் இருந்தாலும் பன்றி தன் குட்டிக்குத் தவிர பிறருக்கு ஒரு சொட்டு பால் தராது!

ஆனாலும் மருத்துவர்கள் அதன் பாலைப் பெற ஒரு விந்தையான முறையைக் கையாண்டு பெற்றும் விடுகிறார்கள்.

அதாவது: பால் குடித்த பன்றிக் குட்டியைத் தலைகீழாகப் பிடிக்கும்போது அது தான் குடித்த தாய்ப்பாலைக் கக்கிவிடுகிறது. அதைச் சேகரித்து வைத்தியர்கள் மருத்துவத்திற்குப் பயன்படுத்துகிறார்கள்

—ீ ப. நாராயணன்



ஸ்ரீலங்கா இந்து சமய இந்து கலாசார அமை
செல்லையா இராசதுரை அண்மையில் சென்னைக்
குடும்பத்துடன் வந்திருந்தார்.

இவருக்குப் பிடித்தமான இசை விசித்திரமா

''பௌர்ணமி இரவுகளில் இலங்கை ஏரி
சிறிது தூரம் படகில் சென்று அதிலேயே அமர்ந்தவாறு
அற்புதமான கீதத்தைக் கேட்கலாம். அதற்கு ஒன்றும் செ
வேண்டாம். ஒரு குச்சியைத் தண்ணியினுள் செருகி, மே
நுனியில் காதை வைத்துக் கொண்டு கேட்டால் போ
'ஜந்த்ர சம்மேளனம்' போன்ற ஆர்க்கெஸ்டிரா இ
கேட்கலாம்,'' என்கிறார்.

—பா

ஓடறதேகூடத் தப்புத்தானே? எங்கள் போதாத காலம் தான் கடைசி நிமிஷத்திலே அந்த விவாதம். அதுவே ஒரு பெரும் சண்டையா முடிஞ்சு போச்சு எங்களுக்குள். ஆமாம் அன்க்கிள். நான் சொன்னேன்—'என் பிறந்த வருஷம் 1962. அதை 60'ன்னு திருத்திட்டால் விவகாரம் தீர்ந்தது'ன்னு. அவர் சொன்னர், 'அது எப்படி? உங்க அப்பா கல்யாணம் நடந்தது 1961'ல். நீ பிறந்தது 60'ல் என்றல் அது பொருத்தமாக இல்லையே. கல்யாணத்துக்கு முதல் வருஷமே உங்கம்மாவுக்கு நீ பொறந்தாற்போல ஆகிடுமே. அப்போ உங்க அம்மா, உன்னைக் கல்யாணத்துக்கு முன்னலேயே பெத்த மாதிரி அர்த்தம் வந்துடும்'ன்னர். நான் சொன்னேன். 'அதையெல்லாம் பார்த்திட்டிருந்தால் முடியாது. நாம செய்யறதோ தப்புக் காரியம். அதிலே போய் நியாயம் கற்பிச்சுக்கிட்டிருந்தால் காரியமே நடக்காது'ன்னு சொன்னேன். ஷியாமுக்குச் சுர்ருனு கோபம் வந்துட்டுது. அது எப்படி நாம செய்யற காரியமே தப்புக் காரியம்னு சொல்லப் போச்சு'ன்னு கோபப்பட்டார். நான் பிளெய்னு சொன்னேன். 'ஓடிப் போறது தப்புக் காரியம் தானே..' அவர் ஒரே ஆர்க்யூமெண்ட் மூடிலே அன்னைக்கி இருந்தார் போலிருக்கு. 'ஓடறது தப்புத்தான். அதுக்குன்னு பண்ற காரியம் பூராவுமே தப்பாயிருக்கணும்னு நீ சொல்லுவே போலிருக்கே. ஓடத்தானே ஓடறோம், ரயிலுக்கு ஏன் டிக்கெட் வாங்கணும்னு கேட்பே. லாட்ஜிலே போய்த் தங்கினல் அவனுக்குப் பணம் கொடுக்காமல் ஏமாத்தினல் என்ன என்பே...' என்று அடுக்கிக் கொண்டே போனர்... எனக்கும் கோபம் வந்திட்டுது. 'ஆமாம். இருந்தால் பர்ஃபெக்டா இருக்கணும். விபசாரம் போறதுலே கொஞ்சம் விபசாரம், நிறைய விபசாரம்னு உண்டா? நம்மை நாமே ஏமாத்திக்கிற ஹிப்பாக்ரஸிக்காரங்க பேசற

பேச்சு'ன்னேன்... அவர் கோபம
'என்னை ஹிப்போக்ரிட் என்கிறயாக்
என்றர். 'ஆமாம் பின்னே.. என்ன
தப்பே பண்ணாதது மாதிரி ஒரு டேட்
திருத்தறதுக்கு அனுவசியமா ஆர்
பண்ணிட்டு..

'ஷட் அப்! நான் தப்
பண்ணணும்னு எனக்கு ஒண்ணு
தலையெழுத்து இல்லை—அதுவும் உ
காக..'

'ஏன், எனக்காக.. நீ
உங்களுக்காகத்தான் பண்ணிக்கறீங்க
லவ் மி பிகாஸ் ஆஃப் யூ.. உ
செல்ஃபிஷ்னஸ்தான் என்னை நீங்க
பண்றீங்களே தவிர எனக்காக ஒ
ஒண்ணும் லவ் பண்ணலே.

'ஷட் அப்!' என்றர்.

நானும் 'ஷட் அப்!' என்
'அவரவர் மூட்டை
தூக்கிட்டுப் பிரிஞ்சு அவரவர் வீடு போ
சேர்ந்துட்டோம். மாசம் ஒண்ணு
அன்க்கிள்...ஐ ஃபீல் ஸோ பேட்....
எப்படி ஃபீல் பண்றரோ.
அவர்கிட்டே அபாலஜி வாங்கி
தயார்.'

அவள் குலுங்கக் கு
அழுதாள்.

என் மனசை என்ன
பண்ணியது. காதலர்களுடைய ெ
மௌனம்னு இதனல் த
சொல்லியிருக்கிறர்களோ என்னவோ.

'கவலைப்படாதேம்
அவனுக்கும் உன்னைப் பிரிஞ்சிருக்
கஷ்டமாத்தானிருக்குன்னு என
தெரிகிறது. உங்க அப்பாகிட
பக்குவமாகச் சொல்லி உ
கல்யாணத்தை நடத்த முய
செய்கிறேன்...'

நம்பிக்கையோடு எ

# மேஜராகுமுன்

## III

சிகரெட்டின் புகை அவர்களை விட்டுப் பிரிய மனமில்லாத மாதிரி அந்த நாலு பேரின் தலைக்கு மேலேயே வளையம் வளையமாக வட்டமிட்டுக் கொண்டிருந்தது. ராஜு தன் நாற்காலியை விருட்டென்று பின்னுக்குத் தள்ளிக் கொண்டு எழுந்தான். கோபமும் ஏமாற்றமும் அவன் முகத்தில் கறுப்புத் திரையாகப் படர்ந்திருந்தன.

'ஊகூம். என் ஆடம்பரம், உல்லாச வாழ்க்கை, நண்பர்கள் கூட்டம் எல்லாம் நாளையோடு போக வேண்டியது தான். சுபா நாளைக்கு மேஜராகிறாள். அதற்கப்புறம் ராஜுவுக்குக் குட் பை!'' ஒரு பெருமூச்சு வெளிப்பட்டது அவனிடமிருந்து.

'நண்பர்களின் கூட்டம்' என்று அவன் சொன்ன வார்த்தை மற்ற மூன்று பேரையும் நிமிர வைத்தது. ஆறடி உயரத்துக்கு மேலிருந்த செழியன், சிகரெட்டைக் காலின் கீழே போட்டுத் தேய்த்தபடியே, ''என்ன இருந்தாலும், உனக்கு அறிவு கம்மிதான் ராஜு. இந்த ஐந்து வருஷத்தில் எவ்வளவோ சந்தர்ப்பங்களைப் பயன்படுத்திக் கொண்டிருக்கலாம். எவ்வளவோ சந்தர்ப்பங்களை உண்டாக்கியிருக்கலாம். கோட்டை விட்டு விட்டாய்.''

அப்படியா சொல்கிறாய்?' என்பது போலப் பரிதாபமாக அவனைப் பார்த்தான் ராஜு

கழுத்து இருக்குமிடம் தெரியாமல் குண்டாயும் குள்ளமாயும் இருந்த ஜானகிராமன் ட்ரூப்பிங் மீசையை வருடி விட்டபடி, ''பின்னே என்ன? அந்த சுபாவின் அப்பா—உன் மாமா—இறந்து போய் ஐந்து வருஷமாகிறது. உன்னை சுபாவுக்குக் கார்டியனாய் நியமித்திருக்கிறார். நீ அவள் வீட்டோடு ...ந்தனாய் இருந்து வந்திருக்கிறாய். இளைஞன்-பர்ஸனாலிடி உள்ளவன் அவளை இத்தனை நாள் கையில் போட்டுக் கொண்டிருக்க வேண்டியது தானே?'' என்றான்.

எனக்கு அவள இடமே கொடுக்கவில்லை,'' என்று முனகினான் ராஜு. ''அதுவும் அந்த லாயர் இருக்கிறானே ராஸ்கல் வினோத். அவன்தான் அவளுக்கு ஹீரோ. அவன் ஆட்டுவிக்கிறபடியெல்லாம் ஆடுகிறாளே தவிர நானும் புழுவும் ஒன்று அவள் பார்வையில்.''

தொடர்ந்து செயின் சிகரெட்டாகப் புகைத்துக் கொண்டு அவர்களை இத்தனை நேரம் மௌனமாய்ப் பார்த்துக் கொண்டிருந்த நிவாஸ் தன் குறுந்தாடியைத் தடவிக் கொண்டான். பின்னர் வெகு நிதானமாகக் கேட்டான் ராஜுவை. ''நாளைக்குப் பிறந்த நாள் விழா நடத்துகிறாள் இல்லையா சுபா?''

''ஆமாம். நாலு வருஷமாகத் தவறாமல் கொண்டாடுகிறாள். மெழுகுவத்தி அணைத்து, கேக் வெட்டி, ஹாப்பி பர்த்டே பாட்டுப் பாடி ..''

''அதை மூவி படமாகக்கூட எடுப்பதுண்டு, இல்லை?''

''எடுப்பதுண்டுதான்... அதோ அலமாரியில் அடுக்கி வைத்திருக்கிறேன் பார் ஃபிலிம் சுருள்.''

''புரொஜக்டர், ஸ்க்ரீன் எல்லாம் இருக்கிறதில்லையா?''

''இதோ இருக்கிறது.''

''போட்டுக் காட்டு. அதைப் பார்த்தால் ஓர் ஐடியா ஏற்படும்.'' நிவாஸின் குரலில் கட்டளை தென்பட்டது.

செழியனுக்கும் ஜானகிராமனுக்கும் நிவாஸின் மூளையில் அபார நம்பிக்கை உண்டு. நிவாஸ் ஒரு

'ஆதி'



ஸயின்டிஸட ரசாயனப பொருளகள் பரிசோதனை செயது கொண்டிருபபவ குயுக்தியாக, வககிரமாக ஏதாவ பண்ணுவது அவனுக்குப் பொழுதுபோக்

இருவரும் ராஜுவுக்கு ஒத்தா செயதார்கள் புரொஜக்டரைய திரையையும் ஸெட அப செயவதில்

ஓடடு யாரும் இங்கே வ குறுக்கி மாடடார்களே?

'ஒருத்தரும வரமாடடார்க மாடியில இது என் அறை!' என் சொல்லுமபோதே, இன்னும் அ நாளைக்கு இந்தச் சுகபோகங்கள் இருக்க என்கிற எண்ணம் ஏற்பட்டு அ உற்சாகம் தளர்ந்தது

சுபா?''

'அவளும் வெளியே போயி கிருள் வர நேரமாகும் ''

குடடித் திரையில் ப ஓடலாயிற்று. வீடு, தோட்டம், நண்பர் ஒவ்வொருவராக வருகை, வாசலில் நி சுபாவும் ராஜுவும் அவர்களை வரவேற் பாங்கு, ஹாலில் கூட்டம், சமையற் மோசஸ் பிறந்தநாள் கேக்கைக் கொ வந்து வைப்பது அவள் வெட்டு அன்புக்குரியவர்களுக்கு ஊட்டுவது ..

படம் முடிந்தது

மூவரும் நிவாஸின் மு தைப் பார்த்தார்கள் ஆவலுடன்.

''இன்னெரு தரம் போ என்றுன் அவன்.

மீண்டும் ஓடியது படம்

அவள் கேக்கை வெட துவங்கியபோது நிமிர்ந்து உட்கார்ந் நிவாஸ்

சமையற்காரன் மோ கொண்டு வந்து வைத்த கேக்கில் S என்ற எழுத்துக்கள் ரேக் காகித மின்னின ஒவ்வொன்றும் ஒரு எழுத்து *S–U–B–A* என்று.

'எஸ்'ஸை முதலில் வெ ளுள் தன் வீட்டில் வெகுநாளாக பார்க்கும் தோட்டக்கா காத்தமுத்துவுக்குக் கொடுத்தாள். 'யூ வெட்டி, பாட்டி ஜனகம்மா ஊட்டினுள். 'பி'யை வெட்டினுள். அன்புக்குரிய காதலன் விஞேத் ஊட்டினுள். கடைசியாக 'ஏ'யை வெ தன் வாயில் போட்டுக் கொண்ட எல்லோரும் ஹாப்பி பர்த்டே—

''நிறுத்து!'' என்றுன் நிவா

படப் பட்டமென்று நின்றது.

"இதுதான் வழக்கமாய் நடை பெறுகிறதா?"

"ஆமாம்," என்று தெளித்தான் ராஜு. "நாலைந்து வருஷமாய் இதேதான். இம்மி கூடத் தவறாது, முன்னே பின்னே மாறாது. இன்ஸ்பெக்ட், முந்தின மூன்று வருஷம் எடுத்த டங்களைப் போட்டுப் பாருங்கள் இதேதான். வருகிற விருந்தாளிகளில் வண்டுமானால் மாறுதல் இருக்கும். காட்சிகளில் மாறுதல் துளியும் கிடையாது."

'வெரி குட்!" தொடையை இரு கைகளாலும் தட்டிக்கொண்டு எழுந்து கொண்டான் நிவாஸ். பிறகு தன் பாண்ட் பையிலிருந்து ஓர் அட்டைப் பெட்டியை எடுத்தான். திறந்தான் நாலைந்து சிறிய காப்ஸ்யூல்கள் இருந்தன. ஒன்றை எடுத்து ராஜுவின் கையில் கொடுத்தான் "கொடிய விஷம் ஜாக்கிரதை"

"என்ன?" அதிர்ச்சியுற்றான் ராஜு

"உன் எதிர்காலமே இதில் தான் இருக்கிறது." நிவாஸின் முகத்தில் ஒரு க்ரூரப் புன்னகை தவழ்ந்தது. "இதிலும், அவள் சாப்பிடும் அந்த வ... துண்டத்திலும்."

"என்ன சொல்கிறாய் நீ?"

"நான் ஒரு ஸயன்டிஸ்ட் ... கமிகல் ஆராய்ச்சிகள் செய்கிறவன் என்பதை மறந்து விட்டாய் போலிருக்கிறது. இது ஒரு ஸ்லோ பாய்ஸன் நானே கண்டுபிடித்தது. என்மீது சந்தேகம் ஏற்படாதபடி உன் எதிரியைக் கொல்லும்"

'கொலையா.

"படையா புயலிலே ... இன்னும்? சுபா ஒரேயடியாகத் தீர்ந்து விட்டால் பிறகு இருப்பது நீ ஒரே ஒரு வாரிசுதான். ஆனால் அதனாலேயே நாளைக்கு உன்மீது சந்தேகம் வரும். அதற்கு இடமில்லாமல் செய்யக்கூடிய அபாரத் திறன் இந்தக் காப்ஸ்யூலுக்கு உண்டு. அதாவது, உள்ளே போன உடனே கொல்லாது. மெதுவாய், பதினைந்து இருபது நாளில் கொஞ்சம் கொஞ்சமாய் ஆளை அழிக்கும். இதை நீ கேக்குக்குள் - அவள் விழுங்குகிற துண்டத்துக்குள் வைத்துவிட வேண்டியதுதான்."

ராஜுவின் முகத்தில் அச்சம் தெரிந்தது. செழியனும் ஜானகிராமனும் அவன் முதுகில் தட்டிக் கொடுத்தார்கள். நிவாஸ் சொல்வது அருமையான திட்டம்.





சிக்மகளூர் தேர்தல் நடைபெற்ற போது, இந்திரா காந்தி வெற்றி பெற மாட்டார் என்று உறுதியாகக் கூறினர் சென்னை தி.நகரைச் சேர்ந்த கோகுசித்ரா ராமானுஜம். "அவர் மட்டும் ஜெயிக்கட்டும். நான்..." என்று பந்தயம் கட்டினர். இந்திரா காந்தி வெற்றி பெற்றார். கோகுசித்ரா, தான் பந்தயம் கட்டியபடி—

என்ன செய்தார்?

69'ம் பக்கம் பார்த்தால் தெரியும்.



பாதுகாப்பு அமைச்சராகப் பதவியேற்றதும் சி. சுப்பிரமணியம் ஒரு கப் காப்பி கொண்டு வரும்படி கூறினர்.

40 நிமிடம் பிடித்தது காப்பி வர. சுப்பிரமணியத்துக்கு மிகவும் கோபம் வந்து விட்டது. ஏன் அத்தனை தாமதம் என்று கேட்டார்.

பி.ஏ. விளக்கினர். செகரேடரியட்டில் அவர்கள் அலுவலகம் உள்ள தெற்கு பிளாக்கில் காப்பி ஓட்டல் இல்லையாம். வடக்குப் பிளாக்கிலிருந்து வரவழைக்க வேண்டியிருக்கிறதாம்.

பாதுகாப்பு அமைச்சர் தனது முதல் உத்தரவைப் பிறப்பித்தார்: "தெற்கு பிளாக்கில், தென்னிந்திய முறையில் காப்பி தயாரிக்கும் ஓட்டல் ஒன்று உடனே நிறுவவும்."

—ஆன்லுக்கர்



இந்த இல்லத்தரசி டெல்லி பல்கலை
கழகத்தில் எம்.ஏ வகுப்பு மாணவியாகப் படி
வருகிறார் பெயர் இந்திரா

எம்.ஏ வகுப்பில் இவருக்
விரிவுரையாளராக இருப்பவர் இவருடை
கணவர். பார்த்தசாரதி.

சாகித்திய அகாடமி பரிசு பெ
எழுத்தாளர் திரு இந்திரா பார்த்தசாரதிதா

கேரி ஆன்!'' என்று உற்சாகமூட்டினர்கள்.

ரூஃப் கார்டனில் கிஷோர் குமாரின் குரல் மெல்லிய இசையாக வெளிவந்து கொண்டிருந்தது. சிற்றுண்டி சுவைத்துக் கொண்டிருந்தவர்கள் பெரும்பாலும் இளம் ஜோடிகள்தான். ஆனாலும் அட்டகாசமான சிரிப்போ உரத்த அரட்டையோ இல்லாமல் தாழ்ந்த குரலில் கண்ணியமாய்ப் பேசிக் கொண்டிருந்தார்கள். அதுகூட வாயால் அல்ல. கண்களால்.

சுபாவின் காலை வினோத்தின் கால் மேஜைக்கடியில் சந்தித்துக் குசலம் விசாரித்தது. ஒரு கால் செருப்பணிந்திருந்தது. மறு கால் செருப்பைத் தற்காலிகமாகக் கழட்டியிருந்தாள். அந்தப் பாதத்தைத் தேடிச் சென்றது வினோத்தின் விரல்கள். பூப்போன்ற அவள் விரல்களை இவன் விரல்கள் கவ்விப் பிடித்து அழுத்தின.

அவன் அவள் முகத்தைப் பார்த்தான். செல்லமாகச் சிணுங்குகிறவள் இப்போது வேறெங்கோ ஞாபகமாக இருந்தாள். ஐஸ் கிரீம் கோப்பையில் ஸ்பூனைச் சும்மா தட்டிக் கொண்டிருந்தது அவள் கை. பார்வை எங்கோ போய்ச் சிக்கி நிலைத்திருந்தது.

அவனுக்குக் கவலையேற்பட்டது ''என்ன சுபா, வந்தது முதலே என்னவோ போலிருக்கிறாய்?''

''ஆ...'' அவள் விழித்துக் கொண்டு சுதாரித்தது ஒரு கவிதையான அழகாக இருந்தது. அவள் கண்கள் போலியாகச் சிரித்தன. ''ஒண்ணுமில்லே வினோத்... ஒண்ணுமில்லையே...''

''ஐஸ்கிரீம் நன்றாயில்லையா?''

ஏன்?... நல்லாத்தானே இருக்கிறது? அருமையாயிருக்கு வினோத்.''

மேஜையின் குறுக்காகக் கையை நீட்டி அவள் கைகளைப் பற்றினான் அவன் மணிக்கட்டைப் பரிவுடன் அழுத்திய பே
அந்த ஒற்றைப் பவுன் வளைய
செங்குத்தாக நின்றது. அந்தக் கால்வ
இடுக்கில் விரலைச் செலுத்தி விஷ
செய்தவாறே அவன் கேட்டான்' ''இ
என்னவோ மனசில் வைத்துக் கொ
மறுகுகிறாய். என்னிடம் சொல்லக் கூடா
சுபா?'

''இன்னதென்று சொல்
கூடிய மாதிரி இருந்தால் உன்னி
எப்போதோ சொல்லியிருப்பே
வினோத்.'' அவள் சிரிப்பில் சோ
கலந்திருந்தது. ''இனம் விளங்காமல்
பாரம் மனசில். என்னவோ
போகிறதென்று மனசுக்குள் ஒரு
எப்போது பார்த்தாலும்...''

''வீட்டோடு இருக்கிறானே
மாமன் மகன் ராஜு, அவன் உன்னி
ஏதாவது வம்பு பண்ணுகிறு
அப்படியானால் சொல்லு, அவனை...''

''நோ, நோ. அவன் என் வழ
வருவது கிடையாது. நடுநடுவே கெ
பிகேகே என்பான். நான் அதை லட்
பண்ணுவதில்லை...'' என்றாள் அவள்.

'பின்னே என்ன? நாளை
ஜம்மென்று பிறந்தநாள் வருகி
குழந்தைப் பிராயம் போய் மேஜராகி
அதன் பிறகு அணைத்திந்திய சு
பயணம்—வெளிநாட்டுப் பயணங்
திரும்பி வந்து இந்த உதவாக்
வினோத்தின் மனைவியாகி...'

அவன் உதட்டைத்
விரல்களால் மூடினாள் அவள். ''வி
உன் மனைவியாக வர நான் கொ
வைத்திருக்க வேண்டும்... இருந்த
என்னவோ ஒரு பயம்... நாளைக்கு...'

''இதோ பார், நாளை
பிறந்தநாள் விழாக்கள் முடிகிற வ
என் ஆணைகளுக்கு நீ கட்டுப்பட்
தெரியுமா? அறிவாளி, லட்சா
பேரழகி, சௌந்தரியப் பெட்டகம்—

விடுவதா என் சுபா மேஜராகிற கோலாகலத்தை! இதோ பார் சுபா, சாப்பிட்டு முடிந்ததும் நாம் நேரே பரஸ்மல் நகைக் கடைக்குப் போகிறோம். அருமையாய் ஒரு நெக்லஸ் பிறகு ஜப்ஜூ ஸில்க் ஸ்டோர் போகிறோம் அங்கிருந்து..'

''ப்ளீஸ் வினோத், ப்ளீஸ்.' அவள் மன்றாடினாள். 'நிஜமாகத்தான் சொல்கிறேன். எனக்கு இதிலெல்லாம் மனசே ஈடுபட மாட்டேனென்கிறது. ஏதோ ஒரு பாரம் இருதயத்தை அழுத்துகிறது. வாழ்க்கையைச் சந்தோஷமாக, நம்பிக்கையுடன் பார்க்க முடியாமல் ஓர் இருட்டான திகில் நெஞ்சை அழுத்துகிறது..''

வினோத் அவளை ஆழத்துடன் பார்த்தான். அவளுடைய கவலை உண்மையானது, ஆழமானது என்று அவனுக்குத் தெரிந்தது ''சுபா, கொஞ்ச நாள் முன்னால் எனக்குக்கூட இப்படித்தான் இருந்தது. ஒரு காரியம் செய்தேன். அதன் பிறகு என் மனசில் தைரியம், தன்னம்பிக்கை எல்லாம் வளர ஆரம்பித்தது. இன்றைக்கு நான் ஒரு சக்ஸஸ்ஃபுல் லாயராக இருக்கிறேன் என்றால் அது ஒரு முக்கியமான காரணம்... அதே வழியை நீயும் பின்பற்றினால். .''

அவள் அவனை நோக்கி முறுவல் பூத்தாள்: ''ஆமாம், உனக்கு என்னென்னமோ கிறுக்குத்தனமான பழக்கங்கள், நடவடிக்கைகள் உண்டே?''

''பார்த்தாயா? எடுத்த எடுப்பிலேயே அவநம்பிக்கையுடன் கிண்டல் பண்ணக் கூடாது.''

'ஸாரி வினோத். விளையாட மாட்டேன். சொல்லு,'' என்றாள் அவள்.

''நிஜமாகவே பார். புரட்சிகரமாக மாறப் போகிறது உன் எதிர்காலம்,'' என்று கூறிவிட்டு அவன் தன் யோசனையை மெல்ல மெல்ல விவரிக்கலானான்.

சுபாவின் பங்களா நிரம்பி வழிந்தது. வண்ண ரிப்பன்களும் பலூன்களும் ஓசையின்றி மோதிக்கொண்டு ஆடின. டேப் ரெகார்டரில் நாதசுர இசை பொழிந்து கொண்டிருந்தது.

வன தேவதையாகக் காட்சியளிக்கும் சுபாவையும் அவளை இடித்துக்கொண்டு கூடவே நடமாடும் வினோத்தையும் பார்க்கப் பார்க்க எரிச்சலாய் வந்தது ராஜுவுக்கு. அது முகத்தில் வெளிப்பட்டு விடாதவாறு எச்சரிக்கையாக விருந்தாளிகளுடன் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தான். இருந்தாலும் அவன் கண்கள் மோசஸ் கொண்டுவந்து வைக்கப்போகும் கேக்கையே படபடப்புடன் எதிர்நோக்கிக் கொண்டிருந்தன.

இதோ அவன் வந்துவிட்டான்

ஹாலின் நடுநாயகமாக இருக்கும் மேஜைமீது வைக்கிறான்.

என்ன இது! மார்பை அடைத்தது ராஜுவுக்கு.

எல்லோரும் படபடவென்று கைதட்ட அவள் மெழுகுவத்திகளை ஊதி அணைத்தாள் பிறகு

'எஸ்'ஸை வெட்டினாள். தோட்டக்காரக் காத்தமுத்துவுக்கு ஊட்டினாள். 'யு', பாட்டி ஜனகம்மாவுக்கு. 'பி'–வினோத் சிரித்துக் கொண்டே விழுங்கினான்.

அடுத்தது 'ஏ' இருக்கவில்லை சமையற்காரன் அந்தண்டை சென்றிருந்தபோது, நிவாஸின் காப்ஸ்யூலை 'ராஜு வெகு ரகசியமாகச் செருகினானே, அந்த 'ஏ' கேக் இருக்கவில்லை.

பதிலாக 'எச்' என்று ஒரு புது



ஐந்து ஆண்டு காலமாகத் திருக்குறளை மலேசிய மொழியில் மொழி பெயர்க்கும் பணியில் ஈடுபட்டு வருகிறார் ஜி. சூசை.

காந்திஜியின் 'சத்திய சோதனை', ஔவையின் நூல்கள், அபிராமி அந்தாதி போன்ற நூல்களையும் மலேசிய மொழியில் ஏற்கெனவே மொழி பெய,த்து வெளியிட்டுள்ளார்.

எழுத்து இருந்தது. அதை வெட்டி அவள் விழுங்கினுள்.

அந்த 'ஏ' எழுத்து கடைசியாக வந்தது. வெட்டி, கையில் வைத்துக் கொண்டு சுற்று முற்றும் பார்த்தாள்.

நழுவ முயன்று கொண்டிருக்கும் ராஜு அவள் கண்ணில் பட்டான்.

''அத்தான்! வாங்க! உங்களுக்குத்தான்—'' என்று கூப்பிட்டாள் அந்தக் கேக் துண்டை நீட்டி.

பேயைக் கண்ட மாதிரி ஏன் ராஜு மிரளுகிருன்? ஏன் திடீரென ஓடுகிருன்?

விருந்தாளிகள் திகைத்துக் கொண்டிருந்தபோது —

''இப்படி அதைக் கொடு,'' என்று துண்டை வாங்கினுன் அருகிலிருந்த விஞேத்.

அழுத்தினுன். விண்டுகொண்டது. உள்ளேயிருந்து விழுந்தது அந்தக் காப்ஸ்யூல்!

பயங்கர நிசப்தம் ஒரு விஞடி.

மறு விஞடி, ''பிடியுங்கள் அந்த ராஜுவை! ஏன் அவன் ஓடுகிருன்?'' என்று பல குரல்கள் சேட்டன.

பிறந்த நாள் அமளிகளோடு போலீஸ் அமர்க்களங்களும் ஒருவழியாய் ஓய்ந்தன.

விஞேத்தின் கையைப் பற்றிக் கொண்டபோது சுபரவின் குரல் தழுதழுத்தது. ''விஞேத்... நீங்கள் சொன்ன யோசனை என் உயிரையே காப்பாற்றிவிட்டது பார்த்தீர்களா?''

அவன் அவள் தலையை வருடிக் கொடுத்தான். ''ஆமாம்.. நான் கொஞ்சம்கூட எதிர்பார்க்கவில்லை...''

''மனக் கலக்கம் தீர்ந்து நல்லது ஏற்பட வேண்டுமானுல் என் பெயரில் ஸ்பெல்லிங்கை மாற்றிக்கொள்ளுவது நல்லது என்று சொன்னீர்கள். எஸ்—யு—பி—ஏ என்பதற்குப் பதில் எஸ்—யு—பி—எச்—ஏ என்று வைத்துக்கொள்ளச் சொன்னீர்கள். இன்று காலையில் மோசஸ் கேக் தயாரித்து வைத்திருப்பதைப் பார்த்தேன். இன்றைக்கே மாற்றிவிடலாமென்று தோன்றியது. ஒரு 'எச்' எழுத்து தயாரித்து நடுவே சேர்க்கச் சொன்னேன். 'ஏ' இடம் மாறிவிட்டது—என்னைக் கொல்லவிருந்த மாத்திரையும் விலகிவிட்டது...''

''சும்மா இல்லை, மிஸ் எஸ்யூபிஎச்ஏ! எல்லாம் சாஸ்திரமாக்கும்!'' என்றுன் விஞேத் வெற்றிப்பெருமிதத்துடன்.



மன்னார்குடி இராஜகோபால சுவாமி கோயிலில், 17.8.79 காலை சி. பன்னீர்செல்வம் என்ற பி.ஏ. பட்டதாரி இளைஞர், மன்னார்குடி சர்வோதய நூற்பு நிலையத்தில் பணிபுரியும் கமலா என்ற பெண்ணை மணந்து கொண்டார்.

பன்னீர்செல்வம் ஓர் ஆயுள் தண்டனை பெற்ற கைதி. ஒரு குடும்பப் பூசலில் சந்திரகாசன் என்பவரைக் கொலை செய்ததாகக் குற்றஞ் சாடடப்பட்டு ஆயுள் தண்டனை பெற்றவர்.

பன்னீர் செல்வத்தின் தாயார் தன் உடல் நலம் குன்றி வருவதால், தன் மகனுக்குத் திருமணம் செய்து வைக்க வேண்டும் என்று அரசுக்கு மனுச் செய்திருந்தார். அதன் பேரில் பன்னீர்செல்வம் பரோலில் 15 நாட்கள் வந்து கல்யாணம் செய்து கொண்டார்.

"திருச்சி மத்திய சிறையில் மருத்துவத் துறையினருக்கு உதவியாளனுக இப்போது நான் இருக்கிறேன். விடுதலையாகி வெளியே வந்ததும் மருத்துவ உதவியாளனுக வேலை தேடிக் கொண்டு நல்ல முறையில் குடும்பம் நடத்துவேன்,'' என்றுர் பன்னீர்செல்வம்.

தகவல்: து.ப. நடலம்



ஸுமீத் இன்னும் என்னவெல்லாம் செய்கிறது பாருங்கள்
உலர் மசாலாவை
3½ நிமிடங்களில் அரைக்கிறது!
ஊறவைத்த பருப்பை
3½ நிமிடங்களில் அரைக்கிறது!
காரெட்டை விநாடிகளில்
சீவுகிறது!
லஸ்ஸி பழச் சாற்றை ஒரே
நிமிடத்தில கடைகிறது.
பிழிகிறது!
2 நிமிடங்களில் சட்னி
அரைத்து விடுகிறது!
2 நிமிடங்களில மாவு பிசைகிறது.
கேக் மாவை 3½ நிமிடங்களில்
கலக்கிறது!
இன்சுவையுள்ள ஐஸ் தயாரிப்புகள்: பனிக்கட்டியை கண்ணிமைப்பதற்குள் பொடியாக்கி, பல்வேறு சுவைகளுடன் பரிமாற உதவுகிறது. காக்டெய்ல்களுக்கு ஐஸ் துருவல்கள் தயாரிக்கவும் உதவுகிறது
தேங்காய் பர்ஃபி: உங்களுக்குப் பிடித்த திண்பண்டங்கள் தயாரிக்க, தேங்காயை சில விநாடிகளிலேயே துருவி எடுக்கிறது. காரெட் ஹல்வாவும், முந்திரிப் பருப்பு, அக்ரோட்டு, பாதாம் பருப்புடன் கூடிய இதர திண்பண்டங்களும் தயாரிக்க இவ்வாறே பயன்படுகிறது.
ஸுமீத்®
ங்களுக்காக முழுமையான
கிட்சன் மெஷின்
வசமாக இயக்கிக் காட்டுகிறோம்: எமது சலுகைகளை பாருங்கள்: ஸுமீத் இயங்குவதைக் கண்ணெதிரே பாருங்கள்.
எல்லா உறுப்புகளும்
பேடென்ட் செய்யப்பட்டுள்ளன
OBM/2233RR.TAM
யாரிப்பாளர்கள்: இந்தியா பவர் கண்ட்ரோல் அண்ட அப்ளையன்ஸஸ் கம்பெனி, இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை 600058; போன்: 633340
வெளிநாட்டு சேவை நிலையங்கள்: மெஸர்ஸ் எலெட் ரேடியோ அண்ட் என்ஜினீயரிங் பிரைவேட் லிமிடெட, 26, கெயஸர் ஸ்ட்ரீட், கொழும்பு, ஸ்ரீலங்கா: போன: 29744.
மெஸர்ஸ் டொமஸ்டிக அப்ளையன்ஸஸ் இன்டர்நேஷனல், ஸுமீத் அப்ளையன்ஸ் சென்டர், 401, லாண்ட்ஸ அவின்யூ யூனிட கெ-14, டோரோன்டோ, ஒன்டாரியோ, கெனடா: -3S2, போன்: (416) 421-2997. மெஸர்ஸ மலேஷியன் கோ-ஆபபரேட்டிவ் ஏஜென்ஸீஸ் சொசைட்டி லிமிடெட, நெ-19, ஜாலன, 8/1D, பாட்டலிங ஜாயா, (கோலாலம்பூர்), மலேசியா. போன்: 774030/775304.




கை கட்டி இருக்கும்
வீரத்தில் ஒரு சவால்.

# ஒரு பெண் மேஜராகிறாள் II

''ஓரளவுக்குத்தான் நான் உங்க கண்ட்ரோலை எல்லாம் சகிச்சுப்பேன்... ஓவராப் போச்சு,... நான் என்ன செய்வேன் என்கிறது எனக்குத் தெரியாது... ஏன்னா, எனக்குப் பதினெட்டு வயசாச்சு... நான் மேஜராயிட்டேன், ஆமாம்!''

அப்பா விதிர் விதிர்த்து நிற்கிறார். அம்மா உடம்பு பதறப் பதற அப்பாவுக்குப் பின்னாடி நிக்கறா!

அன்னைக்குச் சாயங்காலம் ஆபீசிலேர்ந்து வர லேட்டாயிட்டுது எனக்கு.

''ஏண்டி லேட்?''டுன்னு கேட்டாள் அம்மா.

''பஸ்ஸே வரலே!''ன்னேன்.

''பஸ் வராட்டா என்ன, எவன் மோட்டார் பைக்கிலேயோ ஏறிட்டு வர வேண்டியதுதானே?''ன்னார் அப்பா.

'சுர்' என்று குத்தியது எனக்கு. சரவணனோட புல்லட்டிலே நான் பின்னாலே உக்காந்து அவன் இடுப்பை என் வலது கையாலே சுத்திப் பிடிச்சுட்டு என் மார்பு அவன் முதுகிலே உரசி கிளுகிளுப்பூட்ட நான் வந்தது அப்பாவுக்கு எப்படித் தெரிஞ்சுது?

பயப்படலே நான். என்னுடைய சம்பாத்தியத்தை எதிர்பார்த்திட்டிருக்கிறவங்க ரெண்டு பேரும். பெண்ணைப் பகைச்சிக்கிட்டா நம்ம வயத்திலே மண் விழுந்துடுமேன்னு இவங்கதான் பயப்படணும்! எனக்கென்ன, சரவணன் இருக்கான். சன் கிளாஸும் [illegible]ல்ஸும், ரஜனி ஸ்டைலுமா!

''பஸ் கிடைக்காமல் தவிச்சு உடனே வீட்டுக்கு எப்படியாவது போயாகணுமேன்னு நடுத்தெருவிலே நான் பயந்து நடுங்கிச் செத்தது யாருக்குத் தெரியும். சரவணன்—எதிர் வீட்டுப் பிள்ளை—லிப்ட் கொடுத்தான். வந்தேன். நௌவ டேஸ் இட் இஸ் காமன்!'' என்று படபடத்தேன்.

இன்னொரு நாள் நான் சாப்பிடலே. பசிக்கலேன்னேன்.

''பசிக்காதுடி அவளுக்கு. ஸ்பெஷல் மசாலாவும் உருளைக் கிழங்கு போண்டாவும் வெங்காய பஜ்ஜியும் காப்பியும் ஐஸ் க்ரீமும் சாப்பிட்டுட்டு வந்திருக்காடி இப்போத்தான் ஹோட்டலிலே,''ன்னார் அப்பா.

நிஜம்தான் அது. சரவணனோட கீதா கேப்லே அவன் மடியிலே சாஞ்சுட்டே அவர் சொன்ன அயிட்டங்களைச் சாப்பிட்டுட்டுத் தான் வந்தேன். அது அப்பாவுக்கு எப்படித் தெரிஞ்சுது?

அந்த ஹோட்டல்லே வேலை கெடைக்குமான்னு கேக்க வந்திருப்பாரோ அப்பா?

''அப்படித் தான் சாப்பிடுவேன். சாப்பிட்டா என்ன? சங்கர்கூடச் சாப்பிடலாம், சாயிகூடச் சாப்பிடலாம். சரவணன்கூடச் சாப்பிட்டால் என்னவாம்? நௌவ டேஸ் இட் இஸ்...''

''சங்கரியும் சாயியும் பொம்மனாட்டிடி. அந்தச் சரவணன் ஒரு ஆம்பிளை. அவன் உன்னையே ஒரு நாளைக்குச் சாப்பிட்டுடுவான். தின்னப்போற ஜந்துவை நிறைய ஆகாரம் போட்டு மேல் நாட்டிலே கொழுகொழுன்னு வளர்ப்பாங்களாம். ஒரு நாளைக்கு அதை விருந்தாக்கிடுவாங்களாம்,''ன்னு சொல்றாள் அம்மா.

மறுநாளையிலிருந்து அப்பா அம்மாவோட கண்ட்ரோல் அதிகமாயிட்டது. நான் வாசல் பக்கமே வரக் கூடாது. ஜன்னல் கதவை, வாசல் கதவை எல்லாம் மூடி வைக்கிறாங்க. ஆபீஸ் போறப்போ கூடவே வந்து என்னைப் பஸ்ஸிலே ஏத்தி விடறார் அப்பா. பஸ்ஸிலே இருக்கிற ஒருத்தர்கிட்டே என்னைக் கொஞ்சம் பார்த்துக்கச் சொல்றார். ஆபீஸ்லே நான் இருக்கேனான்னு திடீர்னு போன் பண்ணி விசாரிக்கிறார். என் ஃபிரண்ட்ஸ்கள்கிட்டே நான் எப்போ சாயங்காலம் ஆபீசுலேர்ந்து புறப்படறேன்னு கேட்டு வைச்சுக்கறார்.

எனக்கு ஆத்திரம் ஆத்திரமாக் கோபம் கோபமா வருது. நான் சரவணனைக் கல்யாணம் பண்ணிக்கக்

சுகந்தி

கூடாதாம். எந்த விதத்திலேயும் எனக்கு அவன் தகுதியில்லையாம். அவன் ஏழாம் கிளாஸாம், நான் பி.ஏ.வாம். நான் எண்ணூறு ரூபாய் சம்பளம் வாங்கறேனும், அவன் ரேடியோ ரிப்பேர்க் கடை வைச்சுட்டு இருக்கானும். நான் சிவப்பாம், அவன் கறுப்பாம். எல்லாத்துக்கும் மேலே அவன் யாரோவாம், நான் யாரோவாம்!

அழுகை அழுகையா வருது எனக்கு.

''உங்களுக்குப் பயந்துட்டிருக்க நான் ஒண்ணும் சின்னப் பெண்ணில்லே. எனக்குப் பதினெட்டு வயசாச்சு. நான் மேஜராயிட்டேன். ஆமாம்!''

அப்பா அரண்டு போயிட்டது தெரிகிறது. அம்மாவும் தான். முகத்தை மூடிட்டு அழறாள் அம்மா. அப்பா இடிஞ்சு போய் உட்கார்ந்துட்டார் மூலையிலே.

பெரிய சாம்ராஜ்யத்தையே ஜெயிச்சுட்ட மாதிரி இருக்கு. ஐ'ம் எய்ட்டீன். இப்போ மேஜர்.

இந்த நெனைப்பே—அப்பா அம்மாவோட வீழ்ச்சியே—என்னைத் தலை நிமிர்ந்து நடக்கச் செய்கிறது ரோட்லே!

''குட்டி என்ன ஷோக்கா இருக்கா பாருடா!'' என்கிறான் ஒருவன்.

''பதினெட்டு வயசு இருக்கும்டா. லட்டுதான்!'' என்கிறான் மற்றவன்.

''இந்த வயசுக் குட்டிதாண்டா ஷோக்கா இருப்பா!''

''இப்போ விட்டா எங்கே கிடைக்கப் போகுது இது?''

'தாங்கள் சாப்பிடப் பே ஜந்துவை மேல் நாட்டிலே நல்ல ஆகா போட்டுக் கொழு கொழுன் வளர்ப்பாளாம்,'ன்னு அம்மா சொன் மனசுலே கேக்கறது. கணீரென் கேக்கறது.

ஓடறேன், ஓடறேன்!

யாரோ ரோடைக் கடக் மாதிரி இருக்கு. அழுக்கு அரைக்க சட்டை, நாலு முழ வேஷ் செருப்பில்லாத கால், ஷேவ் செஞ்சுக்க முகம்... அப்பா... அப்பா... அப்பா...

பதினெட்டு வயதுக்காரி பின்னால் துரத்துகிறார்கள்.

நான்கு வயதுக் குழந்தையா ''அப்பா, அப்பா,'' என்று கத்திய அவரை நோக்கி ஓடுகிறேன்.

தப்பி விடுவோம் என் நம்பிக்கை வந்தது எனக்கு. கற்பு போகாது என்ற நம்பிக்கை வந்தது.

அப்பாவும் என் குரலைக் கே ரெண்டு கையையும் நீட்டி, ''ர ரமா,''ன்னு அழைச்சிட்டே ஓடி வர்றா

சின்னக் குழந்தையா அவரே அணைப்பிலே விழுந்தப்போ பெரியவளானேன்னு தோணுகி எனக்கு.

## ஜாதகம்





தமிழக முதலமைச்சர் நான்கு ஜாதகங்கள் வைத்திருக்கிறாராம். அதில் அவருடைய உண்மையான ஜாதகம் எது என்பது அவருக்கு மட்டுமே தெரியுமாம்.

இத்தகவலை 'சண்டே' பத்திரிகை வெளியிட்டிருக்கிறது.

—வி. ந. ஸ்ரீதரன்





# என்னடி மீனுட்சி?

ஸ்ரீ ப்ரியாவின் படங்களுக்குள்ளேயே மிகக் குறைவாக அவர் பேசியுள்ள படம் இதுவாகத் தானிருக்கவேண்டும். நாக்கில் இஞ்ச் டேப் வைத்துக்கொண்ட மாதிரி அவ்வளவு அளவான வார்த்தைகள். அதுவே ஓர் ஆழம் கொடுக்கிறது

சிவகுமார் நல்ல பாஸ். (சபாஷா என்பது வேறு விஷயம்) ரோசாப்பூக்காரிக்கு எதிர் துருவம்.

அது நியாயமா, இது நியாயமா என்று கேள்விக் கணேகளே(!!) வீசி வழுக்கி விழுந்த (வழுக்கி விழுவதையே தொழிலாகக் கொண்ட) அண்ணியை வீட்டுக்குள் அழைத்துக் கொள்ளும்படி பண்ணிவிடுகிருர். வீக்கான முடிவு—வலுவ்வாகச் செய்திருக்கிருர்.

''வெள்ளைப் பேப்பராக இருந்தேன். கறைப்படுத்தப்பட்டு இப்போ எல்லாரும் படிக்கிறப்பலே ஆயிட்டேன்.'' தன் கதையைக் கச்சிதமாக சிவகுமாரிடம் மீனுட்சி பிட்டு வைக்கிற இடத்தில் வசனகர்த்தா நன்ருக ஊன்றுகிருர்.

அப்புறம்—

''என்னைப் பற்றிச் சந்தர்ப்பம் வர்றபோது தெரிஞ்சுக்கலாம்.''—ஸ்ரீப்ரியா. ''ஏன், இதுகூடச் சந்தர்ப்பம்தானே?''—சிவகுமார். ''இது சந்தர்ப்பம் இல்லே, ஜவுளிக் கடை.''—ஸ்ரீப்ரியா

எங்கே இடைவேளை விடவேண்டுமென்று தெரிந்துவிட்டிருக்கிருர்கள்.

கராத்தேக்கு வெறும் உறுமல் மட்டும் தான் உண்டு என்று யாரேனும் எண்ணியிருந்தால் அந்த எண்ணத்தை மாற்றிக் கொள்ளவும். மனேரமா ஒரு குத்துக் குத்துமுன் ஏதோ ஒரு மந்திரம் (சுலோகம்?) முணுமுணுக்கிருர். கும்தலகுடி குமாபும் என்கிற மாதிரி இருக்கிறது. முழு சுலோகம் அறிய விரும்புகிறவர்கள் மனேரமாவுக்கு எழுதவும். (அல்லது சுருளியிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளவும்.)

திடீர் திடீரென்று எதிர்பாராத காட்சிகளாய் அடுக்கிப் படம் பார்ப்பவருக்கு விறுவிறுப்புக் காட்டியிருக்கும் விதத்தில் படத்துக்கு வெற்றி. அந்தக் காட்சிகளுக்கான காரணங்களில் நம்பும்படியான விளக்கம் கொடுக்காதபோது மிஞ்சுவது ஏமாற்றம்தான்.



# ஒரே பால் இரண்டு பாத்திரம்

"அனாதையாகக் கிடந்த உன்னை இவ்வளவு காலம் வளர்த்து வந்தவன் நான். இல்லை நீ கிடந்த குப்பைத் தொட்டியில் மேலும் கொஞ்சம் குப்பையைப் போட்டு நான் மூடியிருந்தால், அப்போதே உன் கதை முடிந்து போயிருக்கும். மரியாதையாக நான் சொல்வதற்கு நீ ஒப்புக்கொள்," என்று பயமுறுத்தினான் விஜயசிங்.

"அப்படியே செய்திருக்கலாமே! இப்படி வளர்த்துவிட்டு இந்த அநியாயத்துக்கு உடன்படச் சொல்கிறீர்களே? யாரோ ஒரு பிச்சைக்காரனுக்காவது கட்டிக் கொடுங்கள். ஒருவனுக்கு வாழ்க்கைப்பட்டவள் என்ற பெயரோடு, பிச்சை எடுத்தாவது வாழுவேன்," என்று கெஞ்சினாள் தேவி.

"உனக்கு தேவி என்று பெயர் வைத்திருப்பதால் மிகவும் பவித்திரமானவள் என்று கருதிவிடாதே! ஐந்துபேரை மணந்து கொண்ட பாஞ்சாலி தேவி இல்லையா? நான் உன்னைக் கெடுக்கப் போவதில்லை. அதாவது, கெடும்படி விடப் போவதில்லை. ஒரு பணக்காரனுக்கு உன்னைக் கட்டி வைப்பேன். அவன் சாந்தி முகூர்த்தம் செய்யும் முன்னாலேயே, அவன் போட்ட நகைகளோடு உன்னைக் கூட்டிக் கொண்டு ஓடிவிடுவேன். இதில் சொத்தும் கிடைக்கிறது; நீயும் கெடுவதில்லை. அப்படித்தான் இப்போது ஒரு மாப்பிள்ளை பார்க்கிறேன். அழாதே; ஆத்திரப் படாதே. நான் உன்னைக் காப்பாற்றுவேன்; நீ என்னைக் காப்பாற்று," என்று சொல்லிவிட்டு வெளியேறினான் விஜயசிங்.

நாற்காலியில் கை வைத்த படியே விக்கி விக்கி அழுதாள் தேவி.

விஜயசிங், 'சிங்' என்று பெயர் வைத்துக்கொண்டானே தவிர, அவனும் ஒரு தமிழன் தான். மதுரை

கண்ணதாசன்

மாவட்டத்தைச் சேர்ந்தவன். அவனுக்கு எட்டு வயதாக இருக்கும் போது குடும்ப கஷ்டம் தாங்காது, களளத்தனமா ரயிலேறி வடக்கே போயவிட்டா இங்குமங்குமாக அலைந்து திரி கடைசியில் மத்தியப் பிரதேசத்தி கொள்ளைக்காரர்களிடத்தில் சிக்கி கொண்டான். அவர்கள் அவனது பெய விஜயசிங் என்று மாற்றிப் பயிற் கொடுத்தார்கள்.

பதினைந்து வருஷங்க அவர்களோடு வசித்துவிட்டுக் கைநிறை பணத்தோடு சென்னைக்கு வந்த விஜயசி அடையாறு காந்தி நகரில் ஒ பிரம்மாண்டமான பங்களான வாடகைக்கு எடுத்தான். அவனோடு கூ இரண்டு மத்தியப் பிரதேச கொள்ளைக்காரர்களும் வந்திருந்தார்க இந்த மூவரும் தங்களுக்குள் இந்தியிலேயே பேசிக் கொள்வார்க அதனால் இவர்களை அக்கம் பக்கத்தவர்க வடநாட்டுக்காரர்கள் என் நினைத்துவிட்டார்கள்

அவர்கள் வாங்கிய காரை அங்கிருந்த பரபரப்பையும் பார்த் அவர்கள் கோடீஸ்வரக் குடும்பத்தி என்றே மற்றவர்கள் நினைத் விட்டார்கள்.

இந்த நிலையில் தா விஜயசிங்கின் பங்களாவுக்கு எதிரே இரு குப்பைத் தொட்டியில் பத்து நாட்க ஆகியிருந்த ஒரு இளம் சிசு அழுதுகொண் கிடந்தது.

அதிகாலையில் உலாத்துவதற்கா வெளியே வந்த விஜயசிங் அந் சப்தத்தைக் கேட்டுப் பரிதாபப் பட அந்தக் குழந்தையை எடுத்து வளர் ஆரம்பித்தான். அதற்கென்று ஒ தாதியையும் நியமித்தான்.

இளம் விதவையான அந்தத் த மிகவும் அழகாக இருப்பாள். அ கணவன் இறக்கும்போது ஆறு மா கர்ப்பிணி. அடுத்த நான்கு மாதங்க

குழந்தை பிறந்து பத்து நாட்களிலேயே இறந்து விட்டது. ஆகவே பால் கொடுக்கும் சக்தியுடையவளாக இருந்தாள்.

குழந்தை வளரவளர அந்தத் தாதி வசுந்தராவின்மீது விஜயசிங்குக்குக் காதலும் வளர்ந்து அவளை மனைவியாக்கிக் கொண்டான்.

கொள்ளைக்கார விஜயசிங் கடத்தல் பொருள்களை வாங்கி விற்றுப் பணம் திரட்ட ஆரம்பித்தான். ஆனால் குழந்தை தேவியை மட்டும் ஒரு நோக்கத்துடனேயே வளர்த்தான்.

அந்த நோக்கம்தான் அவளை ஒவ்வொருவருக்காகக் கட்டி வைத்துப் பணம் பறிப்பதென்பது.

சென்னையின் மிகப் பெரிய ஹோட்டல் ஒன்றில் வந்து தங்கியிருந்தார் கோவையைச் சேர்ந்த இளம் மில் அதிபர் ராயப்பன். ஆடம்பரப் பிரியர், அழகை ரசிப்பதில் வல்லவர். அதற்காக எவ்வளவு வேண்டுமானாலும் செலவிடுவார். தனக்குத் தோதான பெண் கிடைக்கும் வரை திருமணம் செய்து கொள்வதில்லை என்று சபதம் செய்திருந்தார்.

தானும் ஆடம்பரமாக உடையணிந்துகொண்டு, தன் மகளையும் அலங்காரம் செய்யச் செய்து அந்த ஹோட்டல் விழாக்களுக்கு அழைத்து வருவான் விஜயசிங்.

தேவி உண்மையிலேயே ஈடு இணையில்லாத அழகிதான். இலக்கியங்களில் வருணிக்கப்படுவதுபோல் அவள் இடையும் நடையும் கண்கொள்ளாக் காட்சியாகும். மேகங்கள் வானத்தில் அசையாமல் நின்றுவிட்டால், இந்திரன் அவளைக் கண்டு சொக்கிவிட்டதாகக் கொள்ள வேண்டும். இதுவரை எந்தச் சினிமாவிலும் அந்தகைய பேரழகி வந்ததில்லை.

பலர் அவனிடம் பேரம் பேசிப் பார்த்தார்கள். 'மூன்று லட்சம் ரூபாய் ரொக்கம்; இரண்டு லட்ச ரூபாய் நகை' என்ற பிடியிலேயே அவன் இருந்தான். சிலர் தயங்கினுர்கள், பணம் இல்லாத சிலர் மயங்கினுர்கள்.

துணிந்து இறங்கியவர் கோவை மில் முதலாளி ஒருவரே.



வருகின்ற மடை பெரிதாக இருந்தால் போகின்ற மடை பெரிதாகத்தானே இருக்கும்! எப்படிப் பணம் வந்தது என்று தெரியாமல் வரப் பெற்றவர்கள், எப்படிச் செலவழிப்பது என்று தெரியாமல் செலவழிக்கிறார்கள்.

மாப்பிள்ளை அவளை நன்றாகக் கவனிக்கும்படி ஒளிவிளக்கின் முன்னால் நிறுத்திக் காட்டினார் மாமனார்.

மாப்பிள்ளை மணமகளையும் கவனித்தார்; மாமனாரின் பங்களாவையும் கவனித்தார். எங்கும் ஒரே சாமி படங்கள்; பூஜை அறைகள். நம்பிவிட்டார் மில் அதிபர் ராயப்பர்.

ஆனால் குலம் கோத்திரம் பார்க்கும் வீட்டார் ஒத்துக் கொள்ள மாட்டார்களே? ரகசியமாகத் திருமணத்தை முடிக்கத் திட்டமிட்டார். பணத்தைக் கொண்டுவந்து இறைத்தார்.

திருமணம் மணமகள் வீட்டிலேயே. உறவினர்கள் யாரும் வரவில்லை. உற்ற நண்பர்கள் வந்திருந்தார்கள், சாந்தி முகூர்த்தம் ஐந்து நட்சத்திர ஹோட்டலில்!

புறப்படுவதற்கு முன்னால் மணமகனும், மணமகளும் பால் பழம் சாப்பிட்டார்கள். கொஞ்ச நேரத்தில் மணமகன் அப்படியே மயங்கி விழுந்தார்.

'பூ மயக்கம்' என்றார்கள். ஏதோ ஒருவித வலிப்பு என்றார்கள். நண்பர்கள் எல்லோரும் சேர்ந்து அவரை ஒரு ஆஸ்பத்திரிக்குத் தூக்கிச் சென்றார்கள்.

மறுநாள் காலையில் கண் விழித்த மணமகன், தான் ஆஸ்பத்திரியில் இருப்பதை உணர்ந்தார். தன் மனைவியைப் பார்க்க ஆசைப்பட்டார்.

ஆனால் சென்று வந்தவர்கள் வீடு பூட்டிக் கிடப்பதாகச் சொல்லிவிட்டார்கள்.

''அவர் எனக்குத் தாலி கட்டிவிட்டார். நான் அவரை விரும்புகிறேன். தயவுசெய்து என்னை அவரிடமே சேர்த்துவிடுங்கள். உங்கள் காலில் விழுந்து கும்பிடுகிறேன்,'' என மன்றாடினாள் தேவி.

''அதற்கல்ல நான் உன் வளர்த்தது,'' என்றான் விஜயசிங்.

வளர்ப்புத் தாய் வசுந்தரா ச கலங்கினாள். அவளாலேயே இ வேதனையைத் தாங்கிக் கொ முடியவில்லை. 'இதைவிட இந்தப் பெ தொழில் செய்தே சம்பாதிக்கலாமே இப்படியும் ஒரு கொடுமையா?' என கலங்கினாள், அவள்.

கார் ஊரெங்கும் சுற்றிவிட் கல்கத்தா விமானம் புறப்படுவதற் சிறிது நேரம் முன்பு, விமா நிலையத்துக்குள் நுழைந்தது.

வெறும் பணப்பெட் நகைப்பெட்டியோடு மட்டும் அவர்க அழைத்துக் கொண்டு விமானத் ஏறினான் விஜயசிங்.

இது கல்கத்தா நகரம்.

கல்கத்தாவின் மிகப் பெ ஹோட்டலுக்குள் அவர்க நுழைந்தார்கள். நாளொன்றுக்கு ஐ ரூபாய் வாடகையுள்ள 'சூட்' ஒன் எடுத்தார்கள். அவனது சகாக் இருவரும் வேறொரு அறையில் தங் கொண்டார்கள்.

கல்கத்தா ஹோட்டலில் இ நேரத்து நடன விடுதி பிரசித்தமான அங்கே ஆட வருகிறவர்களும் உண்டு; ப வருகிறவர்களும் உண்டு.

முதல் நாள் வெறு பார்வையாளனாகக் குடும்பத்தோடு செ விஜயசிங் இரண்டாவது நாள் தா எழுந்து, ''நாங்கள் தென்னிந்தியர்க என் மகள் அழகாகப் பாடுவாள்'' என அறிமுகப்படுத்திக் கொண்டா எல்லோரும் கை தட்டினார்கள்.

மகளைக் கைத்தாங்கலா கொண்டு போய் மைக்கைக் கையி கொடுத்து நிறுத்தினான். வேண்ட வெறுப்பாகப் பாட ஆரம்பித்தாள், அவ அதிலும் அவள் பரிபூரண ஜோதிய ஜொலித்தாள்.

''முதல் தடவையா என் கதை பிரசுரமாகி இருபது ரூபாய் நோட்டு வந்ததுங்க.''

''பேஷ்! என்ன பண்ணீங்க அதை?''

''சந்தோஷம் தாளாமல் அப்படியே கிழிச்சுத் தின்னுட்டேன்.''

—கோ. இல. நாராயணன

ஆங்கிலத்தில் ஒருவருக்கொருவர் அவளைப் பற்றி வருணித்துக் கொண்டார்கள். வந்திருந்த பெண்கள் எல்லோருமே பொறாமைப்பட்டார்கள்.

ஆனால் அவர்களிடையேயும் ஒரு தமிழர் ஆசையோடு ரசித்தார் அவள் அழகை. கண் கொட்டாமல் பார்த்தார். விஜயசிங்கின் அருகிலே அமர்ந்தார். விபரங்களை விசாரித்தார்.

"மூணு லட்சம் சீர். இரண்டு லட்சம் நகை. ஜாதி பற்றிக் கவலை இல்லை," என்றான் விஜயசிங்.

அந்த இடத்திலேயே தயாராக இருந்தார் அவர். அவரும் கோவையைச் சேர்ந்த ஒரு மில் முதலாளியே. பெயர் சென்னியப்பன். பார்ப்பதற்கு மிகவும் அழகாக இருப்பார்.

வேறங்கே அப்படி இப்படிப் பேசுவதற்கு என்ன இருக்கிறது? அதுவும் ரகசியத் திருமணம்தான் என்பதில் விஜயசிங்குக்கு ஒரே மகிழ்ச்சி.

தட்சிணேஸ்வரம் கோவிலில் திருமணம். கிராண்ட் ஹோட்டலில் சாந்திமுகூர்த்தம் என்று முடிவாயிற்று.

எல்லாம் தான் நினைத்த மாதிரியே நடக்கிறது என்பதால், விஜயசிங் ஒரே உற்சாகமாக இருந்தான். பணத்தை எங்கே வைப்பது என்றே அவனுக்குத் தெரியவில்லை; அப்படி விளையாடினான்.

உறவினர்கள் யாரும் இல்லாமலேயே திருமணம் நடந்தது. அது விஜயசிங்குக்கு அடுத்த வாய்ப்பாகப் போய்விட்டது.

வழக்கம் போல் மணமகனுக்குப் பால் பழம் தரப்பட்டது.

அதற்கு முன்னாலேயே தேவி தன் செவிலித் தாய் மூலமாக ரகசியச் செய்தியைச் சென்னியப்பனுக்குச் சொல்லிவிட்டாள்.

சென்னியப்பன் பாலைச் சாப்பிடுவதுபோல் நடித்துக் கீழே வைத்து விட்டான்.

விஜயசிங் சடங்கு என்றான்; சம்பிரதாயம் என்றான். சென்னியப்பன், "எனக்குச் சர்க்கரை ஒத்துக் கொள்ளாது," என்று கூறி விட்டான்.

ஏமாற்றுக்காரர்கள் எப்போதாவது தாங்களும் ஏமாறுவார்கள் என்பது அப்போது நிரூபிக்கப்பட்டது.

கோவிலை விட்டுப் புறப்படும் போது தேவியையும், செவிலித் தாயையும் தன்னுடைய காரில் ஏற்றிக் கொண்டான் சென்னியப்பன்.

அவனுக்குக் கல்கத்தாவிலேயே ஒரு ஆபீஸும் காரும் உண்டு. அந்த ஊழியர்களும் கூட இருந்தார்கள்.

இரவு அவளை ஹோட்டல் அறையிலேயே தீர்த்துக் கட்டுவது என்று முடிவு செய்தான் விஜயசிங். ஆனால் அவன் காரில் ஏறிப் பின்னால் வருவதற்குள்ளாக, சென்னியப்பன் கார் பறந்துவிட்டது.

காரில் கணவன் அருகில் உட்கார்ந்திருக்கும் போதே தன் கதையையும், இனி நடக்கப் போவதையும் அவனிடம் சொல்லி, தன்னைக் காப்பாற்றும்படி வேண்டினாள், அவள்.

கார் ஹோட்டலுக்குச் செல்லவில்லை. நேரே விமான நிலையத்தில் நுழைந்தது. அங்கே புறப்படத்

---

## ராஜம்மா

**காலம் சென்ற எழுத்தாளர் வி. ஆர். ராஜம்மாவின் குடும்பத்துக்காகக் கீழ்க்கண்டோர் நிதி உதவி செய்திருக்கிறார்கள்:**

தங்கம் ஸ்ரீனிவாசன், சென்னை—18 ரூ. 200; மணிமேகலை தமிழ்வாணன், சென்னை—40, ரூ. 51; காந்திமதி விஸ்வநாதன், சென்னை—18 ரூ. 50; சரஸ்வதி ஸ்ரீனிவாசன், சென்னை—18 ரூ. 50; லக்ஷ்மி ஜெயராமன், சென்னை—18 ரூ. 50; விஜயலட்சுமி நாராயண், சென்னை—18 ரூ. 15; ரமா பிரபாகர், சென்னை—18 ரூ. 10; சாந்தா சுப்பிரமணியன், சென்னை—18 ரூ. 10; கோமதி ராமனாதன், சென்னை—18 ரூ. 10; ஜெயம் சீதாராமன், சென்னை—18 ரூ. 10; சாரதா பஞ்சாபகேசன், சென்னை—18 ரூ. 10; என். பாலு, திருச்சி-13 ரூ. 5; கற்பகம் நடராஜன், சென்னை—18 ரூ. 5; மீனா ராமஸ்வாமி சென்னை—18 ரூ. 5; பிச்சம்மாள் வெங்கட்ராமன், சென்னை—18 ரூ. 5.

தயாராக நின்ற சென்னை விமானத்தில் அவசர அவசரமாக டிக்கெட் எடுத்து அவர்கள் இருவரையும் ஏற்றிக்கொண்ட சென்னியப்பன், ஹோட்டல் கணக்கைத் தீர்க்கும்படி ஆபீஸ் ஊழியர்களிடம் சொல்லி விட்டான்.

விமானத்தில் அவனோடு மிக உற்சாகமாகப் பழகி வந்தாள், தேவி. ஆனால் முன்பு தன்னை மணந்தவன் பற்றிய விபரங்கள் எதையும் தரவில்லை. அந்தக் கசப்பான உண்மை அவன் மனத்தில் களங்கமாக விழ வேண்டாம் என்று அவள் கருதினாள்.

ஹோட்டல் வாழ்க்கையே விதிக்கப்பட்டிருந்த அவளுக்கு, சென்னை ஹோட்டல் ஒன்றில் சாந்தி முகூர்த்தம் நடைபெற்றது. அந்த இரவின் இனிமையைப் பிறர் வருணிக்க முடியாது. அவள்தான் அறிவாள்.

இரண்டு மூன்று நாட்கள் சென்னை ஹோட்டலிலே நிம்மதியாகத் தங்கிய பிறகு அவர்கள் கோவைக்குப் புறப்பட்டார்கள்.

அவளைவிட அளவற்ற மகிழ்ச்சியில் இருந்தவள், அவளது செவிலித் தாய் வசுந்தராவே!

அவள் எவ்வளவோ கொடுமைகளைத் தாங்கி விஜயசிங்கோடு வாழ்ந்திருக்கிறாள். இப்போது மகளோடு வாழ்வதிலே அவளுக்குப் பரிபூரணத் திருப்தி.

எந்தக் காரணம் கொண்டும் தேவியின் பிறப்பு, முதல் திருமணம் இரண்டையும் மட்டும் சென்னியப்பனுக்கு வெளியிடக் கூடாது என்று அவர்கள் முடிவு கட்டினார்கள்.

கோவை நகரில் சென்னியப்பன் தந்தையார் கட்டி இருந்தது பிரம்மாண்டமான பங்களா.

''என்னை ஏற்றுக் கொள்வார்களா?'' என்று தேவி கேட்டபோது, ''பணக்காரர்கள் வீடுகளில் என்னென்னவோ நடக்கும். அவர்கள் எதையும் ஏற்றுக் கொள்வார்கள்,'' என்று அவன் சொல்லியிருந்தான்.

திடீரென்று தங்கள் மகனை இந்தக் கோலத்தில் எதிர்பாராத தாயும் தந்தையும் அதிர்ச்சியடைந்தார்கள்.

பளிச்சென்று அவர்கள் காலில்





ந்து வணங்கும்படி தேவியிடம்
ன்னுன் அவன். தேவி அவர்கள்
களில் விழுந்து வணங்கினுள்.
உள்ளே இருந்து சென்னி
னின் சகோதரி வெளியே வந்
ர்.

''உன் நாத்தனுர்,'' என்று
முகப்படுத்தி வைத்தாள் அவளே.
அ வ ர் கால்களிலும்
ந்து வணங்கினுள், அவள்.
எல்லோருக்கும் விஷயம்
து விட்டது. பெண்ணின் அழகைப்
த்ததும் வாயும் அடைத்து விட்
.

பங்களாவுக்குள்ளே மனைவி
டு நுழைந்த சென்னியப்பன்,
ம்பி, தம்பி,'' என்று அழைத்தான்.
''அண்ணு,'' என்று மாடியில்
காட்டிய தம்பி, அங்கேயே ஸ்தம்
து நின்று விட்டான்.
அவனைப் பார்த்தவுடனேயே
ச்சையடையும் நிலைக்கு வந்து விட்
ள், தேவி.
ஆம். சென்னியப்பன் தம்
ய அவளை முதலில் மணந்த ராயப்
.

அங்கே இரண்டு ஊமைகள்
னமைகளைப் பேச முடியாமல் தவித்
ர.

''வாடா இங்கே!'' என்று
பியை அழைத்தான், அண்ணன்.
இவள்தான் என் மனைவி. பார்த்
யா, அழகாக இருக்கிறுளா?'' என்
ர்.

''அழகாக இருக்கிறுர்கள்;
ல் மாதிரி இருக்கிறுர்கள்!'' என்று
ால்லிவிட்டு உள்ளே போய்விட்டான்
யப்பன்.
தம்பி கொஞ்சம் குறும்புக்
ரன் என்று சிலாகித்துக் கொண்ட
ண்ணன், அவளை அழைத்துக் கொண்டு
றை அறைக்குச் சென்று வணங்கச்
ய்தான்.
'இனி தான் கோவையில்
நப்பதைவிட எங்கேயாவது போய்
டுவது நல்லது' என்று யோசித்தான்,
யப்பன்.
''அண்ணு! நான் ஒரு ஆறு
தம் வெளிநாடுகளுக்குப் போய்
லாம் என்று யோசிக்கிறேன்,''
ன்றுன், அண்ணனிடம்.
அண்ணன் பேசுவதற்கு முன்
ல், அண்ணி குறுக்கிட்டாள்.
''அப்படிப் போவதென்றுல்,

நாம் எல்லோருமே போய் வரு வோமே?'' என்ருள்.

''ஐயோ! எனக்காகத் தாங் கள் ஒன்றும் சிரமப்பட வேண்டாம்!'' என்ருன் அவன்.

''இதில் என்ன சிரமம்? எவ்வளவோ சிரமங்களை ஒவ்வொருவர் அனுபவித்திருக்கிருர்கள். யாருடைய சிரமம் யாருக்குத் தெரியப்போகிறது?'' என்று ஜாடையாகச் சொன்னுள், அவள்.

''என்ன, ஒரு ஐந்து லட்ச ரூபாய் செலவாகும்!'' என்ருன், அவன்.

''அந்த ஐந்து லட்சத்தை எனக்குக் கொடுத்த கடனுக நினைத்துக் கொள்ளுங்களேன்!'' என்ருள் அவள்.

உடனே சென்னியப்பன் குறுக்கிட்டு. ''உங்கள் வசனத்தைக் கேட்டால் நீங்கள் இருவரும் சினிமா விலேயே நடிக்கலாம் போலிருக்கிறது,'' என்ருன்.

''என் வாழ்க்கையே ஒரு சினிமா தான்!'' என்று ஒப்புக் கொண் டாள், தேவி.

அன்று இரவே எப்படியா வது ராயப்பனிடம் நடந்ததைச் சொல்லி விடத் தேவி துடித்தாள்.

இரவு பன்னிரண்டு மணிக்கு தன்னை அணைத்திருந்த சென்னியப்பனின் கையை மெதுவாக எடுத்து வைத்து விட்டு, ராயப்பனின் அறைக்குள் நுழைந்தாள்.

இதை எதிர்பார்க்காத ராயப் பன் திடுக்கிட்டான்.

அவன் தூங்கவே இல்லை என் பதை அப்போதுதான் தேவி அறிந்தாள்.

கல் மனதும் கரையும்[...] அவனிடம் முழுக் கதையையும் அவ[...] சொன்னுள்.

''நான்தான் தவறு செ[...] விட்டேன்,'' என்ருன், ராயப்ப[...]

'இல்லை, நான்தான்!'' என்[...] உள்ளே நுழைந்தான் சென்னியப்பன்.

அவர்கள் இருவரும் திகை[...] தார்கள்.

''நாம் இங்கே உட்கார்[...] எல்லா விஷயங்களையும் மனம் விட்[...] பேசி விடுவோம். இதில் ஒன்றும் த[...] றில்லை!'' என்ருன் சென்னியப்பன்.

அவர்கள் உட்கார்ந்து பே[...] தொடங்கினர்கள்.

மூன்ருவது நாள் பத்திரி[...] களில் கொட்டை எழுத்தில் ஒரு செ[...] பிரசுரமாயிற்று.

''அண்ணன் தம்பி இருவரு[...] ஒரே பெண்ணை மணந்தார்கள். மணப் பெண் மகிழ்[...] யோடு காணப்பட்டாள்.

சென்னையைச் சேர்ந்த படி[...] இளம் பெண் தேவி, கோவை ம[...] அதிபர் மக்கள் இருவரையும் மண[...] பதற்கு இசைந்தாள். புரட்சிகரமா[...] இந்தத் திருமணம் அடக்கமாக அவ[...] கள் மாளிகையிலேயே நடந்தது.

திரு. சென்னியப்பனை இ[...] பற்றிக் கேட்டபோது, ''இதிக[...] காலத்து நியாயம், நவீன காலத்து[...] குக் கிடையாதா?' என்று கேட்டார்.

—இந்தச் செய்தியை படித்தபோதுதான், விஜயசிங் பா[...] சாலியைப் பற்றிச் சொன்னதை தேவி நினைத்துக் கொண்டாள்.

## இது செய்தி

ஊர்: பருஜி: தன் மகளை மூன்று மாப்பிள்ளைகளுக்[...] நிச்சயதார்த்தம் செய்தார் ஒரு தந்தை. ஒவ்வொருவரிடமு[...] ரூ. 500க்குக் குறையாமல் பெற்றுக் கொண்டார். முதல் 'நிச்[...] தார்த்தம்' முடிந்த சிறிது நேரத்துக்கெல்லாம் மற்ற இரண்[...] மாப்பிள்ளைகளும் அங்கே வந்து சேர்ந்து விட்டார்கள். கு[...] ''ம் நிலவியது. இறுதியில் அதிகப் பணம் கொடுத்தவருக்[...] பெண்ணை மணமுடிப்பது என்று பஞ்சாயத்தாயிற்று.

—இந்தியன் எக்ஸ்பிர[...]

தொழிற்சாலையில் அவன் காலை எட்டரை மணிக்கு இருந்தாக வேண்டும். மணி எட்டு இருபது ஆகிறது. என்ன தான் டிசைன் இஞ்சினியர் என்ற பெரிய பதவி என்ருலும், நேரத்துக்குப் போனுல் தான் கீழுள்ளவர்களிடம் மதிப்பு. மேலுள்ளவர்களிடம் மரியாதை.

பஸ் ஸ்டாப்பில் கம்லேஷ் பொறுமையிழந்தவனுகக் காத்திருந்தான்.

ஓர் ஆட்டோ ரிக்ஷா அவனைத் தாண்டிக் கொண்டு சென்றது. கையைத் தட்ட நினைத்தான். அதற்குள் ஒரு பெண் இருப்பது தெரிந்ததும் பேசாதிருந்து விட்டான். ஆனுல் கொஞ்ச தூரத்துக்கெல்லாம் ஆட்டோ நிற்க, அவள் குனிந்து மீட்டரைப் பார்ப்பது தெரிந்தது. அவள் இறங்கியதும் ஆட்டோ போய்விடப் போகிறதே என்று ஓடினுன் அங்கே.'

அவன் வண்டிக்குள் ஏறப் போகிற சமயம், மறுபக்கமாய் இறங்குவாள் என்று அவன் எதிர்பார்த்த அந்தப் பெண், அவன் பக்கமாகவே இறங்கி—

இல்லை. இறங்க முற்பட்டு அவன் மீது மோதிக் கொண்டாள். அவளுடைய தலை அவன் தலையை நேருக்கு நேர் மோதியது. ''ஸாரி,'' என்ருன் கம்லேஷ்.

அவள் ஒன்றும் சொல்லவில்லை. தலையைத் தன் அழகிய விரல்களால் தேய்த்துவிட்டுக் கொண்டு, அகன்ற விழிகளால் ஒரு முறை அவனை அள்ளி யெடுத்துக் கொண்ட மாதிரி பார்த்தாள். இறங்கிப் போய் விட்டாள்.

''ராம் பூட்டுக் கம்பெனி,'' என்று ஆட்டோ டிரைவரிடம் சொல்லி விட்டு, அவள் போனதையே பார்த்துக் கொண்டிருந்தான் கம்லேஷ். அவள் காலடி படுகிற ஒவ்வொரு தடத்திலும் மண்ணை முத்தமிட வேண்டும் போல் அவன் உள்ளம் தவித்தது.

பெருமூச்சுடன் குனிந்தான்

என்ன இது?

ஒரு விசிட்டிங் கார்டு கிடந்தது. பணம் தரும்போது அவள் கைப்பையிலிருந்து விழுந்து விட்டது போலும்.

'விஞேதினி— 8'ம் நம்பர் மூன்ருவது தெரு, விஜய் நகர்,'— என்று அவள் விலாசம் முழுமையாக இருந்தது.

விஞேதி.னி..விஞே தி னி.

அவன் திரும்பத் திரும்பச் சொல்லிப் பார்த்துக் கொண்டான். சொல்லச் சொல்லத் தித்தித்தது.

'ராம் கம்பெனி'யை அடைந்து தொழிற்சாலைப் பகுதிக்குள் நுழைந்து 'கம்லேஷ்— டிசைன் இஞ்சினியர்' என்ற பித்தளை எழுத்துக்கள் மினுமினுக்கும் கண்ணுடிக் கதவைத் தள்ளிக்கொண்டு தன் மேஜையை அடைந்தபோது அவன் விஞேதினியைப் பற்றியே எண்ணிக் கொண்டிருந்தான்.

இன்ட்டர்காம் டெலிபோன் ஒலித்தபோதுதான் அவன் சிந்தனை கலைந்தது.

''கம்லேஷா? ஒரு நிமிடம் இங்கு வந்துவிட்டுப் போயேன்,'' என்று முதலாளி ராம் பாபுவின் குரல் கேட்டது.

''இதோ சார்,'' என்று எழுந்து கொண்டான்.

ராம்பாபுவின் ஏ.ஸி. அறையில் அவருடன் ஒரு மோட்டாவான நபரு[illegible] உட்கார்ந்திருந்தார். ராம் பாபுவும் வடக்கத்திக்காரர் தான், ஆனுல் ரொம்ப நாளாகத் தமிழ்நாட்டில் இருப்பதால் முக்கால் தமிழனுகவே ஆகிவிட்டார். அவருடன் பேசிக் கொ[illegible]




'லாமா'



ருந்த நபர் குல்லாவும் ஜாக்கெட்டும் தர்த்தாவுமாக அசல் பம்பாய்க்காரராக இருந்தார்.

''மிஸ்டர் திவாரி, பம்பாயில் பிரபலமான புரொட்யூசர்,'' என்று அவரைப் பற்றித் தெரிவித்து விட்டு, ''இவர் கம்லேஷ். எங்கள் கம்பெனியில் டிசைன் இஞ்சினியர், ரொம்ப டேலன்டட் யங் மேன்,'' என்று கம்லேஷை அவருக்கு அறிமுகம் செய்து வைத்தார்.

இருவரும் கை குலுக்கிக் கொண்டார்கள்.

''உட்கார் கம்லேஷ்,'' என்றார் ராம் பாபு. ''இவருக்கு ஒரு பெகூலியர் பிராப்ளம். அதாவது இவருடைய ஆபீசில் ரொம்ப நல்ல இரும்புப் பெட்டகம் வைத்திருக்கிறாராம். அதிலிருந்து தினம் யாரோ பணம் களவாடுகிறார்களாம். அதை வெளியே சொல்ல முடியவில்லை. காரணம், தன் சொந்த மகனைகவே இருக்குமோ என்று சந்தேகப்படுகிறார். பெட்டகத்தை வேறு யாரும் திறக்க முடியாதபடி அதற்கு ஒரு ஸ்பெஷல் பூட்டு தயாரித்துத் தர வேண்டும் என்று வந்திருக்கிறார்..''

''அதற்கென்ன, செய்து தந்தால் போயிற்று,'' என்றான் கம்லேஷ்.

''முதலில் ஒரு சிறிய மாடல் செய்து காட்டு. அதை வைத்துப் பிறகு பெட்டகத்தின் அளவுக்குப் பூட்டு தயார் செய்து தரலாம்,'' என்றார் ராம் பாபு.

''நல்லது சார்; ஒரு மாதம் எனக்கு டயம் கொடுங்கள்,'' என்று கூறி விடை பெற்றுக் கொண்டான் கம்லேஷ்.

அன்றே, அப்போதே அவனுடைய மூளை ஸ்பெஷல் பூட்டுத்

தயாரிப்பில் இறங்கிவிட்ட போதிலும், மனம் அந்த விநோதினியையே நினைத்துக் கொண்டிருந்தது.

மாலை ஐந்து மணி ஆயிற்றோ இல்லையோ, அவன் புறப்பட்டு விட்டான் இருக்கையை விட்டு. அந்த விநோதினியை மறுபடியும் ஒரு முறை பார்க்காவிட்டால் இருதயம் வெடித்து விடும் போலாகிவிட்டது அவனுக்கு.

புதிதாக முளைத்திருந்த புற நகர்தான் விஜய் நகர் என்பது அங்கே போய் ஆட்டோவில் இறங்கிக் கொண்ட பிறகுதான் தெரிய வந்தது. வீட்டு வாசலில் நேரே போய் இறங்கினால், வந்ததற்குச் சாக்குச் சொல்ல முடியாது. ஏதோ அந்தப் பக்கம் வந்த மாதிரி இருக்க வேண்டும் என்று இரண்டாவது தெருவிலேயே ஆட்டோவை அனுப்பிவிட்டான். மூன்றாவது தெருவில் திரும்பி, எட்டாம் எண் வீட்டைத் தேடிக் கொண்டு நடந்தபோது—

''என்னப்பா கம்லேஷ். எங்கே இப்படி!'' என்ற குரலுடன் ஒரு கார் அவனை உரசாய்ந்து கொண்டு நின்றது.

முதலாளி ராம் பாபு!

''வந்து...இங்கே ஒரு சிநேகிதன்...வீட்டைக் கண்டுபிடிக்க முடியவில்லை...'' என்று தடுமாறினான்.

''வந்ததுதான் வந்தாய் என் வீட்டுக்கு வா. இதுவரை வந்ததில்லையே?'' என்று காரின் கதவைத் திறந்தார்.

மறுக்க முடியாமல் ஏறிக் கொண்டவன், கார் எட்டாம் நம்பர் பங்களாவுக்குள் நுழைந்ததும் திகைப்படைந்தான்.

சோபாவில் பேப்பர் படித்துக் கொண்டிருந்த பெண்—

அவள் அவனை ஓரக் கண்ணால் பார்த்து, அடையாளம் தெரிந்து கொண்டதாகக் கண்ணால் தெரிவித்தபோது—

'முதலாளியின் மகளிடம் நமக்குக் காதல் ஏற்பட்டது!' என்று அவன் குழம்பி நின்ற சமயம்—

''மிஸஸ் விநோதினி ராம்பாபு! என் சார்மிங் லிட்டில் ஒய்ஃப்!'' என்று அறிமுகம் செய்து வைத்து அவனை அதிர்ச்சிக்காளாக்கினார் அவன் முதலாளி.

''நமஸ்தே,'' என்று கை கூப்பினான். அவள் பதிலுக்கு வணக்கம் தெரிவித்தாள். அவளுடைய கண்களில் ஆழ்ந்த சோகத்தைக் கண்டான் கம்லேஷ். ராம்பாபுவுக்கு வயது ஐம்பதைத் தாண்டியிருக்கும். இவளுக்கோ இருபத்தைந்தைக் கூட எட்டியிருக்காது. இந்த அழகுச் சிலையைப் பெற்றெடுத்த பாவி என்ன வறுமைக் கொடுமையினால் இந்தக் கிழவனுக்

# இது என்ன நியாயம்?

மதுரை மாநகரில் கடந்த 26-6-79ம் தேதி செவ்வாய் கிழமை ஆழ்வார் புரம் மரக்கடைகள் 44ம் தீப்பிடித்து எரிந்து விட்டன. அதில் எங்கள் கடையும் ஒன்று: என் தகப்பனார் சம்பாதித்த பணம் பூராவும் அடியோடு எரிந்து விட்டது: மாற்று இடம் கொடுப்பதாக சொல்லி 15 அடி ஆழமுள்ள கல்மயானக் காண்பித்து அதைக் கடைக்காரர்கள் செலவில் மண்மேடை போட்டு கடை நடத்த சொல்கிறார்கள் கடை இருந்த இடத்தை பூங்கா கட்டுவதற்குத் திட்டம் தீட்டி இருக்கிறார்களாம். இது என்ன நியாயம்? நாங்கள் இப்படித் தவித்து கொண்டு இருக்கும் போது பூங்காவும் கடைகளும் அவசியமா?

— எஸ். பாண்டியன்.



இரண்டாம் தாரமாய்த் தள்ளிவிட்டானே!

டீயும் பிஸ்கெட்டுகளும் கொண்டு வந்து தந்தாள் அவள்.

கணவனுடன் எட்டினாற்போல் உட்கார்ந்து கொண்டு டீ அருந்தினாள். சும்மா உபசாரத்துக்காக ராம் பாபுவிடம் பேசினானே தவிர, அவளையே அவன் கண்கள் மொய்த்தன. பிஸ்கட்டைக் கடிக்கும்போது பளீரென வெளிப்படும் அந்த முத்துப் பற்கள் கம்லேஷை மயக்கின—டீயை உறிஞ்சும்போது மென்மையாய்ப் பிரியும் அந்தச் சிவந்த உதடுகள்—குனியும் போதும் நிமிரும் போதும் புரண்டு அசையும் வாளிப்பான தோள்கள்—

எப்படி இருக்கவேண்டியவள்... என்னென்ன இளமைச் சுகங்களை அனுபவிக்க வேண்டியவள்... சே! கடவுளுக்குக் கண் கிடையாது. நியாய உணர்வுகள் கிடையாது...

''வினோதினிக்குத் தோட்டக் கலையில் ரொம்ப ஈடுபாடு... அவள் வளர்த்திருக்கிற செடிகளை நீ கட்டாயம் பார்க்கவேண்டும்...'' என்றார் ராம் பாபு.

''இப்போது பார்க்கலாமா?'' என்று எழுந்து கொண்டான்.

''வினோதினி, அழைத்துப் போம்மா,'' என்றார் ராம் பாபு.

தோட்டத்தில் அவர்கள் தனிமையாயிருந்தபோது, ''இரண்டாவது சந்திப்பு,'' என்றான் அவன் சற்றுத் தாழ்ந்த குரலில். ''மறக்க முடியாதது,'' என்று மெல்லச் சேர்த்துச் சொன்னான்.

''ஆமாமாம், என்னால் கூட மறக்க முடியாது. தலையில் இன்னும் வலிக்கிறதே?'' என்றாள் அவள். முதல் தடவையாக அவள் அதரத்தில் புன்சிரிப்புப் பரவுவதைக் கண்டு அவனுக்கு மகிழ்ச்சியாயிருந்தது.

''ரொம்ப அருமையான மலர்ச் செடி,'' என்றான் அவன். அவள் முறைக்கிற மாதிரி இருந்தது. ''நான் இதைச் சொன்னேன்,'' என்று செடியைக் காட்டினான்.

அவள் களுக்கென்று சிரித்தாள்.

''ஆர்வத்துடன் ஈடுபட்டிருக்கிறீர்கள் தோட்டத்தில்,'' என்று பாராட்டினான் கம்லேஷ்.

---

## HOW AMERICANS SPEND THEIR LEISURE

**Selected Years: 1938-1974**




*A striking feature of Americans' leisure activities—as seen in this chart—is the amount of time spent watching television. Americans presently spend 46 per cent of their leisure time on this activity. But recent studies indicate that viewers are becoming more selective in the programs they watch. The radio and the cinema, whose popularity fell steeply between 1938 and 1950, are now reviving*

''இல்லாவிட்டால் வாழ்க்கை ரொம்ப வெறுமையாகப் போய்விட்டிருக்கும்,'' என்ருள் அவள். அவள் குரல் கம்மியது.

''விஞேதினி... உங்கள்... உன் விசிட்டிங் கார்டு... உன்னைத் தேடித்தான் வந்தேன்... இதை... இதை...''

அவன் நீட்டிய விசிட்டிங் கார்டை அவள் வாங்கிக்கொண்டு அவனை ஏறிட்டு நோக்கினுள். அவனுடைய வேண்டுகோள் என்னவென்று அவளுக்குப் புரியவில்லை.

''இதை உன் அதரத்தில் பதித்து ஒரு முத்திரை அடித்து என்னிடம் கொடு. என் இருதயத்தோடு பத்திரமாக வைத்துக் கொள்வேன்...''

அவள் கண் கலங்கினுள். தூரத்தில் ராம் பாபு வருவது தெரிந்தது.

பம்பாய்க்காரரின் கோரிக்கைப்படி அவன் ஸ்பெஷல் பூட்டு தயார் செய்து விட்டான். அது அவனுடைய அபூர்வமான, ஒரிஜினலான கண்டுபிடிப்பு. அதை வெறும் இரும்புப் பொருளாக எண்ண அவன் மனம் இடம் கொடுக்கவில்லை. ஓவியனுக்குத் தன் சித்திரம் எப்படியோ, கவிஞனுக்குத் தன் பாடல் எப்படியோ அப்படி அந்தப் பூட்டு அவனுக்குத் தோன்றியது. அந்தச் சின்னஞ்சிறு படைப்பில் தன் கலைத் திறமையையும் மூளையின் ஆற்றலையும் காட்டியிருந்தான் அவன்.

தொழிற்சாலையிலேயே ராம் பாபுவிடம் அதைக் காட்டியிருக்க முடியும். வேண்டுமென்றே அதைத் தாமதித்து, வீட்டுக்கு எடுத்துச் சென்ருன். அன்று அவர் ஒரு பிஸினஸ் மீட்டிங்குக்காக வெளியே செல்லப் போகிருர் என்று அவருடைய பி.ஏ. சொல்லியிருந்தான். அது தெரியாத மாதிரி




வீட்டுக்குப் போக வேண்டுமென்று அவன் திட்டமிட்டுச் சென்ருன்.

இருட்டி வெகு நேரமாகி யிருந்தது. ஏன் ராம் பாபுவின் வீட்டில் விளக்கு எரியக் காணும் என்று நினைத்துக் கொண்டே உள்ளே போனுன். அண்டை அயலிலும் மின்சாரம் இல்லை என்பது அப்புறம்தான் தெரிந்தது.

அவன் காலடிச் சத்தம் கேட்டதுமே—

''யார்?'' என்று முன் ஹாலில் விஞேதினியின் வீணைக் குரல் கேட்டது.

''நான்தான் விஞே,'' என்ருன் அவன் ஆதங்கத்துடன். அவனுடைய நீட்டிய கைகளில் அவளுடைய புஷ்பக் குவியலான மேனி மெல்ல உராய்ந்தது.

''கமலேஷ்,'' அவளுடைய வெப்பப் பெருமூச்சு அவனுக்குக் கேட்டது.

வாசலில் ஒரு கார் நுழையும் சத்தம்—வெண்மையாய் ஹெட் லைட்டின் வெளிச்சம்—

ஏமாற்றத்துடன் அவன் வாசலுக்குச் சென்ருன்.

''நான்தான் சார்... கம்லேஷ்... உங்களைப் பார்க்கத்தான் வந்தேன்... இல்லை...'' என்ருன்.

''எங்கே இவ்வளவு தூரம் வந்தாய்?'' என்று ராம் பாபு கேட்டுக் கொண்டிருந்தபோது விளக்கு வந்து விட்டது.

''பூட்டு சொன்னீர்களே... மாடல் தயார்.''

அவர் வாங்கிப் பார்த்தார். ''அருமையாயிருக்கிறதே?'' என்ருர்.

''தாங்ஸ் சார்.''

''நாளைக்கு நான் பம்பாய் போகிறேன்... டெஸ்ட் பண்ணி விடலாம்...

''நான் வருகிறேன் சார், உள்ளேயிருக்கும் விஞேதினிக்கும் கேட்கி மாதிரி சற்று உரக்கவே சொல் கொண்டான். தூரத்தில் அவள் பொ. மேனி ஆடியது.

'நாளை இன்னேரம்... நாளை இன்னேரம்...' அவன் மனம் சிறகடித்து பறந்தது. காற்றில் மிதக்கிற மா அங்கிருந்து கிளம்பினுன்.

மேகங்களுக்குப் பின் விமானம் மறைகிற வரையில், பாண் பைகளில் கையை விட்டபடி வானத்தை

ார்த்துக்கொண்டே நின்ருன் கம்லேஷ்.

'போய் வாருங்கள். ராம் ாபு,' என்று மனத்துக்குள் சொல்லிக் காண்டபோது அவன் உதட்டில் ஆசை கை அரும்பியது. முதலாளியின் ங்களாவில், மாடியறையின் தனிமையில், டிலின் குளிர்ந்த பரப்பில் இரு ககளையும் தலையின் பின்னே கோத்தபடி நர்த்துப் படுத்துக் கொண்டிருக்கும் னேதினியின் பருவ உடம்பு அவன் கண் ன்னே கூத்தாடியது. அவளைத் தன் ற்கூட்டுக்குள் சிக்க வைக்கப் போகும் னுபவத்தை எண்ணிப் பார்க்கும்போதே வன் நாடி நரம்புகளில் புது ரத்தம் தந்து விண்விண்ணென்று ஓடியது.

''போகலாங்களா சார்?'' என்று ரைவர் ஞாபகப்படுத்தினன். கம்பெனி ண்டியிலேயே ஏறிக்கொண்டு தலாளியின் வீட்டில் போய் இறங்கிக் காள்ளலாமா என்று ஒரு நிமிடம் ண்ணினன். தன் அந்தரங்க உறவுகளை வ்வளவு அப்பட்டமாக வெளிப்படுத்திக் காள்வது ஆபத்து என்று தோன்றியது. நீ ஆபீசுக்குப் போ. எனக்கு வேறு வலையிருக்கிறது,'' என்று சொல்லி ரைவரை அனுப்பினன்.

ஏர்போர்ட்டுக்கு வெளியே றிது தூரம் நடந்தான். பின்னலேயே ந டாக்ஸி வந்தது. கையைக் காட்டி றுத்தி ஏறிக் கொண்டான். ''விஜய் கர்,'' என்று தெரிவித்தான்.

முதலாளியின் பங்களாவுக்குள் ழைந்தபோது தோட்டக்காரன் ம்பிட்டான். எடுபிடி வேலைகளைக் வனிக்கும் கணக்குப் பிள்ளை திர்ப்பட்டார். வேலைக்காரியொருத்தி டவையை இழுத்துப் போர்த்திக் கொண்டு சென்ருள்.

இவர்கள் பார்வையில் பட்டு விட்டோமே என்று ஒரு கணம் கம்லேஷுக்கு மனம் குறுகுறுத்தது. நாளை பார்த்துக் கொள்ளலாம் என்ருல் முடியாது... ராம் பாபு அனேகமாய்த் திரும்பி விடுவார். யாரும் பார்க்காத நேரத்தில் திருட்டுத்தனமாய் வந்தால் தான் மேலும் விபரீதம். தற்செயலாய்ப் பார்க்கிறவன் முதலாளியிடம் சொல்லிவிடுவான். இப்போதென்ருல் அப்படியில்லை. ஏதோ ஆபீஸ் பைலோ கடிதமோ எடுத்துப் போக வந்ததாய்ச் சொல்லிக் கொள்ளலாம்.

ஹாலில் அவள் இல்லை. அதுவும் நல்லதுதான். மாடிக்குப் படியேறினன். ஒவ்வொரு படியைக் கடக்கும் போதும் இருதயத்தில் ஒரு இன்பத் தடக் தடக் கேட்டது.

''வினே...நான் வந்திருக் கிறேன்,'' என்று குரல் கொடுத்தான் மாடியை அடைந்ததும்.

ஜன்னலுக்கு மறுபுறம் ஒரு விளுடி அவள் முகம் தெரிந்தது. மறு விளுடி முகத்தைப் பொத்திக்கொண்டு ஓடி விட்டாள். கட்டிலில் பொத்தென்று அவள் விழும் ஓசையும் விம்மலும் கேட்டன.

''வினே...'' அவன் அறைக்குள் நுழைய—

கதவு தாளிட்டிருந்தது. கவனித்தான். வெளியே பூட்டியிருந்தது.

அவன் தயாரித்துத் தந்த ஸ்பெஷல் பூட்டு...

தன்னைக் காட்டிலும் தன் முதலாளி பெரிய டிசைன் இஞ்சினியர் என்பது கமலேஷுக்குப் புரிந்தது.

# ராஜ்நாராயணனுக்குப் பிடித்தது



சமீபத்தில் சென்னைக்கு ராஜ் நாராயணன் விஜயம் செய்தபோது சென்னை வழக்கறிஞர் வி. சுப்பிரமணியம் அவர்களின் வீட்டிலிருந்து அவருக்குச் சாப்பாடு தயாரித்து அனுப்பப்பட்டது. சாப்பாடு தயாரித்து அனுப்பு முன், ராஜ் நாராயணனுக்கு என்னென்ன பிடிக்கும் என்று கேட்டிருக்கிருர்கள். அவர் தனக்குப் பிடித்தவற்றைக் கூறினராம். அதன்படியே, அவருக்கு உணவு தயார் செய்து அனுப்பி வைக்கப்பட்டது. அவர் விரும்பிக் கேட்ட உணவு வெண்டைக்காய் மோர்க் குழம்பும், அவியலும்.

—பி. நாராயணன்

# விருந்தினரை 'வாருங்கள்' என்றழைக்கும் வகையில் உங்கள் வாயிற்கதவுகளை அலங்கரிக்க டூலக்ஸ் உங்களுக்கு வழிகாட்டுகிறத



டூலக்ஸ் சிவப்பும், கறுப்பும் பூசப்பட்ட மின்னும் முன்கதவு வீட்டிற்கோர் அழகு. அத்துடன் சின்னச் சின்ன பித்தளை மணிவரிசைகளையும் சேருங்கள். வாயிற்படியே ''வா'' என்றழைக்கும்.



இருவித பச்சை வண்ண டூலக்ஸ் ஸின்தெடிக் எனாமல் பெயிண்டை டிசைன் போட்டுப் பூசினால் நீடித்து நிற்கும், எழில் கூட்டும்.

வார்த்தைகளின்றி சுமுக வரவேற்பளிப்பது டூலக்ஸ் ஸின்தெடிக் எனாமல் ஒன்றே. அதன் ஜ்வலிக்கும் வண்ணங்கள் அழகாக பாதுகாப்பளிப்பதோடு, மங்கிய எந்த இடத்தையும் உருமாற்றி உயிர்த்தெழச் செய்கிறது.

பலதுக்கும் பயன்படும் டூலக்ஸ் ஸின்தெடிக் எனாமல் உங்கள் வீட்டின் - உள்ளும் புறமும் - ஒவ்வொரு மூலைக்கும் உகந்த பெயிண்ட். தேர்ந்தெடுத்த வண்ணங்கள். நீரினால் பாதிக்கப்

# உதவாக்கரையாக ஒரு பிள்ளை

பாமா கோபாலன்

தண்டபானி குருக்களுக்கு ஒரே பதட்டம். பரபரப்பு. வியர்த்துக் கொட்டியது. கண்களில் பயம் குடிகொண்டது.

ஈஸிசேரில் மான் தோலுக்குக் கீழே தேடினார். சிக்குப் பலகையின் நடுவே தேடினார். 'கந்தபுராணம் புத்தகத்தின் மையத்தில், ஓலைப்பையில், கறிகாய் வாங்கும் கித்தான் பையில், நந்தவனத்துக்கு எடுத்துச் செல்லும் பூக்குடலையில்...

ஹூம். பலனில்லை. கோவில் கதவுப் பூட்டின் சாவியைக் காணவில்லை. முக்காலடி நீளத்திற்கு இரு சாவிகள். ஒரு இரும்பு வளையத்தில் ஊசலாடிக் கொண்டிருக்கும்...

இன்று தான் முருகனுக்கு ராஜா வேஷம் போட்டு, எல்லா ஆபரணங்களையும் அணிவித்திருந்தார். திரை போட்டு விட்டு வந்திருக்கிறார். மத்தியானம் போய்த் திறந்து

எப்படி? சாவியைக் காணோமே! ஏற்கனவே தர்மகர்த்தாவிற்குத் தண்டபாணி மேல் காட்டம் உண்டு.

அவர் மனைவி பங்கஜம் கவலையேயில்லாமல் அடுக்களையில் வேலையில் ஈடுபடடிருந்தாள்.

தண்டபாணிக்குக் கோட உதவாக்கரையாக ஒரு பிள்ளை. உ வளர்ச்சி இருந்ததே தவிர, மூளை வளா கிடையாது. அடிக்கடி ஊராரே சண்டை போட்டுக் கொண்டு, வாங்கிக் கொண்டு வீடு வந்து சே பிள்ளை. ஆறுமுகம்.

எங்கே தொலைந்தா விளையாட்டுக்காகச் சாவியை எடுத் கொண்டு போய்விட்டானா?

''டீ பங்கஜம்.. புத்திரசிகாம எங்கே?''

''ஏன் இப்படி அலறி ஊள கூட்டிறீங்க? அந்தப் பய எங் தொலைஞ்சானோ? காலையிலே பழை சாப்பிட்டுட்டுப் போனான்.. இன்னு வரல்லே..''

தண்டபாணிக்கு நா வரண்டது.

குளக்கரையில் ப பிடித்துக்கொண்டிருந்த மாயாண்டி உளாங்கரையில் நமைச்சல். மை மனேகர் ஆசைகாட்டி விட்டா கோவிலில் உள்ள நகைகளைத் தி எடுத்து வந்தால், எக்கச்சக்கப் பணம்!

உற்சவ காலத்துக்கா கோவில் வாசலில் மண கொட்டப்பட்டிருந்தது. லுங்கியை தூக்கிக் கட்டியபடி ஏதோ யோசனை காலால் மணலை அடித்தபடி வ சமயம்—

கோவில் சாவி கால்க இடறியது. குனிந்து எடுத்தா நிமிர்ந்தான். சற்று தூரத் தண்டபாணி குருக்கள் அவசரமா போவது தெரிந்தது. சாவி கீழே விழுந் தெரியாமல் போயிருக்கிறார்.

கூப்பிட வாயைத் திறந்தா பட்டென்று ஒரு கை தோளில் விழுந்த

மைனர் மனேகர்! சைக்கி நின்று கொண்டே பேசினான்.





''மாயாண்டி! கம்னு இரு. வா
ன்னுடி..'' நாய் போல மைனரைத்
தொடர்ந்தான். சாவி அவன்
யிலிருந்து மைனரிடம் போய்விட்டது!

மீண்டும் குருக்கள் கோயிலுக்கு
வதற்குள் நகைகளைத் திருடத் திட்டம்
டுக் கொடுத்தான் மைனர்.

மாயாண்டி திருடன் தான்.
றல் ஆண்டவனின் நகைகளைத் திருட
ரியமில்லை.

ஆனல், மைனரின் மிரட்
கள், மாயாண்டியை அடி பணிய
த்தன.

குளக்கரையிலிருந்து எழுந்தான்.
ப்பில் கோவில் சாவிகள்

இதயத்துடிப்பு அதிகமாக, அவன் கோவிலை நோக்கி நடந்தான்.

கோவில் வாசலில் சடுகுடு விளையாடிக் கொண்டிருந்தார்கள். மாயாண்டி தயங்கித் தயங்கி...

திடீரென்று ஒரு பையன் மணலில் விழுந்தான். கைகால்கள் இழுத்து, வெட்டி வெட்டி வாயில் நுரை தள்ள—

சில சிறுவர்கள் ஓடிவிட, சிலர் கூக்குரல் கொடுக்க, மாயாண்டி தடுமாறிப் போனான். கூட்டம் சேரத் தொடங்கிவிட்டது.

அந்தப் பையனின் கைகால்கள் திசைக்கு ஒன்றாக நர்த்தனமிட, நுரை வழியும் வாயுடன்...

மாயாண்டிக்கு வயிற்றை என்னவோ செய்தது. லுங்கியை இழுத்துக் கட்டிக் கொள்ளும் சமயத்தில்—

சட்டென்று ஒரு வேகத்தில், அந்தச் சாவிக்கொத்தை பையனின் உள்ளங்கையில் வைத்து அழுத்தி மூடிவிட்டு, உடனே கூட்டத்தினரிடமிருந்து விலகி மறைந்துவிட்டான்.

தண்டபாணி குருக்கள் அவனைப் பார்த்து விட்டார். எதற்கு ஓடுகிறான்?

கோவிலை நோக்கி ஓட்டமும் நடையுமாக வந்தார் தண்டபாணி குருக்கள். கூட்டத்தை விலக்கி, என்னவென்று நிதானத்துடன் பார்த்தார்—

வலிப்பு சற்றே குறையக் குறைய, அந்தப் பையனின் உள்ளங்கை அந்தச் சாவிகளை இறுக்கமாகப் பிடித்துக் கொண்டிருந்தது—

தண்டபாணி குருக்களுக்குப் புரிந்தது. உயிர் வந்தது.

'முருகா' என்று அலறியபடி தன் பையனை மடியில் கிடத்திக் கொண்டார்.

''ஆறுமுகம்... உன்னைப் போய் உதவாக்கரைன்னு திட்டி அடிப்பேனே... உனக்கு வந்த வலிப்பு மூலமாக முருகன் என்னைக் காப்பாற்றினான்டா!''

# அஞ்(சே)சல்



இதுவரை தபாலில் சேர்க்கப்பட்ட கடிதங்கள், பல வருடங்கள், மாதங்கள் கழித்து பட்டுவாடா ஆனதாக அறிந்திருக்கிறோம்.

27-8-79 அன்று நடந்த சென்னை மெடிகல் காலேஜ் அட்மிஷனுக்காக இண்டர்வியூ கார்டு அது திருச்சி அலுவலகத்திற்கு 25-8-79 அன்று, துறையூரிலிருந்து அந்தக் குறிப்பிட்ட மாணவர் திருச்சி விலாசத்தில் இருப்பதாகத் திருப்பப்பட்டு (Redirect) ஆகி வந்தது.

ஆனால் அந்த முகவரி ஜங்ஷன் அஞ்சல் எல்லைக்குள் இல்லாததால் அதை மறுபடியும் தெப்பகுளம் அஞ்சலகத்திற்குத் திருப்ப வேண்டியிருந்தது. அப்பொழுது அஞ்சல் அலுவலர் ஒருவர், இண்டர்வியூ நாளைக் குறிப்பாகப் பார்த்துவிட்டு, சாதாரணமாக அந்த கடிதம் பட்டுவாடா ஆவதானால் 27-8-79க்குள் இயலாது என உணர்ந்து, அஞ்சல் அதிகாரியின் உதவியுடன் உடனே இன்ஸ்பெக்டர் ஒருவரை நேரிடையாக அனுப்பி அக்கடிதத்தை செயிண்ட் ஜோஸப் நியூ ஹாஸ்டலில் வசித்து வந்த 'ராஜூ மணணன்' என்ற அந்த மாணவனுக்கு 25-8-79 அன்றே பட்டுவாடா செய்து அந்த மாணவன் இண்டர்வியூவுக்கு செல்ல உதவினர்.

அஞ்சல் துறை கோபால கிருஷ்ணன் கூறக் கேட்டு:
—தி.சா. ஜெம்புநாதன்

.ாய்லெட்டினுல் நம்மில் பலருக்கு பலமுறை
ர்மசங்கடமான நிலை ஏற்படுகிறது.
அதைவிட ஆபத்தான உண்மையை அறிய
)தைக் கவனமாய்ப் படியுங்கள்.

அசுத்தமான டாய்லெட் தொற்று
நோய்க்குக் காரணமான கிருமிகள்
ளரும் இடம். உங்களுடைய,
..ங்கள் குடும்பத்தினருடைய
ஆரோக்கியத்தைப் பாதிக்கும்.

)தை அலட்சியமாய் விட்டுவிடாதீர்கள்.
..ங்கள் டாய்லெட் சுத்தமாக இருக்கிறது
'ன்பதை உறுதியாக நம்புகிறீர்களா?
..ங்கள் தோட்டி தினமும் காலையில்
ரிவரச் சுத்தம் செய்கிருரா? அல்லது
பருக்குச் சுத்தம் செய்துவிட்டுப் போய்
விடுகிருரா? அப்படி அவருடைய வேலை
திருப்தியாக இல்லாவிடில் ஸானி∴பிரஷை
ாடுங்கள்.

ஸானி∴பிரஷ் பாடுபட்டு உழைக்கும்
க்கூஸ் தூய்மைப் பொருள்.

ஸானி∴பிரஷ் மூன்று வழிகளில்
வேலை செய்கிறது.

. ஸானி∴பிரஷ் கறைகளைப்
போக்குகிறது.

ஸானி∴பிரஷ் உங்களுடைய டாய்லெட்டை
மழுக்கவும் துப்புரவாக்குகிறது. அதில்
அசுத்தம் போக்கும் தீவிரமான பொருள்
இருப்பதால் விடாப்பிடியாக நீங்காத
றைகளும் நீங்கிவிடுகின்றன. துருக்
றைகளும் மறைந்து விடுகின்றன.
பாருங்கள், உங்கள் டாய்லெட் பளிச்சென
ஒளி வீசுகிறது!

2. ஸானி∴பிரஷ் கிருமிகளைப்
போக்குகிறது.

அசுத்தமான டாய்லெட் கிருமிகளின்
பிறப்பிடமாயிருப்பதால் தீங்கு விளைவிக்கக்
கூடியது. சாதாரண பினைல் தரமுடியாத
பாதுகாப்பை ஸானி∴பிரஷ் உங்களுக்குத்
தருகிறது. உங்கள் குடும்பத்தினரின்
ஆரோக்கியத்தைப் பேணிக்காக்கிறது.

3. ஸானி∴பிரஷ் துர்நாற்றத்தை
விரட்டுகிறது.

போதுமான காற்ரேட்ட வசதியில்லாத
டாய்லெட்டில் துர்நாற்றம் நீடித்து
நிற்கிறது. ஸானி∴பிரஷில் மிகவும் சக்தி
வாய்ந்த வாசனைப் பொருள் இருப்பதால்,
காற்றிற்குப் புத்துணர்ச்சி தந்து
துர்நாற்றத்தை மாய்க்கிறது.

ஸானி∴பிரஷ் உபயோகிப்பது
மிகவும் சுலபம்.

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம்
இதுதான். முதலில் டாய்லெட்டில்
∴ப்ளஷ் மூலம் தண்ணீரை விடுங்கள்.
டாய்லெட்டின் பேஸினில்
ஸானி∴பிரஷைத் தாராளமாகத்
தூவுங்கள். 3-4 மணி நேரம் கழித்துப்
பாருங்கள். இதைவிட, இரவு பூராவும்
அப்படியே விட்டு வைப்பது மிகவும்
சிறந்தது. அதற்குப் பிறகு ∴பிளஷ்
செய்யவும். ∴ப்ளஷ் வேலை செய்யாவிடில்
ஒரு வாளி தண்ணீரை ஊற்றவும்.
இப்போது உங்கள் டாய்லெட் எவ்வளவு
பளிச்சிடுகிறது என்பதைப் பாருங்கள்!

தவருமல் தினந்தோறும் ஸானி∴பிரஷ்
உபயோகிப்பதே சிறந்தது.




ஸானி∴பிரஷ் உங்கள்
அருவருப்பான வேலையைச்
செய்து டாய்லெட்டை
சுத்தமாக வைக்கிறது.

பல்சாரா
நலமான வாழ்க்கைக்கு
நவீனமான வசதிகள்

BALSARA பல்சாரா & கம்பெனி (பிரை) லிட்.
43, கம்பெல்லா மாஸ்டர் ரோடு, பம்பாய் 400 023.

CHAITRA-BLS-85 TAM



# அனுபவிக்க ஓடு!

ரமணிக்கு அது புது அனுபவம்.

நேற்று சுந்தர்—அவன் நண்பன் சொன்ன வார்த்தைகள் காதில் ஒலித்தன. "ரமணி... நீ எங்கேயோ கிராமத்திலே... நிலம், நீச்சு, என்று மல்லாடிக் கொண்டிருக்கே. ஏதோ அத்தைக் கிழவி மெட்ராஸிலே மண்டையைப் போடவே ஊரை விட்டுக் கிளம்பி மெட்ராஸ் வந்திருக்கே. நாளைக்கு என்னோடே வா. எனக்குத் தெரிஞ்ச இடம்தான். அழைச்சிட்டுப் போறேன். கிராமத்திலே இதையெல்லாம் அனுபவிக்க முடியுமா?

'சரி' என்று தலையாட்டி விட்டான் ரமணி.

சொன்னபடி சுந்தர் வந்து விட்டான். ரமணியும் தயாராக 'டிரெஸ்,' செய்து கொண்டு காத்திருந்தான்.

டாக்சி மாம்பலத்தை நோக்கிப் பறந்தது.

ரமணிக்கு அது புது அனுபவம். புத்தகங்களில் படம் பார்த்தது, பிறர் சொல்லக் கேட்டது... அவ்வளவுதான்... இன்றுதான் நேரில் காணப் போகிறான். ரமணிக்கு நெஞ்சு படபடத்தது. அந்தப் பெரிய வீட்டில் டாக்சி நின்றது.

சுந்தர் காலிங் பெல்லை அழுத்தினான்.

''இதோ வரேன்,''—உள்ளே கிளி கொஞ்சியது. அடுத்த கணம்—

ரோஸ் நிற 'ஃபாரின் நைலக்ஸ்' கதவைத் திறந்தது.

ரமணி அவள் அழகில் திகைத்து விட்டான்.

''ஓ... சுந்தர்!''

''ராதிகா! இவர் மிஸ்டர் மணி. என் 'ப்ரெண்ட்!'''

''வாங்க... உள்ளே வாங்க!'' மணி உள்ளே நுழைந்தான். கால்கள் லேசாகத் தடுமாறின.

''இப்படி உட்காருங்க...''

சுந்தர் கனைத்தான். ''ப்ளீஸ்... ராதிகா... என் பிரண்ட் ரமணி இங்கே இருக்கட்டும். நான் கோடம்பாக்கம் வரை போயிட்டு அரை மணியிலே வரேன். ரமணி, என் ஜாய் யுவர்செல்ஃப்...'' சுந்தர் மறைந்து விட்டான்.

''மிஸ்டர் ரமணி, இப்படி சோபாவிலே உட்காருங்க...'' கிளி!



ரமணி உட்கார்ந்தான்.

அந்த ராதிகா ஜன்னலில் தொங்கிய 'பாம்பே டையிங்' திரைச் சீலைகளை இழுத்து மூடினாள். இருட்டு கவ்வியது.

ரமணி சிலிர்த்து உட்கார்ந்தான்.

ராதிகா நகர்ந்து வந்தாள்.

பளீரென்ற ஒளி இருட்டில் ஒளிர்ந்தது.

ரமணி சந்தோஷத்துடன் பார்த்தான்.

எதிரே...

முதன் முறையாக ரமணி டெலிவிஷன் நிகழ்ச்சியை — அதுவும் ஆஸ்திரேலியா — இந்தியா — கிரிக்கெட் மாட்சைக் — காண ஆரம்பித்தான்!



லெட்டரைப் படிக்காமலும் யாருக்கு

அனுப்புகிறோம் என்று

யோசிக்காமலும் கமலை உருவாக்கினவனுக்கே

கமலின் உருவப் படத்தை

அனுப்பியிருக்கிறீர்கள்!

# இப்படியும் ஒரு காரியதரிசியா கமலுக்கு?



என்னுடைய நண்பர் ஒருத்தர் கமலஹாசன் ரசிகர் மன்றச் செயலாளர். அவர் தனது மன்றத்தின் மூலம் கமலஹாசனுக்குப் பல கடிதங்கள் எழுதியும் பதில் வரவில்லை. எனவே இது குறித்து கமலஹாசனின் தந்தையான திரு. டி. சீனிவாசன் (அட்வகேட், பரமக்குடி) அவர்களுக்குக் 'கடிதம் எழுதினார். அந்த நண்பருக்கு அவர் எழுதிய பதிலின் ஒரு பகுதி இது:

...தங்கள் மடல்களுக்குப் பதில் போடாதது பற்றி நான் மிகவும் வருந்துகிறேன். அவன் எவ்வளவு நெருக்கடியில் இருந்தாலும் பதில் போடாமல் இருப்பதில்லை. இரண்டு காரியதரிசிகள் அவனுக்கு வரும் ஏராளமான கடிதங்களைப் பார்த்து அவனுக்குச் சொல்வதற்கு ஏற்பாடு செய்திருந்தும் காரியதரிசிகளின் தவறுதலால் பதில் வராமல் இருந்திருக்கலாம்.



ஏராளமான கடிதங்களைப் பார்க்க நேரமில்லாமல் சில சிரிப்புக்கிடமான பதில்களும் வந்ததுண்டு.

நான் கமலுக்கு க்ஷேமலாபம் விசாரித்து ஒரு லெட்டர் எழுதியிருந்தேன். என் அட்ரசுக்கு ஒரு காரியதரிசி பதில் எழுதியிருந்தான்:

''தங்கள் பாராட்டுதலுக்கு நன்றி. இத்துடன் கமலஹாசன் போட்டோ ஒன்று அனுப்பியிருக்கிறோம்'' என்று எழுதி கமலஹாசனிடம் கையெழுத்தும் வாங்கி எனக்கு அனுப்பி விட்டார்கள்.

நான் காரியதரிசிக்கு இப்படி பதில் எழுதினேன்:

''லெட்டரைப் படிக்காமலும் யாருக்கு அனுப்புகிறோம் என்று யோசிக்காமலும் கமலை உருவாக்கினவனுக்கே கமலின் உருவப் படத்தை அனுப்பியிருக்கிறீர்கள். நன்றி.'' என்று எழுதினேன்.

கமல் அந்நியநாடு போயிருப்பதால் வந்தவுடன் சந்தித்துப் பதில் எழுதச் செய்கிறேன்.

தங்கள் அன்புள்ள
டி. சீனிவாசன்

தகவல்: ராஜா, சிவகாசி.

# இங்கே நோட்டீஸ் ஒட்டக்கூடாது






காம்பவுண்டு சுவரைப் பார்க்கப் பார்க்க, கபகபவென்று ஆத்திரம் வந்தது வீரேசலிங்கத்துக்கு அவருக்குக் கோபம்வந்தால் கன்னுபின்னு வென்று வரும். உடம்பும் மீசையும் வேறே அந்தக் கோபத்தை அதிகப் படுத்திக் காட்டும். அந்தக் காலனியில் இங்கொன்றும் அங்கொன்றும்தான் வீடுகள் என்றாலும்கூட, யாரும் அவரிடம் சினேகமாக ஒரு புன்முறுவல்கூடச்செய்ய மாட்டார்கள், ஒரு முறை ஒரு கோடி வீட்டுக்காரர் ''உங்கள் வீட்டில் ஒரு போர்ஷன் வாடகைக்கு விடப் போகிறீர்களா' என் மைத்துனர் கேட்கிறான்,'' என்று கேட்கப் போய், ''வீட்டை வாடகைக்கு விட்டுத்தான் சோறு தின்னணும் என்கிற நிலைமை எனக்கில்லை ஐயா!'' என்று அவரிடம் சண்டைக்குப் போய்விட்டார். அது முதல் அந்தக் காலனிக்காரர்கள் யாரும் அவரிடம் எந்த வம்பும் வைத்துக் கொள்வது கிடையாது.

காம்பவுண்டு சுவரை மறுபடி பார்த்தார் வீரேசலிங்கம். எவ்வளவு சுத்தமாய், பளீரென்று இருந்த சுவர்! எத்தனை அருமையான புது வீட்டில். எத்தனை புத்தம் புதிதாய் வெளிர்ப் பச்சையில் பெயின்ட் அடித்த சுவர்!

'ஆதி'




அங்கே போய் ஏதோ ஒரு மண்ணாங்கட்டி சினிமாப் போஸ்டரை ஒட்டிவிட்டுப் போயிருக்கிறார்கள். கோழைப் பயல்கள்! தைரியமிருந்தால் பட்டப் பகலிலல்லவா வந்து ஒட்டிவிட்டுப் போகவேண்டும்? ராவோடு ராவாக வந்தா ஒட்டுவது!

''சுரேஷ்! பக்கெட்டில் தண்ணீர் எடுத்து வா!'' என்று உள்புறம் பார்த்துக் குரல் கொடுத்தார் உரக்க.

ஐந்தாம் வகுப்பு படிக்கும் அவர் பையன், புத்தகத்தை மேஜை மீது எறிந்து விட்டு முனகிக்கொண்டே தண்ணீர் எடுத்து வந்தான் வாசலுக்கு. அம்மா இருந்தால் இந்த மாதிரி அப்பாவின் பொட்டை அதிகாரத்துக்கெல்லாம் தானே கீழ்ப்படிந்து வேலைகளைச் செய்வாள். அவள் ஊருக்குப் போயிருக்கிறாள். ஒரு சமையற்காரக் கிழவிதான் வீட்டில் ஒரே துணை. அதற்குக் கண்ணும் தெரியாது. காதும் கேட்காது.

பக்கெட்டிலிருந்த தண்ணீரை எடுத்து சுவரொட்டியின் மீது வீசினார். காகிதம் கொஞ்சம் ஊறியதும் அதைக் கிழித்துப் போட்டார். வேஸ்ட் துணி எடுத்து வந்து சுவரை நன்றாகத் தேய்த்தார். துடைத்தார். கொஞ்சம் கொஞ்சம் பிசிறுகள் தெரிந்ததைத் தவிர மற்றப்படி காம்பவுண்டு சுவர் சுத்தமாக ஆகிவிட்டது!

ஒரு தடவை ஓர் இடத்தில் திருடினவன் மறுபடியும் அதே இடத்துக்கு வருவான் என்று சொல்வார்கள். அந்த மாதிரி, இதை ஒட்டியவன் இன்னொரு சுவரொட்டி ஒட்ட இன்னொரு நாளும் வருவான். காத்திருந்து பிடித்துத் தோலை உரித்துவிட வேண்டும்.

இளமையில் பஸ்கி தண்டால் எடுத்து இரும்புக் குண்டாக உரமேறியிருந்த முண்டாவைத் தட்டிக் கொண்டு பல்லைக் கடித்தார் அவர்.

ஆறுநாள் வரையில் எவனும் வரக் காணோம்.

ஏழாம் நாள் இரவு ஒன்றரை மணி இருக்கும். ஒரு பையனின் மங்கலான உருவம் தெரிந்தது. அரை நிக்கர், முண்டா பனியன் சட்டை. பதினைந்து வயதுக்குள் இருக்கலாம். கையில் ஒரு போஸ்ட்டர் சுருளும் இன்னொரு கையில் கூழ்ப் பொட்டலமும் எடுத்து வந்தான்.

காம்பவுண்டு சுவருக்குப் பின்னாலேயே மறைந்து கொண்டு காத்திருந்தார் வீரேசலிங்கம்.

அந்தப் பையன் குனிந்து உட்கார்ந்தான். சுவரொட்டிச் சுருளைப் பிரித்தான் ஒன்றை எடுத்து, சுவரோடு சுவராகப் பரத்திக் கொண்டு கூழை எடுத்து—

''அயோக்கிய ராஸ்கல்!'' சீறிக் கொண்டு அவன்மீது பாய்ந்தார்.

''ஐயையோ! இல்லீங்க!'' என்று அவன் கூவிக் கொண்டிருக்கும் போதே—

படீரென்று கையால் ஒரு குத்து விட்டார் அவன் மார்பின்மீது.

அவ்வளவுதான்.

பையன் சுருண்டு மடங்கித்



மதாய்ந்து தளர்ந்து அவர் பிடியிலி ருந்து நழுவி நைந்த துணி மாதிரி விழுந்தான்.

திகீரென்றது வீரேசலிங்கத் துக்கு. இருந்தாலும் வீறுப்பாக, ''அயோக்கிய ராஸ்கல், வேஷமா போடறே? எழுந்திருடா!'' என்று காலால் அவனைப் புரட்டினர்.

கட்டை மாதிரி அந்த மெலிந்த தேகம் புரண்டது.

உதறலெடுத்தது அவ ருக்கு.

குனிந்து அவனைப் புரட்டினர். உலுக்கினர். மூக் கிலும் மார்பிலும் நாடியிலும் கை வைத்துப் பார்த்தார்.

பையன் இறந்து விட் டான் என்பது திண்ணமாகத் தெரிந்தது.

அவருக்குக் குப்பென்று வியர்த்தது. சுற்றுமுற்றும் பார்த்தார். வெகு தூரத்தில் தான் மற்ற வீடுகள் இருந் தன. அவர் அடித்ததையோ பையன் விழுந்ததையோ யாரும் கவனிக்கவில்லை.

இனியும் கவனிக்க வேண்டாம்.

பையனைத் தோள் மீது தூக்கிப் போட்டுக் கொண்டு கொல்லைப்புறத்துக்குப் போனார்.

புதராகச் செடிகள் மண்டியிருந்த இடத்தினருகே அவனைக் கிடத்திவிட்டு, மண்வெட்டியும் கடப்பாறையும் கொண்டு வந்து பள் ளம் பறித்தார்.

பையனைப் போட்டு மூடினர்.

உடம்பு தெப்பலாய் நனைந் திருந்தது.

வாசலுக்குப் போய் ஏதா வது விட்டிருக்கிறோமா என்று பார்த் தார். கூழ் வைத்த பொட்டலம் கிடந்தது. எடுத்துப் போய்த் தூரத் தில் இருந்த குப்பைத் தொட்டியில் போட்டு விட்டுத் திரும்பினர்.

அந்தச் சுவரொட்டிச் சுருள் காலில் தட்டுப்பட்டது.

எடுத்து வந்து அறையில் அட்டாணை மீது எறிந்தார்.

வீரேசலிங்கம் கட்டிலில் விழுந்து கண்ணை மூடினர். கொஞ்ச நேரத்துக்கெல்லாம் நிம்மதியாய்த் தூக் கம் வந்துவிட்டது.

இரண்டு நாள் கழித்து ஒரு நாள் சுரேஷ் தன் பாடபுத்தகங்களை அடுக்கி வைத்துக் கொண்டிருந்தான். எல்லாம் புதுப் புத்தகங்கள். எல்லாவற் றுக்கும் 'அட்டை' போட்டாகிவிட்டது.



ஆசிரியர்: நாய் எந்த இனத்தைச் சேர்ந்தது?

மாணவன்: நாய் பாலூட்டி இனத்தைச் சேர்ந்தது.

ஆசிரியர்: மனிதன்?

மாணவன்: மனிதன் புட்டிப் பாலூட்டி இனத்தைச் சேர்ந்தவன். —சி. திருப்பதி

முந்தா நாள் வாங்கி வந்த மாத்ஸ் புத்தகம்தான் அட்டையில்லாமல் இருந்தது.

அறையை ஆராய்ந்தான்.

மாதாந்தரக் காலண்டரில் அவன் தாள் கிழித்துக் கொள்வது வழக்கம். ஆனால் இப்போதுதான் ஐந்து தேதி ஆயிருந்தது. அதற்குள் கிழித்தால் அப்பா திட்டுவார்.

நாற்காலியைப் போட்டுக் கொண்டு அட்டாணையில் தேடினன்.

பளபளவென்ற சுவரொட்டிகள் கொண்ட சுருள் அவன் கண்ணில் பட்டது.

ஒன்றை மட்டும் எடுத்துக் கொண்டு கீழே இறங்கினன்.

மோட்டார் பைக்கை இரண்டுமுறை உதைத்தார் இன்ஸ்பெக்டர் பூஷணம். மூன்றாவது முறை உதைத்துக் கொண்டிருந்த சமயம், உள்ளேயிருந்து அவர் மனைவி கையில் சின்ன எவர்சில்வர் டப்பாவுடன் வந்தாள்.

''என்னங்க, ஒரு சின்ன உதவி செய்யுங்களேன்.''

''என்ன?''

''இந்தச் சாப்பாட்டுக்கார ஆயா வராமல் இருந்துட்டாள். ராஜு பசியோடு காத்திட்டிருப்பான், பாவம்.''

''கொண்டா, கொண்டா.'' என்று உடனே டப்பாவை வாங்கிக்கொண்டார் இன்ஸ்பெக்டர்.

தூங்குமூஞ்சி மரத்தின் கீழே பையன் சோர்வோடு உட்கார்ந்திருந்தான். மோட்டார் பைக் மீதே உட்காரச் சொல்லிச் சாப்பிடச் சொன்னர்.

''அப்பா.... சுரேஷ் வைச்சிட்டிருக்கிற மாதிரி எனக்கு...'' என்றான் அருமைக் குமாரன்.

''யார் சுரேஷ்? என்ன வைச்சிட்டிருக்கிறன்? சொல்லு,'' என்றார் இன்ஸ்பெக்டர். பாசமிக்க தந்தையின் நெஞ்சில் அன்பு சுரந்தது.

ராஜு ஓடிப் போய்த் தன் சிநேகிதன் சுரேஷை அழைத்து வந்தான். அவன் பெட்டியைத் திறந்தான். மாத்ஸ் புத்தகத்தை எடுத்தான். அப்பாவிடம் தந்தான்.

''மாத்ஸ்தான் முன்பே உனக்கு வாங்கிக் கொடுத்து விட்டேனே!'' என்றார் பூஷணம்.

''புக் இல்லேப்பா. அட்டை. பிரிச்சுப் பாரேன். பளபளன்னு இருக்கு,'' என்றவன், ''மறுபடியும் போட்டுடலாம்டா,'' என்று தோழனிடம் கூறிவிட்டு, புத்தகத்திலிருந்து அந்த அட்டையைப் பிரித்துக் காட்டினன்.

நாலு பக்கமும் செக்கச் செவேலென்று பட்டையாய்க் கட்டம் கட்டி—நடுவேயிருந்த வெள்ளைப் பகுதியில்—

இன்ஸ்பெக்டர் பூஷணத்தின் முகத்தில் திடீர்ப் பரபரப்பு. ''சுரேஷ்....இது...ஏதப்பா? எங்கே கிடைச்சுது உனக்கு?'' என்றார்.

''எங்க வீட்டில் அட்டாணையில் நிறையக் கட்டிப் போட்டிருக்கிறர் எங்க அப்பா,'' என்றான் அவன்.

வீரேசலிங்கம் காம்பவுண்டுச் சுவரைப் பெருமிதத்துடன் பார்த்துக் கொண்டார். நாலு நாளாக இருந்து வந்த பயம் கொஞ்சம் கொஞ்சமாக அவரிடமிருந்து மறைந்து கொண்டிருந்தது.

ஒருத்தி: எங்கம்மா எனக்கு வரும் கடிதங்களையெல்லாம் பிரிச்சு பாக்கிறுடி.

மற்றவள்: எங்கம்மா அவ்வளவு மோசமில்லே. 'பார்சல்' என்று வரும் கடிதங்களை மட்டும்தான் பிரிச்சுப் பார்ப்பா.

—கல்லிடை கைலாசம்



பளிரென்று சுத்தமாயிருக்கும் ாம்பவுண்டைப் பார்க்கையில் ஒருவித வற்றி உணர்ச்சி கூட ஏற்பட்டது அவ க்கு.

படபடவென்று இரண்டு மாட்டார் சைக்கிள்கள் வந்தன. வ்வொன்றிலும் ஓர் இன்ஸ்பெக்டரும் பாலீஸ்காரரும் இருந்தார்கள். நாலு பரும் அவர் வீட்டு வாசலில் இறங்கி ர்கள்.

''நான் இன்ஸ்பெக்டர் பூஷ ணம். உங்கள் வீட்டைச் கொஞ்சம் ார்க்க வேண்டும். இதோ வாரண்ட்,'' ன்று காட்டினார் இன்ஸ்பெக்டர்.

படபடவென்றிருந்தது வீரே லிங்கத்துக்கு. மறைத்துக் கொண்டார். 'அதற்கென்ன, வாருங்களேன்,'' ன்றார் சவடாலாக.

''இதுதான் உங்கள் ரூமா?''

''ஆமாம்.''

''அந்த அட்டாணையில் சுருட் ப் போட்டிருப்பதை எடு,'' என்று போலீசாரிடம் கட்டளையிட்டார் இன்ஸ் பெக்டர்.

போலீஸ்காரர் ஒரு முக்கா லியை இழுத்துப் போட்டுக் கொண்டு அந்தப் போஸ்டர் சுருளை எடுத்து இன்ஸ்பெக்டரிடம் தந்தார்.

பிரித்துப் பார்த்த இன்ஸ் பக்டரின் முகத்தில் புன்னகை தவழ்ந் து. ''ஏன் மிஸ்டர், இவ்வளவுதானா? ன்னும் வைத்திருக் கிறீர்களா?'' என் ர்.

வீரேசலிங்கத்துக்கு அம்மாடி ன்றிருந்தது. இதற்குத்தான் அவர்! தில் தயாராய் வைத்திருந்தாரே!

''கவாஸ்கருக்கு இது ட்வென்ட்டியத் செஞ்சுரியாமே?''

''கவாஸ்கருக்கு மட்டுமென்ன? நமக்கும் இது ட்வென்ட்டியத் செஞ்சுரிதானே!''

—கே. ஆர். ஸ்ரீ.

''இதுவா...எவனோ போஸ்டர் ஒட்டுகிற பையனின் சைக்கிளிலிருந்து விழுந்து விட்டது போலிருக்கு. வீட்டு வாசலில் தெருவில் கிடந்தது. எடுத்து வந்து மேலே வச்சேன். காகிதம் பாருங்க, எதுக்காச்சும் உதவும்,'' என்றார் புன்சிரிப்புடன்.

''இன்னும் என்ன வைச்சிருக்கீங்க என்றேன்,'' என்றார் இன்ஸ்பெக்டர் பூஷணம் தொடர்ந்து. வீரேசலிங்கம் சொன்னதில் ஓர் அட்சரத்தைக் கூட அவர் நம்பியதாகத் தெரியவில்லை.

''இன்னும் என்னன்னா? புரியலியே?'' என்றுவீரேசலிங்கம் திகைத்தார்.

இதுவரை பேசாமலிருந்த மற்ற இன்ஸ்பெக்டர், ''புரியலியா? அதான்...வெடிகுண்டு, துப்பாக்கி, தோட்டா இந்த மாதிரி...'' என்றார்.

வீரேசலிங்கத்துக்கு விழிகள் தெறிக்கிற மாதிரி இருந்தது. ''வெடிகுண்டா...என்ன சொல்றீங்க?''

''போஸ்டரைப் பார்த்தால் தெரியலியா?'' ஒன்றைப் பிரித்து அவரிடம் காட்டினார்.

வீரேசலிங்கம் படித்தார்.

'எழுங்கள் புரட்சிக்கு! தகருங்கள் பாலங்களை! சுட்டு வீழ்த்துங்கள் ஆதிக்கக்காரர்களை! ஓங்குக புரட்சி!'

''இது.....இது..'' என்று தடுமாறினார் வீரேசலிங்கம்.

''பயங்கரவாதிகள் சங்கம் வெளியிட்டிருந்த சுவரொட்டி. இதைப் பறிமுதல் செய்திருக்கிறது அரசாங்கம். நீங்களும் அந்தச் சங்கத்திலே ஒரு மெம்பர்தானே? உண்மையைச் சொல்லி விடுங்கள்!''

''ஐயையோ...எனக்கு அதெல்லாம் தெரியாது...''

''எங்களுக்கும் அதெல்லாம் தெரியாது,'' என்று சிரித்தார் இன்ஸ்பெக்டர் பூஷணம். ''சந்தேகம் ஏற்பட்டு விட்டால் சோதனை போட வேண்டியது எங்கள் கடமை.''

அவர்கள் இண்டு இடுக்கு விடாமல் வீட்டை ஆராய்ந்தார்கள். பிறகு தோட்டத்துக்குப் போனார்கள். பிறகு புதருக்குச் சென்றார்கள். பிறகு புதருக்குப் பக்கத்தில் உள்ள மேடான பகுதியைச் சந்தேகத்துடன் பார்த்தார்கள். பிறகு தோண்டலானார்கள்.

ஆடம்பரமான வாழ்க்கைக்குத் தங்களை ஈடு கொடுத்துவிட்டவர்கள் வாழ்ந்த வாழ்க்கையில் சிறிது குறைந்தாலும்கூட வாழ்க்கையே வறண்டுவிட்டது போல நினைப்பார்கள்.

இருபத்து நான்கு கல்லில் வைரத்தோடு போட்ட பெண்ணுக்கு, இருபது கல் தோட்டைக் கொடுத்தால் அது வைரம் போல் தோன்றுது.

பளிங்குத் தரையில் படுத்திருந்தவனைச் சிமிண்டுத் தரையில் படுக்கச் சொன்னால் அது பாறுங்கல்போல் குத்தும்.

அனுபவிக்கின்ற வசதியில் சிறிது குறைந்தாலும், சிலர் தாங்கள் ஆண்டியாகி விட்டதாகவே நினைக்கிறார்கள்.

தமிழ்நாட்டிலிருந்து கேரளாவுக்கு வெல்லம் ஏற்றுமதி செய்து லட்சக் கணக்கில் சம்பாதித்தவர் அவர் மகள் பள்ளிக்குப் போவதற்கே ஒரு காரும் ஆயாவும் வைத்திருந்தார். காரிலே பட்டுப் பாவாடை பத்திருக்கும். ஒன்றிலே அழுக்கேறட்டு விட்டால் இன்னொன்றை மாற்றிக் கொள்ள அவ்வளவு வசதி. எல்லாக் குழந்தைகளும் யூனிபாரம் போட்டு வந்தாலும் வைதேகி மட்டும் யூனிபாரம் போடமாட்டாள். அவள் படிப்பதுதான் பாடம். ஆசிரியைகளுக்கும் அவள் சொல்வதுதான் வேதம்.

பக்கத்து வீட்டுக் குழந்தை புதுரக வளையல் போட்டிருந்தால், பத்து மணி நேரத்தில் அதே மாதிரி வைதேகிக்கு வந்து விடும்.

# அழைச்சுவட்டில் ரத்தக் கறை

இத்தகைய சுபாவம் கொண்ட சமூகத்தில் வைதேகி மட்டும் விதி விலக்கல்லவே.

வைதேகி என்று சீதையின் பெயர். சீதை புன்னகைக்கு அடிமையே தவிர பொன்னகைக்கு அடிமையல்ல. ஆனல் இந்த வைதேகி சீதையாக வாழ விரும்பவில்லை.

காதல் இன்பத்தில் ராதையாகவும், கல்விச் சிறப்பில் மேதையாகவும், செல்வ சுகத்தில் ராணியாகவும் வாழ விரும்பினள். அவள் பிறந்ததும் அத்தகைய வீட்டில்தான்.

குருவாயூர் கோபாலகிருஷ்ணன் பிள்ளை என்றல், திருச்சி நகரில் தெரியாதவர்கள் இருக்க முடியாது. மாதம் ஒருமுறை அவர் குருவாயூர் தரிசனம் செய்ததால் அவருக்கு அந்தப் பட்டப் பெயர் வந்தது.

'செல்லங் கொடுத்து வளர்க்கும் குழந்தையும் செருப்பில்லாமல் நடக்கும் காலும் ஏதாவது, ஒரு விபத்தைச் சந்தித்தே தீர வேண்டியிருக்கும்' என்பார்கள்.

ஆனல் பருவம் வரும்வரை ஒரு விபத்தும் இல்லாமல் செல்லப் பெண்ணாகவே வளர்ந்து விட்டாள் வைதேகி.

சாதாரணக் கல்லூரியிலா அவள் படித்தாள்? சென்னை கல்லூரி ஒன்றில் சேர்ந்து, தனி வீடு பிடித்து சமையல் வைத்து, ஒரு காரும் வைத்துக் கொண்டிருந்தாள்.

பணக்காரி என்பதால் தோழிகள் அதிகம். தோழிகள் அதிகம் என்பதால், தினசரி கதை பேசுவதும் அதிகம்.

யாரோ இடக்காடு ஜமீன்தார் மகனும், இம்பாலா கார் வைத்திருக்கிறனும், கல்லூரியில் தங்கையை



பார்க்க வருவானும், பிரமாத அழகனும், எந்தப் பெண்ணோடும் பேச மாட்டானும், வைதேகியைக் கண்டால் விடமாட்டானும்!

இப்படிச் சொல்லிவிட்டாள் தோழி ஒருத்தி.

'அவன் எப்படித்தான் இருக்கிறன், பார்ப்போமே' என்று ஒரு நாள் கல்லூரி முடிவதற்குக் கொஞ்ச நேரம் முன்பே வெளியே வந்தாள் வைதேகி.

அங்கே இம்பாலா நின்றது. அவனும் நின்ருன். சும்மா சொல்லக் கூடாது. அவன் அந்தக் காலத்துப் பாகவதர் மாதிரி அழகாகத்தான் இருந்தான்.

அழகான ஆடவனைக் கண்டால் சில பெண்களுக்குள்ளே ஏதோ ஒன்று பீறிட்டு எழுமே, அப்படி ஒன்றும் எழுந்து விடவில்லை வைதேகிக்கு. ஆனல் மனத்தை என்னவோ செய்யத் தான் செய்தது.

''நீ சொன்னது உண்மை தானடி, என்ருள் தோழியிடம்.

''அவன் பி. எஸ்ஸி. முதல் வகுப்பு மாலதியின் அண்ணன்தான். அதோ மாலதி காரில் ஏறுகிருள் பார்த்தாயா? நாளைக்கு மாலதியிடம் சொல்லி வரும் ஞாயிற்றுக்கிழமையன்று உன் வீட்டுக்கு விருந்துக்கு வரச் சொல்கிறேன். கொஞ்ச நேரம் ஆடிப்பாடிக் கொண்டிருக்கலாம்,'' என்ருள் தோழி.

ஞாயிற்றுக் கிழமையும் வந்தது. அவனும் வந்தான். மாலதியும்கூட வந்தாள். மேஜையின் மீது விதவிதமான சாப்பாடிருந்தது. உள்ளங்கையிலிருந்து முழங்கை வரையிலே வளையல் போட்டிருந்தாள், வைதேகி. அன்றைக்குப் பெண்கள்தான் அதிகம் பேசினர்களே தவிர, அவன் குறைவாகவேதான் பேசினன்.

அலைஅலையாய்ச் சுருண்ட அழகிய கூந்தல், எடுப்பான நெற்றி, நீண்ட கைகள். சிவந்த முகம், சிவந்த கழுத்தில் மின்னிக் கொண்டிருக்கும் மைனர் சங்கிலி, சாக்லெட் கலரில் ஒரு வகையான புஷ் சர்ட், அதே கலரில் பாண்ட்.

கண்ணதாசன்

ஆடம்பரமான பெண்களுக்கு எப்போதும் அடக்கமான மனிதனைத்தான் பிடிக்கும். வைதேகி விருந்து பரிமாறினாள். இல்லை, விழுந்து பரிமாறினாள். அவன் கூச்சத்தோடு சாப்பிட்டான்.

''சும்மா சாப்பிடண்ணா,'' என்று உற்சாகப் படுத்தினாள் மாலதி.

அவனும் நிறையச் சாப்பிட்டு விட்டவன் போல் நடித்துக் கொண்டான். ஆனால், வாய்வு பதார்த்தங்களை ஒதுக்கி முறையாகவும், குறைவாகவும்தான் சாப்பிட்டான்.

அவனது குரல் இனிமையில் எதையோ பறிகொடுத்தவள் போலானாள் வைதேகி. டெலிபோன் நம்பரை வாங்கிக் கொண்டு அடிக்கடி டெலிபோன் செய்ய ஆரம்பித்தாள். இரவிலே தலையணையைக் கட்டிப் பிடித்துக் கொண்டு கற்பனை செய்ய ஆரம்பித்தாள்.

அவளுக்கிருந்த மோகமும், வேகமும் அவனுக்கும் இருந்தன என்றாலும், அவன் கொஞ்சம் அடக்கமாக இருந்தான்.

இந்தக் காலத்துப் பெண்களுக்கு வாய்ப்புகள் அதிகம். ஒரு ஆடவனை அவர்கள் சந்திக்க விரும்பினாலும், அவனிடம் கெட்டுப் போக விரும்பினாலும் கூட அதை அவர்கள் சுலபமாக நிறைவேற்றிவிட முடியும்.

வைதேகியோ, மாலதியின் அண்ணன் சின்ன கிருஷ்ணனோ கெட்டுப் போக விரும்பவில்லை. மணந்தால் இருவரும்தான் மணந்து கொள்வது என்று முடிவு கட்டினார்கள்.

அதற்கு யார் குறுக்கே நிற்கப் போகிறார்கள்?

சின்ன கிருஷ்ணனின் பெற்றோருக்கு சின்ன கிருஷ்ணனையும், மாலதியையும் தவிர வேறு குழந்தைகள் கிடையாது. வைதேகியோ பெற்றோருக்கு ஒரே செல்லக் குழந்தை.

அங்கேஅவள் சொல்ல,இங்கே இவள் சொல்ல சம்பந்தமும் பேசித் திருமணமும் முடிந்து விட்டது.

திருமணம் முடிந்த முகூர்த்தம் அரசாங்க அதிகாரியாகப் பதவி வகித்த சின்ன கிருஷ்ணன், ஐ. ஏ. எஸ். அதிகாரியாக உயர்ந்தான்.

நாட்டிலே எங்கெங்கு சுகவாசஸ்தலங்கள் உண்டோ அங்கெல்லாம் அவர்கள் தேநிலவுக்குப் போனார்கள்.

அவள் படிப்பைப் பாதியிலே முடிக்க வேண்டி வந்தாலும், அவன் கலெக்டராகி விட்டான். கணவன் முகத்தைப் பார்ப்பதிலும் அவனைக் காதலிப்பதிலும் அளவற்ற இன்பத்தைக் கண்ட வைதேகி, அவன் பக்கத்தில் நின்று தங்களைப் பத்துப் பேர் பார்க்க வேண்டும் என்று கூட ஆசைப் பட்டாள். எங்கேயாவது வெளியே போவதென்றால் அவளுக்குக் கொள்ளை உற்சாகம். இருவரும் நடந்து வந்தால் ரதியும், மன்மதனும் நடந்து வருவது போலிருக்கும்.

கடவுள் சில நேரங்களில் சிலருக்கு நினைத்ததெல்லாம் கிடைக்கும்படி வரத்தை அருளிவிடுகின்றான். அந்த வரம் தனக்குக் கிடைத்திருப்பதாகவே வைதேகி கருதினாள்.

சாதாரணமாகக் கோவிலுக்குப் போயறியாத வைதேகி, பிளாட்பாரத்து விநாயகருக்கெல்லாம் தேங்காய் உடைக்க ஆரம்பித்தாள்.

முதல் பிரசவமே இரட்டைப் பிரசவம். கணவனே நினைவாக இருக்கிற மனைவி, கணவனைப் போலத்தானே குழந்தையைப் பெற்றெடுப்பாள்! லவனும் குசனும் போல இரண்டு குழந்தைகள் அவளுக்கு வாய்த்தன.

## மகராஷ்டிரம் மட்டும் அப்படி

அக்டோபர் 2'ம் தேதி காந்தி ஜெயந்திக்காக நாடெங்கும் தேசிய விடுமுறை. ஆனால் மகாராஷ்டிர மாநிலத்தில் மட்டும் விடுமுறை கிடையாது.

காந்திஜியைச் சுட்டுக் கொன்ற கோட்சே பிறந்த மாநிலம் என்பதால் மகாராஷ்டிரத்திற்கு இந்த விதி விலக்கோ?

—டி. ஏ. கே.

குழந்தை பிறந்தது ஜூன் மாதம்.

ஆகஸ்ட் மாதம் மூன்றுவது வாரத்தில் கோவையில் ஒரு வேலை நிறுத்தம் நடந்தது. அமைச்சர்கள் தலையிட்டுத் தீர்க்க வேண்டிய காரியத்தைக் கூடத் தானே தலையிட்டுத் தீர்த்து வைக்கும் சின்ன கிருஷ்ணன், இந்த விஷயத்தையும் தானே முடித்து விட விரும்பினான். இரு தரப்பிலும் அவனே பேச்சு வார்த்தை நடத்தினான்.

எப்போதுமே ஒழுங்கான தொழிலாளர்களுக்கிடையே ஒன்றிரண்டு விஷமிகள் ஊடுருவி விடுவார்கள். அப்படிப் புகுந்த ஒருத்தன், ஊரிலே கலவரத்தை உண்டுபண்ணக் கருதி ஒரு பயங்கர வேலையைச் செய்தான்.

மில் முதலாளியோடு பேச்சு நடத்திவிட்டு சின்ன கிருஷ்ணன் வெளியில் வந்தபோது பயங்கரமான வெடி குண்டை வீசினான் அவன்.

கார் சிதறியது. காருக்குள்ளிருந்த சின்ன கிருஷ்ணன் தூக்கியெறிந்து கொல்லப்பட்டான்.

மாதம் ஒன்றாகி விட்டது, கணவன் மறைந்து. வைதேகி படித்து விட்ட காரணத்தால் கணவன் மறைந்த பிறகும் பட்டுச் சேலை கட்டிப் பொட்டு வைத்துக் கொண்டுதான் இருந்தாள்.

ஒருநாள் மாலை, ஆறு மணி இருக்கும். முன்புறத்துப் பூங்காவில் குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தன.

திடீரென்று ஆடம்பரமான கார் ஒன்று உள்ளே நுழைந்தது. அந்தக் கார் யாருடையதென்று வைதேகிக்குத் தெரியும். மில் முதலாளி ஜனார்த்தனத்தின் காரே அது.

பால கோபாலா மில்லின் உரிமையாளர் அறுபது வயதைத் தாண்டி விட்ட ஜனார்த்தனத்திற்கு இரண்டு ஆண் குழந்தைகள் உண்டு. மனைவி இறந்து இருபது வருஷங்களாகி விட்டன. மறு விவாகம் செய்து கொள்ளவில்லை. இரண்டு பையன்களுக்கும் திருமணம் முடித்து பாகம் பிரித்து அனுப்பி விட்டார். பெரிய பெண் வேட்டைக்காரரல்ல. ஆனால் வைதேகியைப் போலவே ஆடம்பரப் பிரியர்.

"இதோ பாரம்மா. உன் கணவன் உத்தமமானவன், பேரழகன். அவனை இழந்ததில் எங்களுக்கே தாள முடியாத துயரம் என்றால் உனக்கு எவ்வளவிருக்கும்? என்ன கஷ்ட காலமோ உன் தகப்பனாருக்குக் கூடத் தொழில் நொடித்துப் போய் விட்டதாகக் கேள்விப் பட்டேன். நீ நன்றாக வாழ்ந்தவள். வசதியாக வாழ்ந்தவள். இருக்கின்ற பணத்துக்குள் ஒருவேளைச் சாப்பாடு என்றெல்லாம் வாழ முடியாது. நானும் கடல் மாதிரிவீட்டை வைத்துக்கொண்டு தனியாகத்தான் இருக்கிறேன். அதில் இரண்டு ஏக்கர் நிலத்தில் பூங்கா இருக்கிறது. இந்தக் குழந்தைகளும் அங்கே விளையாடிக் கொண்டு திரியும். நீ கூச்சப் படவோ, வருத்தப்படவோ தேவையில்லை. 'ஏன் வந்தாய், எதற்கு வந்தாய்' என்று உன்னைக் கேள்வி கேட்கக் கூடியவர்கள் அங்கே யாருமில்லை. நீ விரும்புகிற காலம்வரை அங்கே நிம்மதியாக இருக்கலாம். என்னுடன் வந்து விடு!" என்று எடுத்த எடுப்பிலேயே சொல்லி விட்டார், முதலாளி.

'என் மகள் மாதிரி' என்றோ, 'என் தங்கை மாதிரி' என்றோ சம்பிரதாயச் சொற்களை அவர் சொல்லவே இல்லை.

"நான் யோசிக்கிறேன்!" என்று இழுத்தாள் வைதேகி.

"இதிலே யோசிப்பதற்கு



"என்ன சார் உங்க ஓட்டல் சாப்பாட்டிலே ஒரே கல்லா இருக்கு?"

'இலையில் ஏற்பட்ட தடங்'கல்'லுக்கு வருந்துகிறோம்!"

—அ. இராமதாஸ்

என்ன இருக்கிறது. நீயும் யாரையும் கேட்க வேண்டியதில்லை. நானும் யாரை யும் கேட்க வேண்டியதில்லை, புறப் படு!'' என்றார், அவர்.

ஆடம்பரத்தையே அதிகமாக நேசிக்கும் வைதேகி, மேலும் சிந்திக்க விரும்பவில்லை. ''போய்க் காலையிலே கார் அனுப்புங்கள்'' என்று கூறி விட்டாள்.

முதலாளி சொன்னது பொய் யல்ல. வீடு கடலேதான். ஆனால் எத்தனை திமிங்கிலங்கள், சுறாமீன்கள் இருக் குமோ என்ற பயம் அவளுக்கு வந்தது.

வேலைக்காரர்கள் அறிமுகம் நடந்தபோது ஒருவருமே அவளுக்கு மோசமானவர்களாகத் தோன்றவில்லை. ஆனால் ஒவ்வொருவரும் தன்னை எஜ மானி என்று அழைத்தது அவளுக்கு வெட்கமாகவும், கவலையாகவும் இருந் தது. ஆனால் அந்த வெட்கமும் கவ லையும் கொஞ்ச நேரம்தான். 'ஒரு வேளை அப்படி ஆகி விட்டால் தான் என்ன கெட்டது?' என்றே அவள் முடிவு கட்டினாள்.

அவள் புதுமைப் பெண்ணாக வளர்ந்தவளல்லவா! புதிய விஷயங் களைச் சீக்கிரம் ஏற்றுக் கொண்டு விடு வாள்.

எஸ்டேட் மானேஜர் என்று ஒவ்வொருவராக அறிமுகப்படுத்தப்பட்ட போது, தான் ஒரு எஜமானி என்ற உணர்வே அவளுக்கு வந்து விட்டது.

'நாலைந்து நாட்கள் தான் ஒரு விருந்தாளி' என்ற நினைவு அவளுக்கு இருந்தது. பிறகு, அதிகார தோரணையே வந்து விட்டது.

தினமும் ஒரு ஆப்பிள் உண் டால் டாக்டரை விலக்கி வைக்கலாம் என் பது பழமொழி. என் குறும்புக்கார நண்பன் கூறினான்: ''தினமும் ஒரு ஆப்பிள் உண்டால் டாக்டரை விலக்கி வைக்கலாம்; ஆனால் டாக்டர் அழகாக இருந்தால் ஆப்பிளை ஒதுக்கிவிடலாம்.''

—என். ராதாகிருஷ்ணன்

'நீ என்னோடு வாழுகிறாயா' என்று அவரும் கேட்கவில்லை. 'உ களுக்கு அப்படி ஒரு ஆசை இருக் றதா' என்று இவளும் கேட்கவில்லை.

இயற்கையாகவே பரிமா வது, பக்கத்தில் உட்கார்ந்து பே வது என்று ஆரம்பித்து, கணவ மனைவி போலவே ஒரு பந்தம் உ வாகி விட்டது.

முதலாளி துணிச்சல்கார ''இப்படியே நான் உன்னை விட் விடப் போவதில்லை,'' என்று கூ ஏராளமான நண்பர்களை வரவழைத் அவளைத் திருமணமே செய்து கொண் விட்டார்.

திருமணத்திற்குப் பரி பொருள்களும் வந்தன.

பணக்காரன் எந்த வயதி எதைச் செய்தாலும் உலகம் ஒப் கொள்ளத்தான் செய்யும்.

வாழ்க்கையை சக்கரவர்த்தி யாகத் துவங்கி விட்டோம் என்று ஆ தப்பட்ட வைதேகி, தனக்கு வ பரிசுப் பொருட்களை உடைத்துக் கூட பார்க்கவில்லை. அதிலெல்லாம் எல் இருக்கப் போகிறதென்று சாதார மாக இருந்து விட்டாள்.

ஒரு மாத காலம் தங்க டைய சொந்தக் கப்பலில் அரபு ந களுக்கெல்லாம் விஜயம் செய்து தி பியபின், ''ஏன் இந்தப் பரிசுப் பொ களை உடைத்துக்கூட நீ பார் வில்லை?'' என்று கேட்டார், ஜனா தனம்.

குழந்தைகளைப் பக்கத் வைத்துக் கொண்டு அவற்றையெ லாம் பிரித்தாள் வைதேகி.

''அம்மா! அம்மா! இ டப்பாவில் ஒன்றுமே இல்லை. கடுதாசி இருக்கிறது!'' என்று எ துக் கொடுத்தான், ஒரு பையன்.

கடுதாசியைப் பிரித்துப் டா தாள் வைதேகி.

''சகோதரி, உன்னை அடை தானே உன் கணவரைக் கொலை செ நார், ஜனார்த்தனன். அதில் அ வெற்றி பெற்று விட்டார்,'' என்ப அந்தக் கடிதத்தின் வாசகம்.

கடிதத்தைப் படிக்க வை பதறவில்லை. தன் அடுத்த வாழ்க் கையைப் பற்றிய யோசனையில் இறங்கின

[ஒனாசிஸ்-ஜாகுலின் திருமணத் அடிப்படையாகக் கொண்டது.]



# ஓவியர் ஜெயராஜ்

## பாசமானவையா?
## ம் விவாதிக்கிறார்கள்

கிறபோது என் மனசில் விகா
ஏற்படுவதில்லை.

சரஸ்வதி: ஜெயராஜ் சார்.
ள் இவ்வளவு 'awareness' உடன்
வதைக் கேட்க எனக்கு ஒரு பக்கம்
தாஷமாக இருக்கு. மறுபுறம் வியப்
வும் உள்ளது. ஆனால் நீங்கள் வரை
சித்திரங்களால் ஏற்படும் 'effect'
என்பதைப் பற்றி யோசித்துப்
க்க வேண்டாமா? படம் போடு
ர் என்கிற முறையில் நீங்கள்
ப்ரொட்யூசர். நான் ஒரு கன்ஸ்
. என்ன பாதிப்பு ஏற்படக்கூடும்
எங்கள் நிலையைப் பற்றி எப்
தாவது யோசித்திருக்கிறீர்களா?

ஜெயராஜ்: உங்களையறியா
ய மிகைப்படுத்திக் கூறுகிறீர்களோ
அஞ்சுகிறேன்.

சரஸ்வதி: இல்லை. இல்லை.
ள் சித்திரங்களை வெளியிடாத
ரிகைகளே கிடையாது. எல்லா
திலும் அநேகமாக அரைகுறைஆடை
நானும் ஒரு பெண்கள் கல்லூரி
தான் வேலை பார்த்து வருகிறேன்.
நீங்கள் வரைந்து கொண்டிருக்கிற
மாதிரி நிலைகளில் நான் பெண்களைப்
பார்த்ததே இல்லை. உங்கள் படங்கள்
எல்லாமே ஒரு செக்ஸ் பெர்வெர்ஷனை
டெவலப் செய்வதற்குத் துணை போகிற
மாதிரி இருக்கின்றனவே. உங்களைப்
போன்ற ஒரு பொறுப்புள்ள மனிதர்
இந்த நிலைக்கு......

ஜெய: நீங்க சொல்வது
நல்ல 'பாயிண்ட்' தான். ஒரு கணக்குக்கு
என்று பேசுவோம். அதன்படி பார்த்
தால் நீங்கள் சொல்லுகிற பாதிப்பு
ரொம்பவும் குறைச்சல். ஆனால் பெண்
இனத்திற்கு வேறு பல கொடுமைகள்
இழைக்கப்படுகின்றனவே. உதாரண
மாக எவ்வளவோ 'மாடர்னாக' இருந்
தும்கூட வாய் கூசாமல் ஐம்பதினாயி
ரம், அறுபதாயிரம் என்று பெண்
களுக்கு வரதட்சிணை கேட்கிறார்களே,
அசிங்கமாக இருந்தால் தொகை அதிகம்,
அழகாக இருந்தால் தொகை குறைவு
என்றெல்லாம் பெண் இனத்தை அவ
மானப்படுத்துகிறார்களே, அதை முதலில்
நீங்கள் ஒழிக்க முன் வர வேண்டாமா?
வசதி குறைந்த ஏழைப் பெண்களை
எவ்வளவோ இடங்களில் அரை வயிற்
றுக்குச் சாப்பாடு போட்டுவிட்டு வேலை
வாங்கிக் கொள்கிறார்கள். அதற்கு என்ன
போராட்டம்? முதலில் நீங்கள் குறிப்
பிட்ட மாதிரி 'வெர்ஜினிடி டெஸ்ட்'
இதைப் போன்ற நிஜமான கொடுமை
களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது,
வறுமைதான் ஆபாசம், அழுக்குதான்
அருவருப்பு என்று சொல்லுவேன்.

சரஸ்: அவைகள் நிஜம் என்
பதற்காக, உங்கள் சித்திரங்களினால்
ஏற்படும் விளைவுகளின் பாதிப்பு பொய்
என்றாகிவிடுமா? (தொடரும்)

பேட்டி: ஏற்பாடு: பால்யூ



# அன்றைக்கு வேண்டாம்

சுகன்யாவை அன்று பெண் பார்க்க வந்திருந்தார்கள். சுரேஷும் அவன் பெற்றோர்களும் தனிமையில் கலந்து பேசி அப்பொழுதே சம்மதத்தையும் தெரிவித்துவிட்டார்கள்.

''சரி. நீங்கள் முகூர்த்தத் தேதியை நிச்சயம் பண்ணி எழுதுங்கள். சுரேஷ் நாளை இரவு பம்பாய் போகிறான்,'' என்று எழுந்தார் சுரேஷின் தந்தை சந்திரசேகர்.

தொடர்
சுரேஷும்அ
தாயார்
வதியும்
தனர்.
படும பே
பார்வதி சு
யாவிடம் வி
பெற உள்
போனுள். சு
யா அழகுப்
மையா

ரத்னா

வளுக்கும் பையனை மிகவும் பிடித்துப் பாய்விட்டது.

"உனக்கு ஆபீஸ் எங் ம்மா?"

"மௌண்ட்ரோட் போக யும்."

"அந்த ஆபீஸ் பம்பாயில் இருக்கிறதாக சுரேஷ் சொன் ன். மாற்றிக் கொள்ள முடியுமில் யா?"

"நாலைந்து மாதங்களிலே ற்றலுக்கு ஏற்பாடு செய்து கொள்ள ம். உடனடியாக சௌகரியம் இருக் துன்னு நினைக்கிறேன். விசாரிக்க யும்." சுகன்யா நிதானமாகக் கூறி ள்.

"சரிம்மா. நான் வரட் டா...."

சுகன்யாவின் தோளைத்தொட் பேசிவிட்டுக் கிளம்பினான் பார்வதி.

அன்றுமாலை சுகன்யாவின் பற்றோர்கள் கல்யாண விஷயமாகத் ங்களுக்குள் கலந்து பேசினார்கள்.

"ஆவணி கடைசியில்தான் கூர்த்தம் வைத்துக் கொள்ளணு ம். சுகன்யா பிடிவாதமாகச் சொல்லு றாள்."

"ஆவணியில் மழை வரும். ரமம் இல்லையா?"

"இதோ பாருங்க. சுகன்யா வோட எண்ணம் என்னன்னு புரிந்து பாச்சு. அவளுக்குப் பம்பாய்க்கு மாற்ற க்கு எழுதிக் கேட்டுக் கிடைக்க நாலு தமாவது ஆகும். கல்யாணமாகிப் ரிந்திருப்பதை விடக் கல்யாணத் தயே ஒத்தி வைக்கலாம் இல்லையா?" ரித்தாள் சுந்தரி.

"ஓகோ. அப்படியா விஷ ம்? ஓ. கே."

"வந்து....." சுந்தரி புட வைத் தலைப்பை நீவி விட்டுக் கொண் ாள்.

"இன்னும் என்ன, சொல் லன்."

"இப்பல்லாம் கல்யாணத் ன்றைக்கே, சாந்தி முகூர்த்தமும் வைத் கிறாங்க. அப்படி வேண்டாமாம். ப்புறமா வைத்துக்கணுமாம். உங்க பண் சொல்றாள்..."

"என்னடி இது. ஒன் னுண்ணு. பொண்ணோட அபிப்ரா யத்தைச் சொல்லிக் கொண்டிருக்கி றாயே. சம்பந்திகள் என்ன நினைப்பார்கள்? அவர்கள் சம்மதிக்க வேண்டாமா? சுரேஷ் என்ன சொல்வானோ?" பட படத்தார் ராமசந்திரன்.

"சுத்தாதீங்களேன். எனக்கே ஒண்ணும் புரியலே."

ஆவணி மாதம் முப்பதாம் தேதி நல்ல முகூர்த்த நாளாக இருந் தது.

சம்பந்திகள் நல்லவர்களாக அமைந்துவிட்ட ஆனந்தத்தில் ஒரே பெண்ணான சுகன்யாவுக்கு வெகுவிமரி சையாகவே கல்யாணத்தை நடத்தினார் கள்.

மாலை நலங்குக்குப் பிறகு ரிஸப்ஷனுக்கு ஏற்பாடு நடந்து கொண்டிருந்தபோது சுந்தரி பரபரப் புடன் பார்வதியிடம் வந்தாள். தனி மையில் அவளிடம், "மாமி! சுகன் யாவுக்கு எப்பவும் சீராக மாதவிலக்கு ஏற்படறதில்லை. சில சமயம் ரொம்ப நாளாகும். சில சமயம் சீக்கிரம் ஆகி விடுவாள். மாத்திரை சாப்பிடற வழக்க மில்லை. ஆனால் கல்யாணமாச்சேன்னு சாப்பிடச் சொன்னேன். நல்ல வேளை முகூர்த்தம் நல்ல விதமாக முடிஞ்சு போச்சு. ஆனால் இன்னிக்குச் சாந்தி முகூர்த்தம் வைச்சுக்க முடியாது போல ஆகிவிட்டதே. என்ன செய்யறது?" என்று தவிப்புடன் கூறியபோது பார்வதி அன்புடன் சிரித்தாள்.

"இதெல்லாம் நம்ப கையிலா இருக்கு. முகூர்த்தம் நல்லபடி முடிஞ்ச தற்கு சந்தோஷப்படணும். வேறு என்ன செய்ய முடியும். நீங்கள் கவலைப் படாதீங்க. எப்படியும் சுரேஷ் நாளை இரவு பம்பாய்க்குப் புறப்படணும். இனி மேல் தீபாவளி சமயம்தான் வரு வான். அப்ப ஐப்பசியில் சாந்தி முகூர்த் தத்தை எங்க சொந்த வீட்டிலேயே அமோகமா நடத்திடலாம்."

சில நாட்கள் கழித்து ஒரு நல்ல நாளில் சுகன்யாவை மாமியார்

ஒருத்தி: எங்க அம்மா வோட பாட்டியை ஒரு குதிரை துரத்தியது!

மற்றொருத்தி: ஏண்டி?

முதல் பெண்: அவள் எங்க கொள்ளுப பாட்டியாச்சே!

—லாவண்யா

வீட்டில் பட்சண பணியாரங்களுடன் கொண்டு விட்டார்கள். அவர்கள் வீடு மாம்பலத்தில் இருந்தது. சுகன்யா அங்கிருந்தே ஆபீசுக்குப் போய் வந்து கொண்டிருந்தாள். மாமியார் மாமனாரிடம் மரியாதையாக, பண்பாக நடந்து கொண்டாள். வீட்டு வேலைகளையும் சுறுசுறுப்பாகச் செய்து விட்டு ஆபீசுக்கும் போய் வந்தாள். அவர்களும் 'தங்கள் பெண்ணைப் போலவே அவளைப் பரிவுடன் நடத்தினார்கள். பம்பாயிலிருந்து சுரேஷ் அடிக் கடிகடிதம் எழுதினான். சுகன்யாவும் பதில் எழுதிக் கொண்டிருந்தாள். ஐப்பசி மாதம் பிறந்தது. சுரேஷிடமிருந்து கடிதம் வந்தது. "தீபாவளிக்கு முதல் நாள் தான் என்னால் வரமுடியும். தீபாவளிக்குப் பிறகு ஒரு மாதம் லீவு. சென்னையிலும் பிறகு பம்பாய்க்கு வந்து சில நாட்கள் லீவைக் கழிப்பதாக ஏற்பாடு செய்திருக்கிறேன். நண்பனின் வீடு கிடைக்கும்," என்று எழுதியிருந்தான். சந்திரசேகரும் பார்வதியும் ஒரு நாள் சுகன்யாவை மயிலாப்பூரில் கொண்டு விட்டுவிட்டு அவள் பெற்றோரையும் கலந்து பேசி தீபாவளிக்குப் பிறகு ஒரு முகூர்த்தம் நிச்சயித்துக் கொண்டு வந்தார்கள்.

சுகன்யா குதூகலத்தோ
கண்களில் இன்பக் கனவுகள் பொ
சுரேஷின் வருகையை எதிர்பார்த்து
காத்துக் கொண்டிருந்தாள். சுரே
தீபாவளிக்கு முதல் நாள் கா
வந்திறங்கினான்.

"சுரேஷ்! உன் மாமனாரு
மாமியாரும் எங்களையும் வரச் சொ
னார்கள். எங்களால் இரவு தங்க மு
யாது. நாளைக் காலை விருந்துக்கு நா
கள் வருவதாகச் சொல்லி விட்டோ
நீ மட்டும் சாயந்தரம் அங்கு பே
காலையில் மங்களஸ்நானம் செய்யவே
அதனால் அங்கேயே ராத்திரி தங்கிவி
ஆனால்..." சில . விநாடிகள் இழுத்
நிறுத்தி பிறகு—"நாளை வெள்ளிக்கிழமை
தான் நம் வீட்டில் முகூர்த்தம் ஏ
பாடு பண்ணியிருக்கு. நினைவில் வை
துக் கொள். புரிகிறதா?" என்றார் ச
திரசேகர்.

சுரேஷ் கூச்சத்துடன் தலை
ஆட்டினான். அன்று மாலை நான்
மணிக்கே டிரஸ் செய்து கொண்
சின்ன சூட்கேஸுடன் கிளம்பினா
இரண்டு தங்கைகளும் அருகில் நின்
ருந்தனர்.

"ஏம்மா! சுஜாவையாவ
என்கூட அனுப்பேம்மா.." என்றான்
"நிஜமாகக் கிளம்பிவிடுவே
என்ன?" பயமுறுத்துவது போலச் சி
தாள் தங்கை சுஜா.

சுரேஷ் மயிலாப்பூரில் சுக
யாவின் வீட்டில் வந்திறங்கிய போ
வாசல்புற ஜன்னல் வழியாக சுகன்ய
தன்னை ஆர்வத்துடன் பார்த்துக் கொ
டிருப்பதைக் கண்டான். இனிய உணர்
களில் அவன் உடல் சிலிர்த்தது. சுந்
ஆரத்தி சுற்றிக் காட்டி வரவேற்ற
ராமச்சந்திரன் சந்தோஷத்தில் முக
விரிய உபசரித்துப் பேசிவிட்டு, "எனக்
அவசரமாக ஒரு வேலையிருக்கு. போயிட்
வரேன்" என்று இங்கிதமாக நழு
விட்டார்.

"இந்தா சுகன்யா! டிப
காப்பியை எடுத்திட்டுப் போ." சுந்த
பெண்ணின் கையில் 'டிரே'யை நீட்
னாள். நல்ல நீலத்தில் உல்லிஉல்
சாரியும், வெண்பட்டு ப்ளவுஸு
அணிந்து, நீண்ட பின்னலில் மல்லிகை
யும் கனகாம்பரமும் சரிந்து தொங்க
மைதீட்டிய விழிகளுடன் சுகன்ய
சுரேஷின் எதிரில் வந்து நின்றாள். மெ
வாக டீபாய் மீது தட்டை வைத்

## 79
## 80

லார்டு மவுண்ட்பேட்டன் பிறந்த தேதி 25—6—1900. இந்த ஆண்டு அவரது பிறந்த நாளின்போது ஞாபக மறதியாக 'தங்களின் 80வது பிறந்த நாளுக்கு எனது வாழ்த்துக்கள்' என்று எழுதிவிட்டேன். அதற்கு அவர் 'எனக்கு தற்போது வயது 79. எதிர் வரும் 1980 ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில்தான் நான் 80 வயதுக்காரனாய் இருப்பேன்' என்று எழுதினார்.

—பவுல்தேவர்.

விட்டு, ''சாப்பிடுங்கள்.,'' என்றாள். தன்னையே குறுகுறுவென்று பார்க்கும் அவனுடைய பார்வையின் உணர்ச்சிகளைத் தாங்கமாட்டாமல் சுகன்யா கன்னம் சிவந்தாள்.

''சுகன்யா!''

''உம்.''

''நமக்கு நிச்சயமாகி மூன்று மாதங்களுக்குப் பிறகு கல்யாணம் நடந்தது. அதற்கேநான் தவித்துப் போனேன். சீக்கிரம் கல்யாணமாகி உன்னை அடைய வேண்டுமென்று துடித்தவனுக்கு, கல்யாணத்தன்றே நமக்கு முதல் இரவாக இருக்க முடியாமல் சந்தர்ப்பம் சதி செய்தபோது எத்தனை ஏமாற்றம் தெரியுமா?''

அவள் முகம் நாணத்தால் சிவந்தது. ''முதல் இரவைப் போல தலைதீபாவளியும் தம்பதிகளுக்குப் புது இன்பம் தரக் கூடியது. நாளைக்குக் காலையிலே மாமா மாமி அப்பா அம்மா எல்லாருடைய எதிரிலும் ஒரு வேடிக்கை இருக்கு... பாருங்கள்'' என்றவள் தன் கையால் எடுத்துத் தேங்காய் பர்பியை சுரேஷின் வாயில் ஊட்டினாள்.

மறுநாள் காலை கங்காஸ்னானம் முடித்து, புது உடைகள் அணிந்து எல்லோரும் பட்சணங்கள் உண்டு மகிழ்ந்தார்கள். சந்திரசேகரன், பார்வதி இரண்டு பெண்கள் மாப்பிள்ளைகள், குழந்தைகளோடு வந்தனர். சமையல்கார அம்மாள் ஒருத்தி விருந்து சமையல் செய்து கொண்டிருந்தாள். எல்லோரும் ஹாலில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது சுகன்யா ஒரு டேப்ரிகார்டரை எடுத்து வந்து மேஜைமீது வைத்தாள்.

''என்னம்மா பாட்டு ஏதாவது பதிவு பண்ணியிருக்கிறாயா?''




அன்று மவுண்ட்ரோட் மீரான் சாகிப் தெருவில் ஏகக்கூட்டம்.

''இதுதான்—இதேதான்?!' பல குரல்கள். சிலர் சீட்டியடித்து ஆரவாரம் செய்தனர். எட்டிப் பார்த்தேன். ஒரு கழுதை: பஞ்சகல்யாணியில் நடித்திருக்கும் கழுதை.

படத் தயாரிப்பாளர் உடந்தை மணாளன் அந்தக் கழுதையை தடவிக் கொடுத்து விட்டு ஒரு லாரியில் ஏற்றினார்.

''இந்தப் படத்தைத் தெலுங்கிலே எடுக்கப் போறாங்க. அதனால் கல்யாணி இப்போ நேரா நெல்லூர் போகுது. நாளைக்கு ஷூட்டிங். அங்கிருந்து வேறே சில ஊருக்குப் போய்விட்டு அடுத்த மாசம்தான் வரும்.'' என்று தெரிவித்தார்.

அவரிடமிருந்து கிடைத்த சில தகவல்கள்: கழுதையைப் பழக்க அறுமாதமாயிற்று. புல், காரட், சாக்லெட், கடலைமிட்டாய் கொடுத்துப் பழக்கினார்கள். கடலைமிட்டாய் கொடுத்தால் அதற்கு நல்ல மூடு வந்துவிடும். மற்றக் கழுதையைப் போலக் காகிதம் தின்னாது. கொடுத்தாலும் தட்டி விட்டுவிடும்.

—ராஜா

சந்திரசேகர் ஆர்வத்துடன் வினவினர்

'இல்லே. மாமா இதிலே ஒரு சுவையான நாடகம் பதிவாகியிருக்கு. அம்மா, அப்பா! குறுக்கே புகுந்து ஒண்ணும் பேசக்கூடாது. எல்லோரும் அமைதியாகக் கேட்டால் நன்ருக ரசிக்கலாம்,'' என்று டேப் ரிகார்டரின் பித்தானை அழுத்தினுள். முதலில் ஏதோ கசமுச சப்தம் பிறகு ஓர் உரையாடல் ஒலித்தது.

''என்னங்க நீங்களே சிரிச்சுக்கறீங்க?'' சுந்தரியின் குரல்.

சுந்தரி பிரமிப்புடன் நிமிர்ந்தாள். சுகன்யா பேசாதிருக்கும்படி சாடை காட்டினுள்.

"நினைத்துப்பார்த்தால் சிரிப்பு தான் வரது. நம்ப ரகுராமன் லெட்டர் எழுதியிருக்கானே. லீவில் வரானும் சீமந்தம் பண்ணிட்டு அப்புறம் தலை தீபாவளி கொண்டாடி விட்டு உஷாவை இங்கே விட்டுட்டு அவன் மட்டும் திரும்ப டில்லிக்குப் போகிறானும்...''

''ஆமாம். இதிலே என்ன சிரிப்பு?''

''சுந்தரி இந்தக் காலத்திலே எல்லாமே இயந்திர கதியிலே நடக்கிறது. கல்யாணம் கார்த்தி பிரசவம் எல்லாமே உணர்ச்சிகளாலே இயங்காம ஏதோ சமைக்கணும் சாப்பிடணும் சம்பாதிக்கணும் தூங்கணும் என்கிற மாதிரி 'ரொடீன்' வேலைகளாயிடுத்து. 'லவ் காதல் ஊதல்'ன்னு எல்லாம் ஆடுது. ஆனுல் உண்மையான லயிப்போ, ரசிப்போ இல்லவே இல்லே.''

''ரொம்ப நன்ருக இருக்கே! இல்லேன்னு நீங்க எப்படி நினைக்கிறீங்க?''

''இல்லே சுந்தரி. நான் சொன்னுப் புரியாது. நீயாகச் சிந்தித்துப் பார்க்கணும். இப்ப ரகுவும் உஷாவும் லவ் பண்ணினுர்கள். கல்யாணம் பண்ணிட்டாங்க. ஆனுல் அவர்கள் நடந்துகிறதைப் பார்த்தால் நம்மளுக்கும் முந்தியே அவங்களுக்குக் கல்யாணம் ஆயிட்ட மாதிரி அத்தனை பழசாத் தெரிகிறது. கல்யாணம் எப்படிப் புனிதமோ அப்படித்தான் தம்பதிகள் கல்யாணத்துக்கப்புறம் முதல் முதலாக ஒருவரை ஒருவர் சந்திக்கிறதும் புனிதமானது. முதல் இரவுன்னு ஸ்பெஷலா முத்திரை குத்தறாங்களே ஏன். முதல் முதனாக நடக்கிற சில விஷயங்களுக்கு மகத்துவம் அதிகம். இப்ப பாரேன், நம்ப ரகுவுக்கு சீமந்தம் ஆன பிறகு தலை தீபாவளி. சிரிப்பு வரலேயா?''

''ஆமாம். நீங்க சொல்றது புரியறது. நம்ப தலைதீபாவளி எத்தனை நன்ருக நடந்தது நினைவிருக்கா?

' சுந்தரி, அதெல்லாம் மறக்க் கூடிய விஷயமா என்ன?''

''தீபாவளி எப்ப வரும், எப்ப வரும்ன்னு தவம் கிடந்தோ இல்லையா? அந்தச் சந்திப்புக்கு அந்த சந்தோஷத்துக்கு அந்த த்ரில்லுக்கு ஈடாக ஒன்றுமே இல்லே.''

டேப்ரிக்கார்டரை சுகன்யா நிறுத்தினபோது ஹால் முழுது மௌனமாக இருந்தது.

''மன்னி! நீங்க எப்ப இதை 'ரிகார்ட்' பண்ணினீங்க?''

சுஜா ஆவலுடன் வினவினுள். சுகன்யா சிரித்தாள்.

''இரண்டு வருஷத்துக்கு முன்னே எங்க அண்ணு ரகு எனக்கு டில்லியிலிருந்து 'டேப் ரிகார்டர்' வாங்கிட்டு வந்து கொடுத்தான். ஒருநாள் நான் அதை 'ஆன்' பண்ணினதை மறந்து போய்ச் சினேகிதி கூப்பிடவே பக்கத்து வீட்டுக்குப் போனேன். அப்ப அப்பாவும் அம்மாவும் இப்படிப் பேசியிருக்கிருர்கள். அது அப்படியே பதிவாயிருக்கிறது. இதைப் போட்டுக் கேட்டதிலிருந்து எனக்கு அப்பாவோட ஏக்கம் தீர்கிறமாதிரி நாமாவது வாழ்ந்து காட்டணும்னு தோணித்து. அதனுல் தான் எல்லாவற்றையும் வேணும்னே தள்ளிப்போட்டேன்...''

''அப்படியானுல் முகூர்த்த அன்றைக்கு நீ ஒதுங்கியது கூட நடிப்புத்தானே?'' அம்மா கேட்டபோது சுகன்யா வெட்கத்துடன் தலை குனிந்தாள்.



மனைவி: கட்டம்போட்ட என் புடவை போலவே நீங்களும் கட்டம் போட்ட லுங்கி வாங்கிக்கொண்டிருக்கிறீங்களே?

கணவன்: நான் துவைப்பது லுங்கியா, புடவையா என்று கண்டு பிடிக்க முடியாமல் பக்கத்துப் போர்ஷன் காரன் திண்டாடட்டுமே!

—ஆர். சாந்தா

# அளவு



'எங்க ஊர் ராசாத்தி' படப்பிடிப்புக்காக கோபிச்செட்டிப்பாளையத்திற்கு போயிருந்தார்கள், சுதாகர், ராதிகா, கவுண்டமணி முதலியோர். அவர்களை அந்த ஊரில் நடந்த ஒரு நாடகத்துக்கு விருந்தினராக அழைத்தார்கள்.

நாடகம் முடிந்ததும் காமெடியன் கவுண்டமணியை மேடையில் ஏற்றிப் பேச சொன்னார்கள். பேசினார்.

ரசிகர்கள் கூட்டத்திலிருந்து ஏகப்பட்ட குரல்கள்: ''அளவு எடுக்கிற காட்சியை'' (கிழக்கே போகும் ரயிலில் வருகிறது.) கவுண்டமணி மேடையில் நடித்துக் காட்ட வேண்டுமென்று.

''பொண்ணு இல்லையே? யாருக்கு அளவெடுப்பேன்?'' நழுவினார் கவுண்டமணி.

ரயில் ராதிகாவும் அங்கேயே இருந்ததால் அவரை மேடையில் ஏற்றினார்கள் ரசிகர்கள்.

கவுண்டமணி மேலும் சறுக்கினார். ''டேப் இல்லை—எதனால் அளவெடுப்பது?''

முன் வரிசையிலிருந்த ஒருவர் ''எப்படியாவது நீங்க தட்டிக் கழிப்பீங்கன்னு தெரியும் இந்தாங்க டேப்,'' என்றாரே பார்க்கலாம்—அசந்து போய் விட்டார் கவுண்டமணி.

ரசிகர்களின் முன்னிலையிலே ராதிகாவுக்கு அளவெடுக்கும் காட்சியில் நடித்தபோது ஓ[illegible] கைதட்டல்.

ஸ்ரீப்ரியாவின் தாயார் கிரிஜா பக்கிரிசாமி தெலுங்கில் வெளிவந்த 'சிவரஞ்சனி' கதையை 'நட்சத்திரம்' என்ற பெயரில் தமிழில் தயாரிக்கிறார். இந்தத் தமிழ்ப் படத்தை முதன் முதலாக இயக்கப் போகிறார் தாசரி நாராயணராவ்.

தெலுங்கில் கொடி கட்டிப் பறக்கும் இந்த டைரக்டர் இதுவரை இயக்கிய படங்கள் 34. சில்வர் ஜுபிலி: 6 படம். நூறு நாள்: 25 படங்கள்.

தாசரி ஒரு காமர்ஸ் பட்டதாரி.

அவரை அறிமுகப்படுத்திய தயாரிப்பாளர் ராமா நாயுடு ''நானும் தாசரியை என் படமொன்றை டைரக்ட் செய்யும்படி நாலு வருஷமாகக் கேட்கிறேன். இன்னும் அவரால் செய்ய முடியவில்லை. அவர் அவ்வளவு பிசி,'' என்றார் தமாஷாக. —ராதா



தாசரி நாராயணராவ்



சுந்தரமூர்த்தி இளகிய மனமுடையவன்தான். ஆனால் ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் அவனுக்கு இரக்கமே கிடையாது.

விதவைகளைக் கண்டால் அவனுக்குக் கொஞ்சமும் ஆகாது. அருவருப்பு கொள்வான். அவனைப் பொறுத்தவரை கணவனை இழந்த பெண்கள், இந்த உலகத்தில் இருக்கவே லாயக்கற்றவர்கள், உரிமையற்றவர்கள் என்ற எண்ணம் கொண்டவன். எல்லாருடைய பரிதாபத்தையும் சம்பாதித்துக் கொண்டு அப்படியாவது அவர்கள் உயிர் வாழ வேண்டுமா?

நண்பன் ரகுவுடன் கடற்கரையில் உட்கார்ந்திருந்தபோது ஒரு விதவையம்மாளிடம் ரகு முறுக்கு வாங்கினான். சுந்தரமூர்த்தி அதைச் சாப்பிட மறுத்து விட்டான்.

''ரொம்ப சுத்தமானதுடா... ரொம்ப நல்லா செய்வாங்க. நான் இவுங்க கிட்டேதான் எப்பவும் வாங்குவேன்.''

''எனக்கு வேண்டாம். விதவைங்களைக் கண்டாலே எனக்குப் பற்றிக்கிட்டு வருது. கணவனைப் பறிகொடுத்துவிட்டு அப்படியாவது உயிரை வெச்சுக் காட்டி என்னன்னு புரியலே.''



ரகு நண்பனின் தோளைத் தட்டினான். "ஏன், மனைவியை இழந்த கணவன்கள் இருக்கும்போது, கணவனை இழந்த மனைவிகள் இருக்கக் கூடாதா?"

"அப்படியில்லை. ஆம்பிளை சமாசாரம் வேறு. அவன் தோற்றத்தில் ஒரே மாதிரி இருந்துடறான். விதவைன்னா, எப்படியிருந்தவள் எப்படி மாற வேண்டியதாகி விடுகிறது. அதெல்லாம் கண்ணராவி. கணவனிருக்கும்போது அவள் கஷ்டப்பட்டுக் கொண்டு இருந்தால்கூட அதிலே ஒரு நிறைவு அவளுக்கு இருக்கும். அவன் போன பின்னால் சுகப்பட்டால் கூட அது அவளுக்குப் போலி வாழ்க்கைதான். நான் பிரதம மந்திரியாகயிருந்தால் உடன்கட்டை ஏறுதலை மறுபடி கொண்டு வந்து விடுவேன்."

"பைத்தியக்காரா!" ரகு எழுந்து கொண்டான்.

சுந்தரமூர்த்தி வீட்டுக்கு வரும்போது மோட்டார் பைக் நடு வழியில் ஸ்டார்ட் ஆகவில்லை. அருகிலுள்ள கராஜ்வரையாவது தள்ளிப் போய் சர்வீஸுக்கு விடலாம் என்று தள்ளிச் சென்றான்.

ஒரு பர்லாங் தூரமிருக்கும். அதற்குள் அவனுக்கு மார்பு திடீரென்று வலித்தது. கொடுமையாக மூச்சை இரைத்தது. வியர்த்துக் கொட்டியது.

தனக்கு ஹார்ட் அட்டாக் வந்து விட்டதோ என்று பயந்தான். மோட்டார் சைக்கிளை ஓர் ஆபிஸ் அருகே நிறுத்திவிட்டு, டாக்ஸி பிடித்து வீட்டுக்கு வந்து சேர்ந்தான்.

அவனுடைய இளம் மனைவி லோசனா அப்போதுதான் நெற்றிக் குங்குமம் சரியான வட்டமாயிருக்கிறதா என்று கண்ணாடி முன் பார்த்துச் சரி செய்து கொண்டிருந்தாள்.

அவர்களுக்குக் கலியாணமாகி ஆறு மாதம்தான் ஆகியிருந்தது.

மல்லிகைப் பூவை நான்காக மடித்துக் கொண்டையில் வைத்து அழுத்திக் கொண்டவள், கையிலிருந்த மலர் மணத்தை முகர்ந்து பார்த்து, 'எவ்வளவு வாசனையாக இருக்கிறது' என்று மகிழ்ந்து கொண்டாள்.

வாசலில் டாக்ஸி சத்தம் கேட்டதும் எட்டிப் பார்த்தாள்.

கட்டணத்தைக் கொடுத்துவிட்டு, வாசல் நிலையைப் பிடித்துத் தள்ளாடியவாறு நின்று கொண்டிருந்த கணவனைப் பார்த்ததும் அவளுக்கு ஒன்றுமே புரியவில்லை. பதறியவாறு, "ஐயோ என்ன ஆச்சு உங்களுக்கு?" என்று ஓடி வந்தாள்.

அவனுக்கு வியர்த்துக் கொட்டிக் கொண்டிருந்தது.

தட்டித் தடுமாறியவாறு, "டாக்டருக்கு போன் பண்ணு. எனக்கு ஹார்ட் அட்டாக்," என்று சொல்லி அங்கேயே படுத்து விட்டான்.

அடுத்துள்ள வீட்டுக்குப் போய் டாக்டருக்குப் போன் செய்துவிட்டு பறந்தோடி வந்தாள்.

# இருக்கக் கூடாது

சற்று நேரத்தில் டாக்டர் வந்து சோதித்தார். ஊசி போட்டார். ''ஹார்ட் அட்டாக்தான். ஆனால் ஸிவியர் டைப் அல்ல. இரண்டாவது அட்டாக் வரக் கூடாது. நர்ஸிங் ஹோம் ஏதாவதில் சேர்த்து ஒரு மாதம் ஓய்வு எடுக்க வேண்டும்,'' என்று சொல்லிச் சென்றார்.

நர்ஸிங் ஹோமில் சுந்தரமூர்த்திக்கு இருப்புக் கொள்ளவில்லை. மனைவியை அருகில் வைத்துக் கொண்டு அவள் கைகளைப் பற்றிக்கொண்டு, அவளது நெற்றியையும் தலையிலுள்ள புஷ்பத்தையும், நகைகளையும் வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தான்.

''என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்?''

அவள் கைகளை மிருதுவாகத் தடவினான். ''எவ்வளவு அழகாகக் களையாக இருக்கிறாய்? நெற்றியிலே பொட்டு, தலையில் புஷ்பம். முகத்தில் சிரிப்பு. நகைகள். இதெல்லாம் நான் மண்டையைப் போட்டதும் போய்விடப் போகிறது. வரட்டுத்தனமாகிவிடும் உன் வாழ்க்கை.''

''அசடு மாதிரி பேசாதீர்கள். உங்களுக்குத்தான் உடம்பு தேவலையாயிற்றே.''

''இல்லை லோசனா! எனக்கென்னவோ நான் செத்து விடுவேன் என்று தோன்றுகிறது. இரண்டாவது அட்டாக் எப்பவும் நேரலாம்.''

''அப்படியெல்லாம் நேராது.''

''நேர்ந்து விட்டால்?''

அழுதவாறிருந்தாள். என்ன பதில் சொல்வது?

''லோசனா!'' அவன் குரலில் உறுதி தொனித்தது. கட்டளை மாதிரி இருந்தது. ''நான் ஒரு முடிவு செய்து விட்டேன். நீ கட்டாயம் சம்மதிக்க வேண்டும்.''

''உம்...''

''போய்க் கதவைச் சாத்திவிட்டு வா.''

அவனுடைய பார்வை மேலேயிருந்த மின்சார விசிறியில் இருந்தது.

அவள் கதவைத் தாளிட்டு வந்தாள்.

''என்ன சமாசாரம் சொல்லுங்கள்.''

''நான் சாகிறதுக்குள் நீ சாக வேண்டும்.''

அவள் திகைத்தவளாக அவனைப் பார்த்தாள். பின்பு துன்பம் பொங்க, ''சந்தோஷமாக நான் செத்துப் போகத் தயார். ஆனால் சாவு வருவது என் கையில் இல்லையே,'' என்றாள்.

அவன் முகம் குரூரமாயிற்று.

''ஏன் உன் கையில் இல்லை? நர்ஸ் இனிமேல் ராத்திரிதானே வருவாள்?''

## கார் வாங்கித் தராதது ஏன்?

இங்கிலாந்தில் படித்துக் கொண்டிருந்த தமது மக ஜவஹர்லாலுக்கு, மோதிலால் நேரு 28-11-1909'ல் எழுதி கடிதம் இது:

''உன் கடிதத்தைப் படித்ததும் எனக்குச் சிரிப்புத்தா வந்தது. என்னிடமிருந்து பெருந்தொகைக்குச் 'செ எதிர்பார்த்து ஏமாந்ததாக நீ எழுதியிருக்கிறாய்! ...உன் பிறந் நாள் வருவது முன் கூட்டியே தெரியாமல் போய் விடுவதா உனக்குப் பரிசுகளை அனுப்ப முடிவதில்லை.

நீ மோட்டார் கார் வேண்டும் என்கிறாய். உனக்கு கார் வாங்கித் தருவதற்கு ஒரு ராஜாவின் உதவியா எனக்கு தேவை: உனக்குக் கார் வாங்கித் தர என்னால் முடியாதா? ஆன இப்போது வாங்கித் தராததற்கு ஒரு காரணம் உண்டு. நண்பர்களுடன் போட்டி போட்டுக் கொண்டு காரை வேகமா ஓட்டிக் கொண்டு போய் விபத்தில் சிக்கிக் கொள்வாயோ என் ஆறாயிரம் மைல்களுக்கு அப்பால் உள்ள உன்னை நினைத்து நா தவிப்பேன்...''

ஆதாரம்: 'நியூஸ்வீக்' தகவல்: சத்தி.எச். ஜப்பா

பெண்களுக்கு இடம் கொடுத்தால் தலைக்கு மேல் ஏறுவார்கள் என்பதற்கு இதோ ஓர் உதாரணம்!

இங்கிலாந்தில், ராயல் ஆல்கட் போட்டி. பெண் தன் காலை ஒரே தடவை உயர எழுப்பிப் பக்கத்திலுள்ள ஆணின் தலையைக் காலால் தொடுகிறாள். (ஆளுடைய உயரம் சுமார் ஐந்தரை அடி.)

—எஸ். நடராஜ்
ஆதாரம்: 'சன்'



# அக்கிரமத்துக்கு எல்லை இல்லையா?

''ஆமாம்.''

''சரி. மூலையிலுள்ள அந்தக் கயிறை எடு.''

அவளுக்குப் புரியவில்லை. ''கயிறையா?''

''ஆமாம்.''

அந்த அறையின் பரண் மாதிரி இருந்த இடத்தில் பழைய ஃபைல்களைக் கட்டி ஒரு தடித்த கயிறு இருந்தது.

அதை ஏறி அவளால் எடுக்க முடியவில்லை.

''ஸ்டூலைப் போட்டுக் கொண்டு ஏறு.''

''கயிறு எதற்கு?''

அவள் கைகளை அவன் பற்றிக் கொண்டான். ''லோசனா, நான் இறந்த பிறகு நீ இருப்பதை நான் கொஞ்சமும் விரும்பவில்லை. ஒரு துப்பாக்கி இருந்தால் உன்னைக் கொன்றுவிட்டு நானும் சுட்டுக் கொண்டு விடுவேன். ஆனால் என் மரணம் நிச்சயம். உன் மரணம்தான் நிச்சயமில்லை. எனக்குப் பின் நீ பாழ் நெற்றியும், முகத்திலே துக்கமுமாக எல்லாருடைய பரிதாபத்தையும் பெற்றுக் கொண்டு சகிக்க முடியாமல் வாழப் போவதை நான் வெறுக்கிறேன்... அதனால்...''

''நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?''

''அந்தக் கயிறை அவிழ்த்து மின்சார விசிறியில் மாட்டு. சுருககுப் போட்டுக் கொண்டு நீ இன்னும் ஐந்து நிமிஷத்தில் இறக்கப் போகிறாய்.''

லோசனா கண்களில் பயம் தோன்ற அவனைப் பார்த்தாள்.

—சுய புத்தியுடன்தான் கணவன் பேசுகிறான் என்று சந்தேகம் ஏற்பட்டது அவளுக்கு.

அவன் நிதானமாகச் சொன்னான்: ''எனக்கு ஏதோ ஒரு டெலீரியம் வந்து பிதற்றுகிறேன் என்று நினைக்காதே. முழுப் பிரக்ஞையுடன் சொல்கிறேன். என் கண் எதிரிலே தூக்குப் போட்டுக் கொண்டு சாகப் போகிறாய். நான் பார்த்துக்கொண்டு நிம்மதியாக இருக்கப் போகிறேன்.''

அவள் உடம்பு பயத்தால் நடுங்கியது.

''நிஜமாகத்தான் சொல்கிறீர்களா?''

அவன் வெறுப்புடன் சிரித்தான். ''ஏன் லோசனி, உயிர் வெல்லமா இருக்கிறதா? நான் செத்த பிறகு நீ விதவையாகவாவது வாழ வேண்டும் என்று நினைக்கிறாயா? அப்படியாவது ஒரு வாழ்க்கை வாழ வேண்டுமா? உனக்கு அது

பிடிக்குமா? அந்த வாழ்க்கை ஒரு போலி வாழ்க்கை, உயிரற்ற வாழ்க்கை. அது உனக்குப் பிடிக்குமா? எனக்குப் பிடிக்காது. சத்தியமாகப் பிடிக்காது. நீ விதவையாக வாழப் போவதைவிட நீ இறப்பதையே நான் விரும்புகிறேன். சத்தியமாக, மனப்பூர்வமாக சுய நினைவோடு சொல்கிறேன். லோசனி... நீ செத்துப் போறதுதான் என் மனசுக்கு ஒரே ஆறுதல்.''

அவள் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

சிரித்தவாறு அவன் கன்னங்களைத் தடவித் தந்தாள்.

''ஆல் ரைட்! நீங்கள் சொல்வதை நான் ஒப்புக் கொள்கிறேன்.''

அவளைக் கட்டிக் கொண்டான். ''லோசனி! இப்போதுதான் என் மனம் குளிர்ந்தது. அந்த ஸ்டூலைப் போட்டுக் கொண்டு மெதுவாக ஏறி அந்தக் கயிறை எடு.''

அவள் ஸ்டூலைப் போட்டு ஏறினாள். அப்போதும் எட்டவில்லை.

''இரு. நான் முயற்சி பண்ணுகிறேன்.''

அவன் எழுந்து ஸ்டூலின் மேல் ஏறினான். அது கொஞ்சம் பெரிய காகித மூட்டை. மெதுவாக இழுத்துத் தலையில் தாங்கி, தோளுக்கு இறக்கி அதிக ஓசையில்லாமல் கீழே போட்டான்.

கயிற்றை அவிழ்த்தான். போதுமான நீளமிருந்தது.

சுருக்குப் போட்டான்.

''லோசனி, மெதுவாக ஏறி அந்த விசிறியில் இதை மாட்டு.''



''உன் வீட்டுக்காரர் ஃபாரின்லேர்ந்து காஸ்ட்லி 'பிரா' வாங்கிக்கிட்டு வந்தும் எண்டி பெருமூச்சு விடுறே?''

''லூசா இருக்கு. பெருமூச்சு விட்டாத்தான் அளவு சரியா இருக்கும் போலிருக்கு!''

—அ. இராமதாஸ்

அவள் ஏறினாள். எட்டவில்லை.

''நீ ஆனாலும் குள்ளம்...'' என்று சிரித்தவாறு, அவனே அதை எம்பி மாட்டினான். இரண்டு தரம் இழுத்துப் பார்த்தான்.

''ஆல் ரைட் லோசனி.''

அவனைக் கட்டிக் கொண்டு அவள் அழுதாள். ''நீங்க பிழைச்சிடுவீங்க. எதுக்காக அனாவசியமா நான் சாகணும்? உயிர் மேலே எனக்கு ஆசை இல்லை. ஆனால் அநியாயமாகச் சாகணும்கறது அர்த்தமில்லாததா எனக்குப் படறது.''

அவனுக்குக் கோபம் வந்துவிட்டது.

''லோசனி! நீ தூக்கில் இறக்க விரும்பாவிட்டால் அந்தக் காரியத்தை இதோ உன் எதிரிலேயே நான் செய்து கொண்டு விடுகிறேன்...''

அவன் ஸ்டூலில் பதட்டத்துடன் ஏறினான்.

லோசனா பதறியவளாக ''வேண்டாம்... ப்ளீஸ்... நானே செத்துப் போகிறேன்.''

ஸ்டூலின் மேல் ஏறினாள் சுருக்கை மாட்டிக் கொண்டாள்.

கீழே ஸ்டூலை இடறி விடுவதற்கு அவளுக்குத் தெரியவில்லை.

சுந்தரமூர்த்தி, ''ஸ்டூலை உதைத்துத் தள்ளிக் கொள்,'' என்றான்.

அவளுக்கு எப்படி என்று தெரியவில்லை. அது கனமான ஆஸ்பத்திரி ஸ்டூல்.

அவன் படுக்கையிலிருந்து எழுந்து ஸ்டூலைப் பற்றித் தள்ளினான் இல்லை. தள்ள முயன்றான்.

மார்பில் 'ஐயோ' என்று பயங்கரமாக வலித்தது.

டாக்டர் வருத்தத்துடன் சொன்னார். ''மிக நன்றாகத்தானிருந்தார். ஏதோ செய்யத் தகாத ஒரு காரியத்தைச் செய்திருக்கிறார். அதுதான் இந்தத் திடீர் அட்டாக்,'' என்றவர் லோசனாவைத் தனியே அழைத்துச் சென்று, ''நீங்கள் அவருடன் தனியே இருக்கும்பொழுது அவர் உணர்ச்சி வசப்பட்டு ஏதாவது செய்தாரா? ஐ மீன் ஏதாவது உறவு?''

குலுங்கக் குலுங்க லோசனா அழுதவாறு சொன்னாள். ''இல்லை டாக்டர்...சத்தியமாக இல்லை...''

உண்மையை எப்படி அவளால் சொல்ல முடியும்?


காத்திருப்பது எப்படி?
காப்பாற்றிக் கொள்வது எப்படி?
கவிழ்ப்பது எப்படி?


தார் தாரா என்ன கிழிசல்!
இனி எனக்கு வேண்டியதில்லை
கிழிச்சு வீணாக்கினதுக்குப்
பிறகுதான் மனசு
வந்ததாக்கும்!
ஜனதா கட்சித்
தலைமைப் பதவி



சுகந்தி

காமிரா உள்ளில் கால் வைக்க இடமில்லை. கல்யாணத்துக்கு வாங்கப்பட்ட மளிகைச் சாமான்கள், பழ வகைகள், கல்யாண பட்சணங்கள், சீர் வகைகள், முதலிரவுக்கான மெத்தை படுக்கைகள், சமையலுக்குத் தேவையான பாத்திர பண்டங்கள்...

உள்ளே காற்ருேட்டமில்லாததால் அவள் வியர்வையில் தெப்பலாக நனைந்துவிட்டிருந்தாள். முகத்தில் முத்து முத்தாக வியர்வை. அடிக்கடி அவள் புடவை முந்தானையால் முகத்தை, கழுத்தை, பிடரியை, கைகளைத் துடைத்துக் கொண்டிருந்தாள். அதற்கே அவளுக்கு நேரம் போதவில்லை போலும். கொஞ்சம் பௌடர் போட்டுக்கொள்ள, அழிந்துவிட்ட குங்குமத்தை இட்டுக் கொள்ள நேரம் ஏது?

''ராஜம், அம்பது தேங்காய் வேணுமாம், சீக்கிரம்!'' என்றபடி வந்தார் ஒருவர்.

ஒரு கூடையிலிருந்த உருளைக் கிழங்கைச் சட்டென்று எடுக்கும்படியாக ஒரு மூலையில் கொட்டி விட்டு, காலி கூடையில் தேங்காய்களை இரண்டிரண்டாக எடுத்துப் போட்டு, கூடையை வந்தவரது தோள் மீது ஏற்றிவிடும் பொழுது மிகவும் களைத்துப் போய்விட்ட ராஜம் சுவர் மீது சாய்ந்தாள்.

ஓர் ஆண் பிள்ளை இருந்து கவனித்து செய்ய வேண்டிய வேலைகளை ஒரு பெண் செய்கிருள். அதுவும் களைத்துப் போகிற அளவுக்கு.

சூடாக ஒரு டம்ளர் காப்பி கொண்டுவந்து அவளிடம் நீட்டினேன்.

நான் யார், என்ன என்பதையெல்லாம் பாராமல் காப்பி டம்ளரை வாங்கி மடக் மடக்கென்று குடித்தாள்.

''டிபன் சாப்பிட்டீர்களா?'' என்றேன்.

'இல்லை' என்பதுபோல் உதட்டைப் பிதுக்கிளுள். உண்மையிலேயே பசி போலும்.

பொங்கலும் வடையும் கொஞ்சமும் ஒரு டம்ளரில் தண்ணீரும் கொண்டு வந்து கொடுத்தேன். ''தாங்ஸ்!'' என்றபடி வாங்கிக்கொண்டு அவள் சாப்பிடத் தொடங்கிய பொழுது சமையற்காரர் வந்தார்.

''இன்னும் அஞ்சு படி அரிசியும் ஒரு படி துவரம் பருப்பும் வேணும் அம்மா,'' என்ருர்.

அவள் பாதியில் சாப்பிடுவதை நிறுத்த முயன்ற பொழுது நான் எழுந்தேன்.

''நீங்கள் மெதுவாகச் சாப்பிடுங்கள். நான் கேட்கிறவர்களுக்கு கொடுக்கிறேன்,'' என்றபடி வேட்டியைத் தூக்கி மடித்துக் கட்டிக்கொண்டு காமிரா உள்ளினுள் சென்றேன்.

அவளுக்கு ஆச்சரியமாக இருந்ததோ அல்லது விவரம் தெரிந்தவன் உதவிக்கு வந்தது ஆறுதலாக இருந்ததோ என்னைப் பார்த்துப் புன்னகை செய்தாள். கல்யாணம் இப்பொழுதெல்லாம் ஒரே நாளில் நடந்து விடுகிறதே, முன்புபோல் ஏன் நான்கு நாட்கள் நடக்கக்கூடாதென்று தோன்றியது எனக்கு. அப்படி நடந்தால் இவளுடன் இல், இந்தக் காமிரா உள்ளுக்குள்ளே நான்கு நாட்களையும் கழிக்கலாமே!

யாரோ ஓடிவந்தார்கள்.

''சம்பந்திக்காரர்களா ஒரே கோபமாய் இருக்காங்க. சீர் வரி

எல்லாம் பந்தல்லே வைச்சிருக்கே, மெத்தை எங்கேன்னு கேட்கிறுங்க. சண்டை வந்துடும் போலிருக்கு!'' என்றபடி. ஒருவர், ''ராஜம், ராஜம். அந்த மெத்தையைக் கொஞ்சம் தூக்கிக் கொடம்மா,'' என்றுர்.

மெத்தையைப் பார்த்தாள் அவள். அது கனமான, அகலமான, பெரிய மெத்தை. உள்ளே நான்கு வெல்வெட் தலையணைகள், இரண்டு பெட் ஷீட்கள் வேறு. டபுள் மெத்தை. பவானி ஜமுக்காளத்தில் சுற்றி வைக்கப்பட்டு, கட்டப்பட்டிருந்தது குறுக்கும் நெடுக்குமாக. இவ்வளவும் சேர்ந்து என்ன கனம் கனக்கும்!

''நீங்க கொஞ்சம் அதை எடுத்துக் கொடுத்து விடுகிறீர்களா, ப்ளீஸ்!'' என்றுள் என்னிடம்.

நானே அதைத் தூக்க முயன்றேன். மிகவும் கனத்தது. ''இதைக் கொஞ்சம் பிடி,'' என்றேன்.

''நாங்க பிடிக்கிறேம்!'' என்று கை கொடுத்தார்கள் மெத்தை கேட்டு வந்தவர்கள்.

நிமிடத்தில் மெத்தையைத் தூக்கி அவர்கள் தலைமீது வைத்துவிட்டேன். போய்விட்டார்கள்.

''அக்கா . . . அக்கா!'' என்று ஓடிவந்தாள் ஒரு பெண். வயது பத்து பன்னிரண்டிருக்கும்.

''என்னடி பூமா?''

''கல்யாணம் எல்லாம் ஆயிட்டதாம்! இனிமேல் நீ கல்யாணப் பந்தல் வரை வரலாமாம். அப்பா சொல்லச் சொன்னுர்,'' என்றுள் பூமா.

ராஜம் என்னைத் திரும்பிப் பார்த்தாள். அவள் கழுத்து, நெற்றி, கூந்தல் எல்லாம் காலியாயிருப்பது அப்போது தான் தெரிந்தது எனக்கு.

என் மனம் ஊமை அழுகை அழுதது.

நடிகைக்கு எது பிடித்தது என்று படித்தேன். குமுதம் ஆசிரியருக்கு மிகவும் பிடித்தது எது என கேட்டதில்—



என பதில் வந்தது.

சென்னை—33 ஆசான்

**வகுப்போ தொகுப்போ!**

'அரசு பெரிய உருளையை விளையாடுவதற்கு கொண்டுள்ளது' என்ற துணுக்கைப் படித்தேன். மேல்நிலை வகுப்புப் பொருளாதாரப் பாடத்தில் இது போன்ற தவறுகள் பக்கத்திற்குப் பக்கம் மலிந்துள்ளன. தாங்கள் அதைச் சுட்டிக் காட்டியது என் போன்ற ஆசிரியர்களுக்கும் பல்லாயிரக்கணக்கான மாணவர்களுக்கும் ஆறுதலாயுள்ளது. இனிமேலாவது தவறுகளைத் திருத்தி, தமிழில் பொருளாதாரம் பயிலும் மாணவர்களுக்கு உதவும்படி தாழ்மையுடன் வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்.

முசிறி ஜே. எம். ஏ. ராஜேந்திரன்

**மயக்கமோ குழப்பமோ**

தங்கள் இதழில் ஒரு குழப்படி நடந்திருக்கிறது. வாஸந்தி எழுதும் 'மயக்கங்களும் சிலந்திக் கூடுகளும்' கதையில் 12'ம் அத்தியாயம் 11'ம் அத்தியாயமாகவும், 11'ம் அத்தியாயம் 12'ம் அத்தியாயமாகவும் வந்திருக்க வேண்டும்.

நாகப்பட்டினம் ராஜா

**சங்கமோ பங்கமோ**

ஆபாசமாக எழுதுவோரை இரு எழுத்தாளர்களை வைத்துக் கண்டிக்கச் சொல்வது; அதே இதழில் சிறுகதைகளையெல்லாம் மோசமாய் வெளியிடுவது--நன்றாய் இருக்கிறதே உங்கள் வேலை. . .?

சுப்பிரமணியபுரம் இராம. சந்திரசேகரன்

**பாராட்டோ டையூட்டோ**

என்ன சார் 'கல்யாணராமன்' படத்துக்கு இவ்வளவு பாராட்டு? ஏதாவது கிடைச்சுதா என்ன?

புதுவை—4 மு. பாஸ்கரன்

குப்பையான படத்துக்கு இப்படிப் பாராட்டா! இனி நீங்கள் விமரிசனம் எழுதுவதை நிறுத்திக்கொள்ளலாம்.

பம்மல் அப்பாதுரை

**கதையோ காரணமோ**

'காஸ்ஸிரங்காக் காட்டில் ஒரு தேவதை தூங்குகிருள்' என்ற கதையைச் சிறியவர்கள் படிக்குமுன் பெரியவர்கள் சென்ஸார் செய்ய வேண்டியிருந்தது.

நங்கநல்லூர் நீலமேகம்



# நிறம் மாருத பூக்கள்

குதிரைச் சவாரி தெரியாது என்ருள். தெரிந்திருக்கிறது. கார் டிரைவிங் தெரியாது என்ருள். தெரிந்திருக்கிறது. ஆகவே நீச்சல் தெரியாது என்று சொல்வதை நம்பத் தேவையில்லை. தள்ளு ஏரியில்.

கொளக் பளக் தொளக்.

கண்ணெதிரே ஓர் அசலான மரணம்.

கதையின் இந்த நடுக் கட்டத்தை விட்டால் மற்றதெல்லாம் வீக். அதுவும், பணக்காரப் பெரிய மனிதர், மகளின் காதலைச் சூழ்ச்சி செய்து பிரித்து வைத்தார் என்னும் கட்டங்கள் வரும்போது இந்தச் சாதாரணத்தைப் பாரதிராஜாவா தேர்ந்தெடுத்திருக்க வேண்டும் என்ற திகைப்பு ஏற்படுகிறது.

யானையின் பலம் எதிலே—தும்பிக்கையிலே என்று பாடிய மாதிரி, ராதிகாவின் பலம் எதிலே? மழலையிலே. (ப்ளஸ் சிரிப்பு). இருந்தாலும், காதலில் தோல்வியுற்று, காதலில் தோல்வியுற்ற ஒருவரோடு பழக நேருகிற இடத்துக்குப் பிறகு ஓர் ஆழம் தெரிகிறது.

'அவளைத் தொடாமலே கற்பழித்தேன்.'—இப்படி ஒரு புதிர் போடுகிருர் விஜயன். அது எப்படி என்பதையும் காட்டுகிருர்.

அவளுடைய புகைப்படத்தைக் கையில் வைத்துக் கொண்டு, அவள் கூந்தலை வர்ணித்து அதற்கு ஒரு முத்தம், கண்களை வர்ணித்து அதற்கு ஒரு முத்தம், உதடுகளை வர்ணித்து அதற்கு ஒன்று —

முன்பாதி முழுக்க வந்தாலும் சும்மா விளையாட்டுத்தனமான பாத்திரத்தின் விளைவாய் ஒட்டாமல் போய் விடுகிற சுதாகருக்கு (சிரிக்க வைக்கிருர்) விஜயன் காண்ட்ராஸ்ட்;

'மெட்ராஸ் கேர்ள்... மெட்ராஸ் கேர்ள்...' என்று விஜயன் அழைக்கும் அந்தத் தோரணை (டைரக்டரே குரல் கொடுத்திருப்பதாய்ச் சொல்வது உண்மையாய் இருக்கலாம். ஏனென்ருல் விஜயனின் குரலில் வழக்கமாய் உள்ள அந்த மலையாளத்தனத்தைக் காணோம்) வித்தியாசமானதாய் இருக்கிறது.

பாலசந்தரைப் பயப்படுத்தாத பூக்கள் என்றுகூடத் தலைப்பு இருக்கலாம்.


ஒரு ட்யூன்-ஒரு ஸ்பூன்-ஒரு கொலை
14
கதை: 'கமலினி'
சித்திரம்: ராஜ்..
விஜேத் அவளுக்கு நம்பிக்கை ஊட்டினான்.
தேவி! ஏன் இப்படி ஒரு சூழ்ச்சி நடந்திருக்கக் கூடாது?..
அந்த ட்யூன் உன்னைப் பாதிக்கும் விதம் தெரிந்த எவரோ, வேண்டுமென்றே சமயம் பார்த்துக் காஸெட்டைப் போட்டிருக்கலாம்...
நீ நினைவின்றி ஆடிக் கொண்டிருக்கும் போது ரமேஷ் சந்தரை அவன் தாக்கிக் கொன்றிருக்கலாம்... பாவம், பழி உன்மீது வந்து விட்டது.
தாங்க் யூ, விஜேத். நீ இருக்கும் போது எனக்கு என்ன கவலை?

# அழகு சோகரு ஆஷா



அது ஒரு பிரம்மாண்டமான ஊர்வலம். ஆனால் அது ஒன்றும் திருவிழா ஊர்வலம் அலல.

வெள்ளைக்காரன் செய்த வேலை—தேசப் பிரிவினையின் கொடுமை—கிழக்கு வங்காளத்திலிருந்து அகதிகள் வருகை. மேலாடை கிழிக்கப்பட்ட நிலையில் சிலர். ஓராடையில் உடம்பை மறைத்தபடி, அதிலும் ரத்தக் கறையோடு சிலர். கற்பை இழந்தும் உயிரைக் கையிலே பிடித்துக் கொண்டு, கைக்கு அடக்கமான பாத்திரங்களோடு கால் நடையாகவே இந்தியாவை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள்.

அந்தக் கூட்டத்தில், அதோ அந்தச் சாலையின் ஓரத்தில் ஓர் எண்பது வயது மூதாட்டி. தலையிலே ஒரு கூடை; கையிலே மூடி போட்ட ஒரு கூடை; தோளிலே ஒரு துணி மூட்டை.

வயதான பிறகும் வறுமையோ கஷ்டமோ வந்து உழைக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டால் அதைவிட வேறு கொடுமை கிடையாது.

அந்த மூதாட்டியின் அருகே பதினெட்டு வயது இளம்பெண். பெயர் ஆஷா. எவ்வளவு தூரத்திலிருந்து பார்த்தாலும் சந்திரனைப் பார்ப்பது போலிருக்கும் அவள் அழகு. வங்காள பாணியில் ஆடை உடுத்தினால் இந்தியாவின் அந்த இனத்து ஆடையும் [illegible] அவள் [illegible] உடுத்தியிருந்த ஆடை எப்படி இருந்தது என்பதை அறிய முடியாமல் அவள் போர்த்தி இருந்த ஆடை தடுத்தது. அந்தப் போர்வையை விலக்கிக் கொண்டு பார்க்க முடியுமானால் அந்த உடம்பு ஒரு கதையையே சொல்லி விடும்.

மார்பக ஆடை கிழிக்கப்பட்டு, மார்பகத்தின் மீது நகக் குறிகளும் ரத்தக் காயங்களும் நிறைந்தன. ஒரு வேங்கை மட்டுமே கடித்த உடம்பாக அது இல்லை. ஏழெட்டு வேங்கைகள் பசியெடுத்து விழுந்தது போல் தோன்றிற்று.

ஆம். டாக்கா நகரத்துத் தெருக்களிலே வானுலகத்து மாது போல் வலம் வந்து கொண்டிருந்த ஆஷா, பலவந்தமாகக் கெடுக்கப்பட்டாள்.

அவளது தந்தை ஜோதிகுமார் பானர்ஜி டாக்காவில் பிரபலமான மூக்குக் கண்ணாடி வியாபாரி. நேர்மையான வியாபாரி என்று பெயர் பெற்றவர். ஆஷாவின் தாய் சுசித்ராவே கூடப் பார்ப்பதற்கு அவ்வளவு அழகாக இருப்பாள்.

தாயும் மகளும் பக்கம் பக்கமாக நின்றால், யார் தாய், யார் மகள் என்று தெரியாது.

சில உடம்புகளும் உள்ளங்களும் எவ்வளவு வயதானாலும் வாலிபத்தை இழப்பதில்லை.

சுசித்ராவுக்குத் திருமணம் ஆன மூன்றாவது ஆண்டு, ஒரு பெண் குழந்தை பிறந்து இறந்து போய்விட்டது. இரண்டாவது பிறந்ததுதான் ஆஷா. அதற்குப் பிறகு குழந்தையே பிறக்கவில்லை.

'பெண்ணின் தலையெழுத்து அவளது அழகில் இருக்கிறது' என்பார்கள். ஆஷா பிறந்த போதும், வளர்ந்த போதும் அவளது விதி இவ்வளவு மோசமாக இருக்கும் என்று சுசித்ராவோ பானர்ஜியோ எண்ணியதில்லை

பிரிவினைக்குப் பிறகு ஏற்பட்ட இனக் கலவரத்தில் பாதிக்கப்பட்டவர்களிடையே பானர்ஜியின் குடும்பம் முக்கியமானது.

பானர்ஜியைத் தூணில் கட்டி வைத்து அவர் கண்ணெதிரிலேயே

**கண்ணதாசன்**

தாயையும், மகளையும் கற்பழித்தார்கள் சில முரடர்கள்

கணவனோடு முதலிரவு என்றாலே அந்த வெட்கத்துக்குக் கொஞ்சம் பயப்படும் இளம் பெண்கள், கன்னி கழியாத நிலையில்லாமல் இரண்டு மூன்று பேரால் கெடுக்கப்பட்டால் எந்த நிலையில் இருப்பார்கள்?

சுசித்ராவும், பானர்ஜியும் கலவரத்தில் கொல்லப் பட்டார்கள். வயது முதிர்ந்த பாட்டியோடும் வழிந்தோடும் கண்ணீரோடும் அகதிகள் கூட்டத்தில் சேர்ந்து கொண்டாள் ஆஷா.

அழகான மாடப் புறா ஒன்று சிறகு முறித்துப் போடப்பட்டது போல், தள்ளாடித் தள்ளாடி அவள் நடந்து வந்தாள். அவளே அவ்வளவு தள்ளாடினால், வயது முதிர்ந்த பாட்டியின் நிலை என்ன?

வழியில் எங்கேயும் சாப்பாடு கிடைக்கவில்லை. கூடையில் வைத்திருந்த காய்ந்த ரொட்டித் துண்டை அவ்வப்போது எடுத்துக் கடித்தவாறு பாட்டி உயிரைச் சுமந்து வந்தாள். அது கூட இல்லாமல் நடந்து வந்தாள், ஆஷா.

கல்கத்தா எல்லையை அவர்கள் கால் மிதித்த போதுதான், உயிர் காப்பாற்றப்பட்டுவிட்டது என்ற உணர்வே அவர்களுக்கு வந்தது.

பெருகி வந்த அகதிகளின் வெள்ளத்தினால் கல்கத்தா நகரமும் அப்போது திக்குமுக்காடிக் கொண்டிருந்தது. உணவு விடுதிகளில் உணவு கிடைக்கவில்லை; சாலைகளில் கூடப் படுத்துறங்க இடம் கிடைக்கவில்லை. எதிலுமே அதிகமாகப் பாதிக்கப்படும் கல்கத்தா நகரம், இதிலும் பெருமளவு பாதிக்கப்பட்டது.

ஆயிரம்தான் தங்களுக்குக் கஷ்டம் இருந்தாலும் அவமானத்தோடும் துயரத்தோடும் வந்துவிட்ட தங்கள் சகோதர சகோதரிகளுக்குக் கல்கத்தா நகரம் கருணை காட்டிற்று.

கையிலே பணமிருந்தால் காப்பாற்றலாம், இல்லாத போது கண்ணீர் சிந்துவதுதானே கடைசிப்பட்ச அன்பு.

கல்கத்தா தொழிலாளிகள் தங்களிடம் எவ்வளவு உடைமைகள் இருந்தனவோ அவ்வளவையும் மற்றவர்களோடு பகிர்ந்து கொண்டார்கள். வங்காளத்து

தூக்கமில்லாமல் அகதிகளைப் பராமரிப்பதற்காக அலைந்தார் அதோடு அவர் கல்கத்தா பணக்காரர்களுக்கு ஒரு வேண்டுகோளும் விடுத்தார்.

'உங்களால் எவ்வளவு பேருக்கு உங்கள் வீட்டில் இடம் கொடுக்க முடியுமோ, அவ்வளவு பேருக்குக் கொடுங்கள்,' என்று கேட்டுக் கொண்டார்.

வேறு எந்த இனத்தவரையும் விட வங்காளிகளுக்கு இன உணர்வு அதிகம். ஒவ்வொருவரும் பத்துப் பேர் எட்டுப் பேர் என்று தங்கள் வீடுகளில் வைத்துக் கொள்ள முன்வந்தார்கள்.

உடல் நோயுற்றவர்களுக்கும் கற்பழிக்கப்பட்ட பெண்களுக்கும் அதில் முதலிடம் தரப்பட்டது.

அந்தப் பணக்காரர்களில் அந்த... பகல் பாராமல் அகதிகளுக்கா...






அழைத்தவர் ஒரு டாக்டர். அவர் பெயர், ஆர். வி. பாலு. கூட்டமாக வந்த அகதிகளை அவர் பார்வையிட்டுக் கொண்டு வந்தபோது ஆஷாவின் பாட்டியைப் பார்த்துதான் அவருக்கு முதலில் அனுதாபம் பிறந்தது.

'இந்த வயதில் இவ்வளவு கொடுமைகளை அனுபவிக்கும்படி மகாகாளி செய்து விட்டாளே,' என்று கண் கலங்கினார், அவர்.

'மற்ற வீடுகளுக்குப் போனால் இந்த மூதாட்டியும் உழைத்துத்தான் சாப்பிட வேண்டியிருக்கும். ஆகவே நம் வீட்டுக்கு அழைத்துப் போவோம்,' என்று அவர் முடிவு கட்டினார்.

சாலையின் ஓரத்தில் காரை நிறுத்தி அவளை விசாரித்துக் கொண்டிருந்த போது, ஆஷா அருகில் இல்லை.

சற்றுத் தூரத்தில் சுவரில் சாய்ந்து கிடந்த தன் பேத்தியை டாக்டருக்கு அறிமுகம் செய்து வைத்தாள்.

[illegible] வாருங்கள்,'' என்று அவர் அழைத்ததும் ஏதோ காளிதேவியே தூதனுப்பி இருப்பது போல் ஆஷாவுக்குத் தோன்றியது.

கையில் கொண்டு வந்திருந்த சாமான்களை எடுத்துக் கொண்டு அவரது காரில் ஏறிவிட்டார்கள் அவர்கள்.



பிரயாணி: ''கண்டக்டர்! என்னை அடையாறு ஸ்டாப்பில் இறக்கிவிடுப்பா.''
கண்டக்டர்: ''முடியாதுங்க. நீங்களேதான் இறங்கிக்கணும்.''
—டி. ஆர். பாலகிருஷ்ணன்

அவர்கள் கூட வந்தவர்கள் அதை அசூயையோடு பார்க்கவில்லை; ஆனந்தக் கண்ணீரோடு பார்த்தார்கள்.

ஆஷாவும் பாட்டியும் ஒரு வீட்டுக்குக் குடிபோவதை அவர்கள் அன்போடு கவனித்து வழியனுப்பினார்கள்.

டாக்டர் பாஸுவின் இல்லமும் ஒதுக்குப்புறமாகத்தான் இருந்தது. டம்டம் பகுதியையொட்டிய வளர்ச்சிப் பகுதி அது.

அந்த வீட்டுக்குள்ளே நுழைந்தபோது தன் தாய்-தந்தையர் உயிரோடிருப்பது போன்ற பிரமை ஆஷாவுக்கு எழுந்தது. கிட்டத்தட்ட டாக்காவிலிருந்த அவர்களது வீடு போலவே அந்த வீடும் இருந்தது.

டாக்டர் பாஸு கூட்டத்தோடு கூட்டமாக அவர்களைக் குடியிருக்கச் சொல்லவில்லை. மாளிகையின் கீழ்க் கட்டில் ஓர் வசதியான அறையையே அவர்களுக்கு ஒதுக்கிக் கொடுத்தார். அதற்கொரு வராந்தாவும் இருந்தது. நல்ல வேளை.. அறையில் தங்கிக் கொள்ளலாம்; வராந்தாவில் சமைத்துக் கொள்ளலாம். இருநூறு ரூபாய் பணமும் கையில் கொடுத்தார் பாஸு.

பாணி மஜும்தார், டாக்டர் பாஸு வீட்டில் ஒரு நாணயமான வேலையாள். டாக்டர் பாஸு கல்யாணமாகி மனைவியை இழந்தவர். குழந்தை குட்டிகள் கிடையாது ஆகவே வீட்டுச் சாவியிலிருந்து பெட்டிச் சாவி உட்பட பாணி மஜும்தாரின் கையிலேதான் இருக்கும். மஜும்தார் யாரையும் மிரட்டுவதில் விரட்டுவதில்லை. அப்படியொரு வேலைக்காரன் அமைந்ததனால்தானோ . என்னவோ டாக்டர் பாஸு இரண்டாவது விவாகமே செய்து கொள்ளவில்லை.

தலைவர் திருமணம் செய்து கொள்ளாததால், அவரது சகாக்கள் சிலரும் திருமணம் செய்து கொள்ளாமல் இருந்தது போல, முதலாளிக்கு அனுதாபம் தெரிவிக்கும் வகையில மஜும்தாரும் திருமணம் செய்து கொள்ளவில்லை.

வந்த இரண்டு மூன்று நாட்களுக்குள்ளேயே அந்த வீட்டின் நிலைமையை உணர்ந்து கொண்டு விட்டாள் ஆஷா. ஓடி ஓடி மேலே செய்வது, கடைத் தெருவுக்குப் போய் காய்கறி, கோழி வாங்கி வருவது, தானே சமையல் செய்வது எனத் தன் திறமையைக் காட்டத் தொடங்கினாள்.

ஆஷா வந்த பிறகு சாப்பாடு நன்றாக இருப்பதாக, பாஸு சுவைத்து சாப்பிட ஆரம்பித்தார்.

''தெரியுமா ஆஷா? உன் சமையல் எஜமானுக்கு ரொம்பப் பிடித்து விட்டது!'' என்றான் மஜும்தார்.

''பன்னிரண்டு வயதிலிருந்து எங்கள் வீட்டில நானதான் சமைப்பேன். வீட்டு வேலை பார்ப்பதற்காக என் அம்மா என் படிப்பைக் கூடக் கெடுத்து விட்டாள்,'' என்று நாணிக் கோணியபடி சொன்னாள் ஆஷா.

''சரி சரி. எஜமானுக்குச் சேவை செய்வது, மகாகாளிக்குப் பூஜை செய்வது போல. இனிமேல் நீதான் அவரை கவனிக்க வேண்டும்,'' என்றான் மஜும்தார்.

''அதைவிடச் சந்தோஷம் வேறு எனக்கு என்ன இருக்கிறது?'' என்று துள்ளிக் குதித்தாள் ஆஷா.

ஆஷாவின் அழகில் அப்படியொன்றும் பாஸு மயங்கி விடவில்லை. அந்தக் கட்டத்தை அவர் தாண்டி வெகு நாட்களாகி விட்டன. ஆனாலும் தனிமையின் நெடிய துயரம், இனம் தெரியாத துயரமாக அவருக்குள்ளிருந்தது. அதுவும் இரவு நேரம் மட்டும்தான் அவருக்குப் புரியும். மற்ற நேரங்களில் அகதிகள் பணி, நோயாளிகள் கவனம் என்று கவனத்தை மாற்றிக் கொண்டு விடுவார். இப்போதெல்லாம் அவரது படுக்கையைத் தட்டிப் போடுவது, ஆடைகளை மடித்துப் போடுவது எல்லாமே ஆஷாதான். அதை அவள் வேடிக்கையாகவே செய்தாள். அதற்கொரு உள் நோக்கமுமில்லை.

அப்படியொரு உள்நோக்கம் இருப்பதாக டாக்டர் பாஸு நினைக்கவில்லை. வெகுளித்தனமான பெண் என்றேதான் அவர் கருதினார்.

ஆஷா அவ்வளவு பழகியும்

ாக்டர் பாஸுவின் மனத்தில் தப்பான னைவுகள் எழவில்லை. நன்கு க்குவப்பட்ட மனம். அவ்வளவு சீக்கிரம் ரைந்து விடாது. ஆனால், நாளாக ளாக டாக்டர் பாஸுவுக்குத் தானும் ரு மனிதன்தான் என்பது புரியத் லைப்பட்டது.

எவ்வளவோ மாற்று முயற்சிகள் சய்தும் ஆஷா அவர் மனத்தில் இடம் பறுவதை, அவரால் தடுக்க டியவில்லை.

இரவு நேரங்களில் மருத்துவப் ுத்தகம் படிப்பதற்குப் பதிலாக அவர் சில ாவல்களைப் படிக்க ஆரம்பித்தார். இதில் வடிக்கை-என்னவென்றால், புத்தகங்களை டுத்து வைப்பதே ஆஷாதான்.

தினசரி அவர் கேட்கும் ுத்தகங்களுக்கும், பின்னாலே கேட்கும் ுத்தகங்களுக்கும் சம்பந்தமே இல்லையே ன்று கூட ஆஷா நினைப்பாள். அவர் தைப் படித்தாலென்ன என்று விட்டு டுவாள்.

நாளாக ஆக, சமையலுக்குச் டப் பட்டியல் கொடுக்க ஆரம்பித்தார் ாஸு. ஒரு கட்டத்தில் அவர் அவளிடம் ுழுக்க ஐக்கியப்பட்டவராகவே ஆகி ட்டார்.

'பஞ்சும் நெருப்பும் பக்கத்தில் க்கத்தில்' என்பார்களே. அப்படித்தான் கிவிட்டது கதை.

கல்கத்தாவில் காளி பூஜை தாடங்கிற்று. மஜும்தார் பெருவாக ந்து எஜமானிடம் தலையைச் சொறிந்து காண்டு நின்றான்.

"வேண்டிய பணத்தை எடுத்துக் காள்ளேன்," என்றார் பாஸு.

"அதில்லே, எஜமான். நானும் ஷாவும் காளி பூஜைக்குப் ாகிறோம்," என்றான் மஜும்தார்.

"ஓ! போய் வாருங்களேன்," ன்று அனுப்பி வைத்தார் பாஸு.

அப்போது கூட அவர் மனத்தில் ந்த விதமான சலனமும் தோன்றவில்லை. [illegible] ண்ணம் தலை தூக்கி அமுங்கி விட்டது.

இரவு டாக்டர் பாஸு ாங்கவில்லை.

சுமார் ஒரு மணிக்கு மஜும்தார் ந்து கதவு திறப்பது போல அவருக்குத் தான்றிற்று. அதில் ஏன் அவர் அக்கறை சலுத்த வேண்டும்? ஏனோ அவருக்கு ப்படித் தோன்றிற்று.




பலருக்கு என் தாயார் சகுந்தலா பாரதியைவிட என் பெரியம்மா தங்கம்மா பாரதியையே தெரியும்.

பட்டப் படிப்புப் படித்து, சட்டப் படிப்பும் முடித்த பிறகு சில காலம் 'பிக்சர் போஸ்ட்' என்ற ஆங்கில மாத இதழில் வேலை பார்த்தேன். அங்கிருந்து வடபழனி பிரஸ் அலுவலகத்தில் சேர்ந்தேன்.

இப்பொழுது வடபழனி அச்சகம் மூடப்பட்டு விட்டதால் வெளியேறினேன். பிறரிடம் வேலை செய்வதைவிட நாமே சொந்தமாக ஒன்றைச் செய்யலாம் என்ற எண்ணம் வந்தது. இடமும் கிடைத்து ஆரம்பித்து விட்டேன்."

இவர் தற்சமயம் டிபார்ட்மெண்டல் ஸ்டோர்ஸ் ஒன்றை உஸ்மான் சாலையில் ஆரம்பித்துள்ளார். இவருக்கு ஒரே ஒரு பெண் குழந்தை. குழந்தை பெயர்: பூர்ணிமா.

பேட்டி: சாமி—அசோக்
படம்: உத்ரா

## பாரதியாரின் பேரன் ரவிச்சந்திரன் சொல்கிறார்



அம்பிகாபதி



மாமலலன்



பிலிவலீ



அமமங்கை



பெரிய மனிதர்கள் சில நேரங்களில் சிறிய நினைவுகளுக்கு அடிமையாகி விடுவார்கள். தாங்கள் பெரிய மனிதர் என்ற நினைப்பைத் திரும்ப வரவழைத்துக் கொள்ள வெகு நேரம் பிடிக்கும். சூழ்நிலைகள் முழுக்க மாறினாலொழிய அந்தச் சூழ்நிலையிலிருந்து அவர்கள் வாபஸாக மாட்டார்கள்.

அன்றிரவும் பாஸ் அப்படித்தான் இருந்தார். ஆனால் அந்த ஊசலாட்டத்துக்கு அதிக வயதாகி விடவில்லை.

என்ன நடக்கிறது, எப்படி நடக்கிறது என்பது தெரியாத டாக்டர் பாஸு, ஆஷாவுக்கு ஒரு கடிதத்தை எழுதி, அதிகாலை நான்கு மணிக்கெல்லாம் பூனை போல் எழுந்து நடந்து, அவள் வைத்திருந்த கூடைக்குள் போட்டு விட்டார்.

மறுநாள் காலையில் மறுபடியும் தலையைச் சொறிந்து நின்றான் மஜும்தார். இப்போதும், "வேண்டியதை எடுத்துக் கொள்ளேன்," என்றுதான் அவர் சொன்னார்.

"அதற்கில்லை எஜமான், ஏழு நாள் லீவு வேண்டும்," என்றான் அவன்.

"ஏழு நாளா! எதற்கு?" என்று அவர் சந்தேகமாகக் கேட்டார்.

தயங்கித் தயங்கிப் பதில் சொல்ல முடியாத ஊமையாக நின்ற அவன், திரும்பி ஜாடை காட்டினான். ஆஷா திடீரென்று ஓடி வந்து பாஸுவின் கால்களில் விழுந்தாள்.

பாஸுவுக்குப் புரிந்து விட்டது. ஆனால் வேலைக்காரன் முன்னால் கண்ணீர்விட அவர் விரும்பவில்லை. அ... அவர்களை ஆசீர்வதித்தார்.

நெஞ்சுக்குள்ளே அந்தக் கூடை அந்தக் கடிதம் என்று இரண்டு சத்தங்க... கேட்டுக் கொண்டே இருந்தன. ஆன... அதைத் திரும்ப எடுக்க அவ... முயற்சிப்பதற்குள், அவர்கள் கூடையோ... காளி கோவிலுக்குச் சென்... விட்டார்கள்.

காளி சந்நிதியில் திருமண... முடித்து குங்குமமிட்டுக் கொண்... மஜும்தாரின் வீட்டுக்குத் திரும்பின... ஆஷா.

"இனிமேல் கூடையெல்லா... எதற்கு? தூக்கியெறி!" என்றபடி... கூடையைத் தூக்கிப் போட்டா... மஜும்தார்.

தான் பத்திரமாகச் சுமந்து வந்... கூடையல்லவா! அதைப் பத்திரமா... எடுத்துத் திறந்தாள் ஆஷா.

மேலாக ஒரு கடிதம் இருந்த... ஆஷா திகைப்போடு படித்து... பார்த்தாள். திகைப்பு அதிர்ச்சியாயிற்... ஓடிப் போய் அப்படியே மஜும்தாரிட... காட்டினாள்.

கடிதத்தைப் படிக்கப் படிக்க... மஜும்தாரின் தலை சுற்றிற்று; மயக்கமுற்... விழுந்தான்.

"சரியாக ஏழு நாட்க... ஆகிவிட்டன மஜும்தார் விடை பெற்று... போய். அவனில்லாமல் வீடு எப்படியே... ஆகிவிட்டது. நானே போய் அழைத்... வருகிறேன்," என்று நண்பனிட... சொன்ன டாக்டர் பாஸு, கா... எடுத்துக் கொண்டு மஜும்தா...



ஸ்ரீ



சமயபுரி



வானதி



செல்லக்கண்ணன்

(விவரம் 63'ம் பக்கம்)

வீட்டுககுச் சென்றார்.

கடிதத்தைப் பற்றிய பயத்துடனேயே காரை நிறுத்தினர். ஆனல் அங்கே வீடு ரணகளமாகிக் கொண்டிருந்தது.

போலீஸார் ஆஷாவைக் கைது செய்து கொண்டிருந்தார்கள். ''ஏன், என்ன?'' என்று உள்ளே நுழைந்தார் பாஸு.

''இறந்து போன கணவனின் சடலத்தை ஏழு நாட்கள் உள்ளேயே வைத்திருந்து இந்தப் பெண்மணி பூஜை செய்திருக்கிறள். அது நாற்றமெடுத்த பிறகுதான் தெரிய வந்தது. ஆகவே இவளைக் கைது செய்கிறேம்,'' என்றார்கள் போலீஸார்.

போலீஸாருக்கு டாக்டர் பாஸுவிடம் மரியாதையும் பக்தியும் உண்டு.

உடனே டாக்டர் பாஸு பிணத்தைச் சோதிப்பது போல், சோதித்து விட்டு, ''யார் சொன்னது? இது நோயின் நாற்றம். நேற்றிரவுதான் இவன் இறந்திருக்கிறன்,'' என்றார்.

போலீஸார் உடனே சல்யூட் அடித்து விட்டு வெளியேறினர்கள்.

கண்ணீரோடு மஜும்தாரின் சடலத்தை நெருங்கிய பாஸு, அந்தச் சடலத்தின் கைகளில் இருந்த ஒரு கடிதத்தைப் பிடுங்க முயன்றார்.

கஷ்டப்பட்டு அதைப் பறித்தபோது, அவர் காலடியில் விழுந்தது கடிதம மட்டுமல்ல ஆஷாவும் கூடத்தான்.

> 1951'ம் ஆண்டு மே மாதம், கல்கத்தாவில் ரத்தினதீபம் படத்திற்குக் கதை எழுதிக் கொண்டிருந்த போது, நான் கேள்விப்பட்ட ஒரு செய்தியின் அடிப்படையில் எழுந்தது இந்தக் கதை.
>
> —கண்ணதாசன்



நண்பன்.1: அதோ போருனே சுந்தர். அவன் சுத்த கர்நாடகமடா.

நண்பன்.2: ஏண்டா?

நண்பன்.1: பல்கலைக் கழகத் தேர்விலே, பேப்பர் முதல் பக்கத்திலே 'A' போட்டிருக்குதுண்ணு வெட்கப பட்டுக்கிட்டு எழுதாமலேயே வெளியே வந்துட்டான்.

—கன்னே. இராதாகிருஷ்ணன்.


RUBEX
RUBEX

# சிரிச்சுக்கலாமா ?

தரகர் மாபபிள்ளைப் பையனுக்கு முன் கோபம் அதிகம்ன்னு கேள்விப்பட்டேன்

பெண்ணின் தாய்: அதனால் என்ன? என் பொண்ணுக்குக் கராத்தே, ஜூடோ எல்லாம் நல்லாத் தெரியும்.

—பொன்மலை பரிமளம்

அல்வா செய்து கொடுன்னு பத்து நாளா விடாம கேட்டுகிட்டே இருக்காரு எங்க மாமனாரு!''

''ஒரே ஒரு நாள் செய்துதான் கொடுத்திடேன்! அப்புறம் ஏன் வாயைத் திறக்கப் போறாரு!''

—துருவி

பஸ் கண்டக்டர் மனைவி: அத்தான், நான் எங்காவது போகலாமா என்று கேட்டால் ரைட் என்று வாயாலேயே சொல்லுங்க, விசில் அடிக்க வேண்டாம்.

—கல்லிடை சாம்

மாமியார். ஏண்டி, வாசல்லே இருந்த கருவேப்பிலை மரம் எங்கே?

மருமகள் பக்கத்து வீட்டு மாமி ஒரு கொத்து பறிச்சிக்கிறேன்னா. சரின்னு தலையாட்டி வச்சேன்!

—சுப்ரஜா



நீளமான ரயிலின் கடைசிப் பெட்டியில் ஒருவர் பயணம் செய்தார். அவருக்கு ஒரு சிக்கல். ஒவ்வொரு ஸ்டேஷனில் வண்டி நிற்கும் போதும் இறங்கி சோடா, பழம், காப்பி என்று வாங்கப் போய்ப் போய் அலுத்து விட்டார் அடுத்த ஜங்ஷன் வந்தபோது ஸ்டேஷன்மாஸ்டரிடம் புகார்ப் புத்தகம் வாங்கினார். கோபமாக எழுதினார்:

''1. இனிமேல் நீளமான ரயில்களில் கடைசிப் பெட்டியே வைக்க வேண்டாம். 2. அப்படியே வைப்பதாக இருந்தாலும், அதை ரயிலின் நடுப் பகுதியில் வைக்கவும்.''

—விநாயகமூர்த்தி

ஒருவர்: எங்கள் வீட்டில் விருந்து நடந்தால் ஒரே சமயத்தில் ஆயிரம் பேர் சாப்பிடுவார்கள்!

மற்றவன்: எங்கள் வீட்டில் விருந்து நடந்தால் ''டே! உப்புக் கொண்டா!'' என்று கத்தினால் சர்வர் சைக்கிளில் வந்து உப்புப் போடுவானுக்கும்.

—எஸ். ராஜேந்திரன்

''70 எம்.எம். 'கொட்டகை' பார்த்திருக்கீங்களா?''

''ஊஹூம். 70 எம்.எம். 'கொட்டாவி'தான் என் மனைவி விடும்போது பார்த்திருக்கேன்!''

—அ. இராம்தாஸ்

# ஒரு மலர்



சுகந்தி

வெளியே பனி பெய்து கொண்டிருந்தது. கூடவே குளிர் காற்று வேறு.

மலை மீதிருந்த முகாமில் தமக்கெனத் தனியாகயிருந்த வீட்டில் ஜன்னலருகில் நின்று கொண்டிருந்தார் மேஜர் முத்தையா. அவர் பார்வை நான்கு புறமும் சுழன்றது. எங்கு பார்த்தாலும் மலைகள். வானுயர்ந்த மரங்கள். பச்சைப் புல் வெளிகள். எங்கோ அருவி கொட்டிக் கொண்டிருக்கும் ஓசை. இனிமையான பறவைகளின் குரல்கள். சலசலத்து ஓடும் நதியின் பிரவாகம்.

ரோந்து சுற்றும் படை வீரர் சுமந்து கொண்டு லாரிகள் மலை மேட்டிலும் பள்ளத்திலும் ஏறி இற கொண்டிருந்தன. பந்தோபஸ் படைகள் கவனமாக எல்லை மெங்கும் விழித்தபடி இருப்பது தெரி

முக்கியமான கேந்திரங்க ராடார் இருக்கிற கேந்திரங்க ஆயுதங்கள் இருக்கும் கேந்திரங்க தெரியாததால் தானே என்ன எதிரிகள் தாக்காமல் இருக்கிறார்களே

சில்லென்ற காற்று முக வந்து அடித்தது.

அதன் சில்லிப்பில் மே தடுமாறிப் போனார். அவ முப்பத்தைந்து வயது தானாகிறது. இ திருமணமாகவில்லை ராணுவத்தி மரணத்தின் வாயிலில் இருக்கும்வரை

ந் பெண்ணையும் மணக்க அவர் நம்பவில்லை.

டில்லி பம்பாய் கல்கத்தாவுக்குச் ல்லும்பொழுதெல்லாம் அவர் தம ளமைக்குத் தீனி போட்டுக் கொள்ளாமலிருக்க மாட்டார் என்பது ண்மைதான். ஆனல் அது அங்கெல்லாம் டைப்பது போல் மலைப் பிரதேசமான ங்கே பணத்தைக் கத்தை கத்தையாக ாரியிறைத்தாலும் கூடக் கிடைக்காதே!

சிகரட்டைப் பற்ற வைத்துக் காண்டார் மேஜர் முத்தையா. கத்தாவில் சந்தோஷ் என்ற ண்ணிடம் உறவு கொண்டது நினைவு ந்தது அவருக்கு. சின்னப் பெண். தாழிலுக்குப் புதிது. ஆனலும் தான் ப்படி ஒரு வாழ்க்கையைத் தான் ழ்ந்தாக வேண்டுமென்பது தெளிவாக ளுக்குத் தெரிந்து விட்டதாலோ

தூரத்தில் பத்துப் பதினைந்து ஆடுகளை மேய்த்துக் கொண்டு ஒரு பெண் நீண்ட துரட்டியால் உயரமான மரங்களிலிருந்து இலைகளைப் பறித்துப் போட்டுக் கொண்டிருப்பது தெரிந்தது. கூர்ந்து பார்த்தார்.

சந்தோஷின் வயதுதான். சந்தோஷின் பருவம்தான். சந்தோஷின் வளர்ச்சிதான். சந்தோஷின் உடம்புதான். சந்தோஷ்... சந்தோஷ்... சந்தோஷ்... அவளை மாதிரியே இவள்.

தூர குண்டுகளின் சப்தம் கேட்டுக் கொண்டிருந்தன.

மடமடவென முகாமை விட்டு இறங்கி அவளை நோக்கி வந்தார் முத்தையா.

''சலாம், சாப்!'' என்ருள் அவள். குளிரால், பனியால் அவள் உடம்பு நடுங்கியதைக் கவனித்தார் முத்தையா. கம்பளி ஆடை எதுவும் அணியவில்லை அவள். சாதாரண நூலாடைதான்.



ம்வா அவள அவா இஷ்டப்படி ாம் வளைந்து கொடுத்தாள். ஈடு த்தாள்.

அவள் மாதிரி ஓர் இளம் பெண் பொழுது இங்கே கிடைத்தால்? இந்தக் ருக்கு அந்த இளம் மேனியின் கதகதப்பு ளவு சுகமாகயிருக்கும்?

ஜனனல வழியாக வெளியே த்தார் மேஜர்.

பாவாடை... நிறைய கொசுவம், வைத்தது. தொப்புள் தெரிந்தது... ம ஒரு சட்டை... மார்புக்குக் கீழே கொஞ்சம வரை வந்திருந்தது. முழுக் கை சட்டை.... சட்டையில் பட்டன்களில்லை... திறந்து கிடந்த மார்பில் செங்காய் நிறத்தில் பொன்னிற வட்டம்...

''சாயா குடிக்கிருயா?'' என்று கேட்டார்.

அவளுக்கு அது அப்போது அந்தக் குளிரில் மிகவும் தேவையாக இருந்தது போலும். 'வேண்டும்' என்பது போலத் தலையாட்டினுள்.

''வா, என் பின்னல்!'' என்பது போலக் கையைக் காட்டினர்.

தூரட்டிக் கம்பைப் பத்திரமாக ஒரு மரத்தினருகில் வைத்துவிட்டு அவர் பின்னுல் வந்தாள் அவள்.

பாறைகளில் ஏறும்பொழுது கால்கள் தடுக்கி விடாமலிருக்க அவள் பாவாடையைத் தூக்கிக் கொண்ட பொழுது செழுமையான, வெண்மையான அக்கால்கள் முத்தையாவை உணர்ச்சி பெறச் செய்தன.

ஒரு சின்ன ஓடையைத் தாண்ட அவள் சிரமப்பட்டபொழுது அவர் அவளுடைய அனுமதியைப் பெறும அவளைத் தம் இரு கைகளாலும் தூ ஓடையைத் தாண்டியபொழுது அ அவருடைய பலத்தைக் கண்டு என்னமோ சிரித்தாள்.

அந்தச் சிரிப்பே முத் யாவுக்குத் தைரியத்தைக் கொடுத்தது.

அவளுக்கு மொர மொரப்ப தித்திப்பு, உப்பு பிஸ்கட்டுகள் கொடுத்தார் முத்தையா. வெண்ணெ ஜாம் தடவி ஸ்லைஸ் செய்த ரொட்டிகள் கொடுத்தார். உருளைக் கிழங்கு வறு பிளாஸ்டிக் உறையைப் பல்லால் கடித் கிழித்து ஒரு தட்டில் போட் கொடுத்தார்.

அவைகளைச் சாப்பிடச் சாப் அவள் முகம் ஒரு பிரகாசம் அடைவதை ஒரு மலர்ச்சி அடைவதையும் கவனித்த

தனது சட்டை, பித்தானில்ல திறந்து கிடப்பதையோ, அப்படித் திற கிடப்பதால் தனது இளமையான பூ அங்கங்களின் செழுமை வெளியே தெ கொண்டிருப்பதையோ அவள் சட் செய்யாமல் ரொட்டிகளையும், பிஸ்க களையும் மாறி மாறித் தி கொண்டிருந்தாள்.



நடிகர் சங்கத்தின் புதிய கட்டிடத் திறப்பு விழாவில்

● பழங்கால நடிகைகளானுலும் சரி, புது நடிகைகளானுலும் சரி ''அம்மா தாயே நல்லாயிருக்கியா?'' என்று வி.கே.ஆர். தன் பாணியில் விசாரித்து உள்ளே அனுப்பினுர்.

● 'பாஞ்சாலி சபதம்' நாட்டிய நிகழ்ச்சி நடத்தியவர் லதா. அன்று காலையில் அவரது கால்களில் ஆணி குத்தி விட்டது. பிளாஸ்திரி போட்டுக் கொண்டு வலியுடன் ஆடினுர். பின்னுல் எம்.ஜி.ஆர். பாராட்டிப் பேசியபோதுதான் அவருக்கு ஆணி குத்திய விவரம் தெரிந்தது.

● சிவாஜி சாமராட் அசோகனுக நடிக்கப் போகிறுர் என்றதும் ரஜனி. ஓட்டமாக ஓடி வந்து மேடையில் ஸ்கிரீனுக்குப் பின்னுல் நின்று கொண்டார். சிவாஜி நடிப்பதை ஒரு சில நிமிடங்கள் பார்த்துவிட்டு மாயமாய் மறைந்து விட்டார் ரஜனி.

● முதல்வர் வருகைக்கு நன் தெரிவித்துப் பேசிய சிவாஜி ''ஏழை கலைஞர்கள் சார்பில்'' என்றது கூட்டத்தினர் சப்தம் போட்டார்க சிவாஜி சுதாரித்துக் கொண்டார்.

''ஆமாம். நாங்க பாங் கடன் வாங்கி இந்தக் கட்டிடத் கட்டியிருக்கோம். அதனுல் ஏழை த கடன் முடியற வரையில்?'' என பார்க்கலாம்! ஓரே கை தட்டல்!

—ராதா


அறிமுகம் இதோ
6-ரூபாயில் அடைக்கல
'நாட்கள்':
FREEDOM
superior sanitary napkins
with Protecta shield
:.ப்ரீடம்
ஸேனிட்டரி நேப்கின்கள்
நம்பமுடியாத நயவிலையிலே
அதிசயமூட்டும் தரம்!
:.பரீடம். இந்தியப் பெண்மணி எவரும் எதிர்பார்த்துக் காத்திருந்த சுதந்திரம் இதோ. உறுத்தாத நிலையிலே உலகு மெச்சும் தரம். இதெப்படி சாத்திய மாயிற்று? தரத்தை தாழ்த்தாமலே தயாரிப்புச் செலவைக் குறைத்திட்ட உற்பத்தி வல்லமையே காரணம்.
தும்பைப் பூ வெண்மை பொலியும் :.ப்ரீடம் நேப்கின்கள், இறக்குமதிச் சாதனங்களைக் கொண்டு துப்புரவான சுகாதாரச் சூழ்நிலைகளிலே புனையப்பட்டவை.
அன்னச் சிறகின் மென்மை இழையும் :.பரீடம், சொகுசான முழுப் பாதுகாப்புக்கு உத்தரவாதமளிக்கிறது. அடுத்து வருகிற விலக்கு நாட்களை விடுங்கள :.ப்ரீடம் பொறுப்பில்... அதனபிறகு வேறெதனையும் தீண்டமாட்டீர்கள்.
விசேஷப் பாதுகாபபுக கவசம.
உயர்தர ஆக்க சாதனம:
இலவச :.ப்ரீடம் பெல்ட்
உங்கள் :.ப்ரீடம் பின்வருமாறு கிடைக்கிறது:
20 நேபகின்கள் அடங்கிய எகானமி பேக.
10 நேபகின்கள் அடங்கிய ரெகுலர் பேக்.
ஹெர்பர்ட்ஸன்ஸ் லிட்., 22 ஹோமி மோடி ஸ்ட்ரீட்,
பம்பாய் 400 023. இந்தியா
FREEDOM
is my
birthright

அவளது அங்க அழகைப பருகியபடி மின்சார அடுப்பில் சுடச்சுடத் தேநீர் தயாரித்த முத்தையா கோப்பை வழிய வழிய, ஆவி பறக்கப் பறக்க அவளிடம் கொடுத்தார்.

அவள் அதைப் பருகத் தெரியாமல் தவித்தாள் தேநீர்க் கோப்பையையும் அடித் தட்டையும் எப்படிப் பிடித்துக் கொள்ள வேண்டு மென்று தெரியாததால் அவள் தேநீரைத் தன் மீது கொட்டிக் கொண்டாள்

''அடடே! சூடா?'' என்றபடி தம் கைக்குட்டையை எடுத்துத் தேநீரால் தன்னை அபிஷேகம் செய்து கொண்டிருந்த அவள் மார்புப் பிரதேசத்தை அழுத்தி அழுத்தித் துடைத்தார் அவள் மௌனமாகச் சிரித்தபடி இருக்கவே மார்பின் மீது கொட்டிய தேநீர் வயிறு வழியாகவும் இறங்கிவிட்டிருப்பதைப் பார்த்துத் தமது இடது கை ஆள் காட்டி விரலால் இடுப்பிலிருந்த பாவாடையின் முன் பகுதியை இழுத்து உள்ளேயும் துடைத்தார் முத்தையா

அவள் நெளிந்தாலும் எதிர்ப்புக் காட்டாதிருக்கவே முத்தையாவுக்கு எல்லாமும் எளிதாயிற்று.

கல்கத்தா சந்தோஷ் அவள் வடிவானுள்.

முத்தையா மிகவும் மகிழ்ந்து போனார் போர் முனையில் தாம் மிகவும் முக்கியமான ஒரு கேந்திரத்தின் பொறுப்பதிகாரியாக இருப்பதையும், அருகில் எப்பொழுதும் யுத்தத்துக்குத் தயாராக எதிரிகளின் பீரங்கிகளும், துப்பாக்கிகளும் வெடித்துக் கொண் டிருப்பதையும் அறவே மறந்து போன அவர் மற்றும் ஒரு முறை தம் உடலை அவளிடம் சூடாக்கிக் கொண்டார்.

அவள் களைத்துப் போய் விட்டாள். குளிராக இருந்தும் கூட முத்தையாவின் முரட்டுத்தனமான வலு நிறைந்த சாகசங்களுக்கு ஈடு கொடுத்ததில் அவர் சோர்ந்து போய்விட்டிருந்தாள். முகத்தில், கழுத்தில், பிடரியில் எல்லாம் வியர்வை கசகசத்தது.

''குளிக்கிலியா?'' என்று கேட் டார் அவர்.

''பச்சைத் தண்ணியா?''

''இல்லை. வெனனீர்.''

''குளிக்கிறேன்,'' என்றுள் அவள்

அடுத்த அறைக்குச் சென்று பக்கெட்டிலிருந்த தண்ணீரில் ஹீட்டரைப் போட்டுவிட்டு ஸ்விட்சை 'ஆன்' செய்தார் முத்தையா. கிர்ரென்ற சப்தம கேட்டது சிறிது நேரத்தில் தண்ணீர் சூடாகத் தொடங்கியது கை விரல்களை விட்டுப் பார்த்தார் குளிக்கிற பதமாக இருந்தது ஸ்விட்சை ஆஃப் செய்து ஹீட்டரை எடுத்து ஸ்டாண்டில் மாட்டிவிட்டு வந்தார்

'போய்க் குளி! என்று தேங்காய்ப் பூத் துவாலையை எடுத்து அவள் தோளில் போட்டார் சோபபைக் கொடுத்தார்

குளிக்கப் போனுள் அவள்

இருப்புக் கொள்ளவில்லை முத்தையாவுக்கு. அவசரத்தில் ஆடை விலகியபொழுது பார்த்ததுதான் உடம்பை. இப்பொழுது குளிக்கும்பொழுது பார்த்தால்?

பார்த்தார்

ஒரு பக்கெட் தண்ணீரில்தான் குளித்தாக வேண்டும் என்பதாலும், அது தன் உடம்பு முழுவதும் நனையப் போதுமோ போதாதோ என்பதாலும் அவள் எழுந்து நின்று, ஆடை களைந்த மேனியில் தண்ணீரை ஒவ்வொரு கோப்பையாக எடுத்து உடம்பின் ஒவ்வொரு பகுதியிலும் அதை விட்டு, விட்டு, நிதானமாகக் குளித் துக் கொண்டிருந்தது முத்தையாவின் கண்களுக்கு நல்ல பருவ விருந்தை அளித்தது. உள்ளே ஓடிப் போய் அவளை அப்படியே அள்ளிக் கொண்டு விடலாமா என்று தோன்றிற்று அவருக்கு.

தெரிந்தோ தெரியாமலோ தனக்கு இரு முறை இந்த மலை பிரதேசத்தில் இன்ப சுகத்தைக் காட்ட விட்ட அவளை வெறுங் கையுடன் அனுப்பலாமா?

பெட்டியைத் திறந்தா முத்தையா. எப்போதோ நான்காக ஒ நூறு ரூபாய் நோட்டை மடித்து போட்டிருந்தது நினைவு வந்தது அவருக்கு அதைத் தேடி எடுத்தார். அவள் வந்தது அவ்ளிடம் அதைக் கொடுத்தார்.

மறுத்த அவள், ''நாட்டை காக்க நீங்கள் மனைவி, மக்களை விட்டு, வீ வாசலை விட்டு, உற்றுர் பெற்றேரை விட்டு குளிரிலும், பனியிலும் கஷ்டப்பட்டு கொண்டிருக்கிறீர்களே? உங்களுக்கா நாங்கள் என்ன செய்கிறேம்? நா செய்தது தவறுதான்- ஆ எங்களுக்காகப் போர் முனையி மரணத்தைச் சந்திக்கவும் தயாரா

நீங்களுக்குள் உங்களுக்குக் கொடுக்க என்னிடம் என் உடம்பைத் தவிர வேறொன்றுமில்லையே!'' என்றாள் அவள்.

அவளது பேச்சைக் கேட்கக் கேட்க, குளித்துவிட்டு வந்திருக்கும் அவளது அழகு மேனியைப் பார்க்கப் பார்க்க, இனி இவள் மறுபடியும் நமக்குக் கிடைப்பாளோ என்னவோ என்ற எண்ணம் தலை தூக்கவே அவளை மீண்டும் அடைய எண்ணி நெருங்கினார்.

அவள் விலகினாள். ''வேண்டாம் ஸாப்! நீங்கள் அளவுக்கு மீறி நடந்து கொண்டு மிகவும் களைத்துப் போயிருக்கிறீர்கள்! குண்டு சப்தம் கேட்டுக் கொண்டேயிருக்கிறது. உங்களது சேவை எந்த விநாடியும் தேவைப்படலாம். களைத்துப் போகாதீர்கள் ஸாப். சோர்ந்து போகாதீர்கள் ஸாப்...''

கெஞ்சினாள் அவள். கேட்கவில்லை மேஜர். அவளைப் பிடித்து இழுத்தார்

''வேண்டாம் சாப், வேண்டாம்!''

கேட்கவில்லை முத்தையா. இறுக அவளை அணைத்தார். ஆசையாக அவள் மார்பை, இடுப்பை எல்லாம் தடவினார். முகத்தைத் தடவினார். கழுத்தைத் தடவும்பொழுது வெளியே போய் இவள் தன் செய்கையைச் சொல்லி விடுவாளோ என்ற பயம் கொண்டவரைப் போல அவள் கழுத்தைத் தம் இரண்டு கைகளாலும் பற்றி அழுத்தினார்.

விழி பிதுங்கிற்று அவளுக்கு. கைகள் வெட்டி வெட்டி இழுத்தன. கால்கள் வெட்டி வெட்டி இழுத்தபொழுது கீழே விழுந்தது ஒரு பிலிம் சுருள்.

''திருட்டுக் கழுதை! எதிரியின் ஆளான நீ என்னை ஏமாற்ற ராணுவ கேந்திர இடங்களை ரகசியமாகக் கொண்டுள்ள பிலிம் சுருளை உன்னிடம் பதுக்கிக் கொண்டதால் தானே, அந்த உண்மை எங்கே தெரிந்து விடுமோ என்கிற அச்சத்தில் எனது ஆசையை மூன்றாவது முறையாகவும் நிறைவேற்ற மறுத்தாய்? ஆண்களை ஏமாற்றப் பெண்ணால்தான் முடியும் என்ற எண்ணத்தில் வந்தவளல்லவா நீ!''

தனக்கு ஒரு முறைக்கு இரு முறையாக இன்ப சுகம் அளித்த அவளுக்குப் பணம் ஏதாவது கொடுக்க வேண்டுமென்று அவர் எண்ணிப் பெட்டியைத் திறந்தபொழுது இந்த பிலிம் சுருள் காணாமல் போயிருப்பதைக் கண்டார். அதை அவள் தன் உடலில்தான் எங்காவது மறைத்து வைத்திருக்க வேண்டுமென்று எண்ணி, அவளைச் சோதனை செய்யவே, மூன்றாவது முறையாகவும் ஆசை வந்தவனைப் போல அவளிடம் நடந்து கொண்டு அவள் ஆடைகளைக் கிழித்தெறிந்தார். பயத்தில், மரணாவஸ்தையில் அவள் கைகளை, கால்களை உதறியதில் அவள் மறைத்து வைத்திருந்த பிலிம் சுருள் வெளியே வந்து விழுந்து அதைக் காட்டிக் கொடுத்தது. ''எதிரியின் ரகசியங்களை அறிய வந்த உளவாளியே, முடிந்ததா உன் கதை?'' என்றபடி சலனமற்றுக் கிடந்த அவள் உடலைப் பார்த்தார் முத்தையா. சற்று முன்பு வரை உணர்ச்சி மயமாக இருந்து அவரை மகிழ்வித்த உடம்பு உணர்ச்சியற்று மரக் கட்டையாகக் கிடந்தது அங்கே.



# டுக்கை ஜோதிடம்



உங்கள் பை
படுக்கையில் தூங்குவ
வைத்து அவ
எதிர்காலத்தைச் சொ
விடலாம்

பின்னலில் அகலக கால்
வைத்துவிட்டுத் திண்டாடுவான்.





உரிமையை இழந்துவிட்டு
இளிச்ச வாயத்தனமாக இருக்க
வாய்ப்புண்டு



தன் கீழ் நா
போட்டு வேலை
கொண்டு கால் மே
போட்டுக் கொண்டு
இருப்பான்.

இப்போழுது! திருப்திகரமான ஸ்ட்ராங் டீயை நாடுங்கள்!

# லிப்டன் டாப் ஸ்டார் டீ

நீங்கள் காத்திருப்பது ஸ்ட்ராங்கான சுவை மிகுந்த டீயை ருசிப்பதற்கென்றால், இது தான் அது. புதிய லிப்டன் டாப் ஸ்டார். உண்மையில் ஸ்ட்ராங்கான டீயை விரும்பும் உங்களைப் போன்றவர்களுக்கென்றே உயர்ந்த ஏற்றுமதி தர டீ தூள்களின் இணைந்த கலவை. இன்றே நாடுவீர் லிப்டன் டாப் ஸ்டார். இதன் முழுஃபாயில் உறை இதனுடைய பசுமையை பாதுகாத்து, ஸ்ட்ராங் தன்மையையும் உள்ளபடி அளிக்கின்றது.



# நூறாவது நாள்

ராஜேஷ்குமார்

அன்றைக்குக் காலை வந்த தினசரியின் கடைசிப் பக்கத்தைப் பார்த்த நடிகை ப்ரீதா பூரித்துப் போனாள். திரும்பத் திரும்பப் பார்வை அதே பக்கத்தின் மீது பரவசத்துடன் ஓடியது.

வெற்றிகரமான 50'வது நாள். புதுமுகம் ப்ரீதாவின் வெற்றிச் சித்திரம் 'செவத்தப் பொண்ணு செவ்வந்தி' 100'வது நாளை நோக்கி வெற்றி நடை போடுகிறது.

''அண்ணா!'' உற்சாகக் குரலில் அழைத்தாள் ப்ரீதா. உள்ளறையில் ஷேவிங் செய்து கொள்வதில் ஈடுபட்டிருந்த கதிரேசன் முகத்தில் சோப்பு நுரையுடன் அப்படியே வந்தான்.

''என்ன ப்ரீதா?''

'நான் நடிச்ச படத்துக்கு விளம்பரம் பார்த்தியா அண்ணா? அம்பதாவது நாளுக்கே முழு பக்க விளம்பரம் கொடுத்திருக்காங்களே... நூறாவது நாளுக்கு அமர்க்களம் பண்ணிடுவாங்க போலிருக்கே?'' முகத்தில் பெருமிதம் பொங்கச் சொன்னாள் ப்ரீதா.

கதிரேசனின் முகத்திலும் அதே பெருமிதம். ''பின்னே என்னோட தங்கச்சி படம்னா சும்மாவா? நீ மட்டும் இந்தப் படத்துல நடிச்சு செவ்வந்தி கேரக்டருக்கு உயிரூட்டாமெ இருந்திருந்தா... படம் ஃபிளாப் ஆகியிருக்கும். இந்தப் படம் படவுலகில நிச்சயமா புரட்சி பண்ணத்தான் போகுது... நியாயப்படி பார்த்தா அம்பதாவது நாள் விளம்பரத்துக்கு ரெண்டு முழு பக்க விளம்பரம் கொடுத்திருக்கணும்...''

''உனக்குப் பேராசைதான்...'' ப்ரீதா தவறி விழுந்த கண்ணாடி டம்ளராய்க் கலீரென்று சிரித்தாள். சிரித்ததால் காது மடல்களும், கன்னப் பகுதிகளும் குப்பென்று செம்மையேறின.

கதிரேசன், முகத்தில் சற்றே கவலை தோயத் தங்கையை மெள்ள ஏறிட்டான்.

''ப்ரீதா... நீ நடிச்ச முதல் படத்துக்கு இத்தனை வரவேற்பு இருந்தும் உனக்கு இன்னும் புதுப்படம் ஏதும் புக் ஆகல்லியே... அத நெனைச்சாத்தான் மனசுக்குக் கொஞ்சம் கஷ்டமாயிருக்கு... இந்நேரத்துக்கு ஒரு பத்துப் படமாவது புக் ஆயிருக்க வேண்டாமா?''



கதிரேசனின் முகத்திலிருந்த கவலே இப்போது ப்ரீதாவுக்கும் தொற்றிக் கொண்டது. ''அண்ணு... இந்தப் படம் நூறு நாள் ஓடி விழாக் கொண்டாடி ஞத்தான் ப்ரொட்யூஸர்ஸ் எம் பக்கம் திரும்பி வருவாங்க... அது வரைக்கும் காத்திட்டிருக்க வேண்டியதுதான்...''

' இந்தப் படம் நூறு நாள் ஓடுமா ப்ரீதா?'' —கதிரேசனின் குரலில் சந்தேகம் தொனித்தது.

அவள் சிரித்தாள். ''என்னண்ணு அப்படிக் கேட்டுட்டே... படம் நிச்சயமா நூறு நாள் ஓடும்.''



அடுத்த வாரமே ப்ரீதாவின் ஆசையில் 'ஸ்கைலேப்' விழுந்தது.

முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டு அந்தச் செய்தியைக் கொண்டு வந்தான் கதிரேசன். அழுகிற குரலில் சொன்ஞன். ''ப்ரீதா, பதினறு சென்டர்ல ஓடிகிட்டிருந்த உன்னுடை படத்தை வர்ற வெள்ளிக்கிழமையன்னிக்கு பத்து தியேட்டர்கள்லே எடுத்துடப் போருங்களாம்... நாலு சென்டர்ல மட்டும்தான் ஓட்டப் போருங்களாம்... அதுவும் எழுபத்தஞ்சு நாளுதான்... ஒரு சென்டர்ல கூட நூறு நாள் ஓடப் போறதில்லேயாம். .''

முகம் கறுத்துப் போய்ப் பீதி தட்ட எழுந்தாள் ப்ரீதா. உடைந்த குரலில் கேட்டாள். ''காரணம் என்னவாம்?''

''கூட்டமில்லேயாம். அதுவு மில்லாமெ வர்ற வெள்ளிக்கிழமை ஹீரோ ஜெயமோகன் நடிச்ச சினிமாஸ்கோப் படம் வெளி வருதாம்... அதனுல உன்னுடை படம் கண்டிப்பா விழுந்துடுமாம்.''

ப்ரீதாவின் கண்களில் நீர் கோத்தது.

''அண்ணு, ஒரு நாலு சென்டரிலாவது என்னுடை முதல் படம் நூறு நாள் ஓடிஞத்தான் எனக்கு எதிர்காலம்...இல்லேன்னு இந்த ஒரு படத்தோட நான் இப்படியே முடங்கிக்க வேண்டியதுதான்...''

கதிரேசன் மோவாயைத் தேய்த்தான். ''நம்மலாலே என்ன பண்ண முடியும். ப்ரீதா? டிஸ்ட்ரிபியூட்டர்ஸும்.



சாக்ரடீஸ் ஒரு வீட்டைக் கட்டினார். அந்த வீட்டைப் பார்த்த ஒவ்வொருவரும் ஏதாவது ஒரு குறையைச் சொல்லிக் கொண்டிருந்தனர்.

''இதுவும் ஒரு வாசலா?'' என்றான் ஒருத்தன்.

''உட்புறம் என்ன இப்படி இருக்கிறது!'' என்று முகம் சுளித்தான் மற்றொருவன்.

'அறைகளா இவை? போய்த் திரும்புவதற்குக் கூட உள்ளே இடம் போதாது.'' என்றான் மூன்றாமவன்.

சாக்ரடீஸ் சொன்னார்:

''இந்தச் சிறு அறையை நிரப்புவதற்கே எனக்கு உண்மையான நண்பர்கள் கிடைக்கமாட்டார்களா'' என்று ஏங்குகிறேன்.''

—அ. இராமச்சந்திரன்

தியேட்டர்காரங்களும் பார்த்து மனசு வெச்சா உன்னோட படம் நூறு நாள் ஓடும். இல்லேன்னா கஷ்டம்தான்...''

ப்ரீதா தலையைக் குனிந்து கொண்டு சற்று நேரம் வரை தரையை வெறித்தாள். பிறகு ஒரு தீர்க்கமான முடிவோடு தன் அண்ணனைப் பார்த்தாள் ''அண்ணா! இப்பிடிச் செஞ்சா என்ன? முக்கியமான இந்த நாலு சென்டர்லேயும் படத்தை நூறு நாள் ஓட்டச் சொல்லி நாம ரெண்டு பேரும் தியேட்டர்காரங்களையும், விநியோகஸ்தர்களையும் சந்திச்சுப் பேசினா என்ன?

அவங்க நம்ம பேச்சைக் கேட்பாங்களா ப்ரீதா?'' —கதிரேசன் அவளை அனுதாபத்தோடு பார்த்தபடி கேட்டான்.

கேக்கறாங்களோ... இல்லியோ .. முயற்சி செஞ்சு பார்ப்போமே.. நாளைக்கே புறப்படலாம்...''

''உன்னோட இஷ்டம் ப்ரீதா...'

தலையாட்டினான் கதிரேசன்.

நெற்றியில் பளிச்சிட்ட வட்டமான சந்தனப் பொட்டும், கழுத்தில் மின்னிய தங்கச் செயினும், மின் விசிறி தூவிய காற்றில் படபடத்த சில்க் சர்ட்டும், தலைக்கு மேல் ஜிகினாத் தோரணங்களோடு தொங்கிய கடவுள் படங்களும் — அவரை ஒரு கண்ணியமானவராக நினைக்கச் செய்தன.

ப்ரீதாவும் கதிரேசனும் வணக்கம் தெரிவித்துவிட்டு அமர்ந்தார்கள் சில்க் ஜிப்பா ப்ரீதாவைப் பார்த்து ஈறுகள் தெரியச் சிரித்தார். கடை வாயில் ஒளிந்திருந்த தங்கம் போட்டோ பிளாஷாய்ப் பளிச்சிட்டது.

'''செவத்தப் பொண்ணு செல்வந்தி'யில ரொம்பப் பிரமாதமா ஆக்ட பண்ணியிருக்கீங்கம்மா... இதுதான் உங்க மொத படம்ன்னு என்னாலே நம்பவே முடியல்ல... பின்னாலே நல்லா முன்னுக்கு வருவீங்கம்மா...''

ப்ரீதாவுக்கு ரொம்பவும் பெருமையாக இருந்தது. ''ரொம்ப சந்தோஷம் சார்.. படம் நல்லாயிருக்குன்னு எல்லாருமே சொல்றாங்க... ஆனால் படம் நூறு நாள் ஓடினாத்தான் என்னோட திரையுலக வாழ்க்கை பிரகாசமாயிருக்கும் ஸார்... அதுக்கு நீங்கதான் மனசு வைக்கணும்... மெட்ராஸுக்கு நீங்கதான் டிஸ்ட்ரிபியூட்டர்ன்னு கேள்விப்பட்டு உங்களைப் பார்க்க வந்தோம் சார்...''

ப்ரீதா படபடப்பாய்ச் சொல்லி முடித்தாள்.

சில்க் ஜிப்பா இப்போது கோணலாய்ச் சிரித்தார். ''ஆரம்பத்தில உங்க படம் நூறு நாளுக்கு மேல ஓடும்ன்னுதான் நானும் நெனைச்சேன்... கூட்டமும் நல்லாயிருந்தது... பத்திரிகைக்காரங்களும் மனசு திறந்து நல்லா பாராட்டி எழுதியிருந்தாங்க... ஆனா இடையில ரெண்டு மூணு 'ஏ' மலையாளப் படம் வந்து உங்க படத்தோட கலெக்ஷனை அடிச்சிடுச்சு... வசூல் சரியா இல்லேன்னா படத்தை ஓட்ட முடியுமா? நீங்களே சொல்லுங்க!''

கதிரேசன் குறுக்கிட்டான். ஸார்! நீங்க மனசு வெச்சாப் படத்தை நூறு நாள் ஓட்ட முடியும்ன்னு சொன்னாங்க ஸார்...''

சில்க் ஜிப்பா இப்போதுதான் முதன் முறையாகக் கதிரேசனை ஏறிட்டுப் பார்த்தார். பின்பு ப்ரீதாவைப் பார்த்துக் கொண்டே கேட்டார்,.. ''இவரு உங்களுக்கு என்ன ஆகணும்மா?''

''என்னோ' அண்ணன் சார்... என்னோட நடிப்புத் திறமையை நல்லா புரிஞ்சுகிட்டு என்னைச் சினிமாவில நடிக்க

வைக்க ஆசைப்பட்டார்... ரெண்டு
வருஷமா எனக்காக சான்ஸ் கேட்டு
அலைஞ்சார்... 'செவத்தப் பொண்ணு
செவ்வந்தி'யில சான்ஸ் கிடைச்சுது.
திறமையைக் காட்டியிருக்கேன் ''

''ம்... அப்படியா? அண்ணனுக்கு
ஹீரோ 'பேஸ் கட்' இருக்கே. அவரும்
நடிக்கலாமே..''

கதிரேசன் குறுக்கிட்டான்.
'எனக்கும் நடிப்பில ஆர்வம் இருக்கு
சார்.. ஆனா சான்ஸ் கிடைக்கணுமே?''

சில்க் ஜிப்பா கதிரேசனை அரைப்
பார்வை பார்த்துக்கொண்டே சொன்னார்.
'நமக்குத் தெரிஞ்ச தயாரிப்பாளர் எஸ்.
கே.ன்னு ஒருத்தர் புதுசா கலர்ப் படம்
ஒண்ணு எடுக்கிறாரு... ஹீரோயின் ரெடி...
ஆனா ஹீரோ இன்னமும் கிடைக்கல்ல..
புது முகமா இருந்தா பரவாயில்லேன்னு
சொன்னாங்க.. உங்களுக்கு இஷ்டமிருந்தா
அந்தப் படத்தில நடிக்கலாமே!''

ப்ரீதா முகமலர்ச்சியோடு
கதிரேசனின் பக்கமாய்த் திரும்பினாள்.
கதிரேசன் பரவசத்தோடு தலையை
ஆட்டினான். ''காத்திட்டிருக்கேன் சார்...''

''அப்படீன்னா...'' சில்க் ஜிப்பா
தன் மணிக்கட்டில் இருந்த கடியாரத்தை
மூறைத்துப் பார்த்துவிட்டு ''இப்ப மணி
பத்தரை ஆச்சு... எஸ்.கே
ஸ்டுடியோவுக்கு இன்னமும் போயிருக்க
மாட்டார். நான் ஒரு அட்ரஸைத் தர்றேன்.
இப்பவே போய் நீங்க அந்த அட்ரஸ்ல
எஸ்.கே.யைப் போய்ப் பாருங்க. நான்
அனுப்பினதா சொல்லுங்க.. உங்களை
ஸ்பெஷலா கவனிப்பார்...'' என்றார்
உடனே ஒரு வெள்ளைக் காகிதத்தில் தன்
கம்பெனி ரப்பர் ஸ்டாம்பைக் குத்தி அதன்
கீழே ஏதோ ஒரு அட்ரஸை எழுதினார்
கதிரேசனிடம் நீட்டினார்

''இப்பவே போய்ப் பாருங்க.
தங்கச்சி பேசிட்டு வீட்டுக்குப்
போகட்டும் ப்ரீதாவும் அதை
ஆமோதிக்கும் பாவனையில் அண்ணா,
இப்பவே போய்ப் பாருங்க நான்
இவரோட பேசிட்டு வீட்டுக்குப்
போறேன்' என்றாள்

கதிரேசன் தலையாட்டியபடி
எழுந்தான் சில்க் ஜிப்பாகாரருக்கு—
மீண்டும் ஒரு கும்பிடை போட்டுவிட்டு—
கதவைத் திறந்து கொண்டு
வெளியேறினான்.

கதிரேசன் வெளியேறிய மறு
விநாடியே சில்க் ஜிப்பா பேச்சை
ஆரம்பித்தார் ''உங்க படம் 'செவத்தப

அம்பிகாபதி, மாமல்லன்,
அம்மங்கை, பீலிவளை, சம்யுக்தா, ஸ்ரீ,
வானதி, செல்லக் கண்ணன்.

இவை இப்பொழுது
டைரக்டராகியுள்ள ஓர் எழுத்தாளரது
பிள்ளைகளின் பெயர்கள்.

கோவி. மணிசேகரன்.



பெயர்சூட்டலுக்கு
கோவி. விளக்கம்

அம்பிகாபதி—இந்தப்
பெயரைத் தலைப்பிட்டு 1947'ல் ஒரு நாடகம்
எழுதினேன். கம்பர் மகன் அம்பிகாபதி
கதைதான். ராசியான பெயரை மூத்த
மகனுக்குச் சூட்டினேன்.

மாமல்லன்—ஆசிரியர்
'கல்கி'யின் எழுத்துக்களில் அபாரமான பக்தி
உண்டு. 'சிவகாமியின் சபதம்' நாவல்தான்
எனக்கு நன்னூல். அவருடைய கதாநாயகன்
பெயர்தான் இரண்டாவது பிள்ளைக்கு.

பீலிவளை—என் சரித்திர நாவல்.
மயிலிறகு கதாநாயகி. இவளுக்கு இப்போது
திருமணம் ஆகிவிட்டது.

அம்மங்கை—ராஜராஜனின்
தாயார் அம்மங்கையின் பெயர் இது.

ஸ்ரீ—எல்லாம் ஒரே தமிழ்ப்
பெயராக இருக்கிறதே என்று நண்பர்களுக்கு
சலிப்பு ஏற்படாமல் இருக்கட்டுமே என்று
சம்ஸ்கிருதப் பெயரை வைத்தேன். நானும்
சம்ஸ்கிருதம் படித்தவன்தானே?

சமயபுரி—சமயபுரத்து
மாரியம்மனின்மீது குடும்பத்துக்குள்ள
பக்தியும், ஈடுபாடும் காரணமாக இவளுக்கு
இந்தப் பெயர்.

வானதி—ராஜராஜனின் மனைவி
பெயர்.

செல்லக் கண்ணன்—
எட்டாவது பிள்ளையாதலால் கண்ணன்
என்று பெயர் வைக்க வேண்டுமென்று
மனைவிக்கு ஆசை.

ஓட ணும்ன்னு ஆசைபபடறீங்க... இன்னிக்கு அந்தப் படம் அறுபதாவது நாளா ஓடிட்டிருக்கு நாலு செண்டர்ல மட்டும்தான் போய்கிட்டிருக்கு... நாலு செண்டர் டிஸ்ட்ரிபியூட்டர்ஸூம் வாரத்துக்கு ஒரு வாட்டி இங்க வந்திட்டுப் போவாங்க போன வாரம் வந்தப்பவே உங்க பட கலெக்ஷன் டல்லடிக்க ஆரம்பிச்சுடுச்சுன்னு சொன்னாங்க அதனால படம் நூறு நாள் ஓடறது ரொம்பவும் கஷ்டமம்மா..''

''அப்படிச் சொல்லாதீங்க சார். நீங்க மனசு வெச்சா எதையும் நடத்திக் காட்டுவீங்கன்னு சினிமா பீல்டுல பேசிக்கறாங்க அதனாலதான் உங்ககிட்ட வந்தேன் சார் ப்ரீதா தன் அழகிய கண்களில் துளிக்க ஆரம்பித்த கண்ணீரை வெளிக் காட்டாமல் உள் வாங்கிக் கொண்டாள். சில்க் ஜிப்பா இப்போது நன்றாக பின்னுக்கு சாய்ந்து உட்கார்ந்து கொண்டார்.

''நான் மனசு வெச்சா மட்டும் போதுமாம்மா... நீங்களும் மனசு வெச்சாத்தான் இந்த பிரச்னை முடியும்.''

''நானென்ன செய்ய முடியும் சார்? இப்பத்தான் இந்தப் பீல்டுக்குப் புதுசா வந்தவ...''

சில்க் ஜிப்பா சிரித்தார். ''இந்த சினி பீல்டைப் பத்தி உங்களுக்கு இப்பப்ப கொஞ்சம் கொஞ்சமா புரிய ஆரம்பிச்சிருக்குமென்னு நினைக்கிறேன். இங்க காரியம் ஆகணும்ன்னா ஒண்ணு பணம் வேணும்... இல்லேன்னா எல்லாத்துக்கும் துணிஞ்சு நிக்கற மனப்பக்குவம் வேணும்...''

ப்ரீதாவுக்குக் குழப்பமாய் இருந்தது. ''நீங்க சொல்றது எனக்குப் புரியல்ல சார்...''

'புரியும்படியா சொல்றதுக்காகத்தான் உங்களோட வந்த உங்கண்ணனை சினிமா சான்ஸூன்னு சொல்லி வெளியே அனுப்பினேன் புரியும்படியாவே சொல்லட்டுமா..'

''ம்.,.சொல்லுங்க சார்..'

''இந்த சினி ஃபீ[ல்டுல] ஆம்பிளையாய் இருந்தா திறமை வேணு[ம்] பொம்பளையாய் இருந்தா நல்ல உ[டம்பு] கட்டு வேணும் . உங்ககிட்ட உடம்பு இருக்கு... அதைப் பயன்படு[த்தச்] சொல்றேன். . நான் சொன்[னது] புரிஞ்சிருக்குமென்னு நினைக்கிறேன்...'

'ஸார் கோபத்தில் சிவகக எழுந்தாள் பரீதா.

உட்காருங்கம்மா... சே[ரை விட்]டு எழுந்திரிச்சுப் போறதுல பிரயோசனமும் இல்லே. உங்க படம் [நூறு] நாள் ஓடறது என் கையிலேயும், மத்த செண்டர் டிஸ்ட்ரிபியூட்டர்ஸ் கையிலும்தான் இருக்கு. நாங்க நினைச்சா நாளைக்கே உங்க படத்தை எடுத்துட்டு வேற படத்தைப் போட முடியும்...''

பரீதா உடம்பு நடுங்க மறுப[டி] உட்கார்ந்தாள்

'நல்லா யோசனை பண்[ணுங்]கம்மா. மத்த நாலு செண்டர் டிஸ்[ட்ரிபி]யூட்டர்ஸூம் நாளைக்கு இங்க வருவா[ங்க] அவர்களைக் கொஞ் சந்தோஷப்படுத்துங்க அவ[ங்க] விருப்பத்துக்குக் கொஞ்சம் வளை[ஞ்சு] குடுங்க... படம் தானா நூறு நாள் ஓடு[ம்]... என்ன சொல்றீங்க?''

கண்களில் தீப்பொறி ப[றக்க] காதுகள் குப்பென்று உஷ்ணத் அடைக்க உடம்பு பதற எழுந்தாள் ப் ''சார்... நான் நடிச்சுப் பிழைக்கத் இந்த பீல்டுக்குள்ளே நுழைஞ்சே[ன்] உங்க மாதிரி ஆசாமிகளுக்கு உடம் கொடுத்துப் பிழைக்க வரல்லே என்னோட முதல் படம் நூறு ஓடலேன்னாலும் பரவாயில்லே ரெண்டாவது படமாவது நூறு ஓடும். படம் நூறு நாள் ஓடணு[ம்]கிறதுக்காக என்னோட உடம்பை போட நான் தயாராயில்லே... என்[னோட] படத்தை நாளைக்கே எல் செண்டர்லேயும் எடுத்துடுவாங்க

-நெற்றிப பரப்பில் வியர்[வை] துளிக்க, முகம் செம்பருத்தியாய் சிவ[க்க]



''பேசாம ஃபாரின்' போயிடலாம்னு நினைக்கிறேன்'

''ஏன்?''

''பின்னே 'இன்லாண்ட்'' லெட்டர் கிடைக்கலியே!''

—அ. இ

த்தொண்டையில் 'கர்ஜித்துவிட்டுக் கவைத் திறந்து கொண்டு வெளியே ந்தாள் ப்ரீதா.

வெயிட்டிங்கில் நின்றிருந்த ாக்ஸியின் கதவைத் திறந்து கொண்டு றி அமர்ந்தாள். சற்று எட்டத்தில் நின்று டி புகைத்துக் கொண்டிருந்த டாக்ஸி ரைவர் அவசர அவசரமாய்ப் பீடியை முத்துவிட்டு வீசியெறிந்தபடி ஓடி ந்தான்.

''எங்கம்மா போகணும்...?''

கடலலையாய்ப் பொங்கி எழுந்த னத்துக்குக் கொஞ்சம் அமைதி தவைப்பட்டது ப்ரீதாவுக்கு.

''டிரைவர்... வடபழனி காவிலுக்கு விடுங்க...''

''சரிம்மா...'' டாக்ஸி சீறிக் காண்டு கிளம்பியது.

அவளுடைய மனநிலைக்கு ற்றப்போல டாக்ஸி பறந்து கொண்டி ந்தது. எதிரே தென்பட்ட லாரிகளையும், வப்பும் பச்சையுமாய் வழியும் சிடி ஸ்களையும் நாசூக்காக ஒதுக்கிக் காண்டு டாக்ஸி அம்பாய் விரைந்தது.

அந்த மேம்பாலத்தில் ஏறி டதுபுறமாய்—வேகத்தைக் றைக்காமல் டாக்ஸி திரும்பிய பாதுதான்—செங்கற்களை அம்பாரமாய் ற்றிக் கொண்டு முனகியபடி வந்து காண்டிருந்த அந்த எமகிங்கர லாரி ட்டென்று எதிர்ப்பட்டது.

நான்கு மாதங்களுக்குப் பிறகு—

ஒரு ஞாயிற்றுக்கிழமை காலையில் வந்த தினசரியைக் கதிரேசன் பிரித்தபோது—

இளம் வயதிலேயே கருகிவிட்ட புத்தம் புதுமலர்— நடிப்பின் இளவரசி—திரையுலகின் கலையரசி ப்ரீதா நடித்த அமர - காவியம்— 'செவத்தப் பொண்ணு செவ்வந்தி' இன்றைக்கு வெள்ளிவிழாவைக் கொண்டாடு கிறது. இன்னமும் அரங்கு நிறைந்த காட்சிகளாய் பொன் விழாவை நோக்கித் தமிழகமெங்கும் வெற்றி நடை போடுகிறது. தெய்வமாய் நின்று படத்தின் பெரும் வெற்றிக்கு வழிகாட்டும் அந்த அன்பு மலர்க்கு எங்கள் இதய பூர்வமான அஞ்சலி.

—இப்படிக்கு—விநியோகஸ்தர்கள்—
தியேட்டர் உரிமையாளர்கள்.

கதிரேசனின் கண்களினின்றும் வழிந்த நீர் அந்த முழுபக்க விளம்பரத்தில் கால் பக்கத்தை அடைத்தபடி, புன்னகைத்துக் கொண்டிருக்கும் ப்ரீதாவின் புகைப்படத்தின் மேல் சிதற ஆரம்பித்தது.




கலையா மையழகிலே-நின்
கலையழகு பேசுதடி கண்ணம்மா!
Shingar
DELUXE KAJAL
போலிகளை
கண்டு ஏமாறாதீர்கள்.
டப்பிமீது சிங்கார் பெயர்
இருக்கிறதா என்று
பார்த்து வாங்குங்கள்.
மான் என்பார், விண் மீன் என்பார் மையுண்ட
விழிகளினை. கண்மை தீட்டப் போய் கரி
பூசுவீரோ உமது கட்டழகு முகத்திற்கு!
கண்ட கண்ட கண்மைகளால் வினையும் வினை
அது. உமக்குத்தேவை சிங்கார் டீலக்ஸ்
காஜல். இரண்டு அல்லது மூன்று முறை
அதை விரலால் தேயுங்கள். விரல் பட்டுக்
குழையும்; எடுங்கள் விரல் நுனியிலே ஓர்
இழை...
இடுங்கள் இமையின் உள்ளும் புறமும்
இலேசாக சிங்கார் டீலக்ஸ்—தீட்டியதும் சுடர்
விடுமே உங்கள திருவிழிகள். சித்திரக்
கணகளுக்கு சிதையாத முத்திரை சிங்கார்
டீலகஸ் காஜல்...கலையா ஓவியக் கலையழகு
கணகளுககு. பிஞ்சு விழிகளுககும்
கொஞ்சும் எழில்...
சிங்கார் டீலகஸ் காஜல் (கண்மை)
சிங்கார்
டீலக்ஸ் காஜல்
(கண்மை)
கண்மலரும் தனிப் படைப்பு
தென்னகத்துப் பெண்களுக்கு

# ராயப்பேட்டை சங்கரசுப்பிரமணியம்— விக்டோரியா மெமோரியல் ராஜாஜி

சங்கர சுப்பிரமணியம் என்ற முன் பின் தெரியாத நண்பரிடமிருந்து ராஜாஜி நினைவுக் குழுவுக்கு ஒரு கடிதம் வந்திருந்தது. அந்த நண்பர் சமீபத்தில் கல்கத்தாவுக்குச் சென்றிருந்ததாகவும், அங்குள்ள பெருமைமிக்க விக்டோரியா மெமோரியல் ஹாலிலுள்ள தேசியத் தலைவர்களின் வண்ண ஓவியப் பகுதியில் ராஜாஜியின் ஓவியமில்லாதது பெருங் குறையாக இருக்கிறதென்றும், இவ்வண்ண ஓவியத்துக்கு ஆகக் கூடிய செலவைத் தாம் மேற்கொள்ளத் தயாராக இருப்பதாகவும் எழுதினர்.

தலைவர் க. சந்தானம் அவர்களை அணுகினேன். அவர்கள் இக்கடிதத்தை இணைத்து மேற்கு வங்க முதல்வருக்கு அனுப்பி விடுமாறு கூறினா.

விக்டோரியா மெமோரியல் ஹால் செயலாளரும்—க்யூரேட்டருமான பேராசிரியர் என். ஆர். ராய் அவர்களிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது.

''தங்கள் சென்னை ராஜாஜி நூற்றாண்டு விழாக் கமிட்டி, ராஜாஜியின் வண்ண ஓவியத்தை அன்பளிப்பாக அளிக்குமாயின், ஏற்று எங்கள் தேசியத் தலைவர்களின் வண்ண ஓவியப் பகுதியில் அமைக்கத் தயாராக இருக்கிறது,'' என்று எழுதினர்.

தலைவர் க. சந்தானம் '''டோனேட்' பண்ணிவிடுகிறோம் என்று எழுதி விடு'' என்றார்.

எனக்கு ஒரே கவலையாகப் போய்விட்டது. திரு. என். ஆர். ராய் அவர்கள் தமது கடிதத்தில ஓவியததின் பரிமாணமளவு குறிப்பிட்டிருந்தார் 60''x 40'' என்று. அதாவது ஐந்தடி உயரம் மூன்றரை அடி அகலமுள்ள ஓவியமாக இருக்க வேண்டும். அந்த ஓவியத்துக்குத்தக்க களிப்புச் சட்டங்கள் வேறு வேண்டும். இவற்றுக்கெல்லாம் எண்ணாயிரம் ரூபாய் முதல் பதினாயிரம் ரூபாய் இருந்தால்தானே சாத்தியம் என்ற கவலை என்னை அரித்தது.

எதற்கும் திரு. சங்கர சுப்பிரமணியத்தைப் பார்ப்போம் என்று அவர் ஆறு மாதங்களுக்கு முன் எழுதிய கடிதத்திலிருந்த விலாசத்துக்குச் சென்றேன். அவர் ஜெனரல் இன்ஷ்யூரன்ஸில் ஒரு அஸிஸ்டெண்ட் ஊழியர்.

அவருக்குத் தான் எடுத்த முயற்சி வெற்றி பெற்றதில் சந்தோஷம்.

''எவ்வளவு ஆகும்?''— என்று கேட்டார்.

''படமே ஐயாயிரம் ஆகும். அதற்கு மேற்கொண்டு செலவிருக்கிறது. உம்மால் என்ன கொடுக்க முடியும்?'' என்று கேட்டேன்.

''என்னால் ஆயிரம் ரூபாய் கொடுக்க முடியும். மிச்சமுள்ள தொகையை நண்பர்களிடம் திரட்டித் தந்து விடுகிறேன்'' என்றார். எனக்குத் தூக்கி வாரிப் போட்டது— ஆயிரம் ரூபாய்!

''உங்கள் மனைவியிருக்கிறாரா?'' என்றேன்.

''இதோ இருக்கிறாளே?'' என்றார்.

''என்னம்மா! உன் புருஷன் ஆயிர ரூபாய ராஜாஜி பணிக்காகக் கொடுக்கிறேன் என்கிறார். உங்களுக்குச் சம்மதமா?'' என்றேன்.

''—எனக்குச் சம்மதம் தான்,'' என்றாள்.

அவர் தாயார் இருந்தார்.

''ராஜாஜிக்காக என் பிள்ளை இதைச் செய்யக் கொடுத்து வைத்திருக்க வேண்டுமே!'' என்றார்.

திரு. ஸி.ஆர். நரசிம்மன் அவர்கள் ஆசிரமத்திலிருந்து இப்பணிக்கு ஆயிர ரூபாய் வாங்கித் தருவதாகச் சொன்னார்கள்.

திரு. சித்ரா நாராயணசாமி அவர்கள், (முதலில் இப்பணிக்கும் பணத்துக்கு எங்கே போவது என்று கூறியவர்கள்) ''இனிமேல் யாரையும் பணத்துக்கணுகாதே! மிச்சமுள்ள செலவுக்கு நான் ஏற்பாடு செய்து விடுகிறேன். சங்கர சுப்பிரமணியத்தின் உணர்ச்சி என்னை மெய் சிலிர்க்க வைக்கிறது!'' என்றார்கள்.

சென்னை ஓவியக்கலைக் கல்லூரியில் பேராசிரியராக விளங்கும் திரு. ஸி.ஜே. ஆண்டோனி தாஸ் இப்பணிக்கு எல்லா தகுதியும் பெற்றவர்கள் என்றார்கள். அவரிடம் இப்பணி ஒப்படைத்திருந்தேன். இப்பணிக்கு தாஸ் அவர்களுக்கு ரூ. 4500 - கொடுகக வேண்டியிருந்தது.

ஓவியத்துக்கு நாற்புறமும் சட்டம் அடிக்கவும் ஆயிரம் ரூபாய் ஆயிற்று. கல்கத்தா கொண்டு செல்ல மற்றச் செலவுகளுக்கும் திரு. சித்ரா நாராயணசாமி அவர்கள் ஏற்பாடு செய்தளித்தார்.

1978 டிசம்பர் 10ம் தேதி கல்கத்தாவில் விக்டோரியா மெமோரியல் ஹாலில் ராஜாஜி படம் கவர்னர் சிங்கால் திறந்து வைக்கப்பட்டது.

—எஸ்.வி.எஸ்.
(ராஜாஜி நூற்றாண்டு விழாச் செயலர்)



# I

பார்க்க வேண்டாமென்று நினைத்தால் கூடத் திரும்பத் திரும்ப அந்தப் பக்கத்தையே பார்க்கத் தோன்றியது.

மாதங்கி மறுபடியும் அந்த மாத இதழைக் கையிலெடுத்தாள். அட்டையில் தேவிஸ்ரீயின் வண்ணப்படம் கவர்ச்சிகரமாய்ச் சிரித்துக் கொண்டிருந்தது. 'பல் வரிசை அழகாய்த்தான் இருக்கிறது சனியனுக்கு!' பொறுமையுடன் முணுமுணுத்தபடி உள்பக்கத்தைப் புரட்டினாள். அந்தக் கட்டுரையை மறுபடியும் படித்தாள். அந்த வரிகளைத் திரும்பவும் வாசித்தாள்:

''....சென்ற ஆறு மாதத்துக்குள் தேவிஸ்ரீ நடித்து வெளிவந்த இரண்டு படங்கள் நூறு நாள் கொண்டாடி விட்டது. இந்த ஆண்டு இதுவரை வேறெந்த நடிகை பட்டமும் நூறு நாளைக்கு ஓடவில்லை என்பது குறிப்பிடத் தக்கது..''

'வேறெந்த நடிகையின் படமும் ஓடவில்லை.'

மாதங்கிக்குக் கோபம் கோபமாய் வந்தது. குறுகிய காலத்தில் நூறு படங்களுக்கு மேல் நடித்தவள் என்று புகழ் பெற்றவள் அவள். கண்ணாலேயே காவியங்கள் பேசக் கூடிய திறம் பெற்றவள் என்று சொல்லப்படுகிறவள். குடும்பப் பாத்திரம் ஏற்றால் அதில் ஒரு தனி முத்திரை பதித்து, கவர்ச்சிக் கன்னியாகத் தோன்றினால் அதிலும் ஓர் ஆழம் கொடுத்து, திரையின் எல்லாக் கோடிகளையும் தொடக் கூடியவள் என்று பெயர் வாங்கியிருப்பவள்.

அப்படிப் பட்டவளுக்கு நேற்று முளைத்த இந்தத் • தேவிஸ்ரீ சவால் விடுகிறாள்.

''தேவிஸ்ரீயாவது மண்ணா கட்டியாவதுங்க! சும்மா காளான் தமிழில் சுத்தமாய் ஒரு வார்த்தை பே வரலீங்க. இது அதிக நாள் நிக்காதுங்க!' என்று அவளிடம் பல பேர் சொன்னாலு கூட, அதெல்லாம் தன்னை குளிர்விப்பதற்காகச் சொல்லப் படுகி பேச்சு என்று மாதங்கிக்கு தெரிந்திருந்தது. நிஜமாகவே நிற்க கூடியவள் தான் என்பதும், அவளுடை சில படங்களை—வேண்டா வெறுப்பாக பார்த்த போது புரிந்தது.

வெற்றிகரமானவர் ச யாராலும் தோற்கடிக்க முடியாது. ஆனா



'முரளி'

...ம் ஒரு வெற்றிகரமான ஆள் ...கிறேன் என்று காட்டிக் ...ள்ளலாமல்லவா? அதை யார் தடுக்க ...டியும்?

மாதங்கி யோசனை பண்ணினுள்.

கடைசியாக வெளிவந்த ...ளுடைய மூன்று படங்களும் தோல்வியடையவில்லை. ஆனல் ஓகோ ...றும் ஓடவில்லை.

மாதங்கி குறுக்கும் நெடுக்கும் ...ந்தாள்.

''கண்ணு, ஜூஸ் சாப்பிட ...ம்மா?'' மாடியின் கீழ்ப் படியில் ...றபடி அவள் அம்மா கூப்பிட்டாள்.

ஒரு நிமிடம் தாயை உற்றுப் ...ர்த்தாள் மாதங்கி. பிறகு மடமடவென்று கீழே இறங்கி வந்தாள். அம்மாவின் கையிலிருந்து ஜூஸ் கிளாஸை வாங்கிக் கொண்டு, ''அம்மா, உன்னிடம் ஒரு விஷயம் சொல்லப் போகிறேன்,'' என்றுள்.

''என்னடி! என்ன! என்ன?'' என்று பதறிப் போனுள் அம்மா. முகம் பேயறைந்த மாதிரி ஆகிவிட்டது. மகள் ரகசியத் திருமணம் செய்து கொண்டு விட்டதாகப் பலவகை வதந்திகளைக் கேட்டு ஏற்கெனவே வயிற்றில் புளி கரைத்துக் கொண்டிருப்பவள் அவள்.

''நீ ஒரு தயாரிப்பாளர் ஆகப் போகிருய்!'' என்றுள் மாதங்கி.

''என்னது! புரொட்யூசராகவா! சே சே! நமக்கேண்டி அந்தத் தலையெழுத்து! இருக்கிற பணத்தை இழந்துட்டு நிற்கணும்!''



